Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# பொருளடக்கம்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

*தமிழ் வாழ்க*

# சீவகசிந்தாமணி

## மூலமும் உரையும்

### இறை வாழ்த்து

**மூவா முதலா உலகம்ஒரு மூன்றும் ஏத்தத்**
**தாவாத இன்பம் தலையாயது தன்னி னெய்தி**
**ஓவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வ னென்ப**
**தேவாதி தேவன்அவன் சேவடி சேர்து மன்றே 1**

*[மூவா-முடிவற்ற; தாவாத-கெடாத; ஓவாதுநின்ற-நீங்காது நிறைந்த.]*

**செம்பொன் வரைமேற் பசும்பொன் னெழுத்திட்ட தேபோல்**
**அம்பொன் பிதிர்வின் மறுவா யிரத்தெட் டணிந்து**
**வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி விண்ணோர்**
**அம்பொன் முடிமேலடித் தாமரை சென்னி வைப்பாம் 2**

*[வரை-மலை; அம்பொன் பிதிர்-அழகிய சிறியதும் பெரியதுமாகிய பொற் பிதிர்.]*

முடிவும் முதலுமற்ற, மூவுலகமும் போற்றுகின்ற குறைவற்ற இன்பம் குடிகொண்டிருக்கின்ற, ஒப்புயர்வற்ற உயர் குணக் குன்றாகிய தேவ தேவனவன் திருவடியைப் பணிவோம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அழகிய பொன்மலையின்மேல் பொன் எழுத்தைப் பொறித்ததைப்போல், ஒளி சிந்தும் ஆயிரத்தெட்டு ஒளிக் கற்றைகள் சுடர்வீச, அழகிய காலை இளம்பரிதிக்கும் மேலாக ஒளிவீசித் திகழும் தேவ தேவனவன் புனிதத் திருவடிகளைத் தலைகுனிந்து வணங்குவோம்.

## அவையடக்கம்

**பன்மாண் குணங்கட் கிடனாய்ப்பகை நண்பொ டில்லான்**
**தொன்மாண் பமைந்த புனைநல்லறந் துன்னி நின்ற**
**சொன்மாண் பமைந்த குழுவின்சரண் சென்று தொக்க**
**நன்மாண்பு பெற்றே னிதுநாட்டுதன் மாண்பு பெற்றேன் 3**

*[பன்மாண்குணம்-பல நற்குணம்; தொன்மை-பழமை; துன்னி-நெருங்கி.]*

**கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாது விட்டால்**
**நற்பால் அழியும் நகைவெண்மதி போல்நி றைந்த**
**சொற்பா லுமிழ்ந்த மறுவும்மதி யாற்க ழூஉவிப்**
**பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார் 4**

*[நற்பால்-நல்லழகு; மறு-வழு, குறை; பொற்பு ஆ இழைத்து-பொன்போல் அழகாகப் பொருத்தி.]*

**முந்நீர்ப் பிறந்த பவழத்தொடு சங்கு முத்தும்**
**அந்நீ ருவர்க்கு மெனின்யாரவை நீக்கு கிற்பார்**
**இந்நீர வென்சொற் பழுதாயினுங் கொள்ப வன்றே**
**பொய்ந்நீர வல்லாப் பொருளால்விண் புகுது மென்பார் 5**

*[முந்நீர்-ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூன்று வித நீர் உடைய கடல்; பொய்ந்நீர-பொய்த் தன்மை உடைய.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## பதிகம்

**மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்பில்**
**ஆனே றனையா னுளன்சீவக சாமி யென்பான்**
**வானேற நீண்ட புகழான்சரிதம் இதன்னைத்**
**தேனூற நின்று தெருண்டாரவை செப்ப லுற்றேன் 6**

*[மீன்ஏறு-சுறாமீன்; ஆன்ஏறு-காளை; தெருண்டோர்-அறிவில் தெளிந்தோர்; அவை-சபை.]*

பல நல்ல குணங்களுக்குறைவிடமாய், விருப்பு வெறுப்பின்றி, புகழத்தக்க அறவழியில் செல்கின்ற சிறப்பமைந்த சாதுக்களைச் சரண் என்று நான் சென்றடைந்ததால் பெற்ற பேறுகளினால் இதை எழுதும் ஆற்றல் பெற்றேன்; என்றாலும் கழுவாது அழுக்கேறவிட்டால் மாணிக்கக் கல்லும் அதன் அழகிழக்கும். அதுபோல வாயில் இருந்து பிறக்கின்ற என் சொல்லிலும் குறை நீக்கி நிறை காண முடியாவிட்டால் பயனற்றுப் போய்விடும். எனவே கற்றறிந்த பெரியோரும் இக்காவியத்தின்கண் காணும் குறைகளை நீக்கிக் குணத்தைக் கொள்வாராக!

கடல்நீர் உப்புக் கரிக்கிறது என்பதற்காக உவர்க் கடலில் இருந்து கிடைக்கிற பவளத்தையும் சங்கையும் முத்தையும் யாரும் வேண்டாம் என்று ஒதுக்கிவிடுவதில்லை. அதுபோலவே என் காவியத்தில் நான் கூறும் சொற்கள் பழுதுடையன ஆனாலும் அவற்றின் பொருளைக் கருதி ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.

மீனக்கொடியுடைய மன்மதனை வென்ற சிறப்பால், புகழ்ப் பெருமைகளால் வானுற வளர்ந்து சிறந்த ஆண் சிங்கம் அனைய **சீவகனின்** சரித்திரத்தை இனிக்கும் இனிய சொல்லாலே இப்பெரியோர் அவையில் கூறுகின்றேன்.

**கோடாத செங்கோல் குளிர்வெண்குடைக் கோதை வெள்வேல்**
**ஓடாத தானை உருமுக்குரல் ஓடை யானை**
**வாடாத வென்றி மிகுச்சசந்த னென்ப மன்னன்**
**வீடாத கற்பி னவன்தேவி விசயை யென்பாள் 7**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கோடாத-வளையாத; உருமும்-பிளிரும்; ஓடை-யானை-முகபடாம் அணிந்த யானை; வீடாத-நீங்காத.]

**சேந்தொத் தலர்ந்த செழுந்தாமரை யன்ன வாட்கண்**
**பூந்தொத் தலர்ந்த பசும்பொற்கொடி யன்ன பொற்பின்**
**ஏந்தொத் தலர்ந்த முலையின்னமிர் தன்ன சாயல்**
**வேந்தற் கமுதாய் விளையாடுதற் கேது வாமே** 8

[சேந்து-சிவந்து; ஒத்து-இணைந்து.]

வளையாத செங்கோல் அறமும், வளமான நல்லாட்சி மணமும், அஞ்சாத படைவரிசையும், அணி அணியான யானைப்படையும் கொஞ்சமும் குறைவின்றி நிறையப் பெற்றிருக்கும் மாமன்னன் **சச்சந்தன்** என்பர். அவன் மனைவி கற்பிற் சிறந்த **விசையை** என்பவளாவள்!

அப்படிப்பட்ட விசையையின், இணையொத்து மலர்ந்த இரு தாமரை மலர்களோ எனத்தோன்றும் இரு விழிகளும், பொன்னில் விளைந்து பூவில் சமைந்ததோ எனும்படிக்கிருக்கும் அழகுடலும், நிதம் எண்ணிச் சுவைக்க அமுதென இனிக்கும் எழில் மார்பும் மன்னனின் இன்ப விளையாட்டிற்கு ஏதுவாய் அமைந்திருக்கும்.

**கல்லார் மணிப்பூ ணவன்காமங் கனைந்து கன்றிச்**
**சொல்லாறு கேளான் இனிச்சூழ்ச்சியில் தோற்ற வாறும்**
**புல்லார் புகலப் பொறிமஞ்ஞையில் தேவி போகிச்**
**செல்லா றிழுக்கிச் சுடுகாடவள் சேர்ந்த வாறும்** 9

[கனைந்து-நிறைந்து; கன்றி-அடிபட்டு; மஞ்ஞை-மயில்; சொல்லாறு-சொற்பொருள்; செல்லாறு-செல்லும் வழி.]

**நாளுற்று நம்பி பிறந்தான்இசை பத்து நந்தத்**
**தோளுற்றோர் தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்த வாறும்**
**கோளுற்ற கோன்போல் அவன்கொண்டு வளர்த்த வாறும்**
**வாளுற்ற கண்ணாள் மகன்வாழ்கென நோற்ற வாறும்** 10

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கோளுற்ற - கொலையுற்ற; கோன் - மன்னன் சச்சந்தன்.]

நெஞ்சம் புணையாக் கலைமாக்கடல் நீந்தி ஆங்கே
வஞ்சம் மறவர் நிரைவள்ளல் விடுத்த வாறும்
விஞ்சைக் கிறைவன் மகள்வீணையில் தோற்ற வாறும்
நஞ்சுற்ற காம நனிநாகரிற் றுய்த்த வாறும் 11

[புணை-தெப்பம்; நிரை-ஆன்நிரை; விஞ்சைக்கிறைவன்-கலுழவேகன்.]

அப்படிப்பட்ட இன்ப விளையாட்டில் அமைச்சர் சொற்கேளாது மன்னன் இடையறாது ஈடுபட்டதால், வெல்லுதற்கெளியனாய்ப் பகையரசர் சூழ, அவர்தம் போர் முரசு கேட்டு நடுங்கித் துணைவியை மயிற்பொறியில் வைத்து அனுப்ப, அது நகரை அடுத்த சுடுகாட்டில் சென்றிறங்கியது. அந்தச் சுடுகாட்டிடைத் தெய்வம் ஒன்று துணை நின்றுதவ விசையை அழகிய ஆண்மகவு ஒன்றைப் பெற்றனள். அந்தப் பிள்ளையை, இறந்துபட்ட சச்சந்த மன்னன் வளர்ப்பது போலவே **கந்துக்கடன்** வளர்க்கலானான். விசையை தவப்பள்ளியைச் சார்ந்தாள்.

கந்துக்கடன் வளர்த்து வருகின்ற நாளில், அருளுள்ளம் மிக்க சீவகன், கலையார்வம் மிக்க தன் நெஞ்சம் தெப்பமாகக் கலைக்கடல் நீந்திக் கடந்ததையும்; சூதால் வேடர்கள் கவர்ந்த பசுக்கூட்டத்தை மீட்டுத் தந்ததையும்; **கலுழவேகன்** மகள் **தத்தை**யை யாழிசையில் கோற்கடித்ததையும் இன்ப விளையாட்டில் இணையற்று இருந்ததனையும்;

முந்நீர்ப் படுசங்கம் அலறமுரசு ஆர்ப்ப மூதூர்ச்
செந்நீர்க் கடியின் விழவாட்டினுள் தேங்கொள் சுண்ணம்
மைந்நீர் நெடுங்கண் இருமங்கையர் தம்முள் மாறாய்
இந்நீர்ப் படியேம் இவைதோற்றனம் என்ற வாறும் 12

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[செந்நீர்-புதுநீர்; இருமங்கையர்-குணமாலையும் சுர மஞ்சரியும்; சுண்ணம்-வாசனைப் பொடி; ஆர்ப்ப-ஒலிக்க.]

**சுண்ண முடைந்து சுரமஞ்சரி சோர்ந்து தோழி**
**வண்ண நெடுங்கண் குணமாலையை வைது மாறிப்**
**புண்மேற் புடையிற் புகைந்துஆணுரு யாதும் நோக்காள்**
**கண்ணோக்கு உடைந்து கடிமாடம் அடைந்த**
**வாறும் 13**

[புண்மேற்புடை-புண்ணினிடத்துள்ள புடைப்பு; சுர மஞ்சரி ஆண்உரு நோக்காமை; கண்ணற்று-கண் ணோட்டமில்லாமல்; புகைந்து-வருந்தி.]

**பொன்துஞ்சும் மார்பன் புனலாட்டிடைப் புன்கணெய்தி**
**நின்றெஞ்சு கின்ற ஞமலிக்கமிர்தம் ஈந்த வாறும்**
**அன்றைப் பகலே குணமாலையை அச்சு றுத்த**
**வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்ற வாறும் 14**

[புன்கண்-துன்பம்; ஞமலி-நாய்; மரணத்தை நீக்கு தலின் பஞ்சநமஸ்காரமந்திரம் அமிர்தமென்னப் பட்டது; அச்சுறுத்த-அச்சத்தை அடைவிக்க.]

**தேனூறு தீஞ்சொல் குணமாலையைச் சேர்ந்த வாறும்**
**கோனூறு செய்வான் கருதிச்சிறை கொண்ட வாறும்**
**வானாறு இழிந்து மழைமின்னென வந்தோர் தேவன்**
**ஊன்நாறும் ஒளிவேல் உரவோன்கொண் டெழுந்த**
**வாறும் 15**

[ஊறுதல்-இடைவிடாமை; கோன்-கட்டியங்காரன்; கொல்லுதலென்பதனைச் சொல்ல அஞ்சி, 'ஊறு செய்வான்' என்றார். மழை-மேகம்.]

அப்படி இருந்து வரும் நாளில் சங்கம் முழங்கவும், முரசு ஒலிக்கவும், புகழ்மிக்க **இராசமாபுரத்தில்** கொண் டாடப்படுகின்ற புதுப்புனல் விளையாட்டில், நிறமும் மணமும் மிக்க பொற்சுண்ணப் பொடி வீசி விளையாட வந்த மைவிழி மங்கையர் இருவர் தம்முள் மாறுபாட்டு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



'இந்தப் புனல்விளையாட்டு போதும், இனி வேண்டாம்' என்று வீடு திரும்பியதையும்; அப்படி விளையாட்டை வெறுத்துத் திரும்பியதால் மனஞ் சோர்ந்த இருவரில் ஒருத்தியாகிய சுரமஞ்சரி அழகிய நெடுங்கண்களை உடைய தன் தோழி குணமாலையின் மேல் சீவகன் காதல் கொண்டுவிட்டான் என்பதால், புண்பட்டு வீங்கிய துயரைப்போல் மனம் உடைந்து, உளம் வருந்தி, இனி ஆண் உருவை ஓவியத்திலும் கூடப் பார்ப்பதில்லை எனக் கூறிக் கன்னிமாடம் போய் அடைந்ததையும்; திருவிளங்கும் புகழாரம் அணிந்த மார்பை உடைய சீவகன் ஆற்று வெள்ளத்தில் அடிபட்டுச் சாகின்ற நாய்க்கு உயிர் அளிக்கும் அமுதமென ஐந்தெழுத்து மந்திரத்தை அளித்ததையும்; அன்றையப் பொழுதே குணமாலையை விரட்டி வந்து அச்சுறுத்திய பட்டத்து யானையை அடக்கி ஆண்டதையும்; அப்படி, தேனிலும் இனிக்கும் இனிய மொழி பேசும் குணமாலையை யானையிடம் இருந்து காப்பாற்ற, அதனால் அவளுடன் சென்று இருந்ததையும்; அப்படியிருக்கையில் கட்டியங்காரன் சீவகனைக் கொல்லக் கருதிச் சிறைப்படுத்த, அப்போது மின்னும் மழை முகில் போல் விண்ணில் இருந்தோர் தேவன் வந்து, கூர் மழுங்காத—வெற்றிச் சீர்மழுங்காத வேலை உடைய சீவகனை எடுத்துக்கொண்டு சென்றதையும்;

**தேங்காத மள்ளர் திரள்தோள்இணை சிக்க யாத்த**
**பூங்கச்சு நீக்கிப் பொறிமாண்கல நல்ல சேர்த்தி**
**நீங்காத காதலு டையாய்நினைக் கென்று பின்னும்**
**பாங்காய விஞ்சை பணித்தாங்கு விடுத்த வாறும்** 16

*[சிக்க-அகப்பட; கச்சு-மார்பை மூடும் துணி; விஞ்சை-கலையறிவு.]*

**பைந்நாகப் பள்ளி மணிவண்ணனின் பாயல் கொண்டு**
**கைந்நாகம் துஞ்சும் கமழ்காந்தளஞ் சாரல் போகி**
**மைந்நாக வேலி மலிபல்லவ தேயம் நண்ணிக்**
**கொய்ந்நாகச் சோலை கொடியங்நகர் புக்க வாறும்** 17

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[பை-நச்சுப்பை; மை மேகம்; கை-துதிக்கை; கொய் நாகம்-புன்னைமரம்.]

**அத்தம் அனைய களிற்றங்கர் மன்னன் மங்கை**
**முத்தம் உரிஞ்சும் முகிழ்மென்முலை மின்அன் னாளைப்**
**பைத்தங் கோர்நாகம் பனிமாமதி யென்று தீண்டச்**
**சித்தங் குழையற்க எனத்தீர்த்தவள் சேர்ந்த வாறும் 18**

[அத்தம்-அத்தகிரி; பைத்து-படம் விரித்து; பனி மாமதி-முழுநிலவு.]

**பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடு போழ**
**நற்பூங் கழலான் இருதிங்கள் நயந்த வாறுங்**
**கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்**
**வெற்பு ஊடறுத்து விரைவின்நெறி கொண்ட**
**வாறும் 19**

[போழ-உழ; வெற்பு-மலை; ஊடறுத்து-இடைப் புகுந்து.]

சீவகனை அப்படி எடுத்துச் சென்ற தேவன், மறவர்கள் சீவகனைச் சிறைப்படுத்தும்போது சேர்த்துக் கட்டிய அழகிய பூந்துகிலாலான கட்டுக்களையெல்லாம் அவிழ்த்துவிட்டு, அவனுக்கு மேலும் பல அழகிய அணி மணிகளைப் பூட்டி, ''நீங்காத காதல் மணமுடையோனே, நெஞ்சிலினிக்கும் அன்புடையவனே, சீவகனே, இனி எப்போது இடர் வந்தாலும் என்னை நினைத்திடுக'', எனக் கூறித் தனக்குள்ள சக்திகளைச் சீவகனுக்குதவத் துணையாக்கி அங்கிருந்து சென்றதையும்; பிறகு சீவகன், பாம்பை அணையாகக் கொண்டு திருமால் படுத் துறங்குவதுபோல் மணம் நிறைந்த காந்தள் மலர்களே விரிப்பாகக் கொண்டு கண்மயங்கிக் கிடக்கின்ற யானைகள் நிறைந்த குன்றினையும், மழைமேகம் உறங்கு கின்ற மலை வரிசைகளையே அரணாகக் கொண்ட அழகிய பல்லவ நாட்டையுந் தாண்டி, புன்னைமரச் சோலையும் பூமலர்க் கொடிகளும் நிறைந்த வளமிக்க

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அதன் தலைநகரான **சந்திராபம்** என்னும் நகரை அடைந்ததையும்; அத்தகிரி மலைபோன்ற வலிமை மிக்க யானைப் படைவரிசை உள்ள மன்னன் அரசாளும் அந் நகரில், அவ்வரசன் மகளான—முத்துமாலை அசைந் தாட மோகனக் கனவுகள் குமிழியிடும் இளங்கொங்கை உடைய எழில் மின்னல் கொடிபோன்ற **பதுமையை,** ஒருநாள் பொழிலிடத்தே விஷநாகமொன்று அவள் முகத்தை நிலவென்று கருதித் தீண்டவும், அதனால் மனஞ் சோர்ந்த அவள் சகோதரன் **உலோகபாலன்** கவலை யைப் போக்குவதற்காக, அவளுக்குற்ற விஷத்தை இறக்கிப் பின் அவளை மணந்து, அவளோடு அவளின் பொன் அணியூட்டிய பூமுலைதோய வேலைப்பாடமைந்த வீரக் கழல் அணிந்த சீவகன் இரு திங்கள் இருந்ததையும்; பின்னே உலகத்தின் வலிமையையெல்லாம் வெற்றி கொள்ளத்தக்க ஆற்றல்மிக்க கற்றூண்போன்ற கனத்த தோளினை உடைய சீவகன் மலையைப் பிளந்து வழிகண்டு **தக்கநாட்டை** அடைந்ததையும்;

**தள்ளாத சும்மை மிகுதக்கநன் நாடு நண்ணி**
**வி்ள்ளா விழுச்சீர் வணிகன்மகள் வேற்க ணோக்கம்**
**உள்ளாவி வாட்ட உயிர்ஒன்றொத் துறைந்த வாறும்**
**கள்ளாவி நாறும் கமழ்கோதையிற் போய வாறும்** **20**

[சும்மை-ஒலி; விள்ளா-விளக்க முடியாத; கள்-தேன்; நாறும்-கமழும்.]

**இன்னீர் அமிர்தன் னவள்கண்ணிணை மாரி கற்பப்**
**பொன்னூர் கழலான் பொழிமாமழைக் காடு போகி**
**மின்னீர வெள்வே லவன்மத்திம தேய மன்னன்**
**கொன்னூர் கொடுவெஞ் சிலைகண்டெதிர் கொண்ட வாறும்** **21**

[மாரிகற்ப-நீர்சொரிய; சிலை-வில்.]

**திண்தேர் அரசர் திறற்சிங்கங்கள் வில்லும் வாளும்**
**கண்டாங் குவந்து கடிபெய்திவட்காத்து மெ**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**கொண்டார் குடங்கை அளவேஉள கண்ணி னாளைப்**
**புண்டாங் கெரிவே லிளையேற்குப் புணர்த்த**
**வாறும் 22**

[திண்மை-வலிமை; கடிபெய்து-காவலிட்டு; குடங்கை-உள்ளங்கை.]

ஓயாது இன்னிசை முழங்கிக்கொண்டிருக்கின்ற தக்க நாட்டை அடைந்த சீவகன், அந்நாட்டின் புகழ்மிக்க வணிகப் பெருமகனான **சுபத்திரன்** மகளாகிய அழகிய வேல் போன்ற விழியுடைய **கேமசரி**யைக் காதலித்து உயிர் ஒன்றி அவளோடு இருந்ததையும், பின் அவளை விட்டுப் பிரிந்ததையும்; இனிய உயிரளிக்கும் அமுதம் போன்ற அருட்பார்வை உடைய கேமசரியின் இரு விழிகளும் மழையைப் போலக் கண்ணீர் உகுக்க அவளை விட்டுப் பிரிந்து சென்ற பொன்வீரக் கழல் அணிந்த சீவகன், பெருமழை பெய்யும் காட்டிடைச் செல்கையில், மின்னலைப் போல் சென்று தாக்கும் வலிமை மிக்க ஒளியுடைய வேலேந்திய மத்திமநாட்டரசன் **தடமித்தன்,** பகையைக் கொன்றழிக்கும் வலிமை மிக்க வில்லேந்திய சீவகனை எதிர்கொண்டழைத்ததையும்; எதிர்கொண்டழைத்துச் சென்ற, வலிமை மிக்க தேர்ப்படையை உடைய தடமித்த மன்னன், ஆண்சிங்கம் அனைய தன் மக்கட்குச் சீவகன் வில்லும் வாளும் பயிற்றுவிக்கிற திறமையை நேரிருந்து கண்டு அக மகிழ்ந்து, இத்தகைய திறமைமிக்கவனை—சீவகனைப் பேணிப் பாதுகாத்தல் தன் கடனெனக் கருதி நீண்டு விரிந்த அழகிய கண்களை உடைய கனகமாலையை, ஓயாது போரில் ஈடுபட்டு விழுப் புண் தாங்கிய வேலேந்திய சீவகனுக்கு மணம் செய்வித்ததையும்;

**மதியங் கெடுத்த வயமீன்எனத் தம்பி மாழாந்**
**துதிதற் குரியாள் பணியால்உடன் ஆய வாறும்**
**நிதியின் நெறியின் அவன்தோழர் நிரந்த வாறும்**
**பதியின் அகன்று பயந்தாளைப் பணிந்த வாறும் 23**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[வயமீன்-உரோகிணி; பணி-கட்டளை; பயந்தாள்-பிரிந்து சென்ற விசையை.]

கண்வாள் அறுக்கும் கமழ்தாரவன் தாயொடு எண்ணி
விண்வாள் அறுக்கும் நகர்வீதி புகுந்த வாறும்
மண்மேல் விளக்காய் வரத்திற்பிறந் தாளோர் கன்னிப்
பெண்ணார் அமிர்தின் பெருவாரியுள் பட்ட வாறும் 24

[கமழ்தார்-மணமிகுமாலை; பெருவாரியுள் - பெரிதாகிய இன்பக் கடலுள்; வரம்-தவப்பயன்.]

துஞ்சா மணிப்பூண் சுரமஞ்சரி என்னும் நாம
அஞ்சாயல் பூத்த அகிலார்துகி லாய்பொன் அல்குல்
எஞ்சாத இன்பக் கொடிதாழ்த்ததும் பன்றி யெய்து
நஞ்சூறு வேலான் பகைநாம்அறக் கொன்ற வாறும் 25

[துகில்-ஆடை; எஞ்சாத-குறையாத; நாம்-அச்சம்; அற-நீங்க.]

புண்தோய்த்து எடுத்த பொருவேலெனச் சேந்து நீண்ட
கண்போன்ற மாமன் மகள்கண்மணிப் பாவை யன்ன
பெண்பா லமிர்தின் நலம்பெற்றதும் பொற்பச்
செங்கோல்
தண்பால் மதிதோய் குடைதண்ணிழற் பாய வாறும் 26

[மாமன்-கோவிந்தன்; மகள்-அவன் மனைவி புதவி; பெண்பாவை-அவர்கள் பெண்ணாகிய இலக்கணை; பொற்ப-பொலிவுற.]

நிலவைப் பிரிந்த மீன்எனச் சீவகனைப் பிரிந்து வருந்திய அவன் தோன்றாத் தம்பியான கந்துக்கடன் மகன் நந்தட்டன், உலகு தோன்றக் காரணமான தத்தையின் கட்டளையால் அவனைக் கண்டறிந்ததையும்; பொருள் தேடப் புறப்பட்ட தோழர்கள் அவனைத் தேடியதையும்; அவன் முடிவில் கணவனைப் பிரிந்து தவிக்கும் தன் அன்னையாகிய விசையைக் கண்டு வணங்கினதையும்; பின்னர் கண்ணைக் கூசச் செய்யும் ஒளியும் எழிலும் மிக்க மாலை அணிந்த சீவகன், அன்னை சொற்கேற்ப, வான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முகட்டைக் கிழிக்கின்ற உயர்ந்த மாளிகைகள் உள்ள இராசமாபுரத்தின் நகர்வீதியில் சென்றதையும், அப்படிச் செல்கையில், பாருக்கொரு புதுமையாய், பெண்மைக் கொரு புகழாய், தவமிருந்து பெற்றெடுத்த தையல்-**விமலை** என்னும் பெண்மை அமுதூறும் பேரின்பக் கடல் மூழ்கி இருந்ததையும்; ஒளிகுன்றாத மாணிக்கப் பூணையும் சுரமஞ்சரி என்னும் பெயரையும், அழகிய சாயலும், அகில் மணம் வீசும் பூந்துகில் ஆடையும், பொன்னணிகளும் பூட்டிய—இதழ்விரித்து எப்போதும் இன்பமணம் கொடுக்கும் அல்குலையும் உடைய சுரமஞ்சரிதான் முன்னம் இனி "ஆணுருவைக் கண்ணால் ஓவியத்திலும் பாரேன்" எனச் சொன்ன சூளுரையை மாற்றியதையும்; நஞ்சில் தோய்த்த வேலினை ஏந்திய சீவகன் பன்றியைக் கொன்று துயர் நீங்கப் பகைவனை வீழ்த்தியதையும்; புண்ணில் குத்தி எடுத்த ரத்தம் தோய்ந்த வேலினைப் போன்ற சிவந்த நீண்ட கண்களை உடைய, மாமன் மனைவி **புதவி**யின் கண்ணிற் கருமணி போன்ற **இலக்கணை**யிடத்து உயிரளிக்கும் அமுதம் போன்ற உடலின்பம் பெற்றதையும்; செங்கோல் நலம் சிறக்கப் பால்நிலவு போல் தண்ணொளி வீசிப் பரிந்துயிர் காத்ததையும்;

**திறைமன்னர் உய்ப்பத் திருநிற்பச் செங்கோல் நடப்பக்**
**குறைவின்றிக் கொற்ற முயரத்தெவ் வர்தேர் பணிய**
**உறைகின்ற காலத்து அறம்கேட்டு உருமுற்ற பாம்பின்**
**அறிவன் அடிக்கீழ் அரசஞ்சித் துறந்த வாறும் 27**

*[உய்ப்ப-செலுத்த; நிற்ப-கெடாது நிற்க; திறை-கப்பம்; தெவ்வர்-பகைவர்.]*

**கோணைக் களிற்றுக் கொடித்தேர் இவுளிக் கடல்சூழ்**
**வாண்மொய்த்த தானை அவன்தம்பியும் தோழன் மாரும்**
**பூண்மொய்த்த பொம்மல் முலையாரும் புலம்து றப்ப**
**வீணைக் கிழவன் விருந்தார்கதிச் சென்ற வாறும் 28**

*[இவுளி-குதிரை; புலம்-நிலம்; வீணைக்கிழவன்-வீணையில் தேர்ந்தவன்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**தேன்வாய் உமிழ்ந்த அமிர் துண்டவன்போன்று செல்வன்**
**வான்வாய் வணங்கும் நலத்தார்முலைப் போகம்**
**வேண்டான்**
**ஏனோரும் ஏத்த அவன்எய்திய இன்ப வெள்ளம்**
**ஈனோர்க்கு உரைப்பாம் பதிகத்துள் இயன்ற வாறே 29**

[வான்வாய்-வானத்தில்; ஏனோரும்-எல்லோரும்; ஈனோர்-இங்குள்ளோர்.]

சிற்றரசர்கள் கப்பம் செலுத்த, செல்வம் கொழித்திருக்க, அரசாட்சி நடைபெறவும் நாளும் வந்தடைகின்ற வெற்றிகளால் பகையரசர் தேரோடு வந்து பணியவும், வாழ்கின்ற காலத்தில் வீடுபேறு அடையும் தருணம் வந்துற்றதை உணர்ந்து, அரசவாழ்வை இடியோசை கேட்ட நாகமென நடுங்கி உதறித் தள்ளி வாலறிவன் திருவடிக்கீழ்த் துறவு மேற்கொண்டதையும்; பல்வேறு வகைப்பட்ட யானைப்படையும் குதிரைப்படையும் தேர்ப்படையும் காலாட்படையும் உடைய சீவகனின் தம்பியும், தோழர்கள் நால்வரும், பூண் அணிந்த விம்மிப் புடைத்த மார்புடைய அவன் காதல் மனையாட்டிகள் எட்டு பேரும், இவ்வுலகை விட்டுத் துறக்கவும்; யாழிசை வல்லோனாகிய சீவகனும் புதுமை வீட்டினை அடைந்ததையும், தேன் உமிழும் அமிர்தத்தை உண்டவன்போல், சிறப்புடைய வானத்து மங்கையரையும் வெட்கச் செய்யும் அழகுடைய மண்ணுலக மங்கையரின் உடல் இன்பம் வெறுத்து, தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என, எல்லோரும் போற்ற வாழ்ந்து அவன் பெற்ற பேரின்ப வெள்ளத்தைப் பற்றி இவ்வுலகில் உள்ளோரும் பயனடைய ஏற்றபடி இனிவரும் பதிகத்தில் எடுத்துரைப்போம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 1. நாமகள் இலம்பகம்

நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்
பாவீற் றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக்
கோவீற் றிருந்த குடிநாட்டணி கூற லுற்றேன் 30

[புலமாமகள்-கலைமகள்; பாரற-தடையற; கேள்வி-அறிவு; அணி-அழகு.]

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால்இசை போய துண்டே 31

[நெற்றி-உச்சி; வருக்கை-பலாப்பழம்; இசை-புகழ்.]

வாக்கிலே நிறைந்து அறிவைத் தருகின்ற கலை மகளோடு பொன்கொழிக்கப் புகழ்மணக்கும் திருமகளும் சேர்ந்து வாழக் கல்வி கேள்விகளில் கரைகண்டு தேறிய சச்சந்த மன்னன் கோலோச்சிக் குடி தழுவிய நாட்டு வளப்பத்தை இனிக் கூறுவோம்! பழுத்து முற்றிய தென்னை நெற்று சிதறிக் கீழே விழ, விழுகின்ற வேகத் தால் கமுக மரத்தின் பூம்பாளை சிதற, தேனடை பிய்ந்து தேன்வழிய, பலாப்பழம் பிளந்து சிதற, மாங்கனி உதிர்ந்து ஓட, வாழைப்பழம் சிதறிவிழும் வளமிக்க— புவியோர் போற்றும் புகழ்மிக்க பெருமை உடையதாகும் சச்சந்தன் ஆண்ட ஏமாங்கதம் என்னும் நாடு.

இலங்க லாழியி னான்களிற் றீட்டம்போல்
கலங்கு தெண்திரை மேய்ந்து கணமழை
பொலங்கொள் கொன்றையி னான்சடை போல்மின்னி
விலங்கல் சேர்ந்துவிண் ணேறிவிட் டார்த்தவே 32

[தெண்திரை-தெளிந்த திரை; விட்டு-வாய் விட்டு; கணம்-கூட்டம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**தேன்நி ரைத்துயர் மொய்வரைச் சென்னியின்**
**மேல்நி ரைத்து விசும்புற வெள்ளிவெண்**
**கோல்நி ரைத்தன போற்கொழுந் தாரைகள்**
**வான்நி ரைத்து மணந்து சொரிந்தவே** 33

*[நிரைத்து-நிரைந்து; மொய்வரை-மலைத்தொடர்; தாரை-நீர் ஒழுக்கு.]*

**குழவி வெண்மதிக் கோடுழக் கீண்டுதேன்**
**முழவி னின்றதிர் மொய்வரைச் சென்னியின்**
**இழியும் வெள்ளரு வித்திரள் யாவையும்**
**குழுவின் மாடத் துகிற்கொடி போன்றவே** 34

*[குழவிவெண்மதி-சிறிய பிறைநிலவு; இழியும்-வடியும்; குழு-கூட்டம்.]*

அத்தகைய வளமிக்க ஏமாங்கத நாட்டில், கடல் போல் நிறைந்திருந்த பரதேசுவரச் சக்கரவர்த்தியின் லட்சக்கணக்கான யானைக் கூட்டத்தைப்போல் நீர் முகந்து செல்கின்ற கருமுகில்கள், மலையின் முகட்டில் தங்கிச் சூலுற்றுப் பின் மழைமேகமாகிக் கொன்றை அணிந்த பிரான் வார்சடைபோல் மின்னி இடியிடித்து மழை பொழியும். மழை மேகங்கள், கொம்புத் தேன் சிதறும் மலை உச்சியில் அடுக்கடுக்காகத் தங்கி மழை பொழிய,அம்மழை நீர் அருவியாய்ப் பெருக்கெடுத்து மலை உச்சியினின்று வெள்ளியை உருக்கிவிட்டதுபோல் ஓடி வரும். அப்படி ஓடிவரும் அருவிகள் மலை உச்சியினின்று கீழே முழவைப்போல் அதிர்ந்துவிழ மலைத்தேன் சிதறி ஓடும் அக்காட்சி மாட மாளிகைகளில் பூந்துகில் அசைந்தாடுவது போன்றிருக்கும்.

**இலங்கு நீள்முடி இந்திரன் மார்பின்மேல்**
**விலங்கி வீழ்ந்தமுத் தாரமும் போன்றவை**
**நலங்கொள் பொன்னொடு நன்மணி சிந்தலால்**
**கலன்பெய் பேழை கவிழ்த்தவும் போன்றவே** 35

*[விலங்கி-சேர்ந்து; பேழை-பெட்டி; கலன்-அணிகலன்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வள்ளல் கைத்தல மாந்தரின் மால்வரைக்
கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ளம் இல்லவர்க்கு ஊர்தொரும் உய்த்துஉராய்
வெள்ளம் நாடு மடுத்து விரைந்ததே 36

[மால்வரை-பெரிய மலை.]

மையல் யானையின் மும்மதம் ஆர்ந்துதேன்
ஐய பொன்அசும்பு ஆடி அளைந்துஉராய்ச்
செய்ய சந்தனம் தீம்பழம் ஆதியா
நைய வாரி நடந்தது நன்றரோ 37

[மையல்-மயக்கம்; அசும்பு-துளி; அளைந்து-கலந்து.]

வீடில் பட்டினம் வௌவிய வேந்தெனக்
காடு கையரிக் கொண்டு கவர்ந்துபோய்
மோடு கொள்புனல் மூரி நெடுங்கடல்
நாடு முற்றிய தோஎன நண்ணிற்றே 38

[வௌவிய-கவர்ந்த; மூரி-வலிமை.]

திரைபொரு கனைகடல் செல்வன் சென்னிமேல்
நுரையெனும் மாலையை நுகரச் சூட்டுவான்
சரைஎனும் பெயருடைத் தடம்கொள் வெம்முலைக்
குரைபுனற் கன்னிகொண் டிழிந்த தென்பவே 39

[கடற்செல்வன்-வருணன்; சரை-சரயுநதி; தடம்-மணற்குன்று; வெம்மை-விருப்பம்.]

நெடுமுடியுடைய இந்திரன் மார்பில் கிடந்தசையும் முத்துச்சரம்போல நீர் முத்துக்களை ஏந்தி, அவனுடைய நவரத்தினப் பேழையைக் கவிழ்த்துக் கொட்டியதைப் போலப் பொன் துகளையும் மணிக்கற்களையும் சுமந்து வரும் மலைவீழ் அருவிகள், இரப்போர்க்கு இல்லையென்னாது வாரி வழங்கும் வள்ளல் கரங்களைப்போல், மலையிலிருந்து சுமந்துவந்த பொற்குவியல்களை, நாட்டிலே உள்ள இல்லாதவர்களுக்கு ஈவதேபோல் மலையை விட்டிறங்கி நாட்டிற்குள் சென்று பாயும். அப்படிப் பாய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கின்ற அருவிகள், மும்மதங்களும் உடைய யானையைப் போல் மிக வேகத்துடன், பொன் துகள்களையும் காட்டிலே உள்ள சந்தனத்தையும் கனிவகைகளையும் வாரிக்கொண்டு, நாட்டையே சூறையாடவந்த வேந்தனைப்போல், அலைக்கரம் நீட்டிக் காட்டை அரித்ததுடன் நாட்டையும் மூழ்கடிக்கப் பெரிய கடலே வந்ததோ எனும்படிக்குப் பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்துப் பாயும். அப்பெருவெள்ளம், மணல் மேடாகிய மார்புடைய சரை என்னும் பெயருடைய நதியாகும். அந்நதிநீர் அலையெறிந்து ஆரவாரிக்கும் தன் கடல் காதலன் மகிழ்வதற்கென்று காட்டிலிருந்து அரித்துக்கொண்டு சென்ற மேற்சொன்ன பொருள்களுடன், அவன் தலையில் சூட்டி மகிழ்வதற்கென்று மாலைபோல் நுரைகளைத் தலைமேல் சுமந்து செல்லும்.

**பழம்கொள்தெங் கிலையெனப் பரந்து பாய்புனல்**
**வழங்கமுன் இயற்றிய சுதைசெய் வாய்த்தலை**
**தழங்குரல் பம்பையிற் சாற்றி நாடெலாம்**
**முழங்குதீம் புனல்அக முரிய மொய்த்ததே 40**

*[தெங்கிலை-தென்னை ஓலை; சுதை-சுண்ணாம்பு; வாய்த்தலை-மதகு; பம்பை-ஒருவகைப் பறை]*

**வெலற்கரும் குஞ்சரம் வேட்டம் பட்டெனத்**
**தலைத்தலை அவர்கதம் தவிர்ப்பத் தாழ்ந்துபோய்க்**
**குலத்தலை மகளிர்தம் கற்பின் கோட்டகம்**
**நிலைப்படா நிறைந்தன பிறவும் என்பவே 41**

*[வேட்டம்பட்டு-வேட்டையிலே அகப்பட்டு; கதம்-வேகம்; கோட்டகம்-நீர்நிலை]*

**கவ்வையும் கடும்புனல் ஒலியும் காப்பவர்**
**செவ்வனூ றாயிரம் சிலைக்கும் பம்பையும்**
**எவ்வெலாத் திசைகளும் ஈண்டிக் காரொடு**
**பவ்வம்நின்று இயம்புவ தொத்த என்பவே 42**

*[கவ்வை-ஒலி; கார்-காற்று; பவ்வம்-கடல்]*

2

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பெருக்கெடுத்துவரும் ஆற்றுவெள்ளம் கரையோரப் பகுதிகளை அரித்துக்கொண்டு வருவதைப் பறையொலித்து ஊராருக் கெல்லாம் அறிவிக்க, அவர்களும், பெருக் கெடுத்துவரும் பெருவெள்ளத்தைத் தேக்கித் திருப்பித் திசைமாற்ற—பழுத்த தென்னங்கீற்றைப்போல் பரந்து விரிந்து பாயச்செய்ய, முன்னமேயே வெட்டிச் சீர் செய்யப் பட்டுள்ள வாய்க்கால் தலைமடையில் வந்து கூடினர். வெல்லுதற்கு அரியதுதான் யானை என்றாலும் குழி வெட்டியில் அதைப் பிடித்துவிட்டால் பின்னர் அங்குசத் தால் குத்தி அதன் மதத்தை அடக்குவதுபோல், மத யானையைப் போல் பீறிட்டுக் கரை அரித்து வந்த வெள்ளத்தையும் மக்கள் அங்கங்கே தடுத்து நிறுத்திப் பாசனத்துக்குப் பயன்படுத்திக் கொண்டதால், நதி நீரின் வேகம் குறைந்து, ஆரவாரமின்றிக் குடத்திலிட்ட விளக்கைப் போலிருக்கும் குடும்பப் பெண்களின் கற்பைப் போல் அடங்கி ஒடுங்கி வாவியிலும், ஏரியிலும், பயிருடைய நீர்நிலையிலும் நிறைந்து நின்றது. உழவர்கள் தடுத்து நிறுத்திய மடையினின்று தப்பி வழிகின்ற நீரின் ஒலியும், வெள்ளம் கரையை அரித்து விடாதிருக்க அதைக் காத்து நிற்பவர் போடும் கூச்சலும், அவர் அவ்வப்போது எழுப்புகின்ற பல்வேறான பறைமுழக்கும் பம்பை ஒலியு மாகப் பல திசைகளிலும் இருந்து வருகின்ற ஒலிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து காற்றிரைச்சலையும் கடல் முழக்கத்தையும் போல் ஒலித்தன.

**மாமனும் மருகனும் போலும் அன்பின**
**காமனும் சாமனும் கலந்த காட்சிய**
**பூமனும் அரிசிப்புல் ஆர்ந்த மோட்டின**
**தாமினம் அமைந்துதம் தொழிலின் மிக்கவே** 43

[காமன்-கண்ணபிரானுக்கு உருக்குமிணியிடமாகத் தோற்றிய பிரத்தியும்நன்; சாமன்-இவன் கண்ணபிரானுக்கு ஜாம்பவதியிடமாகத் தோற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



றிய சாம்பன்; மோடு-வயிறு; பூமன்-பூக்கள் முதலியன.]

**நெறிமருப்பு எருமையின் ஒருத்தல் நீள்இனம்**
**செறிமருப்பு ஏற்றினம் சிலம்பப் புண்உறீஇ**
**பொறிவரி வராலினம் இரியப் புக்குடன்**
**வெறிகமழ் கழனியுள் உழுநர் வெள்ளமே** 44

[செறி-சிறந்த; இரிய-ஓட; வெறி-மணம்.]

**சேறமை செருவினுட் செந்நெல் வான்முளை**
**வீறொடு விளைகெனத் தொழுது வித்துவார்**
**நாறிது பதமெனப் பறித்து நாள்செய்வார்**
**கூறிய கடைசியர் குழாங்கொண்டு ஏகுவார்** 45

[சேறமை-சேறமைந்த; கடைசியர்-உழத்தியர்.]

மாமனும் மருமகனும் போன்ற அன்புடன், காமனும் அவன் தம்பி சாமனும் சேர்ந்து நிற்கும் தோற்றத்துடன், பூக்களையும் பசும்புற்களையும் தின்று நிறைந்த வயிற்றோடு உழவுத் தொழிலுக்குச் சிறந்த எருதுகள் கூட்டம் கூட்டமாக நிற்கும். அப்படி நிற்கின்ற கூரிய கொம்புடைய எருமைகளில் பெரியதையும் தடித்த கொம்புடைய எருதுகளில் வலியதையும் ஏரில் பூட்டி நடவுப் பாட்டிசை முழங்க, புள்ளிகளும் வரிகளும் உடைய வரால்மீன்கள் புகுந்தோடும் மணமிக்க கழனியிலே உழவுத்தொழில் செய்ய வெள்ளமென நிறைந்திருக்கும் உழவர்கள், சேறு நிறை கழனியிலே செந்நெல் மணிகளை 'வளம் பொழிய விளைக' என வாழ்த்தி விதைப்பர். பின்னர் முளைத்த நாற்றின் பதம் அறிந்து அவற்றைப் பறித்து நட உழத்தியரை அழைத்துச் செல்வர்.

**முலைத்தடம் சேதகம் பொறிப்ப மற்றவர்**
**குலைத்துடன் பதித்தலின் குதித்த வாட்கயல்**
**புலத்திடைக் கவரிகன்று ஊட்டப் போந்தபால்**
**நிலத்திடைப் பாய்ந்தவை பிறழு நீரவே** 46

[சேதகம்-சேறு; கவரி-மான்; குலைத்து-பிரித்து.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பாற்சுவை அறிந்தவை பழனத் தாமரை
மேற்செலப் பாய்தலின் வெரீஇய வண்டினம்
கோற்றொடி நுளைச்சியர் முத்தம் கோப்பவர்
ஏற்றிய மாலைத்தேன் இரியப் பாய்ந்தவே 47

[அவை-கயல்மீன்கள்; பழனம்-வயல்; கோற்றொடி-திரண்ட வளைகள்; நுளைச்சியர்-நெய்தல் நிலத்து மகளிர்.]

இரிந்ததேன் குவளையின் நெற்றி தைவர
முரிந்துபோ தவிழ்ந்துகொங் குயிர்க்கு முல்லையின்
அரும்புசேர்ந்து அணி ஞிமிறு ஆர்ப்ப வாய்பதம்
விருந்தெதிர் கொண்மெனத் தழுவி வீழ்ந்தவே 48

[நெற்றி-உச்சி; முரிந்து-கெட்டு; போது-மலரும் பருவத்து அரும்பு; கொங்கு-தேன்; ஞிமிறு-வண்டு.]

வளமுடி நடுபவர் வரம்பில் கம்பலை
இளமழை முழக்குஎன மஞ்ஞை ஏங்கலின்
அளமரு குயிலினம் அழுங்கிப் பூம்பொழில்
உளமெலி மகளிரின் ஒடுங்கும் என்பவே 49

[கம்பலை-குரவையின் ஆரவாரம்; அளமருதல்-அலமருதல், சுழலுதல்.]

அப்படிச் சென்ற உழத்தியர்கள் தங்கள் மார்பிலே சேறு தெறிக்க நாற்றைப் பிரித்து நடுகையில் இடையே குதித்து ஓடும் பெரிய கயல்மீன்கள், பசு தன் கன்றுக்குக் கொடுத்ததுபோக மீந்து வழியும் பால் நிறைந்த பக்கத்து நிலத்துச் சேற்றிலே புரண்டு விழும். அப்படிப் பால் சுவை தோயப் புரண்டு விழும் கயல்மீன்கள் வயலிலே உள்ள தாமரையின் மேல்படப் பாய்வதால், தாமரையை மொய்த்துக் கிடந்த வண்டினங்கள் பயந்து, முத்துச்சரம் கோக்கும் மணி வளையல்கள் அணிந்த நுளைச்சியர்கள் சூடிக்கொண்டிருக்கும் மாலையின் தேன் சிதறப் பாய்ந்தோடும். அப்படிப் பாய்ந்தோடிய வண்டினங்கள்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குவளை மலர் நுனியில் சேர்ந்த தேனோடு, முல்லை அரும்பவிழ வழிந்த தேனும் சேர, 'விருந்து வைக்க வா' என்றழைப்பதே போல் இன்னிசை எழுப்பிக் கிளம்பிய வண்டினத்தோடு தழுவிக் கிடக்கும். இப்படி வண்டினம் மயங்கிக் கிடக்கின்ற பூஞ்சோலையில், நாற்றைப் பறித்து நடும் உழத்தியர் இடும் ஓசையைக் கார்முகிலின் இடி முழக்கம் என எண்ணி மயிற்கூட்டம் ஒலியெழுப்ப, உண்மையிலேயே கார்காலம் வந்துவிட்டதோ என வருந்திய குயில்கூட்டம், கார்காலம் வந்தும் கணவன் வரவில்லையே என வருந்தும் பெண்களைப் போல் பதுங்கி ஒடுங்கும்.

**வளைக்கையால் கடைசியர் மட்டு வாக்கலின்**
**இளைத்தவர் பருகிய தேறல் தேங்குழிக்**
**களிப்பஉண்டு இளஅனம் கன்னி நாரையைத்**
**திளைத்தலின் பெடைமயில் தெருட்டும் செம்மற்றே**

*[கடைசியர்-மருதநிலத்து மகளிர்; திளைத்தவர்-இடைவிடாது பயின்ற மள்ளர்; தெருட்டும்-தெளியச் செய்யும்.]*

**கண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினார்**
**வண்ணவாள் முகம்என மரையின் உள்புகார்**
**பண்எழுத்து இயல்படப் பரப்பி இட்டனர்**
**தண்வயல் உழவர்தம் தன்மை இன்னதே** 51

*[கட்டல்-களை பறித்தல்; மரை-தாமரை.]*

**நித்திலப் பந்துடன் ஈன்று பாதிரி**
**ஒத்தபூ உடற்றிய நாவின் நாகினால்**
**தத்துநீர் நாரைமேல் எறியத் தண்கடல்**
**பைத்துஎழு திரையெனப் பறவை ஆலுமே** 52

*[நித்திலப்பந்து-முத்துப்பந்து; இங்கே அதனைப் போன்ற நத்தையின் முட்டைக்கு ஆயிற்று. உடற்றிய-அழித்த; பைத்து-விரிந்து; பறவை யென்றது நாரையை. ஆலும்-ஒலிக்கும்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**சொல்அருஞ் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருஇருந்து ஈன்று மேலலார்**
**செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்**
**கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே 53**

[சூற் பசும்பாம்பு-சினைப் பசும்பாம்பு; காய்த்த-விளைந்தன.]

வளையல் அணிந்த கை உடைய உழத்தியர்கள், மதுவார்க்க வயலில் உழுது அலுத்த உழவர்கள் அம் மதுவினை உண்பர். அவர் உண்டு மிஞ்சிப் பின் குழிகளில் தேங்கி நிற்கும் அம்மதுவினைச் சிறு அன்னப் பறவைகள் உண்டு மயங்கி இளநாரையை அணைக்க ஓடும். அதைக் கண்ணுற்ற மயில் தன்பேடையைத் தேடிப் போய் அதன் மையல் தீர்க்கும். வளமுடைய வயல்களில், பூத்துக்கிடக்கின்ற குவளை மலர்களைத் தங்கள் காதலியின் கண்ணென நினைத்து உழவர்கள் பறிக்காது விட்டுச் செல்வர். அவ்வயலிலே பூத்துக் கிடக்கின்ற தாமரை மலர்களையும் களை என்று கருதாமல் தங்கள் காதலியின் முகம் என நினைத்துப் பறிக்காது விட்டுச் செல்லும் உழவர்கள் இனிய பண்ணமைத்து இசை பாடி இன்புற்றிருப்பர். முத்துமணி போல் முட்டையிடும், பாதிரிப் பூவினதைப் போன்ற நாவுடைய நத்தைகள் உதிர்க்கும் நீர், நாரைகள் மேல்பட அந்நாரைகள், விரிந்தெழும் கடல் அலை போல் வெண் சிறகு விரித்துப் பறந்து ஒலியெழுப்பும். வயற்புரங்களில், நெற்பயிர்கள் சூலுற்றுள்ளன என்று சொல்ல முடியாதபடி, பச்சைப் பாம்பைப் போல் உடல் இளைத்துத் தலை பெருத்துக் கதிர்ஈன்று, கீழ்மக்கள் செல்வச் செருக்கால் தலைவிரித்தாடுவதுபோல் தலை நிமிர்ந்து நின்று, பின் கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோரின் பணிவுடைமை போல் உடல் வளையத் தலைகுனியக் கதிர் பெருத்துக் காய்த்துக் குலுங்கும்.

**மீன்கணின் அளவும்வெற் றிடங்கள் இன்மையால்**
**தேன்கணக் கரும்பியல் காடுஞ் செந்நெலின்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**வான்புகழ் களிறுமாய் கழனி ஆக்கமும்**
**ஊன்கணார்க்கு உரைப்பரிது ஒல்லென் சும்மைத்தே 54**

*[மாய்த்தல்-மறைத்தல்; ஊன்கணார்-மனிதர்.]*

**ஆய்பிழி விருத்து வண்டுஅயிற்றி உண்டுதேன்**
**வாய்பொழி குவளைகள் சூடி மள்ளர்கள்**
**தேய்பிறை இரும்புதம் வலக்கை சேர்த்தினார்**
**ஆய்செந்நெல் அகன்றகாடு அரிக்குற் றார்களே 55**

*[பிழி-கள்; விருத்துவண்டு-விருந்தாக வந்த வண்டு; தேய்பிறை இரும்பு-தேய்ந்த பிறையைப் போன்று வளைந்த அரிவாளை.]*

**வலியுடைக் கைகளால் மலர்ந்த தாமரை**
**மெலிவெய்தக் குவளைகள் வாடக் கம்பலம்**
**பொலிவெய்தப் பூம்பொய்கை சிலம்பிப் பார்ப்பெழ**
**மலைபட அரிந்துகூன் குயம்கை மாற்றினார் 56**

*[கம்பலம்-கம்பலை; சிலம்பி-முழங்கி; பார்ப்பு-பறவைக்குஞ்சு; மலை-இங்கே அரிந்து குவிக்கப் பட்ட நெற்சூட்டிற்கு உவமை; கூன்குயம்-வளைந்த அரிவாள்.]*

மீன் கண்ணளவும் வெற்றிடம் இல்லாமல் தேன் எனச் சுவைதரும் கரும்புக் காடுகளும், யானை நின்றால் மறையுமளவுக்கு வளர்ந்து விளைந்த புகழ்மிக்க வளமுடைய செந்நெல் வயல்களும் இன்னவிதம் என்று வாய்விட்டுச் சொல்ல முடியாத அளவுக்கு வளமிகுந்து, ஒல்லெனும் ஓசை நிறைந்திருக்கும். முதிர்ந்து புளித்த கள்ளினைத் தாமுண்டு தாம் சூடியிருக்கும் தேன்சொரியும் குவளைமலர் மாலைகளில் இருந்து வரும் வண்டுகளுக்கும் விருந்தாக வைத்து மகிழும் உழவர்கள், தம் வலது கையிலே தேய்ந்த பிறை நிலவைப் போன்ற கருக்கரிவாளை ஏந்திப் பரந்து விரிந்த செந்நெற்காட்டிடை அறுவடை செய்யப் புகுந்தார்கள். வலிய கரங்களால் அவர்கள் செந்நெல் அரிக்கையில், அவ்வயலிலே பூத்திருந்த தாமரை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மலர்கள் வருந்தக் குவளை மலர்கள் வாடிக் குவியச் செந்நெல் அறுக்கையில் உழவர்கள் இடும் ஒலி முழக்கத் தால் பூம்பொய்கைகளில் இருக்கிற பறவைகளும் குஞ்சு களும் பயந்து ஓடின. உழவர்களும் மலைபோல நெற்கதிர் களை அரிந்து குவித்துவிட்டுத் தங்களின் வளைந்த அரிவாளைக் கையிலிருந்து மாற்றினர்.

**வாளையின் இனம்தலை இரிய வண்டலர்**
**தாளுடைத் தாமரை கிழிய வண்சுமை**
**கோளுடை இளையவர் குழாம்கொண் டேகலின்**
**பாளைவாய்க் கமுகினம் பழங்கள் சிந்துமே 57**

[வண்டு அலர்-வண்டின் பாட்டிற்கு அலர்ந்த; சுமை-நெற்சூட்டின் சுமை; கோட்பாடு-கொள்கை]

**சோர்புயல் முகில்தலை விலங்கித் தூநிலம்**
**மார்புகொண் டார்ந்தது நரல வண்சுளை**
**ஆர்புறு பலாப்பழம் அழிந்த நீள்களம்**
**போர்பினால் மலிந்துஉடன் பொலிந்த நீரவே 58**

[சோர்புயல்-சொரிகின்ற நீரையுடைய; புயல்-நீர்; நரல-முழங்க; ஆர்புறு-நிறையப் பெற்ற; அழிந்த-சிதைந்த; போர்பு-வைக்கோற்போர்.]

**ஈடுசால் போரழித்து எருமைப் போத்தினால்**
**மாடுறத் தெளித்துவை களைந்து காலுறீஇச்**
**சேடுஉறக் கூப்பிய செந்நெற் குப்பைகள்**
**கோடுயர் கொழும்பொனின் குன்றம் ஒத்தவே 59**

[எருமைப் போத்து-எருமைக்கடா; காலுறீஇ-காற்றிற் பொருந்தச் செய்து; தூற்றி என்றபடி. சேடு-பெருமை; பொன்னின் குன்றம்- மேருமலை.]

**கரும்புகண் உடைப்பவர் ஆலை தோறெலாம்**
**விரும்பிவந் தடைந்தவர் பருகி விஞ்சிய**
**திருந்துசாறு அடுவுழிப் பிறந்த தீம்புகை**
**பரந்துவிண் புகுதலிற் பருதி சேந்ததே 60**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[கண்-கணு; கருப்பஞ்சாற்றை வந்தவர்க்கு அளித்தல். அடுவுழி — காய்ச்சுமிடத்து].

வாளைமீன்கள் தங்கள் இடத்தைவிட்டு ஓடவும், வண்டு மொய்க்கப் பூத்து விரிந்து பூந்தா துதிர்த்த தாமரை மலர்களின் இதழ்கள் சிதறவும், வலிமை மிக்க தோளினை உடைய உழவர்கள் நெற்கதிர்களைக் கட்டாகக் கட்டிச் சுமந்து செல்கையில் அவை கமுகம் பாளையின் மடலிற்பட அவற்றின் பழங்கள் சிதறி விழுந்தன. நீரைப் பொழியும் மழை மேகத்தை முட்டுவது போல்உயர்ந்து, பூமி முழுதும் தனக்கிடமாகக் கொண்டு கிடக்கும் நெற்சுமையை இனித் தாங்கமாட்டேன், என நிலம் வாய் விட்டலறும் வண்ணம்—நெற்கதிர்கள் முற்றிய சுளைமிகுந்த பலாப் பழங்கள் சிந்திக் கிடக்கும் நெற்களம் நிறையச் சிதறிக் கிடந்தன. அக்கதிர்ப் போர்களைக் கீழே போட்டு எருமைக் கடாக்களினால் பிரிகட்டிப் போரடித்து, வைக்கோலையும் பதரையும் தூற்றிப்பின் புடைத்தெடுத்துக் குவிக்க நெல்மணிகள் உயர்ந்து பொன் மலைபோல் குவிந்திருக்கும். வெட்டி வந்த கரும்பைச் சாறு காய்ச்சுகின்ற ஆலைகளில் எல்லாம் சென்று, விரும்பியவர்கள் வேண்டு மட்டும் கருப்பஞ் சாற்றைக் கொள்ள, எஞ்சிய சாற்றை ஆலையில் இட்டுப் பாகு காய்ச்சும்போது உண்டான செந்நெருப்பின் இனிய புகை வானளவு சென்று தாவ, சூரியனும் சிவந்து தோன்றியது.

**கிணைநிலைப் பொருநர்தம் செல்லல் கீழ்ப்படப்**
**பணைநிலை ஆய்செந்நெல் பகரும் பண்டியும்**
**கணைநிலைக் கரும்பினிற் கவரும் பண்டியும்**
**மணம்நிலை மலர்பெய்து மறுகும் பண்டியும் 61**

[கிணைநிலைப் பொருநர்-கிணைநிலையையுடைய பொருநர்; பொருநர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோரென

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முப்பகுதியினராவர். இங்கே கூறிய பொருநர் ஏர்க்களம் பாடுவோர். பகர்தல்-விற்றல்; பண்டி-வண்டி.]

மல்லல்அம் தெங்குஇள நீர்பெய் பண்டியும்
மெல்இலைப் பண்டியும் கமுகின் மேதகு
பல்பழுக் காய்க்குலை பெய்த பண்டியும்
ஒல்குதீம் பண்டம்பெய்து ஒழுகும் பண்டியும் 62

[மல்லல்-வளம்; மெல்லிலை மெல்லுதற்குரிய வெற்றிலை; பழுக்காய்-பாக்கு; பண்டம்-பழம்; திசைச் சொல்.]

கருங்கடல் வளந்தரக் கரையும் பண்டியும்
நெருங்குப முதிரையின் நிறைந்த பண்டியும்
பெருங்கலிப் பண்டிகள் பிறவுஞ் செற்றுபு
திருந்திளத் திசைகளும் செறிந்த என்பவே 63

[நெருங்குபு-நெருங்கி; முதிரை-அவரை துவரை முதலியன; செற்றுபு-நெருங்கி.]

கிளிவளர் பூமருது அணிந்து கேடிலா
வளவயல் வைகலும் இன்ன தென்பதேன்
துளியொடு மதுத்துளி அறாத சோலைசூழ்
ஒளிஅமை இருக்கைஊர் உரைக்க நின்றவே 64

[கிளிவளர் மருது-கிளி மருதமரத்தில் இருத்தற்குரிய தென்பர்; வைகலும்-நாள்தோறும்; என்ப-அசை.]

தன்னோடொத்த உழவர்களுக்குக் கொடுத்ததுபோக மிஞ்சியிருக்கும் நெற்குவைகளை விற்பதற்காகப் பண்ணையிலிருந்து ஏற்றிச் செல்லும் வண்டிகளும்; முற்றிய கரும்பிலிருந்து காய்ச்சிய பாகு, வெல்லம் முதலியவற்றை ஏற்றிக் கொண்டு போகும் வண்டிகளும்; மணம் நிறைந்த மலர்களைச் சுமந்து செல்லும் வண்டிகளும்; சுவைமிகுந்த நல்ல இளநீரை ஏற்றிச் செல்லும் வண்டிகளும்; வெற்றிலை ஏற்றிய வண்டிகளும்; பாக்கு மரத்தின் முற்றிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


காய்களைச் சுமந்து செல்லும் வண்டிகளும், இனிய சுவைப் பண்டங்களைக் கொண்டு இடைவிடாது செல்லும் வண்டிகளும்; கருங்கடல் நாவாய் கொண்டு வந்து சேர்த்த சரக்கை நகர்க்கு எடுத்துச் செல்ல விரைகின்ற வண்டிகளும்; மற்றபடி கடல் தந்த முத்து, பவளம், சங்கு முதலியவற்றைச் சுமந்து வந்து தருகின்ற வண்டிகளும்; அவரை, துவரை போன்ற பருப்பு வகைகளை ஏற்றிக் கொண்டு ஒலியெழுப்பி வரும் வண்டிகளும் சாலைகளில் எல்லாத் திசைகளிலும் நிறைந்திருக்கும் கிளியிருந்து வாழும் மருதமரம் நிறைந்த வளமிக்க வயல்புரத்தைப் பற்றி இதுவரை சொன்னோம். இனி, மலர் சிந்தும் தேன் துளிகளோடு கனிவடிக்கும் மதுத்துளிகளும் சேரச் சிறந்து செழித்திருக்கும் சோலைகள் சூழ்ந்த, புகழ்மிக்க குடி மக்கள் வாழும் நகரிடத்தே உள்ள ஊரின் வளத்தைக் கூறுவோம்.

(வேறு)

**சேவல்அன்னம் தாமரையின் தோடுஅவிழ்ந்த**
**செவ்விப்பூ**
**காவில்கூடு எடுக்கிய கவ்விக்கொண் டிருந்தன**
**தாஇல்பொன் விளக்கம்ஆ தண்குயில் முழவம்ஆ**
**தூவிமஞ்ஞை நன்மணம்பு குத்தும்தும்பிக் கொம்பரோ**

[தோடு-இதழ்; செவ்விப்பூ-அழகு குலைதலில்லாத பூ; கூடு எடுக்கிய-கூடு எடுத்தற் பொருட்டு; தாவில் பொன்-வன்மையில்லாத பொன்.]

**கூடினார்கண் அம்மலர்க் குவளைஅம் குழியிடை**
**வாடுவள்ளை மேலெலாம் வாளைஏறப் பாய்வன**
**பாடுசால் கயிற்றில்பாய்ந்து பல்கலன் ஒலிப்பப்போந்து**
**ஆடுகூத்தி ஆடல்போன்ற நாரைகாண்ப ஒத்தவே 66**

[கூடினார்-தம் கணவரோடு கூடின மகளிர்; வள்ளை-நீரில் தோன்றும் ஒருவகைக் கொடி; பாடு-பக்கம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**காவிஅன்ன கண்ணினார் கயம்தலைக் குடைதலின்**
**ஆவிஅன்ன பூந்துகில் அணிந்தஅல்குல் பல்கலை**
**கோவைஅற்று உதிர்ந்தன கொள்ளும்நீரர் இன்மையின்**
**வாவியாவும் பொன்னணிந்து வானம்பூத்தது ஒத்தவே**

[கயந்தலை-குளம்; ஆவியன்ன பூந்துகில்-பாலாவியைப் போன்ற, பூத்தொழிலையுடைய ஆடை].

அந்நகரில் அன்னச் சேவல்கள், முகை அவிழ்ந்து விரிந்த அழகிய தாமரைமலரை, சோலையிலே சென்று கூடு அமைப்பதற்காகத் தம் அலகிலே கவ்விக் கொண்டு பொன் விளக்கேற்றியது போல் இருக்க, இனிய குயிலோசை முழவாக அதிரவும், தோகைமயில்கள் அம் முழவோசையைக் கார்கால இடியோசையென்றெண்ணித் துணைதேடி மறையும். வண்டுகள் பூமலரின் தேன் மணத்தை வாரியிறைக்கும் சோலைகளில், கணவனோடு கூடிய பெண்களின் சிவந்த கண்களைப் போன்ற அழகிய குவளை மலர்கள் ஓடையில் பூத்துக் கிடக்கும். நீர் மட்டம் குறைய சற்றே வாடியிருக்கும் வள்ளைக்கொடிகளின் மீது நீர் நிறைய இன்மையான் வாளை மீன்களெல்லாம் துள்ளிப் பாய்வது, பல அணிமணிகள் பூண்டு கயிற்றிலே நின்றாடும் கழைக்கூத்தியின் ஆட்டத்தைப் போலிருக்கும். ஓடையிலே துள்ளிக் குதிக்கும் மீன்களைக் கொத்திக் கொண்டு போகக் கரையிலே காத்திருக்கும் நாரைகள் அந்தக் கழைக்கூத்தினைக் காண வந்து காத்திருப்பாரைப் போல் தோற்றும். செழுங்கழுநீர் மலர் போன்ற அழகிய கண்களை உடைய இளம்பெண்கள், நீரிடை நீந்தி விளையாடுவதால், அவர் அணிந்திருந்த பாலாவியன்ன பூந்துகில் போர்த்தியிருந்த அல்குலின் மேல் அணிந்திருந்த அணிகள் கழன்றுவிழும். அவற்றை எடுத்து வைத்துக் கொள்ள அங்கு யாரும் இன்மையால், அவை யாவும் குளத்து நீரிலே மிதக்கக் குளமும் விண்மீன் சுடர் வீசும் வானத்தைப் போல் பொன் அணி ஒளி வீசச் சிறந்து தோன்றும்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பாசவல் இடிப்பவர் உலக்கைவாழைப் பல்பழம்
ஆசினி வருக்கைமா தடிந்துதேன் கனிஉதிர்த்து
ஊசல்ஆடும் பைங்கமுகு தெங்கின்ஒண் பழம்பரீஇ
வாசத்தாழை சண்பகத்தின் வான்மலர்கள் நக்குமே 68

[பாசவல்-பச்சை நெல்லை இடித்து உண்டாக்கும் அவல்; ஆசினி-ஈரப்பலா; ஊசலாடு பைங்கமுகு-மகளிர் ஊசலாடுதற்குரிய கமுகமரம்.]

மன்றல்நாறு இலஞ்சிமேய்ந்து மாமுலை சுரந்தபால்
நின்றதாரை யால்நிலம் நனைப்பவேகி நீண்மனைக்
கன்றுஅருத்தி மங்கையர் கலம்நிறை பொழிதர
நின்றமேதி யால்பொலிந்த நீரமாட மாலையே 69

[மன்றல்-மணம்; இலஞ்சி-பொய்கையிலுள்ள கழுநீர் முதலிய பூக்கள்; மேதி-எருமை. இது மருத நிலத்திற்குரிய விலங்கு.]

புதிய அவலை இடிப்பவர்களின், உலக்கை பலவகை வாழைப் பழங்களையும் உதிர்த்து, பலா, மா ஆகிய சுவைக்கனிகளையும், தென்னை கமுக மரத்தின் காய் களையும் சிதறச் செய்து, மணமிகுந்த சண்பக மலர் களையும் தாழை மடல்களையும் தொட்டுத் தோயச் சுழன்று சென்று இடிக்கும். மணம் மிகுந்த பல்வகை மலர் களைத் தின்று மடிசுரந்த பால் மழைநீர்த் தாரைபோல் பெருக்கெடுத்து நிலத்தை நனைக்க வழிந்தோடுமாறு சுரந்து வீடு சென்று அங்குள்ள கன்றுக்கும் ஊட்டிப் பின் மங்கையர் வைத்த, கலமும் சாலும் நிறையுமளவுக்கும் பால் தரும் எருமைகள் விளங்கும் மாடமாளிகைகள் நிறைந்திருக்கும்.

வெள்ளிப்போழ் விலங்கவைத் தனையவாய்
மணித்தலைக்
கொள்பவளம் கோத்தனைய காலகுன்றிச் செங்கண
வொள்அகில் புகைதிரண்ட தொக்குமா மணிப்புறாக்
கிள்ளையோடு பாலுணும் கேடில்பூவை பாடவே 70

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[போழ்-தகடு; புறாவின் காலுக்குப் பவளத் துண்டுகள்உவமை. குன்றி-குன்றிமணி; பூவை-நாகண வாய்ப்புள்.]

**காடிஉண்ட பூந்துகில் கழுமஊட்டும் பூம்புகை
மாடமாலை மேனலார் மணிக்குழலின் மூழ்கலிற்
கோடுஉயர்ந்த குன்றின்மேற் குழீஇயமஞ்ஞை தம்சிறகு
ஆடும்மஞ்சி னுள்விரித் திருந்தவண்ணம் அன்னரே 71**

[கழும-மயங்க; ஆடும்-உலவும்; மஞ்சு-மேகம்.]

**கண்ணுளார்நும் காதலர் ஒழிககாமம் ஈங்கென
உண்ணிலாய வேட்கையால் ஊடினாரை ஆடவர்
வண்ணமே கலைகளைப் பற்றஅற் றுதிர்ந்தன
எண்ணில்பொன் சுடுநெருப்பு உக்கமுற்றம் ஒத்தவே**

[உண்ணிலாய-உளம் விரும்பிய; வேட்கை-விருப்பம்.]

**கோட்டிளந் தகர்களும் கொய்ம்மலர தோன்றிபோற்
சூட்டுடைய சேவலும் தோணிக்கோழி ஆதியா
வேட்டவற்றி னூறுளார் வெருளிமாந்தர்
போர்கொளீஇக்
காட்டிஆர்க்கும் கௌவையுங் கடியுங்கௌவை
கௌவையே 73**

[தகர்-ஆட்டுக்கிடாய்; சூட்டு-குடுமி; தோன்றிபோற் சூட்டுடைய சேவல். தோணிக்கோழி-பிறநாட்டி லிருந்து கப்பலில் வந்த கோழி.]

அத்தகைய மாளிகைகளின் மாடங்களில் வெள்ளித் தட்டை விரித்து வைத்தது போன்ற வாயினையும் அழகிய தலையையும் செம்பவளத் துண்டு போன்ற கால் களையும் குன்றிமணியொத்த கண்களையும் மணமிக்க அகிற்புகை திரண்டதைப் போன்று கரிய நிறமுடைய பெரிய சிறகுகளையும் உடைய மணிப்புறாக்கள், நாகண வாய்ப்புட்கள் பாடியபடியிருக்கக் கிளியோடமர்ந்து பால ருந்தும். கஞ்சியிட்டுச் சலவை செய்த அழகிய ஆடைகள் அகில் புகையிடை மறையுமளவுக்கு நிறைய மாலைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பொழுதில் மேல்மாடங்களில் மங்கையர்கள் தம் கூந்தலுக்கு அகில்புகை ஊட்டுவதால், அகில் புகையிடையே கூந்தலும் மறைய அவர் இருந்த காட்சி, உயர்ந்த மலைக் குன்றுகளின் மேல் இருக்கும் மயில்கள் தம் சிறகை விரித்து முகிலினுள் மறைத்தது போலிருக்கும்.

''உம்மால் காதலிக்கப்பட்ட மகளிரை உம்முடைய கண்களே காட்டிக் கொடுத்துவிடுகின்றன; எனவே என்னோடு இங்குத் துய்க்கவரும் இன்பத்தை விடுக'' எனக் கூறி ஊடிக் களிக்கப் பொய்க் கோபம் கொண்டு எழுந்து போகின்ற மங்கையரைப் போகாது தடுக்க ஆடவர் அவர்தம் மேகலையைப் பற்றியிழுக்க, அது அறுந்து விழுந்ததால் அதிலிருந்து சிதறிய முத்துக்களும் மணிகளும் பசும் பொன் உருக்கும் முற்றங்களில் சிந்திக் கிடக்கும் நெருப்பைப்போல் அம்மாடங்களில் எங்கும் சிதறிக் கிடந்தன. கொம்புடைய இளம் ஆடுகளையும், மென் மலரைப் போன்ற இளஞ் சூட்டினை உடைய சிறு கோழிகளையும், காடை, சேவல் முதலியவற்றையும் அவை படும் துன்பத்தை எண்ணிப் பார்க்காது, மோதி விளையாடவிட்டு வேடிக்கை பார்க்கும், செல்வச் செருக்குடையவர்கள் இடும் ஒலியன்றி வேறு ஆரவாரம் இல்லாத—ஒலியில்லாததாகும் அந்நகரம்.

**இறுநுசுப்பின் அம்நலார், ஏந்துவள்ளத்து ஏந்திய**
**நறவம்கொப் புளித்தலின் நாகுபுன்னை பூத்தன**
**சிறகர்வண்டு செவ்வழி பாடமாடத்து ஊடெலாம்**
**இறைகொள்வானின் மீன்என அரம்பைமுலையி**
**னிருந்தவே 74**

[இறுநுசுப்பு-ஒடிகின்ற இடை; அ-அழகு; வள்ளம்-கிண்ணம்; நாகுபுன்னை-இளைய புன்னைமரம்; செவ்வழி-மாலைக் காலத்திற்குரிய பண்; அரம்பை-வாழை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விலக்கில்சாலை யாவர்க்கும் வெப்பின்முப் பழச்சுனைத்
தலைத்தணீர் மலரணிந்து சந்தனம் செய்பந்தரும்
கொலைத்தலைய வேற்கணார் கூத்தும்அன்றி ஐம்பொறி
நிலைத்தலைய துப்புஎலாம் நிறைதுளும் பும்ஊர்களே 75

[சாலை-இங்கே அன்ன சத்திரம்; முப்பழம்-கடு, நெல்லி, தான்றி என்பவற்றின் பழங்கள்; துப்பு-நுகரப்படும் பொருள்; நிறை-நிறைந்து.]

அடிசில்வைக லாயிரம் அறப்புறமும் ஆயிரம்
கொடியனார்செய் கோலமும் வைகல்தோறும் ஆயிரம்
மடிவுஇல்கம்மி யர்களோடு மங்கலமும் ஆயிரம்
ஒடிவிலைவேறு ஆயிரம் ஓம்புவாரின் ஓம்பவே 76

[கொடியனார்-மகளிர்; கோலம்-அலங்காரம்; மடிவு-சோம்பல்; கம்மியர்-தொழில் செய்வோர்.]

நற்றவம்செய் வார்க்குஇடம் தவஞ்செய்வார்க்கும் அஃதிடம்
நற்பொருள் செய்வார்க்குஇடம் பொருள்செய் வார்க்கும் அஃதிடம்
வெற்றஇன்பம் விழைவிப்பான் விண்உவந்து வீழ்ந்தென
மற்றநாடு வட்டமாக வைகும்மற்ற நாடரோ 77

[நற்றவம்-பிறப்புஅறச் செய்யும் பெருந்தவம்; வட்டமாக-எல்லையாத.]

அழகிய இடை உடைய பெண்கள் மணிக்கிண்ணத்தில் ஏந்திவந்த மதுவை உண்டு, கொப்பளித்து விளையாட, அவர் ஆட்டத்தால் விண்மீன் பூத்துக்கிடப்பது போல் மாடங்களில் எல்லாம், வண்டினம் இருந்து இசைபாடும் சிறு புன்னை மரத்தின் மலர்கள் சிந்திச் சிதறிக் கிடக்க, வாழையின் பூக்கள் மங்கையரின் மார்புபோலும் ஒளி உமிழச் சிறந்து தோன்றும். ஏமாங்கத நாட்டில் உள்ள ஊர்களில், இல்லையென்னாது யார்க்கும் உணவு அளிக்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அறச்சாலைகளும், வெப்பத்தை நீக்கிக் குளுமை சேர்க்கும் கடு, நெல்லி, தான்றிப் பழமரங்கள் சூழ இருக்கும் சுனையில் இருந்து எடுத்த தண்ணீரிலே பூவும் சந்தனமும் இட்டு மணமூட்டித் தருகின்ற தண்ணீர்ப் பந்தலும், அன்பால் கொல்கின்ற வேல் போலும் விழியுடைய பெண்களின் கூத்தாட்டமும் அல்லாது, ஐம்பொறிகளும் ஒருசேர இன்பம் நுகர்வதற்கு வேண்டிய எல்லாம் நிறைந்திருக்கும்.

இப்படிப்பட்ட வளம் எல்லாம் குறைவின்றி நிறையப் பெற்றிருக்கும் ஏமாங்கத நாட்டில், மேலே சொன்ன அறச்சாலைகள் ஆயிரக்கணக்கிலிருக்கும். அத்தகைய அறச்சாலைகள் நடக்க இறையிலியாக விடப்பட்ட அறநிலங்களும் ஆயிரம் இருக்கும். மகளிர் அழகு செய்து கொள்ளும் மணிமாடங்கள் ஆயிரம் இருக்கும். சோம்பலின்றித் தொழில் புரிவோர் தொகையும் ஆயிரம் இருக்கும். அத்தகையோர்க்கு நடைபெறும் திருமணங்களும் அன்றாடம் ஆயிரக்கணக்கிலே இருக்கும். அங்கு இல்லாதன இல்லை என எல்லாமே ஆயிரமாயிரமாயிருக்கும். மேலும் அந்நாடு மெய்த்தவம் புரிவோர்க்கு ஏற்ற இடம்; இல்லறம் இயற்றுவோர்க்கும் இனிய இடம்! மெய்ப்பொருளைத் தேடுவார்க்கு உகந்த இடம்; புவிச்சுவையைப் பொன் பொருளை நாடுவார்க்கு நல்ல இடம்! புகழ்மிக்க தன் இன்ப வளத்தை உலகம் அடையச் செய்வதற்காக வானுலகு மகிழ்ந்து தாழ்ந்து மண்ணிலே வந்தது எனும்படிக்கு, மற்ற நாடுகள் வட்டமாக எல்லையாக அமைந்து காவல் தரும் எழில் நலமும் உடையது ஏமாங்கத நாடு ஆகும்.

### நகர் வளம் - புடைநகர்

### (வேறு)

கண்வலைக் காமுகர் என்னும் மாபடுத்து
ஒண்ணிதித் தசைதழீஇ உடலம் விட்டிடும்
பெண்வலைப் படாதவர் பீடின் ஓங்கிய
அண்ணல்அம் கடிநகர் அமைதி செப்புவாம் 78



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[மா-விலங்கு; பீடு-பெருமை; அண்ணல்-தலைமை; கடிநகர்-காவலையுடைய இராசமாபுரம்.]

**விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன**
**சண்பகத்து அணிமலர் குடைந்து தாதுகள்**
**வண்சிறைக் குயிலொடு மயில்கண் மாறுகூய்க்**
**கண்சிறைப் படுநிழற் காவு சூழ்ந்தவே** 79

[வியன்சினை-அகன்ற கிளைகள்; தாது-மகரந்தப் பொடி; கண் சிறைப்படும்-கண்களைத் தம் மிடத்தே தடுத்துக்கொள்ளும்.]

**கைபுனை சாந்தமும் கடிசெய் மாலையும்**
**மெய்புனை சுண்ணமும் புகையும் மேவிய**
**நெய்யொடு குங்குமம் நிறைந்த நாணினால்**
**பொய்கைகள் பூம்படாம் போர்த்த போன்றவே** 80

[கடி-மணம்; சுண்ணம்-வாசனைப்பொடி; புகை-அகில் முதலியவற்றின் புகை; நெய்-புழுகு; படாம்-சீலை; பூம்படாம் என்பதற்குப் பொலிவினை யுடைய படாம் என்றும், பூவாகிய படா மென்றும் இரண்டு பொருள் கொள்க.]

கண்களெனும் வலைகளால், மிருகங்களை வலைவீசிச் சிக்க வைப்பதுபோல் காமுகரைச் சிக்க வைத்து, அவர் தரும் பொருளுக்காகத் தசை தழுவியிருந்து பின் உடலை வெறுத்தொதுக்கும் பெண்களின் வலை விரிப்பில் — பொய் ஆசையில் சிக்காத பெரியோரின் தவப்பயன்போலத் தழைத்தோங்கிய புகழ்மிக்க அழகிய இராசமாபுரத்தின் சிறப்பைச் சொல்லுவோம்.

வானைத் தொடுமாறு வளர்ந்த பெரிய கிளைகள் பாரந்தாங்காது வளையுமளவுக்குப் பூத்துக் குலுங்கும் சண்பகமலர்களில் இருந்து பூந்தாது சிந்த, மயிலும் குயிலும் இடைவிடாது கூவிக்கொண்டிருக்க, கண்ணைக் கவரும் சோலை நிழல் சூழ்ந்தது அந்நகர். கையில் பூசிய சந்தனமும், மணந்தரும் மலர்மாலையும் அணிந்து உடல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மேலெல்லாம் பூசிய வண்ணப்பொடிகளும், கூந்தலுக்கு ஊட்டிய அகில்புகையும், புனுகும் குங்குமமும் மணம்தரப் பெண்கள் வந்து நீராடலின் நாணமுற்ற பொய்கைகள் வெட்கத்தால் முகத்தை மூடிக் கொள்ளுதல்போல, தாமரை, நீலோற்பலம் போன்ற பூமலர்களைத் தம்மேல் துகிலாகப் போர்த்துக் கிடந்தன.

**கடிநலக் கரும்பொடு காய்நெல் கற்றையின்**
**பிடிநலம் தழீஇவரும் பெருங்கைக் குஞ்சரம்**
**அடிநிலை இருப்புஎழு அமைந்த கல்மதில்**
**புடைநிலை வாரிகள் பொலிந்த சூழ்ந்தவே 81**

[கடிநலக்கரும்பு-வரைந்து கொள்ளப்பட்ட நன்மையையுடைய கரும்பு; காய்நெற் கற்றை-காய்த்த நெல்லினது தொகுதி.]

**சலசல மும்மதம் சொரியத் தத்தமுள்**
**கொலைமருப்பு இரட்டைகள் குளிப்பப் பாய்ந்துஇரு**
**மலைதிளைப் பனஎன நாகம் ஆன்றபோர்**
**குலவிய நிலைக்களம் கோலம் ஆர்ந்தவே 82**

[சலசல-ஒலிக்குறிப்பின் வந்த இரட்டைக் கிளவி; கொலை மருப்பு-கொலையைச் செய்யும் கொம்பு; நாகம்-யானை; மான்ற-மயங்கிய; குலவிய-வளைந்த; கோலம் ஆர்ந்த-அழகு நிறைந்தன.]

**முத்துஉடை வெண்மருப்பு ஈர்ந்து மொய்கொளப்**
**பத்தியில் குயிற்றிய மருங்கில் பல்வினைச்**
**சித்திரக் கிம்புரி வைரம் சேர்த்துநர்**
**ஒத்துஇயல் இடங்களும் ஒழுங்கு நீண்டவே 83**

[மொய்-வன்மை; சித்திரம்-அழகு; கிம்புரி-யானைக் கொம்பிலிடும் பூண்.]

**ஓடுதேர் சாரிகை உகுபொன் பூமியும்**
**ஆடகம் ஆற்றும் தார்ப்புரவி வட்டமும்**
**கேடக வாள்தொழில் இடமும் கேடிலாக்**
**கோடுவெஞ் சிலைத்தொழில் இடமும் கூடின்றே 84**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[சாரிகை-ஓட்டத்தால்; ஆடகம்-நால்வகைப் பொன்னுள் ஒன்று; தார்-கிண்கிணிமாலை; வட்டம்-வட்டமாக ஓடுமிடம்.]

இனிய செங்கரும்பையும், முற்றிய செந்நெல் மணிக் கதிர்களையும் விரும்பி உண்ணும் நீண்ட துதிக்கை உடைய யானைகள் அடிபெயராமல் இருக்க அமைத்த கணைய மரங்கள் கோட்டை மதிலின் உட்புறத்தில் நிறைந்திருந்தன. சலசல என மதநீர் பொழியும் யானைகளின் குத்திக் கொல்லத்தக்க கோடுகள் — தந்தங்கள், ஒன்றில் ஒன்று தைக்க இரண்டு மலைகள் ஒன்றோடொன்று போரிடுவதுபோல் தத்தமக்குள் அவை போரிட்டுக் கொள்ளும் காட்சி பார்க்க அழகுடையதாகும். அத்தகைய யானைகளின் முத்தணிந்த வெள்ளைத் தந்தங்களை அறுத்துக் கூராக்கி, அவற்றை மேலும் வலிவுள்ளதாக்க அத்தந்தப் பூண்களிலே வைரம் வைத்திழைக்கும் தொழில் திறமை மிக்கவர்கள் நெருங்கி வாழும் தெருக்கள் நீண்டிருக்கும். அந்நகரில் விரைவாகத் தேர் ஓடுவதாலே தேரில் இருந்து சிந்திய பொன் காசுகள் சிதறிக்கிடக்கும் இடங்களும், ஆடகப் பொன்மணி மாலை அணிந்த குதிரையேற்றம் பழகும் இடங்களும், கேடயம் ஏந்தி வாட்போர் முறைப் பயிற்சிபெறும் இடங்களும், பிழையின்றி விற்போர் பயிலப் பலர்கூடும் இடங்களும் நிறைந்திருக்கும்.

## இடைநகர்

**புடைநகர்த் தொழில்இடம் கடந்து புக்கபின்**
**இடைநகர்ப் புறம்பணை இயம்பும் ஓசையோர்**
**கடலுடைந் ததுவெனக் கலந்தது அக்கடல்**
**மடைஅடைத் தனையதம் மாக்கள் ஈட்டமே 85**

[புடைநகர்-கடைநகர்; இடைநகர்-நகரினது இடைப் பாகம்; புறம்பணை-புறம்பை அணைந்த இடம்.]

**சிந்துரப் பொடிகளும் செம்பொற் சுண்ணமும்**
**சந்தன நீரொடு கலந்து தையலார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**பந்தொடு சிவிறியிற் சிதறப் பார்மிசை**
**இந்திர வில்எனக் கிடந்த வீதியே 86**

*[சிந்துரப் பொடி-செந்நிறமுடைய பொடி; பொற் சுண்ணம்-பொற் பொடி; இந்திரவில்-வானவில்.]*

**பாத்தரும் பசும்பொனின் மாடத்து உச்சிமேல்**
**தூத்திரள் மணிக்குடம் நிரைத்துத் தோன்றுவ**
**பூத்தன வேங்கைமேல் பொலிந்து கார்நினைந்து**
**ஏத்தரும் மயில்குழாம் இருந்த போன்றவே 87**

*[பாத்தல் - பகுத்தல்; மணிக்குடம் - நீலமணியாற் செய்யப்பட்ட தூபிகள்; ஏ-மேல் நோக்குதல்.]*

**நெடுங்கொடி நிழல்மதி நெற்றி தைவர**
**உடம்புவேர்த்து இனமழை உரறி நோக்கலின்**
**நடுங்குபு நல்வரை மாடத் துச்சியில்**
**அடங்கிவீழ்ந்து அருவியின் அழுவ போன்றவே 88**

*[மதிநெற்றி-சந்திரனுடைய உச்சியை; தைவர-தடவ; நடுங்குபு-நடுங்கி; வரைமாடம்-மலை போன்ற மாடம்; அருவியை அழுகைக் கண்ணீராகக் கூறுதல்.]*

புடைநகரில் தொழில் புரிவோர் வாழும் இடங்களைக் கடந்து பின் உள்ளே சென்று இடைநகரை அடைந்தால், அங்கே, அந்த இடை நகரின் மருத நிலத்தில் புடை நகரைச் சென்று தாக்கும் அளவுக்கு எழுகின்ற ஓசை கடலுடைந்தது போல் ஒலிக்க, அந்நகரில் வாழும் மக்கள் கூட்டமோ அக்கடலுடைப்பை அடைக்கும் படைவரிசை போலிருக்கும். அந்நகரில் செந்நிறப் பொடிகளும், பொன்னிறச் சுண்ணமும் சந்தன நீரோடு கலந்து பெண்கள் துருத்தியிலே எடுத்திறைத்து நீர் விளையாட, அவ்வண்ணக் கலவைநீர் மண்ணிலே சிதறிக் கிடப்பது விண்ணிலே இருக்க வேண்டிய இந்திரனின் வண்ணவில் தவறி மண்ணிலே கிடப்பதுபோல் இருக்கும். மேலும் அந்நகரின் புத்தொளி வீசித் துலங்கும் பொன்மயமான மாடங்களின் உச்சியில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



நிறைந்திருக்கும் மணிக்கலசங்கள், பூத்துக் குலுங்கும் வேங்கை மரங்களின்மேல் அமர்ந்து கார்முகிலை நினைத் தேங்கி விண்பார்த்துக் கொண்டிருக்கும் மயில் கூட்டத் தைப் போலிருக்கும். அம்மாடங்களின் உச்சியில் தவழும் நீண்ட கொடிகள் விண்வரை சென்று வெண்ணிலவின் நெற்றியைத் தடவ, நிலவைச் சுற்றித் திரண்டிருந்த மேகங்கள் அதனால் உடல் வேர்த்து இடியிடித்து மழை பொழிய, அம்மழைநீர் பெருக்கெடுக்கும் அருவி உளம் நடுங்கி விழுந்தழுவது போல் மலைபோன்ற நீள்மாடங் களின் உச்சியிலிருந்து விழுந்து வழிந்தோடும்.

**பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்**
**நற்சிறார் ஊர்தலின் நங்கை மார்விரீஇ**
**உற்றவர் கோழிமேல் எறிந்த ஒண்குழை**
**மற்றத்தேர் உருள்கொடா வளமை சான்றவே 89**

[விரீஇ-நெல்; குழையைக் கோழிமீது எறிதல். போதகம்-யானை.]

**மாலையும் பசும்பொனும் மயங்கி வார்கணைக்**
**கோல்எயுங் குனிசிலை நுதலி னாரொடு**
**வேலியல் ஆடவர் விரவி விண்ணவர்**
**ஆலயம் இதுஎன ஐயம் செய்யுமே 90**

[பொன்-ஆபரணம்; ஆகுபெயர். கோல்-அம்பு; குனிசிலை-வளைக்கப்பட்ட வில்; வேல் இயல்-வேற்படையிற் பழகி ஒழுகுகின்ற; விரவி-கலக்கப் பட்டு.]

**கற்சுணம் செய்ததோள் மைந்தர் காதலால்**
**நற்சுணப் பட்டுஉடை பற்ற நாணினால்**
**பொற்சுணத் தால்விளக்கு அவிப்பப் பொங்கிய**
**பொற்சுணம் புறம்பணை தவழும் பொற்பிற்றே 91**

[கல் சுண்ணம் செய்த-உருண்ட கல்லைப் பொடியாகச் செய்த; நல்சுணப்பட்டு - நல்ல வாசனைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பொடியை அளைந்த பட்டு; பொற்பிற்று-
பொலிவையுடையது.]

பொன்னாலான சிறு தேரில் சேர்த்துக் கட்டியிருக்கிற அழகிய யானைகள்மேல் அமர்ந்து சிறுவர்கள் நடை ஊர்ந்து செல்கையில், முற்றத்தில் உலரப்போட்டிருக்கும் நெல்மணிகளைக் காவல் காத்திருக்கும் பெண்கள், அவற்றைத் தின்ன வரும் கோழிகளை விரட்ட வேறு ஏதும் அகப்படாமல் தங்கள் காதணிகளையே கழற்றி எறிய, அந்தக் காதணிகள் சிறுவர்கள் நடை ஊர்ந்து செல்லும் அச்சிறு தேர்களை ஓடாவண்ணம் தடுத்து நிறுத்தும் வளமுடையது இடைநகர். பொன் அணியும் பூமாலையும் கலந்து கிடப்பதுபோல், புருவ வில்லை வளைத்து, போய்த் தைக்கின்ற விழியம்பைக் கோத் தெறியும் மங்கையரும், வாட்போர் புரியும் ஆடவரும் அன்பாலே கலந்து வாழும் மாளிகைகள், விண்ணவர் வீற்றிருக்கும் கோயிலெனத் தோற்றும். அம்மாளிகையினுள் கல்லைப் பொடி செய்யும் வலிய தோளுடைய மறவர்கள், அன்பு மீதூறக் காதலால் தம் காதலியரின் பொற்சுண்ணப் பொடி தோய்ந்த பட்டுடைகளைப் பற்றியிழுக்க, இழுக்கின்ற வேகத்தால் உடை அவிழ, உடை அவிழ்வதால் வெட்கமுற்ற மங்கையர்கள், உடனே தம்கையில் இருக்கும் பொற்சுண்ணப் பொடிகளைத் தூவி அறையில் எரியும் விளக்கை அணைக்க, அவர் அப்படித் தூவிய பொற் சுண்ணப் பொடிகள் காற்றிலே கலந்துபோய் பக்கத்திலே உள்ள மருத நிலத்தில் படியும் பெருமை நிறைந்தது.

**நலத்தகு நானம்நின்று இடிக்கும் நல்லவர்**
**உலக்கையால் உதிர்ந்தன தெங்கின் ஒண்பழம்**
**நிலத்தவை சொரிதலின் வெரீஇய மஞ்ஞைபோய்க்**
**கலத்துயர் கூம்பின்மேல் ஆடும் கௌவைத்தே** 92

[நலத்தகு-நலக்கத்தகு; விரும்பத்தக்க. நானம்-
சுண்ணம்; நல்லவர்-மகளிர்; வெரீஇய-அஞ்சிய;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கலத்துஉயர் கூம்பு—கப்பலில் உள்ள உயர்ந்த பாய்மரம்; கௌவைத்து - முழக்கத்தை யுடையது.]

**இட்டஎள் நிலம்படா வகையில் ஈண்டிய**
**முட்டிலா மூவறு பாடை மாக்களால்**
**புட்பயில் பழுமரம் பொலிவிற்று ஆகிய**
**மட்டிலா வளநகர் வண்ணம் இன்னதே** 93

[ஈண்டிய-ஒன்று சேர்ந்த; முட்டு-குறைவு; புட்பயில்-பலவகைப் பறவைகளும் உணவின் பொருட்டு நெருங்கிய; பழுமரப் பொலிவிற்று-பழுத்த மரத்தைப் போன்ற பொலிவை யுடையது.]

மணம் மிகுந்த பொற்சுண்ணப் பொடிகளை இடிக்கும் மங்கையர்கள் உயரத் தூக்கி எறியும் உலக்கைகள் தென்னை மரத்திலே மோதத் தரையில் சிதறிவிழும் தெங்கின் முற்றிய காய்களைக் கண்டு பயந்து போன மயில்கள், பறந்து சென்று மரக்கலங்களின் மேல்பரப்பில் நின்றாடுவதால் உண்டாகும் ஒலி உடைய அந்நகரில், எள்விழ இடமில்லாமல் பதினெட்டு மொழிபேசும் பல தேசத்து மக்களும் நிறைந்திருக்க, இனிய சுவைக் கனிகள் எந்நேரமும் காய்த்துக் குலுங்குவதால் எப்போதும் பறவைகள் தங்கி வாழும் பழமுதிர் சோலைகள் சூழ்ந்திருத்தலால் அளவற்ற வளம் தேங்கிக் கிடக்கும்.

## அகழி

**தங்கொளி நித்திலத் தாமம் சூடிய**
**வெங்களி இளமுலை வேற்கண் மாதரார்**
**பைங்கிளி முன்கைமேல் கொண்டு பார்ப்புஎணும்**
**கொங்கலர் தாமரைக் கிடங்கு கூறுவாம்** 94

[நித்திலத்தாமம்-முத்துமாலை; வெங்களி - விருப்பத்தையுடைய களிப்பை விளைக்கும்; கொங்கு-தேன்; கிடங்கு-அகழி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**கோட்சுறா இனத்தொடு முதலைக் குப்பைகள்**
**ஆட்பெறா திரிதர அஞ்சிப் பாய்வன**
**மோட்டுஇறா பனிக்கிடங்கு உழக்க மொய்த்தெழுந்து**
**ஈட்டுஅறாப் புள்ளினம் இரற்றும் என்பவே 95**

[கோட்சுறா-கொல்லுதலையுடைய சுறாமீன்; முதலைக் குப்பைகள்-முதலையின் கூட்டங்கள்; மோடு இறா-பெரிய இறா மீன்கள்; உழக்குதல்-கலக்குதல்; மொய்த்து-நெருங்கி; இரற்றும்-ஒலிக்கும்.]

**சிறைஅனப் பெடையினோடு ஊடிச் சேவல்போய்**
**அறுபத வண்டினம் ஆர்ப்பத் தாமரை**
**உறைவது குழுவினின் நீங்கி யோகொடு**
**கறையற முயல்வதோர் கடவுள் ஒத்ததே 96**

[சேவல்-ஆண் அன்னம்; அறுபத வண்டினம்-ஆறு கால்களையுடைய வண்டினங்கள்.]

ஒளி பொருந்திய முத்துமாலை அணிந்த, கூடிக் களிக்கச் சுவைதரும் அழகிய முலையும் வேல்விழியும் உடைய பெண்கள், பசுங்கிளிகளைக் கையிலேந்தியபடி, அன்னப் பறவைகளை எண்ணிப் பார்க்கின்ற, தேன் வழியும் தாமரை மலர்கள் நிறைந்த அகழிகளைப் பற்றிச் சொல்லுவோம்.

வலிமைமிக்க சுறாமீன்களுடன், முதலைக் கூட்டங்கள் கரையில் தமக்கு உணவாகத் தின்னுதற்கு ஆட்கள் கிடைக்காமல் அலைந்து திரிய, அப்படி அவை அலைந்து திரிவதைக் கண்டு பயந்து பாயும் இறால் மீன்கள், அக் குளிர்ந்த அகழியைக் கலக்குவதால் உண்டாகும் ஒலி கேட்டுப் பயந்து இணைபிரியாது அணைந்திருந்த — அவ்வகழியில் வாழும் அன்னப் பறவைகள் எழுந்து ஆரவாரித்தன. அப்படி ஆரவாரித்து எழுந்து சென்ற பேடையோடு ஊடிய அழகிய சிறகுடைய அன்னச் சேவல் தனித்துப் போய், ஆறு கால்களுடைய வண்டுகள் மொய்க்கும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தாமரை மலரிலே சென்று தங்கியிருப்பது, உற்றோர் பெற்றோரை விட்டுப் பிரிந்து தனியே போய்ப் பிறவித் துயராகிய கறையைக் கழுவப் பெருந்தவம் மேற்கொள்ளும் பெரியோரின் செயலை ஒத்திருக்கும்.

**அரும்பொனும் வெள்ளியும் மணியும் அல்லது**
**கருங்கலம் தோய்வு இலாக் காமர் பூந்துறை**
**குரும்பைமென் முலையின்மேல் குலாய குங்குமம்**
**விருந்துசெய் திடவெறி மேனி சேந்ததே** 97

[பொன் வெள்ளி யென்பன, அவற்றால் செய்யப்பட்ட குடங்களைக் குறித்தன. கருங்கலம்-இழிவான மட்கலம்.]

**பட்டவர்த் தப்பலிற் பரவை ஏந்து அல்குல்**
**அட்டுஒளி அரத்தம்வாய்க் கணிகை அல்லது**
**மட்டுடை மணமகள் மலர்ந்த போதினால்**
**கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே** 98

[தப்பல்-கொல்லுதல்; பரவை-கடல்; கணிகை-பரத்தை; அட்டு-உருக்கிய.]

**நிரைகதிர் நித்திலங் கோத்து வைத்தபோல்**
**விரைகமழ் கமுகின்மேல் விரிந்த பாளையும்**
**குரைமதுக் குவளைகள் கிடங்கிற் பூத்தவும்**
**உரையின் ஓரோசனை உலாவி நாறுமே** 99

[நிரைகதிர் நித்திலம்-வரிசைப்படுத்திய கிரணங்களையுடைய முத்துக்கள்; கோத்து வைத்த நித்திலம் விரிந்த பாளைக்கு உவமை. யோசனை-நாற்காததூரம்.]

பொன்னாலும், வெள்ளியாலும், மணியாலும் ஆன குடங்கள் அல்லாது வேறு மண் குடங்கள் அமிழாத, வாசமலர் பூத்துக்கிடக்கும் வாவிகளில், புகுந்து நீர்விளையாடும் செல்வ மங்கையரின் மென்முலையில் பூசிய குங்குமம் கரைந்து நீரோடு கலக்க அந்நீரின் மேற்பரப்புச்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சிவந்து தோன்றும். அப்படிச் சிவந்த நீர் சேர்ந்து நிறைந்த அகழிகள், விழுந்த வரைக் கரையேற விடாமல் கொல்லு வதால் அகப்பட்டவரை விடாது பற்றிக்கொள்ளும் உருக்கி ஊற்றிய அரக்கைப்போலச் சிவந்த வாயுடைய பரத்தையரை ஒத்திருக்கும்; அல்லது விரிந்து மலர்ந்த பூக்களினால் அவ்வகழிகள் காமச்சுவை நிறைக்கும் காதல் பெண்களை ஒத்திருக்கும்; அதுவும் இல்லையென்றால் கோட்டையைக் காத்திருக்கும் தன்மையால், அவை காவ லுக்கடங்கி வாழும் கன்னிப் பெண்களை ஒத்திருக்கும். இத்தகை தன்மை உடைய அகழிகளில் எழிலோடு ஒளி வீசும் முத்துக்களைக் கோத்து வைத்ததுபோல், விரிந்த கமுகமரத்தின் பூம்பாளையின் மணமும், பூத்துக் குலுங்கும் குவளைமலர்கள் சிந்தும் தேனின் வாசமும், அதை உண்ண வரும் வண்டுகளின் ஓசையும் சேர்ந்து ஒரு யோசனை தூரம் வரை பரவி நிற்கும்.

## மதில்

**தாய்முலை தழுவிய குழவி போலவும்**
**மாமலை தழுவிய மஞ்சு போலவும்**
**ஆய்முகில் தழீஇஅசும் பறாத நெற்றிய**
**சேயுயர் மதில்வகை செப்பு கின்றதே** 100

[மஞ்சு-வெண்மேகம். குழவி தழுவிய தாய் முலை போலவும், மஞ்சு தழுவிய மாமலை போலவும் என மாற்றி இயைத்துக்கொள்க. ஆய்முகில்-இளைத்த மேகம்; ஆய் உரிச்சொல். அசும்பு-நீர்த்துளி; சேயுயர்-நெடி துயர்ந்த.]

தாயின் மார்பைத் தழுவிக் கிடக்கின்ற குழந்தை போலவும் பெரிய மலையைத் தழுவிக் கிடக்கின்ற மேகக் கூட்டத்தைப் போலவும், மழை மேகங்கள் படிந்திருக்க-நீர்த்துளிகள் சிந்திக் கிடக்கும் நெடிதுயர்ந்த மதிற்சுவர் களின் தன்மையைப் பார்ப்போம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வேறு

மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கிஎறி பொறியும்
தோற்றம்உறு பேய்களிறு தூற்றுபெரும் பாம்பும்
கூற்றம்அன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா

[மாற்றவர்-பகைவர்; மலைந்து-மாறுபட்டு; பொறி-யந்திரம்; கூற்றம் அன்ன-யமனை ஒத்த; கோண் மா - கொலை செய்தலையுடைய மிருகங்கள்.]

விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொடர் அயில்வாள்
கற்பொறிகள் பாவைஅனம் மாடம்அடு செந்தீ
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை
நற்றலைகள் திருக்கும்வலி நெருக்கு மரநிலையே 102

[வந்தோர்மேல் கல்லை வீசும் பொறிகள்: 'கல்லிடு கூடை-இடங்கணிக்கல் வீசுங் கூடை.]

செம்புருகு வெங்களிகள் உமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புஉருகு வட்டுஉமிழ்வ வெந்நெய்முகந்து உமிழ்வ
அம்புஉமிழ்வ வேல்உமிழ்வ கல்உமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாள்படுத்த பொறியே 103

[களி-குழம்பு; உமிழ்வ-உமிழ்வனவாகிய பொறிகள்; வட்டு-எஃகுருண்டை; யவனர்-யவன தேசத்துத் தச்சர்; தாட்படுத்த - முயற்சியால் உண்டாக்கின.]

கரும்பொன்இயல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்கும்
திருந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத் திருந்தின்றே

[கரும்பொன்-இரும்பு; கதம்-கோபம்; தகர்-ஆடு; கொழிக்கும்-மேலே அசைந்து தோன்றும்;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


திருந்து மதில்-தொழில் திருந்திய மதில்; பனிப்ப-நடுங்க; திருந்தின்று-திருந்தியது.]

வயிரவரை கண்விழிப்ப போன்றுமஞ்ழ உகளும்
வயிரமணித் தாழ்க்கதவு வாயில் முகமாக
வயிரமணி ஞாயின்முலை வான்பொற்கொடிக் கூந்தல்
வயிரக்கிடங் காடைமதில் கன்னியது கவினே 105

[வயிரவரை-வயிர மணிகளாலான மலை; உகளும்-தாவும்; வரை கண் விழித்தாற் போன்ற கதவு. முகம்-கோபுரம்.]

படையெடுத்து வரும் வேற்றரசர்களின் ஆற்றல் மிகு படைகள் அகழைக் கடந்து மதிலைப் பற்றினால், அப்படிப் பற்றுகிற நூற்றுக்கணக்கான பேரையும் தூக்கி எறிந்து கொல்லும் பொறியும், பேயைப் போலவும் யானையைப் போலவும் இருக்கின்ற பொறிகளும், விழுங்கிக் கொல்கின்ற பாம்பு போன்ற பொறியும், கொல்லுகின்ற எமனைப் போன்ற கழுகுப் பொறியும், கட்டிமுறுக்கும் சங்கிலி போன்ற பொறியும், கொல்லும் வேங்கை, புலி போன்ற வனவிலங்குகளின் உருவுடைய பொறிகளும், அம்பைத் தொடுத்தெறியும் விற்பொறிகளும், ஏவி விடுகின்ற குதிரைப் பொறிகளும், தொடர்ந்து பொழிகின்ற வாட் பொறிகளும், கல்லுமிழ்கின்ற கவண்போன்ற பொறிகளும், கொல்லிப்பாவை போன்ற பொறிகளும், அன்னப்பறவை போன்ற உருவுள்ள பொறிகளும், செந்தீக் காய்கின்ற உலைக்கூடங்களில் கொல்லர்கள் செய்கின்ற எரிநெருப்புக் கொள்ளிகளை எறியும் பொறிகளும், அழகிய கொக்கையும் ஆந்தையையும் போன்ற பொறிகளும், மனிதத் தலைகளைத் திருகிக் கொல்லும் 'ஐயவித்துலாம்' என்னும் நெருக்கு மரப்பொறிகளும், சுற்றிச் சுழன்று உருக்கிவிட்ட செம்பு அனற்குழம்பை அள்ளி வீசுகின்ற பொறிகளும், அதேபோல் பகைவர் வெந்துசாக உருக்கிய வேறு வகை உலோகக் குழம்புகளையும் நெய்யையும் அள்ளிச் சொறிகின்ற பொறிகளும், மற்றும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அம்பையும், வேலையும், கல்லையும் உமிழ்கின்ற பொறிகளும், இவைகளையல்லாமல் இன்னும் யவனநாட்டு நல்லறிஞர்கள் தம் அறிவால் அமைத்த ஆற்றல்மிகு பொறிகளும், இரும்பில் செய்த பன்றி உருவுடைய பொறிகளும், நச்சுப் பொறிகளும், சகடம்விடும் ஆழிப் பொறிகளும், குரங்குப் பொறிகளும், ஆட்டுக்கடா உருவுடைய பொறிகளும், கழுத்தை அரிந்தெறியும் நுண்ணிய கயிறுகள் இணைத்த பொறிகளும் நிறைந்து, பசும்பொற் கயிற்றில் இணைந்து நீண்டு பரக்கும் பெரிய கொடிகளும் நிறைந்து பகைவர்கள் உயிர் நடுங்கத்தக்க விதத்தில் தோற்றம் அளிக்கும், பெரிய மதிற்சுவர்கள். வைரமலை கண் விழித்ததுபோல் மழைமேகம் புரளும், வைரமணிகள் வைத்திழைத்த தாழுடைய முன்வாயில் கதவுகளே முகமாகவும், அம்பெறியும் மறவர் மறைந்தொதுங்கும் வைரம் இழைத்த இடைக்கூடங்களே முலையாகவும், வானளாவிப் பறக்கும் பெரிய கொடிகளே கூந்தலாகவும், வைரம்போல் ஒளிவீசும் வெள்ளிய அகழிநீரே ஆடையாகவும் கொண்டு அழகியதொரு கன்னிப் பெண்போல் அவை சிறந்து விளங்கும்.

## அகநகர்

செம்பொன்மழை போன்றுஅடிதொறு ஆயிரங்கள் சிந்திப்
பைம்பொன்விளை தீவில்நிதி தடிந்துபலர்க்கு ஆர்த்தி
அம்பொன்நிலத்து ஏகுகுடி அகநகரம் அதுதான்
உம்பருலகு ஒப்பதுஅதன் தன்மைசிறிது உரைப்பாம் 106

[பொன்மழை-பொன்னைப் பெய்யும் மேகம்; ஆர்த்தி-நிறையக் கொடுத்து; பொன்னிலம்-தேவருலகம்; அகநகரம்-உள் நகரம்.]

செம்பொன்னை மழைபோல் ஆயிரக்கணக்கில் செலவிட்டுப் புதிய பொன்விளைத்த பூமி தந்த செல்வத்தைப் பலர்க்கும் நிறையக் கொடுத்து வாழ்வதாலே, அழகிய இப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பூமியின்கண் மக்கள் குடியேறி வாழும் அகநகரமானது, செல்வச் சிறப்பாலே வானுலகத்தை ஒத்திருக்க, அதன் தன்மையைப் பற்றிச் சிறிது கூறுவோம்.

## பரத்தையர் சேரி

### (வேறு)

**துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத் தூதின்**
**ஒப்பவொன் றாதி யாக ஆயிரத் தோரெட்டு ஈறாய்ச்**
**செப்பித்தம் செம்பொன் அல்குல் நலம்வரை வின்றி விற்கும்**
**உப்பமை காமத் துப்பின் அவரிடம் உரைத்தும் மன்றே 107**

*[துப்புஉறழ்-பவளத்தை வென்ற; உப்பு அமை-இனிமை அமைந்த; துப்பு-நுகர்தல்.]*

**குங்குமம் மெழுகிச் சார்வுந் திண்ணையும் குயிற்றி உள்ளால்**
**தங்குமென் சாந்தத் தோடு தாமமும் தாழ நாற்றி**
**எங்குநற் சுவர்கள் தோறும் நாடகம் எழுதி ஏற்பப்**
**பொங்குமென் மலர்பெய் சேக்கை பொலிந்துவிண்**
**புகற்சி உண்டே 108**

*[குயிற்றி-செய்து; நாற்றி-தொங்கக் கட்டி; சேக்கை-படுக்கை; புகற்சி-விருப்பம்.]*

**தூசுசூழ் பரவை அல்குல் சுமக்கலாது என்ன வீழ்த்த**
**காசுசூழ் கோவை முத்தம் கதிர்முலை திமிர்ந்த சாந்தம்**
**வாசநற் பொடிகள் மாலை வண்டுணை வீழ்ந்த முற்றம்**
**ஆசைப்பட் டரசு வைகும் அருங்கடி கமழு மன்றே 109**

*[தூசு-ஆடை; காசு-மணிகள்; திமிர்ந்த-பூசிய; கடி-வாசனை.]*

பவளத் தண்டு போன்ற தொண்டையும், சிவந்த வாயும் உடைய தோழியர்கள் சென்று சொன்ன தூதினாலே தம்மைத் தேடி வருவார்க்கு, எல்லையில்லாமல், தம் உடலை விற்று, ஒன்று ஆயிரத்தெட்டு வரைக்கும் தம் உடலுக்கு விலை கூறிப் பொருள் தேடல் ஒன்றே குறியாகக் கொண்டு உடல் விற்கும் காதல் சுவை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யறியா காமக்கிழத்தியர்கள் — கணிகையர்கள் இருக்கு மிடத்தைக் கூறுவோம். குங்குமத்தாலே திண்ணையையும் முன்வாயிலையும் மெழுகி, உட்புறமெல்லாம் சந்தன மணம் பரப்பி, மலர்மாலைகளைத் தொங்கவிட்டு, சுவர்ப் புறம் எல்லாம் இன்பச் சுவையூட்டும் எழிலோவியங்கள் தீட்டி, இன்பவிளையாட்டிற் கேதுவாகப் பூமலர் கொய்து பெய்த, பஞ்சணைகள் விரித்து வைத்திருக்கும் கணிகையர் இல்லங்கள் விண்ணவர்களும் விரும்பும் இயல்புடையவாய் இருக்கும். மேலும், சேலை சுற்றிய அவர் சிற்றிடை சுமக்கமாட்டாது என்று இடைசுற்றி அணிந்த முத்துமணி ஆரங்கள் சிதறிச் சிந்த, அழகிய முலைமேல் பூசிய சந்தனமும் வாசனைப் பொடிகளும் உதிர்ந்து போக, அவர் அணிந்திருந்த மலர்மாலைகள் மொய்க்கத் தரையில் கழன்று விழ, அவை முற்றமெல்லாம் சிதறிக் கிடக்க — அவர் வீடுகள், அரசர்கள் விரும்பி வந்து தங்கும் அளவுக்கு எழிலும் மணமும் உடையதாய் இருக்கும்.

**அஞ்சிலம்பு ஒலியோடு அல்குல் கலையொலி அணிந்த முன்கைப்**
**பஞ்சிமெல் விரலில் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்**
**அஞ்சிநேர்ந்து உயிர்க்கும் தேன்சேர் குழலொலி முழவி னோசை**
**துஞ்சல்இல் ஓசை தம்மால் துறக்கமும் நிகர்க்க லாதே**

[கலை-மேகலை; குழல்-புல்லாங்குழல்; துஞ்சல்-ஒழிதல்; துறக்கம்-சுவர்க்கலோகம்.]

**தேனுலாம் மதுச்செய் கோதை தேம்பகை கமழ ஊட்ட**
**வானுலாம் சுடர்கண் மூடி மாநகர் இரவு செய்யப்**
**பால்நிலாச் சொரிந்து நல்லார் அணிகலம் பகலைச்செய்ய**
**வேனிலான் விழைந்த சேரி மேலுலகு அனைய தொன்றே**

[கோதை-மாலை; பால் நிலா-பாலைப் போன்ற வெள்ளிய நிலா; வேனிலான்-மன்மதன்; சேரி-பரத்தையர் சேரி; மேலுலகு-சுவர்க்கலோகம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இட்டநூல் வழாமை ஓடி யோசனை எல்லை நீண்டு
மட்டுவார் மாலை வேய்ந்து சதுக்கங்கள் மலிந்த சும்மைப்
பட்டமும் பசும்பொற் பூணும் பரந்தொளி நிழற்றும் தீந்தேன்
அட்டும்தார் அணிந்த மார்பர் ஆவணம் கிளக்க
லுற்றேன் 112

[வழாமை-தவறாதபடி; மட்டு வார்-தேன் ஒழுகு கின்ற; சும்மை-ஒலி; ஆவணம்-கடைத்தெரு.]

அழகிய பாதத்தில் அணிந்திருக்கிற சிலம்போசையும், இடையில் அணிந்திருக்கும் மேகலை எழுப்பும் இன்னொலி யும், செம்பஞ்சுக் குழம்பு அணிந்த மெல்லிய விரலால் மீட்டியெழுப்பும் யாழிசையும், பவளச்செவ்வாய் வருந்தப் பாடும் பாட்டிசையும், தேன் என இனிக்கும் தீங்குழல் ஓசையும், முழவின் ஒலியும் நீக்கமற நிறைந்திருக்கும் அப் பரத்தையர் சேரிகள், இத்தகைய ஒலிகளால் எப்போதும் நிறையப் பெற்றிருக்கும் வானுலகை ஒத்திருக்கும். மேலும் வண்டு மொய்க்கின்ற தேன் நிறைந்த மலர்மாலைகள் அணிந்த கோதையர்கள், மேலும் தங்கள் உடலுக்கும் கூந்தலுக்கும் மணம் நிறைக்கச் சந்தனம் அகில் முதலிய வற்றின் புகை ஏற்ற, அப்படி ஏற்றிய புகை நிறைந்து வானத்துச் சூரியனை மூடிமறைத்தது. அதனால் இருட் டான சேரிகளை, அச்சேரியில் வாழும் அழகிய பெண்கள் அணிந்திருக்கும் பொன் அணிமணிகள், பால் நிலவுபோல் ஒளிவீசிப் பகல்போல் விளங்கச் செய்ய, அவை வசந்த வேளாகிய காமனும் விரும்பும் இயல்புடையவாகும். இத்தகு சிறப்பு மிக்க சேரிகளைத் தாண்டி, நூல் பிடித்து விட்டதுபோல் ஒழுங்கு தவறாமல் ஒரு யோசனை தூரம் நீண்டு, தேன் நிறைந்த மலர்மாலைகள் தோரணங்களாக விளங்க, எப்போதும் சந்தடி மிகுந்து இருக்கும் சதுக்கங்கள் நிறைந்த, தத்தம் பதவிக்கேற்பப் பெற்ற நற்சான்றும் பொற்பூணும் ஒளி சிந்தத் தேன் சிதறும் மலர்மாலை அணிந்த மார்புடைய வணிகப் பெருமக்கள் வாழும் அங்காடி வீதிகளின் அழகைக் கூறுவோம்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மணிபுனை செம்பொன் கொட்டை வம்பணி முத்த மாலைக்
கணிபுனை பவழத் திண்காழ் கம்பலக் கிடுகின் ஊன்றி
அணிநிலம் மெழுகிச் சாந்தின் அகில்புகைத்து
அம்பொன் போதிற்
திணிநிலம் அணிந்து தேங்கொள் ஐயவி சிதறி னாரே 113

[காழ்-சட்டக்கால்; கம்பலக்கிடுகு-கடைகளுக்கு முன்னாகப் பகலில் உயர்த்தி வைத்தற்கும் இரவில் தாழ்த்தி வைத்தற்கும் உரித்தாகச் செய்யப் பட்டதும் கம்பலம் வேய்ந்ததுமான சட்டம்; கிடுகு-சட்டம்; ஐயவி-வெண் சிறு கடுகு.]

பொன்சொரி கதவு தாழில் திறந்துபொன் யவனப் பேழை
மின்சொரி மணியும் முத்தும் வயிரமும் குவித்துப் பின்னும்
மன்பெரும் பவழக் குப்பை வால்அணி கலம்செய் குப்பை
நண்பகல் இரவு செய்யும் நன்கலம் கூப்பி னாரே 114

[தாள்-தாழைத் திறங்குங் கோல்; யவனப் பேழை-யவன தேசத்திற் செய்யப்பட்டதான பொற் பெட்டி.]

விழுக்கலம் சொரியச் சிந்தி வீழ்ந்தவை எடுத்துக் கொள்ளா
ஒழுக்கினர் அவர்கள் செல்வம் உரைப்பரிது ஒழிக வேண்டா
பழுக்குலைக் கமுகும் தெங்கும் வாழையும் பசும்பொன்
னாலும்
எழிற்பொலி மணியி னாலும் கடைதொறும் இயற்றி னாரே

[விழுக்கலம் சிறந்த ஆபரணம்; கடைதொறும்-கடைகள் தோறும்.]

முசுதேன் இறாலின் முச மொய்திரை இயம்பி யாங்கு
ஓசையென் றுணரி னல்லால் எழுத்துமெய் உணர்த லாகாப்
பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர்தம் அகலம் பூசி
மாசனம் இடம்பெ றாது வண்கடை மலிந்த தன்றே 116

[இறால்-தேன்கூடு; மொய்திரை-கடல்; எழுத்துமெய் எழுத்தின் வடிவம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**மெய்யணி பசும்பொன் சுண்ணம் மேதகு நானம் நீரின்**
**ஐதுபட்டு ஒழுகி யானை அழிமதம் கலந்து சேறாய்ச்**
**செய்அணி கலன்கள் சிந்தி மாலையும் மதுவும் மல்கி**
**வெய்துஅடி இடுதற்கு ஆகா வீதிகள் விளம்பல் உற்றேன்**

*[நானநீர்-புனுகும் பனிநீரும்; அணிசுண்ணம்-அணியப் பட்டு மிக்க சுண்ணம்; அழிமதம்-மிக்க மதம்.]*

அத்தகு அங்காடி வீதிகளில், மணிவைத்துப் பதித்துப் பொன் குண்டுகள் பொருத்தி, முத்துமாலை வைத்து இணைத்த கம்பலக் கிடுக்கில் கடையின் முன்பகுதியை தூக்கி நிறுத்தி, தரையைச் சந்தனத்தால் மெழுகி அதற்கு அகிற்புகை ஏற்றி, பொன்மலரும் பூமலரும் பூமியில் இட்டுத் தெய்வங்கள் பூசையில் விரும்பி ஏற்கும் வெண் கடுகையும் தூவி நிறைத்தனர் வணிகப் பெருமக்கள். பின் பொன் கொழிக்கும் கடைக் கதவின் தாழைத் திறந்து பொன்னால் செய்த வேலைப் பாடமைந்த, யவன நாட்டுப் பெட்டிகளில் இருந்து மின்னைலப்போல் ஒளிவீசும் மணிகளையும், முத்துச் சலாகைகளையும் வைரக்கட்டி களையும் குவித்துப் பின்னும் பவளக்குவியல்களையும் நல்ல அணிமணிகளையும், பட்டப்பகலையும் இரவாக்கும் கருநீலமணிக் கற்களையும் எடுத்து கடையெங்கும் குவித்து வைத்தனர். அப்படி அணிமணிகளை, முத்து வைரங்களை எடுத்துக் குவிக்கிறபோது அவற்றில் சிந்திச் சிதறிப் போவதை மீண்டும் எடுத்து வைத்துக் கொள்ளாத வளமிக்க பெருவாழ்வுடைய வணிகப் பெருமக்கள், தங்கள் கடைகளுக்கணி செய்ய, பழுத்த குலை உடைய தென்னையையும், வாழையையும், கமுகையும், பொன் னாலும் மணியாலுமே செய்து வைத்து அழகு பெறச் செய்தனர் என்றால், அவர்கள் செல்வச் சிறப்பை நான் என்னென்று சொல்வது? என்னைக் கேட்க வேண்டாம்- நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்!

அத்தகைய அங்காடி வீதிகளில் மக்கள் கூட்டம், கூட்டமாக, நெரிசலாக—நடமாட இடமில்லாமல் ஒருவர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மார்பில் பூசிய சந்தனம் எழுவர் மேல் பட, தேன் கூட்டினை மொய்த்துக் கிடக்கும் வண்டுகளைப் போல் கூடிக்கிடப்பதால் உண்டாகும் கடல் அலைபோன்ற ஓசையைக் கேட்டுத்தான் உணர முடியுமே தவிர இன்ன விதம் என்று எழுத்தில் விளக்கிச் சொல்ல முடியாது. இனி, அங்காடி வீதியை அடுத்து, உடலிலே பூசிய பொற் சுண்ணப் பொடியும், புனுகும், மேலே தெளித்த பன்னீரோடு கலந்து தெருவிலே சேர, அதோடு யானை யின் மதநீரும் கலந்து இரண்டும் சேறாக, அச்சேற்றினுள் பொற்கொல்லர் செய்த சில அணிகலன்கள் தவறி விழுந்து புதைந்துகிடக்க, விரைவாகக் காலூன்றி நடந்துசெல்ல முடியாதபடியிருக்கும் தெருக்களைப் பற்றிக் கூறுகிறேன்.

## வேறு

**முழவணி முதுநகர் முரசொடு வளைவிம**
**விழவணி மகளிர்தம் விரைகமழ் இளமுலை**
**இழையணி ஒளியெழ வெயில்செய விடுபுகை**
**மழையென மறையின பொலிவினது ஒருபால் 118**

[வளை-சங்கு, முரசும் சங்கும். விம-விம்ம; இடுபுகை-புகை; மறையின-மறைத்த.]

**குடையொடு குடைபல களிறொடு நெரிதர**
**உடைகடல் ஒலியினொடு உறுவரர் பலிசெல**
**முடியொடு முடியுற மிடைதலின் விடுசுடர்**
**கொடியுடை மழைமினின் குலவிய தொருபால் 119**

[நெரிதர-நெருங்க; உறுவரர்-தேவர்; பலி-பூசை; கொடி-ஒழுங்கு.]

**பூத்தலை வாரணப் போர்த்தொழில் இளையவர்**
**நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயில்தரக்**
**காய்த்துறு தமனியத் துகளொடு கடிகமழ்**
**பூத்துகள் கழுமிய பொலிவின தொருபால் 120**

[பூத்தலை வாரணம்-தோன்றிப் பூவைப்போன்ற சூட்டையுடைய கோழி; நாத்தலைமடி விளி-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நாவினது நுனியை மடித்துச் செய்யும் ஒலி; இது சீழ்க்கையெனவும் வீளையெனவும் வழங்கும். குயிர அற-நெருங்க; தமனியம்-பொன்; கழுமிய-கலந்த.]

மைந்தரொடு ஊடிய மகளிரை இளையவர்
அந்துகில் பற்றலின் காசரிந்து அணிகிளர்
சுந்தர நிலமிசைச் சொரிதலின் மின்அணிந்து
இந்திர திருவிலின் எழிலின தொருபால் 121

[அரிந்து-அற்று; அணி கிளர்-அழகுடைய; மின் அணிந்து-ஒளிபெற்று.]

வளையறுத் தனையன வாலரி அமைபதம்
மளவறு நறுநெயொ டடுகறி அமைதுவை
விளைவமை தயிரொடு மிசைகுவிர் விரையுமின்
உளஅணி கலமெனும் உரையின தொருபால் 122

[வளை அறுத்தனையன வாலரி - சங்கை அறுத்தாற் போன்றனவாகிய வெள்ளிய அரிசி; பதம்-உணவு; நெய்யொடு-நெய்யால்; துவை-துவையல்; விளை வமைதயிர்-முற்றிய தயிர்.]

வரைநிரை அருவியின் மதமிசை சொரிவன
புரைநிரை களிறொடு புனைமணி இயல்தேர்
விரைநிரை இவுளியொ டிளையவர் விரவுபு
குரைநிரை குளிர்புனல் யாற்றின தொருபால் 123

[புரை-உயர்ச்சி; இயல் தேர்-செல்லுகின்ற தேர்; விரவுபு-கலந்து; குரை-ஆரவாரிக்கின்ற; இவுளி-குதிரை.]

வரிவளை அரவமும் மணிமுழ வரவமும்
அரிவளர் கண்ணியர் அணிகல அரவமும்
புரிவளர் குழலொடு பொலிமலி கவினிய
திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம் 124

[கண்ணியர்-மகளிர்; திறவிதின்-செவ்விதாக; அரவம்-ஒலி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பூப்போன்ற கொண்டை உடைய சேவற்போரில் வெற்றி பெற்ற சிறுவர், நாக்கை மடித்து ஒலிக்கும் சீழ்க்கை ஒலி கூத்தோடு சேர, அவர்கள் விளையாடும் விளையாட்டால் பூமரங்களின் மணமிக்க மகரந்தப் பொடிகள் சிந்திக் கிடக்கும் சில இடங்கள் அழகுடன் விளங்கும். இன்ப விளையாட்டில் கணவருடன் ஊடிப்பிணங்கி எழுந்து செல்கின்ற மகளிரை, அவருடைய கணவர்கள், போக விடாது தடுக்க மேலாடையைப் பற்றியிழுக்க அவர்கள் மேலாடை கைக்கு எட்டாது காசுமாலை கிட்ட அந்தக் காசுமாலையும் பிடித்து இழுத்த வேகத்தால் இழை யறுந்து விழ, சிந்திய காசுகள் பூமியில் வானவில் கிடப்பது போல் தரையில் பல வண்ண ஒளிசிந்திக் கிடக்கும் அழகோடு விளங்கும் சில இடங்கள். இன்னும் சில இடங்களில் ''வளையலை அறுத்துச் சமைத்தது போன்று வெள்ளை வெளேர் என்று வடித்து வைத்த அரிசி உணவும், நெய்யிற் சமைத்த கறியும், முற்றிய கட்டித் தயிரும் உள்ள அறு சுவை உண்டியை உண்ணச் செல்லுங்கள்; உண்டதற்குப் பின் பரிசாகத் தர அணிமணிகள் வேறு உள்ளன பெற்றுக் கொள்க'' என்றுரைப்பாரின் ஒலி முழக்கங்க்ள் நிறைந் திருக்கும். மற்றும் சில இடங்களில், மலை உச்சியில் இருந்து கொட்டுகின்ற அருவியைப்போல் ஓயாது மதநீர் கொட்டுகின்ற தலையை உடைய யானைகளும் பொன் மணி புனைந்த தேரினை விரைவாக இழுத்துச் செல்லு கின்ற குதிரைகளும் எழுப்புகிற ஓசை அல்லாமல் சிறுவர்கள் எழுப்பும் ஆரவாரத்துடன், குளிர்ந்த நீர் சுமந்து செல்லும் நதிகள் எழுப்புகிற ஓசையும் வேறு நிறைந்திருக்கும். இவையுமல்லாமல், சங்கொலியும், முழ வோசையும், செவ்வரி படர்ந்த கண்களை உடைய பெண்கள் அணிந்திருக்கிற பூண்கள் எழுப்பும் ஓசையும் நிறைய—யாழிசையும், குழல் ஒலியும் இணைந்து அழகும் வளமும் பொங்கச் செல்வச் சிறப்புடன் விளங்கும் வீடு களைப் பற்றி இனி சிறக்கக் கூறுவோம்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



## வேறு

**பாவை யன்னவர் பந்து புடைத்தலிற்**
**றூவி யன்னம் வெரீஇத்துணை யென்றுபோய்க்**
**கோவை நித்தில மாடக் குழாமிசை**
**மேவி வெண்மதி தன்னொ டிருக்குமே 125**

*[பாவையன்னவர்-கொல்லிப் பாவையைப் போன்ற வடிவழகையுடைய மகளிர்; கோவை நித்தில மாடம்-முத்துமாலைகளை அணிந்த மாளிகை.]*

**திருவ நீள்நகர்ச் செம்பொனி னீடிய**
**உருவ வொண்கொடி யூழி னுடங்குவ**
**பரவை வெங்கதிர்ச் செல்வன பன்மயிர்ப்**
**புரவி பொங்கழல் ஆற்றுவ போன்றவே 126**

*[திருவநீணகர்-செல்வத்தையுடைய நீண்ட வீடுகளில்; ஊழின்-முறைப்படி; அழலாற்றுவ-வெப்பத்தைத் தணிப்பன.]*

**இழைகொள் வெம்முலை யீர முலர்த்துவார்**
**விழைய வூட்டிய மேதகு தீம்புகை**
**குழைகொள் வாண்முகஞ் சூழ்குளி ரங்கதிர்**
**மழையுண் மாமதி போன்மெனத் தோன்றுமே 127**

*[விழைய-கணவர் விரும்ப; போன்ம்-போலும்; மேதகு-மேம்பட்ட.]*

ஓவியப் பாவையைப்போன்ற அழகுடைய பெண்கள் பந்து விளையாடுகின்ற ஒலி கேட்டுப் பயந்து போன, மெல்லிய தோகையை உடைய அன்னப் பறவைகள், நிலவைத் துணையென்று நம்பிப் போனதுபோல் முத்து மணி பதித்த அத்தகைய வீடுகளின் மாடங்களின் உச்சியிலே போய் இருக்கும். அத்தகைய செல்வச் சிறப்புமிக்க நீண்ட மாடங்களில், செம்பொன் ஒளிவீசி அலைந்தாடும் கொடிகள், ஒளி வீசும் கதிர்களுடைய ஞாயிற்றின் குதிரைகளின் வெப்பம் தவிர்க்க வீசுகின்ற சாமரைபோல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தோற்றம் அளிக்கும். இன்னும் அந்த மாடங்களில் காதலின்பம் விரும்பிய கணவன்மார்கள் தங்கள் மனைவியர் மார்பிலே பூசிய சந்தனம் முதலியவற்றின் ஈரத்தை உலர்த்த மகளிர் மூட்டிய அகிற்புகை மேகத்தைப்போல் பரவ அத்தகைய புகைமேகத்திடை அழகிய காதணி அணிந்த அம்மகளிர் முகங்கள் மேகத்தினிடையிருந்து ஒளி வீசும் முழுமதிபோல் தோணும்.

**செம்பொற் கண்ணி சிறார்களைந் திட்டவும்**
**அம்பொன் மாலை யவிழ்ந்துடன் வீழ்ந்தவும்**
**தம்பொன் மேனி திமிர்ந்ததண் சாந்தமும்**
**வம்புண் கோதையர் மாற்று மயலரோ** 128

[கண்ணி-தலையிற் சூடும் மாலை; பொன்மேனி-பொன்னைப் போன்று ஒளிவிடும் மேனி; திமிர்ந்த-பூசிய; வம்பு-புதுமை; மயல்-குப்பை.]

**வேரி யின்மெழுக் கார்ந்தமென் பூநிலத்**
**தாரி யாகவஞ் சாந்தந் தளித்தபின்**
**வாரி நித்திலம் வைப்பபொற் பூவொடு**
**சேரி தோறிது செல்வத் தியற்கையே** 129

[வேரி-வாசனை; தளித்த-பூசிய; ஆரி—அழகு; வாரி நித்திலம்-கடலில் உண்டான முத்து.]

**கருனை வாசமுங் காரிருங் கூந்தலார்**
**அருமை சான்ற வகிற்புகை வாசமும்**
**செருமிச் சேந்துகண் ணீர்வரத் தேம்பொழில்**
**உரிமை கொண்டன வொண்புற வென்பவே** 130

[வாசம்-வாசனை; கூந்தல் ஆர்-கூந்தலில் நிறைந்த; செருமி-நிரம்பி; புறவு-புறா; புறவு புகைக்கு அஞ்சி ஓடுதல்.]

**நறையு நானமு நாறு நறும்புகை**
**விறகின் வெள்ளி யடுப்பின்அம் பொற்கலம்**
**நிறைய வாக்கிய நெய்பயில் இன்னமுது**
**உறையு மாந்தர் விருந்தொடு முண்பவே** 131

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[நறை-நறைக்கொடி; நானம்-புனுகு; விறகு-சந்தனம்; வாக்கிய-சொரிந்த.]

சிறுவர்கள் களைந்தெறிந்த செம்பொன்னால் செய்த தலையில் அணியும் மாலையும், கூந்தல் அவிழ்ந்து கலைந்ததினால் சரிந்து விழுந்த மகளிர் அணிந்த பொன்மாலையும், பொன்போல் ஒளிவீசும் தங்கள் மேனியில் பூசி வழித்தெறிந்த சந்தனமும், புதிய மலர்மாலைகள் அணியவரும் சேடிப்பெண்கள் எடுத்தெறியத்தக்க குப்பை போல் அங்கே பரவிக்கிடக்கும். வாசமும் அழகும் இனிய மணமும் இட்டு நிரப்பிய அப்பூமியின்மேல், அழகாக எழில்விளங்க வண்ணச் சாந்து பூசியபின் அதன்மேல், பொன்னையும், பூவையும், முத்துக்களையும் வைப்பார்கள். செல்வச் சிறப்புமிக்க அச்சேரியில் இஃது இயல்பாக நடை பெறக்கூடியதாகும். இத்தகைய சிறப்பு மிக்க சேரிகளில் வாழும் மகளிர் தம் காரிருள் கூந்தலை உலர்த்த இடுகின்ற அகிற்புகையும், பொரிக்கறியின் வாசமிக்க புகையும் சேர்ந்து விழிசிவக்கக் கண்ணீரைச் சிந்த வைப்பதால், அம்மகளிர் வாழும் மாடங்களில் இருக்கின்ற அழகிய புறாக்கள், அம்மாடங்களைவிட்டு நீங்கி, மலர்ப்பொழிலைச் சரண் என்று சென்றடையும். இன்னும் அச்சேரியில் வாழும் மக்கள் வெள்ளியடுப்பிலே நறைக்கொடியும், மணமிக்க சந்தனமும் விறகாக வைத்தெரித்து அழகிய பொற்கலம் நிறைய ஆக்கிய நெய்மணக்கும் இன்னமுதொத்த உணவினை விருந்தோடு உண்டு மகிழ்ந்திருப்பர்.

**பாளை மென்கமு கின்பழ மெல்லிலை**
**நீள்வெண் மாடத்து நின்றுகொண்டு அம்நலார்**
**ஆளிய மொய்ம்பர்க் களித்தணி சண்பகம்**
**நான்செய் மாலை நகைமுடிப் பெய்பவே** **132**

[மெல்லிலை-வெற்றிலை; அம்நலார்-அழகிய பெண்கள்; ஆளிய மொய்ம்பரென்றது கணவரை. ஆளி-சிங்கம்; அ-அசை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**எழுது வாள்நெடுங் கண்ணிணை அம்மலார்**
**மெழுகு குங்கும மார்பிடை வெம்முலை**
**உழுது கோதையுஞ் சாந்து முவந்தவை**
**முழுதும் வித்தி விளைப்பர் திளைப்பவே 133**

[எழுது-மை யெழுதிய; மார்பு ஆடவருடையது. வித்தி-விதைத்து; திளைப்ப-இடைவிடாது அனுபவிப்பன.]

**குஞ்சி மேல்அனிச் சம்மலர் கூட்டுணும்**
**அஞ்சி லோதியர் அம்மலர்ச் சீறடி**
**மஞ்சு தோய்மணி மாடத்து மல்குபூம்**
**பஞ்சி மேலும் பனிக்கும் பனிக்குமே 134**

[குஞ்சிமேல்-கணவருடைய தலையின்மேல்; அம்சில் ஓதியர்-அழகிய கூந்தலுடையவர்; பஞ்சி-பஞ்சு, பஞ்சணை. கூட்டுணும்-கவரும்.]

கமுகம் பழத்தில் எடுத்த பாக்கையும் வெற்றிலையையும், உயர்ந்து நீண்ட வெண்மதில் மாடங்களில் இருக்கின்ற அழகிய பெண்கள், தாங்கள் விரும்பிய அழகிய ஆண்சிங்கம் போன்ற வலிமைமிக்க ஆடவர்களுக்குத் தந்து, அவர்கள் அணிந்திருக்கிற அழகிய சண்பக மாலையை வாங்கி, முத்துமாலை அணிந்த தங்கள் தலையில் சூடிக்கொள்வார்கள். மேலும் மை எழுதிய அழகிய வாள்போலும் நீண்ட கண்ணினை உடைய அம்மகளிர், குங்குமம் பூசிய தங்கள் கணவன் மார்பிலே தங்கள் பூமார்பும், அதில் பூசிய சந்தனமும், சூட்டிய மாலையும் தோயும்படித் தாங்கள் விரும்பியவாறெல்லாம் இணைந்து அணைந்து இன்பம் நுகர்ந்திருப்பர். மெல்லிய அனிச்ச மலரையும் வெட்கச் செய்யும், அழகிய மென் கூந்தல் நிறைந்த அம்மங்கையரின் பூப்போன்ற பாதங்கள், முகில் தவழும் மணிமாடங்களில், பூவிரித்த பஞ்சு மெத்தையில் பட்டுத் தோய்வதோடு, கூடல்மிகுதியால் தங்கள் கணவர் தலையிலும் படும்படி இன்பத்தில் திளைத்திருப்பர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**தூம மேகம ழும்துகிற் சேக்கைமேற்**
**காம மேநுகர் வார்தம காதலால்**
**யாம மும்பக லும்மறி யாமையாற்**
**பூமி மாநகர் பொன்னுல கொத்ததே 135**

[தூமமே-அகில் முதலியவற்றின் புகைகளே; துகிற் சேக்கை-வெள்ளிய ஆடையையுடைய படுக்கை; யாமம்-இரவு.]

**அரவு கான்றிட்ட அங்கதிர் மாமணி**
**உரவு நீர்முத்து முள்ளூறுத் துள்ளன**
**இரவல் மாந்தர்க்கு மின்னவை யீவதோர்**
**புரவு பூண்டனர் பொன்னகர் மாந்தரே 136**

[கான்றிட்ட-கக்கிய; உள்ளூறுத்து-உள்ளிட்டு; புரவு-பாதுகாத்தல்; பொன்னகர்-இராசமாபுரம்.]

**முல்லை யங்குழ லார்முலைச் செல்வமும்**
**மல்லன் மாநகர்ச் செல்வமும் வார்கழற்**
**செல்வர் செல்வமுங் காணிய வென்பர்போல்**
**எல்லி யும்இமை யாரிமை யாததே 137**

[மல்லல்-வளம்; காணிய-காண; எல்லி-இரவு; இமையார்-தேவர்.]

அகில் முதலிய வாசனைப் பொருள்களின் புகைகளே சேர்ந்து மணக்கும் வெள்ளைத் துகில் விரித்த பஞ்சணையில், இன்பமே இடையீடின்றித் துய்த்துக் கிடக்கும் அம்மங்கையர்கள், இடையறா இன்ப விளையாட்டால் இரவு பகலரறியாது வாழ்வதால், அந்நகர் இரவு பகலின்றி இருக்கும் இந்திரர் உலகு போன்றிருக்கும். நச்சரவு வாயினின்று உமிழ்ந்த அழகிய ஒளிமிக்க மாணிக்கமும், உவர்க்கடலில் கிடைத்த முத்தும் ஆகிய செல்வங்கள், அங்குள்ளோர்க்கு மட்டுமல்லாது இல்லையென்று வருவார்க்கும் ஈயுமளவுக்கு நிறைந்திருப்பதால், பொன்னுலகு போல் தோன்றும் அந்நகர் வாழும் மக்கள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஈவதை-கொடையைக் கொள்கையாக மேற்கொண்டனர். இத்தகைய கொடைத்திறமிக்க அகநகரில், முல்லை மலர் அணிந்த அழகிய கூந்தலுடைய எழில் மங்கையர் தரும் இன்பவளமும் வளமிகுந்த நகரில் விளைந்து வரும் பொருள்வளமும் வீரக் கழலணிந்த போர்மறவர் தேடி வந்து தரும் புகழ்வளமும் விடாது காண்பதற்கே தாங்கள் இரவிலும் இமையாது விழித்திருந்தனர் என்று இமையார் தம் கண்ணுக்குக் கூறும்படிக்கு வளம் நிறைந்திருக்கும்.

**முழவுஞ் சங்கமு முன்றின் முழங்குவ**
**விழவும் வேள்வும் விடுத்தலொன் றின்மையாற்**
**புகழ லாம்படித் தன்றிது பொன்னகர்**
**அகழ்தல் மாக்கட லன்னதொர் சும்மைத்தே** 138

[முழவு-மத்தளம்; முன்றில்-முற்றம்; வேள்வு-யாகம்; அகழ்தல் மாக்கடல்-தோண்டப் படுதலையுடைய பெரிய கடல்.]

**திங்கண் முக்குடை யான்றிரு மாநகர்**
**எங்கு மெங்கு மிடந்தொறு முண்மையால்**
**அங்கண் மாநகர்க் காக்க மறாததோர்**
**சங்க நீணிதி யாற்றழைக் கின்றதே** 139

[திங்கள் முக்குடையான்-முக்குடைகளாவன; சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பன; நகர்-அருகதேவனுடைய கோயில்.]

## வேறு

**தேன்றலைத் துவலை மாலை பைந்துகில் செம்பொன் பூத்து**
**ஞான்றன வயிர மாலை நகுகதிர் முத்த மாலை**
**கான்றமிர் தேந்தி நின்ற கற்பகச் சோலை யார்க்கும்**
**ஈன்றருள் சுரந்த செல்வத் திராசமா புரம தாமே** 140

[துவலை-திவலை; ஞான்றன-தொங்கின; கற்பகச் சோலை - கற்பகங்கள் பத்து வகைப்படு மென்றும் அவை மாலை முதலியவற்றை அளிக்குமென்றும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சைன நூல்கள் கூறுமாதலின் கற்பகச்சோலை என்றார்.]

விழாவும் வேள்வியும் இடைவிடாது எப்போதும் நடைபெற்றுக் கொண்டிருப்பதால் வீட்டின் முன் வாயிலில் சங்கொலியும் மத்தள முழக்கமும் எப்போதும், கேட்டுக்கொண்டே இருக்கும். ஆழமிகு நெடிய கடல் போல் எப்போதும் இப்படி ஓயாது ஒலியெழுப்பிக் கொண் டிருக்கும் அந்நகர் புகழத் தக்கதாகும். மேலும் திங்கள் போலும் முக்குடையுடைய அருகப் பெருமானின் திருக் கோயில்கள் அந்நகரின் தெருத்தோறும் நிறைந்திருப்ப தால் அவை அப்பெரிய இராசமாபுரத்துக்கு நீங்காத செல்வம்போல் சிறப்பளிக்கும். அச்செல்வமும், அருகப் பள்ளிகளால்-சச்சங்களால் நாளும் தழைத்துப் பெருகும். இன்னும், தேன் துளிகளைச் சுமந்துகொண்டிருக்கிற மலர் மாலையும், பட்டுடையும், பொன்னாரமும், வைர வடமும் முத்துச்சரமும் சூடி, அமுதம் சுரக்கும் கற்பகச் சோலையுடன் விளங்கும் இராசமாபுரமானது யார்க்கும் அன்பையும் அருளையும் அள்ளித் தருகின்ற புகழ்ச் சிறப்புடையது ஆகும்.

## கோயிற் சிறப்பு

### வேறு

வேக யானை மீளிவேல் வெய்ய தானை ஐயகோல்
மாக நீண்ம ணிம்முடி மாரி வண்கை மாசில்சீர்
ஏக வாணை வெண்குடை யிந்ந கர்க்கு மன்னவன்
நாக நீர நன்னகர் நன்மை தன்னம் செப்புவாம் 141

[மீளி-வலி; நாகம்-தேவருலகம்; தன்னம்-சிறிது; ஐயகோல்-அரசனது செங்கோல்.]

நீணி லம்வ குத்துநீர் நிரந்து வந்தி ழிதரச்
சேணி லத்தி யற்றிய சித்தி ரச்சு ருங்கைசேர்
கோணி லத்து வெய்யவாங் கொடுஞ்சுறத் தடங்கி டங்கு
பூணி லத்து வைத்ததோர் பொற்பி னிற்பொ லிந்ததே 142

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[நிரந்து-வரிசையாகி; சேணிலத்து-புறத்தே உள்ள நிலத்திலிருந்து; சித்திரம்-அழகு; சுருங்கை-நீர் செல்ல அமைத்த வழி.]

**இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லை காண வேகலின்**
**மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாக நீண்ட நாகமும்**
**அஞ்சு நின்னை யென்றலி னாண்டு நின்று நீண்டதன்**
**குஞ்சி மாண்கொ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே**

[மாகநெஞ்சு போழ்ந்து-ஆகாயத்தின் நடுவிடத்தைப் பிளந்து; நாகம்-தேவருலகம்; குஞ்சி-தலை; கொடிக்கை-கொடியாகிய கை.]

மிக விரைவாகச் செல்லுகின்ற யானைப் படையும், வேலேந்திய காலாட் படையும், இன்னும் பிற போர்ப் படைகளும் நிறைய, போற்றத் தக்க செங்கோலாட்சியும், வான்வரைப் புகழ் ஒளிவீசித் திகழும் மணிமுடியும், மழை பொழியும் மேகத்தைப்போல் கொடைதரும் கையும், குறைவற்ற புகழும், தனியாட்சி செலுத்தும் வெண் கொற்றக் குடையும் உடைய இந்நகரத்தரசனது, வானுலகம் போன்ற அரண்மனையினது சிறப்பைக் கூறுவோம். நிலத்தை ஒழுங்குபெற வெட்டி நீர்வந்து சேர, அப்படி வந்து சேரும் நீர் நகருக்கு வெளியே உள்ள, அகப்பட்டவரை அமிழ்த்திக் கொல்லும், ஆழமிக்க—சுறா மீன்கள் வாழும் பெரிய அகழியானது நிலமடந்தைக்குப் பூண் இட்டதுபோல் பொலிவுதரும்.

அந்நகரத்தின் மதிற்சுவரானது நீள்வானைப் பிளந்து கொண்டு உள்ளே செல்வதுபோல் உயர்ந்திருக்க, அப்படி உயர்ந்து சென்ற மதிற்சுவரைச் சூழ்ந்து கொண்டிருக்கிற மழைமேகங்கள், அம்மதிற் சுவரின் காலைப்பிடித்துக் கொண்டு, 'வானமண்டலமும் நின்னைக் கண்டு அஞ்சுகிறது; எனவே நீ மேலும் நீண்டுயர்ந்து மேலே செல்ல வேண்டாம்' எனச் சொல்வதுபோல் தோற்ற, அம்மதிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சுவர் மேல் பறக்கும் கொடிகளோ 'வானுலகே என்னைக் காணவா' என்றழைப்பதுபோல் அசைந்தாடும்.

முத்து மாலை முப்புரி மூரி மாம ணிக்கதவு
ஒத்த நான்கு கோபுர மோங்கி நின்றொ ளிர்வன
சத்தி நெற்றி சூட்டிய தாம நீண்ம ணிவணன்
தத்தொ ளிம்ம ணிம்முடித் தாம நால்வ போலுமே 144

[முப்புரி முத்தமாலை-மூன்று வடமாகிய முத்து மாலைகள்; மூரி-பெருமை; சத்தி-சூலம்; மணி வணன்-திருமால்; நால்வ-தொங்குவன; தாமம்-மாலை; தத்து-வீசு.]

சங்கு விம்மு நித்திலஞ் சாந்தொடு ஏந்து பூண்முலைக்
கொங்கு விம்மு கோதைதாழ் கூந்த லேந்து சாயலார்
இங்கி தக்க ளிப்பினா லெய்தி யாடும் பூம்பொழில்
செங்கண் இந்தி ரன்னகர்ச் செல்வ மென்ன தன்னதே

[கொங்கு விம்மு கோதை-தேன் மிக்க மாலை; சாயலார்-மென்மையையுடைய மகளிர்; சங்கு விம்மு நித்திலம்-சங்கில் பிறந்த முத்து.]

வெள்ளி யானை மென்பிடி மின்னி லங்கு பைம்பொனாற்
றுள்ளு மானொ ருத்தலுஞ் செம்பொ னம்பொன் மான்பிணை
உள்ளு காம முள்சுட வேந்த னாங்கு றைவதோர்
பள்ளி மாட மண்டபம் பசுங்க திர்ப்ப வண்ணமே 146

[மானொருத்தல்-ஆண்மான்; பிணை-பெண்மான்; பாவண்ணம்-பவணம், நாகலோகம்.]

கோழ ரைம ணிம்மடற் கூந்தல் நெற்றி யேந்திய
மாழை யந்தி ரள்கனி மாம ணிம்ம ரகதஞ்
சூழ்கு லைப்ப சுங்கமுகு சூலு பாளை வெண்பொனால்
ஊழ்தி ரண்ம ணிக்கயி றூச லாட விட்டதே 147

[கோழரை-கொழுவிய அரை; மாழை-பொன்; திரள்-கூட்டம்; ஊழ்திரள்-ஒழுங்குறத் திரண்ட.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[நிரந்து-வரிசையாகி; சேணிலத்து-புறத்தே உள்ள நிலத்திலிருந்து; சித்திரம்-அழகு; சுருங்கை-நீர் செல்ல அமைத்த வழி.]

**இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லை காண வேகலின்**
**மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாக நீண்ட நாகமும்**
**அஞ்சு நின்னை யென்றலி னாண்டு நின்று நீண்டதன்**
**குஞ்சி மாண்கொ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே**

[மாகநெஞ்சு போழ்ந்து-ஆகாயத்தின் நடுவிடத்தைப் பிளந்து; நாகம்-தேவருலகம்; குஞ்சி-தலை; கொடிக்கை-கொடியாகிய கை.]

மிக விரைவாகச் செல்லுகின்ற யானைப் படையும், வேலேந்திய காலாட் படையும், இன்னும் பிற போர்ப் படைகளும் நிறைய, போற்றத் தக்க செங்கோலாட்சியும், வான்வரைப் புகழ் ஒளிவீசித் திகழும் மணிமுடியும், மழை பொழியும் மேகத்தைப்போல் கொடைதரும் கையும், குறைவற்ற புகழும், தனியாட்சி செலுத்தும் வெண் கொற்றக் குடையும் உடைய இந்நகரத்தரசனது, வானுலகம் போன்ற அரண்மனையினது சிறப்பைக் கூறுவோம். நிலத்தை ஒழுங்குபெற வெட்டி நீர்வந்து சேர, அப்படி வந்து சேரும் நீர் நகருக்கு வெளியே உள்ள, அகப்பட்டவரை அமிழ்த்திக் கொல்லும், ஆழமிக்க—சுறா மீன்கள் வாழும் பெரிய அகழியானது நிலமடந்தைக்குப் பூண் இட்டதுபோல் பொலிவுதரும்.

அந்நகரத்தின் மதிற்சுவரானது நீள்வானைப் பிளந்து கொண்டு உள்ளே செல்வதுபோல் உயர்ந்திருக்க, அப்படி உயர்ந்து சென்ற மதிற்சுவரைச் சூழ்ந்து கொண்டிருக்கிற மழைமேகங்கள், அம்மதிற் சுவரின் காலைப்பிடித்துக் கொண்டு, 'வானமண்டலமும் நின்னைக் கண்டு அஞ்சுகிறது; எனவே நீ மேலும் நீண்டுயர்ந்து மேலே செல்ல வேண்டாம்' எனச் சொல்வதுபோல் தோற்ற, அம்மதிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சுவர் மேல் பறக்கும் கொடிகளோ 'வானுலகே என்னைக் காணவா' என்றழைப்பதுபோல் அசைந்தாடும்.

முத்து மாலை முப்புரி மூரி மாம ணிக்கதவு
ஒத்த நான்கு கோபுர மோங்கி நின்றொ ளிர்வன
சத்தி நெற்றி சூட்டிய தாம நீண்ம ணிவணன்
தத்தொ ளிம்ம ணிம்முடித் தாம நால்வ போலுமே 144

[முப்புரி முத்தமாலை-மூன்று வடமாகிய முத்து மாலைகள்; மூரி-பெருமை; சத்தி-சூலம்; மணி வணன்-திருமால்; நால்வ-தொங்குவன; தாமம்-மாலை; தத்து-வீசு.]

சங்கு விம்மு நித்திலஞ் சாந்தொடு ஏந்து பூண்முலைக்
கொங்கு விம்மு கோதைதாழ் கூந்த லேந்து சாயலார்
இங்கி தக்க ளிப்பினா லெய்தி யாடும் பூம்பொழில்
செங்கண் இந்தி ரன்னகர்ச் செல்வ மென்ன தன்னதே

[கொங்கு விம்மு கோதை-தேன் மிக்க மாலை; சாயலார்-மென்மையையுடைய மகளிர்; சங்கு விம்மு நித்திலம்-சங்கில் பிறந்த முத்து.]

வெள்ளி யானை மென்பிடி மின்னி லங்கு பைம்பொனாற்
றுள்ளு மானொ ருத்தலுஞ் செம்பொ னம்பொன் மான்பிணை
உள்ளு காம முள்சுட வேந்த னாங்கு றைவதோர்
பள்ளி மாட மண்டபம் பசுங்க திர்ப்ப வண்ணமே 146

[மானொருத்தல்-ஆண்மான்; பிணை-பெண்மான்; பாவண்ணம்-பவணம், நாகலோகம்.]

கோழ ரைம ணிம்மடற் கூந்தல் நெற்றி யேந்திய
மாழை யந்தி ரள்கனி மாம ணிம்ம ரகதஞ்
சூழ்கு லைப்ப சுங்கமுகு சூலு பாளை வெண்பொனால்
ஊழ்தி ரண்ம ணிக்கயி றூச லாட விட்டதே 147

[கோழரை-கொழுவிய அரை; மாழை-பொன்; திரள்-கூட்டம்; ஊழ்திரள்-ஒழுங்குறத் திரண்ட.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மாமணிகள் பதித்த கதவம் உடைய, நான்கு வாயில்களிலும் ஓங்கி வளர்ந்திருக்கின்ற உயர்ந்த கோபுரத்தின் மேல் ஒளிவிடும் வேல்களில் சூட்டியிருக்கின்ற முப்புரியாகக் கோத்த முத்தாரங்கள், திருமாலின் ஒளிமிகு மணி முடியில் புரள்கின்ற மாலைகள் போலிருக்கும். அத்தகைய வாயில் அமைந்த கோட்டையின் உட்புறத்தே, சங்கில் பிறந்த முத்து மாலைகளையும், சந்தனக் கலவையையும், மணிப்பூண் போர்த்த மார்பையும், தேன்வழியும் மணமிகு மலர்மாலைகளைச் சூட்டிய கூந்தலையும் சுமந்து கொண்டிருக்கும் அழகிய பெண்கள், இன்பச் சுவைமீதூர விளையாடும் இனிய மலர்ப்பொழில்கள், இந்திரன் நாட்டின் கற்பகச் சோலைகள்போல் காட்சி தரும். அம் மலர்ப்பொழிலில், வெள்ளியாற் செய்தமைத்த ஆண் யானையும், பசும்பொன்னால் செய்தமைத்த பெண் யானையும், செம்பொன்னால் செய்த துள்ளும் மானும், அழகிய பொன்னால் செய்தமைத்த அதன் துணையும், ஒன்றையொன்று இன்பவேட்கை மீதுறப் பார்த்துக் களிப்பதுபோல் அமைத்த சிற்பங்கள் வேந்தனது மனதிலே இன்பவேட்கையை நிறைக்க அவன் வந்து தங்கும் அவ்வசந்த மண்டபத்தின் பள்ளிமாடம், பொன்னொளி வீசும் புகழ் நாகருலகு போலிருக்க, அப்பள்ளி மாடத்துள், கொழுத்த அடிப் பாகத்தையும், நீலமணியால் செய்த மடலுடைய பச்சைக் கூந்தல்பனையின் உச்சியிலே, கமுகம் பழத்தைப் போன்றிருக்கப் பொன்னாற் செய்து வைத்த உருண்டு திரண்ட அழகிய பழங்களும், குலையைப் போன்றிருக்கப் பச்சை மரகதத்தால் செய்தமைத்த குலைகளும், வெள்ளியால் செய்தமைத்த பாளையும் நிறைத்து பொன்னூசல் ஆட ஊஞ்சலுக்கு மணிக்கயிறாக முத்துவடங்களையே போட்டிருப்பர்.

**மென்றி னைப்பி றங்கலு மிளிர்ந்து வீழ ருவியும்**
**குன்ற யன்ம ணிச்சுனைக் குவளை கண்வி ழிப்பவும்**
**நின்று நோக்கு மான்பிணை நீல யானை மன்னவன்**
**கன்று காமம் வெஃகிய காமர் காம பூமியே** 148

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[பிறங்கல்-குவியல்; மணிக்குவளை-நீலமணி போன்ற குவளைப்பூ; மான் பிணை-மானும் பிணையும்; நீலயானை-கரிய யானை.]

தீங்குயில்ம ணந்துதேன் றுஞ்ச வண்டு பாண்செய
வேங்கை நின்று பொன்னுகுக்கும் வெற்பு டுத்த சந்தனம்
ஓங்கு பிண்டி சண்பக மூழி நாறு நாகமும்
நீங்க நீங்கு மின்னுயிர் நினைப்பி னின்றி ளஃகுமே 149

[மணந்து-சேரப்பெற்று; பாண்-பாட்டு; பிண்டி-அசோகம்; நாகம்-சுரபுன்னை; இளஃகும்-இளகும், தளிர்க்கும்.]

முத்தம் வாய்பு ரித்தன மொய்க திர்ப்ப சும்பொனாற்
சித்தி ரத்தி யற்றிய செல்வ மல்கு பன்மணி
பத்தி யிற்கு யிற்றிவான் பதித்து வைத்த போல்வன
இத்தி றத்த பங்தெறிந் திளையர் ஆடு பூமியே 150

[புரித்தன-பூரித்தன; பத்தியின்-வரிசையாக; வான்-தேவருலகத்தை. இளையர்-மகளிர்.]

மெல்லிய திணையும், செய்குன்றும், குதித்து வீழ் அருவியும், நீர்ச்சுனையும், அந்நீர்ச்சுனையில் பூத்திருக்கும் குவளை மலர்களைக் காத்து நிற்பதுபோல், மானும் அதன் பிணையும் அவற்றின் அருகே அம்மலர்களை விழித்து நோக்கியபடியிருக்கும் அழகும் நிறைந்த; காதல் போரில் காமனையும் வென்ற, கரிய போர்யானையை உடைய அரசனது அம்மலர்ச்சோலை காமனும் விரும்பும் அழகுடையதாயிருக்கும். இனிய குயில் முழவாக, எழில் தும்பி யாழாகச் சேர, வண்டு பாட்டிசைக்க இந்த இசை விருந்துக்குப் பரிசாக அருகே உள்ள வேங்கைமரங்கள் தங்களின் பூக்களைச் சொரிய, செய்குன்றைச் சூழ்ந் திருக்கும் சந்தனம், அசோகம், சண்பகம், சுரபுன்னை ஆகிய மரங்கள் ஓயாது மணம் பரப்பும் அவ்வ மலர்ச்சோலையினை நீங்கினால் உயிர்போகும்; நி தால் உயிர் வளரும். மேலும், முத்துக்களை விளி



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சுற்றிப் புதைத்து, ஒளிவீசும் பசும்பொன்னால் அழகு பெறச் செய்து, விலை மதிப்பிட முடியாத பலவித மணிகளையும் இடையிடையே பதித்து வைத்து, வானுலகையே பெயர்த்தெடுத்து வந்து பூமியிலே வைத்துப் பதித்தது போல் தோன்றும், அச்சோலையின்கண் உள்ள மகளிர் பந்து விளையாடும் இடங்கள்.

வைத்த பங்கெ டுத்தலும் மாலை யுட்க ரத்தலும்
கைத்த லத்தி னோட்டலுங் கண்ணி நெற்றி தீட்டலும்
பத்தி யிற்பு டைத்தலும் பைய ரவ்வி னாடலும்
இத்தி றத்த பந்தினோ டின்ப மெல்லை யில்லையே 151

[கரத்தல்-மறைத்தல்; புடைத்தல்-அடித்தல்; கைத்தலம்-கை.]

கூற்ற மன்ன கூர்நுதிக் குருதி வான்ம ருப்பிடைச்
சீற்ற முற்ற மன்னர்தஞ் சென்னி பந்த டிப்பன
ஊற்றி ருந்த மும்மதத் தோடை யானை பீடுசால்
காற்றி யற்பு ரவிதேர் கலந்து கௌவை
மல்கின்றே 152

[கூர் நுதி-கூர்மையான நுனியையுடைய; பீடுசால்-பெருமை மிக்க; காற்றியற் புரவி-காற்றைப் போல விரைந்து செல்லுதலையுடைய குதிரை; கௌவை-ஆரவாரம்.]

கவ்வை அம்க ருவிசூழ்ந்து கண்ப டுக்கு மாடமும்
தெவ்வர் தந்த நீணிதி சேர்ந்த செம்பொன் மாடமும்
மவ்வ லங்கு ழலினார் மணிக்க லம்பெய் மாடமும்
இவ்வ லந்த வல்லவும் இடங்க ளெல்லை
யில்லையே 153

[கருவி-இங்கே வீரருடைய தொகுதி; சூழ்ந்து-ஆராய்ந்து; தெவ்வர் தந்த நிதி-பகைவர் பணிந்து கொடுத்த திறை; மௌவல்-முல்லை; வலந்த-சொல்லப்பட்ட.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அத்தகைய பந்து விளையாடும் இடங்களில், கீழே வைத்த பந்தை எடுத்தும், கையால் தொடாமல் காலால் எத்தியும், மாலைக்குள் மறைத்தும், கையைவிட்டுத் தூக்கி எறிந்தும், தலையால் முட்டியும், உயரத் தூக்கி எறிந்தும், படமெடுத்தாடும் பாம்பைப்போல் அலைந்து திரிந்து மகளிர் ஆடும் பந்து விளையாட்டு எல்லையற்ற இன்பம் உடையதாயிருக்கும். இன்னும் அவ்விடங்களைச் சுற்றிக் கொல்லுகின்ற கூற்றுவனைப் போன்று பகைவர்கள் உடலைக் குத்திக் கிழித்த செங்குருதி தோய்ந்த கூரிய தந்தக் கோடுகளில், அரசனது கோபத்துக்காளான பகையரசர்கள் தலைபட்டுச் சிதற, நீரோடைபோல் பெருக்கெடுக்கும் மும்மதமும், முகபடாமும் உடைய யானைகளும் காற்றிலும் கடிது செல்லும் குதிரையும் தேரும் சேர உண்டாகும் ஒலியும் நிறைந்திருக்கும். இத்தகைய பந்து விளையாடும் இடங்களே அல்லாது, ஆரவாரம் மிகும்படி ஒலி உண்டாகும் படைக்கலம் ஏந்திய வீரர்கள் இரவு தோறும் கண் விழித்துக் காத்திருக்கும் மாடமும், பகையரசர்கள் கப்பங்கட்டிய பெருஞ் செல்வம் சேர்த்து வைத்திருக்கிற செம்பொன் மாடமும், முல்லைமலர் அணிந்த கூந்தலுடைய பெண்கள் தம் அணிகலன்களைப் போட்டுப் பூட்டி வைத்திருக்கிற மாடமும் அல்லாது இன்னும் பல திறப்பட்ட பொருள்கள் வைக்கும் பலவகை மாடங்களும் அங்கு எல்லையற்று இருக்கும்.

**பூத்த கோங்கும் வேங்கையும் பொன்னி ணர்செய்**
**கொன்றையும்**
**காய்த்து நின்று கண்டெறூஉங் காமர் வல்லி மாதரார்**
**கூத்த றாத பள்ளியுங் கொற்ற மன்ன மங்கையர்**
**ஏத்தல் சான்ற கோயிலு மிடைப் படுத்தி யன்றவே 154**

[பொன் இணர்-பொன் போன்ற கொத்து; தெறூஉம் சுடுகின்ற; காமர்வல்லி-அழகிய பூங்கொடியைப் போன்ற; கூத்தறாத பள்ளி-நாடகசாலை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கந்து மாம ணித்திரள் கடைந்து சொம்பொ னீள்சுவர்ச்**
**சந்து போழ்ந்தி யற்றிய தட்டு வேய்ந்து வெண்பொனால்**
**இந்தி ரன்றி ருநக ருரிமை யோடு மிவ்வழி**
**வந்தி ருந்த வண்ணமே யண்ணல் கோயில் வண்ணமே 155**

*[மணித்திரள் கந்து கடைந்து-மாணிக்கத்திரளைத் தூணாகக் கடைந்து; சந்து-சந்தனமரம்; தட்டு-கைம்மரம்.]*

**ஆட லின்ன ரவ்வமும் அங்கை கொட்டி நெஞ்சுணப்**
**பாட லின்ன ரவமும் பணைமு ழவ்வ ரவமும்**
**கூடு கோலத் தீஞ்சுவைக் கோல யாழ்அ ரவமும்**
**வாட லில்ல வோசையால் வைக னாளும் வைகின்றே 156**

*[நெஞ்சுண-கேட்போர் நெஞ்சை உண்ணும்படி; பணை முழவு-பெருத்த முழவு; வாடல்-குறைதல்; வைகின்ற-கழிகின்ற; ஏ-அசை.]*

இதழ் விரித்த கொங்கும், வேங்கையும், பொன் போல் கொத்தாக மலரும் கொன்றையும் ஆகிய மலர்கள் பூத்துக் குலுங்கிக் கண்ணைக் கவர, வல்லிக்கொடி போன்ற அழகிய பெண்கள் இடைவிடாது கூத்து முறை பயிலும் பள்ளியாகிய ஆடரங்கமும், போரிலே வென்ற பகை மன்னரது மனைவியர் இறைவனை வழிபடச் செல்லும் கோயிலும் அங்கு அடுத்தடுத்து அமைந்திருக்கும். அழகிய மணிக்குன்றைத் தூணாகத் துளைத்துச் செம் பொன்னால் சுவர் அமைத்து, சந்தனப் பலகையின் மேல் வெள்ளித் தகடு கொண்டு வேய்ந்தமைத்த இறைவனின் அத்திருக்கோயிலின் தோற்றம், இந்திரன் தன் அரச போகத்துடன் இவ்வுலகில் வந்து தங்கியதைப்போல் இருக்க—அந்நகரில், நடன மங்கையர் ஆடும் கூத்தின் ஒலியும் கைகொட்டிக் கேட்போர் நெஞ்சு நெகிழப் பாடும் பாட்டின் இசையும், பெரிய முழவின் ஓசையும்; பல்வகை இசைக் கருவிகளுடனும் சேர்ந்து இசைக்கும், அழகிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இன்னிசை யாழின் இனிய ஓசையும் குறைவின்றி நிறைந் திருக்க, ஒவ்வொரு நாளும் இவ்வகை ஓசைகளோடேயே இனிது கழியும்.

## சச்சந்தன் வரலாறு

### வேறு

நச்சு நாகத்தி னாரழற் சீற்றத்தன்
அச்ச முற்றடைந் தார்க்கமிர் தன்னவன்
கச்சு லாமுலை யார்க்கணங் காகிய
சச்சந் தன்னெனுந் தாமரைச் செங்கணான் 157

[நச்சு நாகத்தின்-விடத்தையுடைய பாம்பைப்போல; ஆரழல் சீற்றம்-தீர்த்தற்கரிய விடத்தைப்போன்ற கோபம்; அழல்-விடம்.]

வண்கை யாற்கலி மாற்றிவை வேலினால்
திண்தி றல்தெவ்வர் தேர்த்தொகை மாற்றினான்
நுண்க லைக்கிட னாய்த்திரு மாமகள்
கண்க ளுக்கிட னாங்கடி மார்பனே 158

[கலி-வறுமையை; கடி-புதுமை.]

கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண்குடை
ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதை யேயவன் தாணிழற் றங்கிய
காத லாற்களிக் கின்றதிவ் வையமே 159

[கோதை நித்திலம்-பூமாலையும் முத்துமாலையும்; நிழற்றல்- நிழலைச் செய்தல்; தங்கிய-தங்கும் பொருட்டு; வினையெச்சம்.]

தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே 160

[தண்ணளியால்-அருளால்; வாமன்-அருக்கடவுள்; திருமகன்-காமன்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விஷநாகத்தைப்போல் பகைவரைக் கண்டால் சீறிப்பாயும் கொடுங் கோபமுடையவன், பகையைவிட்டுத் தஞ்சம் என்று வந்து சரணடைந்தவர்க்குத் தண்ணளி ஊட்டும் அமுதம் போன்றவன், கச்சணிந்த மார்புடைய மங்கையர்க்கு விருப்பமானவன்—சச்சந்தன் என்னும் பெயருடைய தாமரைபோலும் அழகிய கண்ணுடைய மன்னன் ஆவான். அவன் தன் கொடைத் திறத்தால் வறுமையைப் போக்கினான்; கூரிய தன் வேலினால் பகையரசர் கூட்டத்தின் தேர்ப்படையை வென்றான்; இயல், இசை, நாடகம், சிற்பம் போன்ற நுண் கலைகளுக்கு இருப்பிடமாய் அவற்றில் வல்லவனாகி, வெற்றிச் செல்வி விரும்பி நோக்கும் புகழ்மாலை புரளும் மார்புடையவனும் ஆனான். மலர்மாலையும், முத்துச்சரங்களும் அலங்கரிக்கின்ற, இனிமைதரும் அவனுடைய வெண்கொற்றக் குடை நீர் சூழ்ந்த நாடெல்லாம் பரவி ஆள்வதால் அவன் இவ்வுலகுக்குத் தந்தை போலவும் விளங்கினான். அத்தகையவனின் குளிர் நிழலில்— ஆட்சியின்கீழ் வாழ்வதில் இவ்வுலகமும் அவன்மேல் வைத்த அன்பால் மகிழ்ச்சியுற்றது. அச் சச்சந்த மன்னன், பிறர்க்கு அருளுவதில் அறக்கடவுள் போன்றவன்; இல்லையென்று வருவோர்க்குக் கொடுப்பதில் மழைபொழியும் வருணன் போன்றவன்; பகைவர் உயிரைப் போரில் வாங்குதலில் எமனை ஒத்தவன்; கலை நுகர்ச்சியில் வாமனைப் போன்றவன்; தன் அழகால் மங்கையர்க்கு ஐங்கணை ஏந்திய திருமகள் மகனான காமனைப் போன்றவன்.

**ஏனை மன்னர்த மின்னுயிர் செற்றவேல்**
**தானை மன்னரில் தான்இமில் ஏறனான்**
**தேனை மாரியன் னான்றிசை காவலன்**
**வானந் தோய்புக ழான்மலி வெய்தினான்** **161**

[இமில் ஏறு-முசுப்பையுடைய காளை; தானை—படை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


செல்வற் கின்னணஞ் சேறலிற் றீம்புனல்
மல்கு நீர்விதை யத்தர சன்மகள்
அல்லி சேரணங் கிற்கணங் கன்னவள்
வில்லி னீள்புரு வத்தெறி வேற்கணாள் 162

[இன்னணம்-இன்ன வண்ணம்; விதையம்-விதேகம்; அணங்கு-திருமகள்.]

உருவுஞ் சாயலு மொப்ப வுரைப்பதற்
கரிய வாயினு மவ்வளைத் தோளிகட்
பெருகு காரிகை பேசுவல் பெண்ணணங்
கரிய தேவரு மேத்தரு நீரளே 163

[உரு-வடிவம்; சாயல்-மென்மை; அ-அழகு, வளைத் தோளி-மூங்கில் போன்ற தோளையுடையவள்; காரிகை-அழகு; அணங்கு-வருத்துதல்.]

மற்றைய பகையரசர்கள் உயிரைப் போக்கிய வேற்படை உடைய மன்னர்களுக்குள் மன்னனாக ஏறுபோல் நடைபயிலும், தேன்மழை போல் அன்புமொழி பேசும், எட்டுத் திசையும் வென்று அரசு செலுத்தும் சச்சந்த மன்னன் விண்முட்டும் புகழுடையவன் ஆவான். இத்தகைய நலன்கள் எல்லாம் நிறையப் பெற்ற மன்னனுக்கு, நீர்வளம் மிகுந்த விதேக நாட்டின் மன்னன் மகள் விசையையே மனையாட்டியாவாள். அவ்விசையை தாமரையில் வாழும் திருமகளிற் சிறந்த திருமகள் போன்றவள்; வில்லனைய வளைந்த புருவமும் வேலனைய விழிப்பார்வையும் உடையவள். அவளின் தோற்றமும் பொலிவும் இத்தகையது என்று எடுத்துச் சொல்வதற்கியலாதது எனினும், மூங்கில் போன்றும் தோளுடைய அழகிய பெண்ணின் எழிலைப் பற்றிச் சிறிது கூறுவேன். ஏன்எனில் அவள் பெண்களையே விரும்பாத தேவரும் போற்றிப் புகழும் தன்மையள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

எண்ணெயு நானமு மிவைமூழ்கி யிருள்திருக்கிட்டு
ஒண்ணறுந் துகிற்கிழி பொதிந்துறை கழித்தபோற்
கண்ணிருண்டு நெறிமல்கிக் கடைகுழன்ற கருங்குழல்கள்
வண்ணப்போ தருச்சித்து மகிழ்வானாத் தகையவே 164

[நானம்-கஸ்தூரி; திருக்கிட்டு-முறுக்கி; துகிற்கிழி-துகிலாகிய கிழியிலே; இருண்டு-இருள.]

குழவிக்கோட் டிளம்பிறையுங் குளிர்மதியுங் கூடினபோல்
அழகுகொள் சிறுநுதலு மணிவட்ட மதிமுகமும்
தொழுதாற்கு வரங்கொடுக்குந் தொண்டைவாய் தூமுறுவல்
ஒழுகுபொற் கொடிமூக்கு முருப்பசியை யுருக்குமே 165

[கோடு-நுனி; தொண்டை-கொவ்வைக்கனி; தூ-தூய்மை; கொடி-நீட்சி; உருபசி-பசித்துயர்.]

வண்சிலையை வனப்பழித்து வார்ந்தொழுகி நிலம்பெறா
நுண்கருமை கொண்டொசிந்து நுதலிவர்ந்து போந்துலாய்க்
கண்கூடா கடைபுடைத்துக் கைவல்லா னெழுதியபோற்
பண்பார்ந்த கொடும்புருவம் பழிச்சானாப் படியவே 166

[சிலை-வில்; வார்ந்து ஒழுகி-மிக நீண்டு; கண்கூடா-தம்மில் இடம் கூடமாட்டா; கடை புடைத்து-உதறி; கொடும்புருவம்-வளைந்த புருவம்; பழிச்சு ஆனா-புகழ்தல் அமையாத.]

எண்ணெய் புனுகு இவற்றில் மூழ்கி, இருளைப் பிடித்துத் திருகி, ஒளி மிக்க நல்ல ஆடையாகிய உறையிலே போட்டெடுத்து வைத்ததுபோல், காண்பவர் கண்மயங்க நெறி கலங்க இருக்கும், நுனி சுருண்டு வளைந்த விசையையின் இருண்ட கருங்கூந்தல் தோழிப் பெண்கள் மணமலர் கொண்டு அருச்சித்து வழிபட்டாலும் வருந்தும் இயல் புடையதாகும். (தோழிகள் தலைவியின் கூந்தலில் மண மலர் சூட்டுவதையே உயர்வு நவிர்ச்சி தோன்ற அருச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சித்தல் என்றார்). பின்னும், குழந்தைப் பருவத்தில் உள்ளது போன்ற இளம்பிறையும், தண்ணொளி வீசும் முழு மதியும் ஒன்று சேர்ந்ததுபோல், வளைந்த அழகிய பிறைநுதலும், அழகிய வட்டமான திருமுகமும், அன்பாலே இன்பம்பெற வரும் கணவனுக்கு அமுதூற்றித்தரும் அவள் கனிவாயும், கொவ்வை இதழும், இளநகையும், பொற்கொடிபோல் நீண்ட மூக்கும் பார்த்தவர் பசியை மறக்கடிக்கும். நல்ல வில்லின் அழகைத் தோற்கடிக்கும்படி காதளவும் நீண்டு பின் செல்லாது, கரிய நிறங்கொண்டு வளைந்து நெற்றியை நிறைத்து இருக்கும் அவளின் விற்புருவங்கள், தேர்ந்தெடுத்த கைதேர்ந்த ஓவியன் எழுதி அமைத்ததைப் போல் அழகுக் கணிகலமாய் இருக்கும்.

**சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியம்**
**பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையும்**
**மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமிர்தமுமே**
**போல்குணத்த பொருகயற்கண் செவியுறப்போந்**
**தகன்றனவே 167**

[சில்லரிய-சிலவாகிய இரேகைகளையுடையன; படியவாய் - தன்மையையுடையனவாய்; சேல் - மீன்; மால்-மயக்கம்.]

**மயிரெறி கத்தரிகை யனையவாய் வள்ளைவாடு**
**உயிர்செகுத்து முன்னொன்றிப் பின்பேரா துருவமைந்த**
**செயிர்மகர குண்டலமுந் திளைப்பானா வார்காதும்**
**வயிரவில் முகஞ்சூடி வண்ணம்வீற் றிருந்தனவே 168**

[கத்தரிகை-கத்திரி; செயிர்-கோபம்; வண்ணம்-அழகு.]

**ஈனாத விளங்கமுகின் மரகதம ணிக்கண்ணும்**
**ஆனாதே யிருள்பருகு மருமணிக டைந்ததூஉம்**
**தானாகி யிருளொடோர் தாமரைப்பூச் சுமந்தன்ன**
**கானார்ந்த திரள்கழுத்துக் கவின்சிறைகொண்**
**டிருந்ததே 169**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[ஈனாத இளங்கமுகு - தாறு உண்டாகாத இளைய கமுகமரம்; ஆனாது-அமையாமல்; கானார்ந்த- மணம் நிறைந்த; திரள்-திரண்ட.]

மீன்போன்ற, செவ்வரி படர்ந்த, விழியோரம் சிவந்த, பாற்குளத்திடையே கருமணியைப் பதித்துவைத்தது போன்ற, பற்றைத் துறந்த முனிவரையும் மயங்கச் செய்கின்ற-மகிழ்ச்சி ஊட்டுகின்ற, பிரிந்தால் நஞ்சுபோல் கொல்லுகின்ற தன்மையும், இணைந்தால் அமுதம்போல் இன்பமழை பொழிகின்ற பண்பும் உடைய அவளின் அகன்ற பெரிய கண்கள் காதுவரை நீண்டு வளர்ந்த சிறப்புடையன. மேலும் முடிவெட்டும் கத்தரிபோன்ற அவளின் வாயும், வள்ளைக்கொடியின் அழகை வெட்கச் செய்யும்படி பின் சாயாது முன் நீளப் பொருத்திய மகரமீன் தோடும், குண்டலமும் நீங்காத அழகிய காதும் வயிரத்தின் ஒளி முழுதும் தன்னகத்தே கொண்டு விளங்கும் குலை தள்ளாத இளங் கமுகமரத்தின் பச்சை மரகத மணிபோன்ற கணுவும், இருளைப்போக்கி ஒளி தரும் மாணிக்க மணியும் ஒன்றானதுபோல், இருளாகிய கூந்தலோடு ஒளிவீசும் தாமரை போன்ற முகத்தையும் சுமந்திருக்கும் வளம் பொருந்திய அவளின் திரண்ட கழுத்து அழகுருக் கொண்டது.

**மணிமகரம் வாய்போழ்ந்து வாழ்முத்த வடஞ்சூழ்ந்தாங்கு**
**அணியரக்கார் செம்பஞ்சி யணையனைய வாடமைத்தோள்**
**துணிகதிர் வளைமுன்கைத் தொகுவிரல் செங்காந்தள்**
**மணியரும்பு மலரங்கை குலிகமார் வனப்பினவே 170**

[மணி மகரம், அழகிய சுறாமீன் வடிவமாகச் செய்யப் பட்டுத் தோளிலணியும் ஆபரணம்; போழ்ந்து- பிளந்து; அரக்கு-செந்நிறம்; அணை-மெத்தை; அமை-மூங்கில்; அங்கை உள்ளங்கை; குலிகம்- இங்குலிகம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**தாமச்செப் பிணைமுகட்டுத் தண்கதிர் விடுநீல**
**மாமணிதா பித்தனபோன் மனம்பருகு கருங்கண்ண**
**ஏமுற அடிபரந் திளம்பிறை வடஞ்சூடி**
**ஆமணங்கு குடியிருந் தஞ்சுணங்கு பரந்தனவே 171**

[தாமம்-மாலை; முகட்டு-உச்சியில்; மனம் பருகு-பார்த்தவர் மனத்தை விழுங்குகின்ற; ஏமுற-பித்து அடையும்படி; சுணங்கு-தேமல்; தாபித்தன-அமைத்த.]

**அங்கைபோல் வயிறணிந்த வலஞ்சுழி யமைகொப்பூழ்**
**கங்கையின் சுழியலைக்குங் கண்கொளா நுடங்கிடையை**
**உண்டெனத் தமர்மதிப்பர் நோக்கினார் பிறரெல்லாம்**
**உண்டில்லை யெனவைய மல்லதொன் றுணர்வரிதே 172**

[அங்கை-உள்ளங்கை; வலஞ்சுழி-வலமாகச் சுழித்த; கொப்பூழ்-புனற்சுழி. கண்கொளா-கண்ணுக்குப் புலப்படாத.]

அழகிய சுறாமீன் வடிவிலே செய்யப்பட்ட அணியும் அதைச் சுற்றி அணிந்த முத்துமாலைகளும் சூடிய அவளின் தோளிணைகள் செவ்விதழ் பரப்பிய செம்பஞ்சணை போன்றன. ஒளிவீசும் வளையணிந்த அவளின் முன் கையில் குவிந்த விரல்கள் செங்காந்தள் மலரின் அழகிய மணி அரும்பை ஒத்தன. அவளின் உள்ளங்கைகளோ தாமரை மலர்போன்று செந்நிறம் உடையன. மாலை அணிந்த செப்பனைய அவள் இரு முலைகளும், நுனியில் தண்ணொளி வீசும் நீலமணி வைத்ததுபோல், காண்பவர் கண்ணைப் பறிக்கும் நிறம் உடையனவாய், கண்டவர் மயங்கப் பரந்து திரண்டு, பிறை போன்ற மணி ஆரம் புரள, அழகுக்கு அழகு உடனிருந்து வாழ்வதுபோல், சிறு தேமலும் படரச் சிறந்து விளங்கும். உள்ளங்கை போன்ற அவளின் அழகிய மணிவயிற்றில் வலஞ்சுழியாக அமைந்த தொப்பூழ்ச்சுழி கங்கை நதிச்சுழியை வெட்கச் செய்யும். கண்ணுக்குத் தெரியாத அவளின் சிற்றிடையை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உடனிருந்து கண்டதால் உண்டு எனச் சொல்வர் உறவினர்கள். அப்படி உடனிருந்து காணாத மற்ற வர்கள், அவளுக்கு இடையே இல்லையென்றோ அல்லது மற்ற மற்ற உறுப்புக்கள் எல்லாம் செவ்வனே இருப்பதை யெண்ணி அவளுக்கு இடையும் இருக்கிறது என்றோ சொல்ல முடியாது திகைப்பர்.

**மன்னாக விணைப்படமுந் தேர்த்தட்டு மதிமயக்கிப்**
**பொன்னால வட்டமும்போற் கலையிமைக்கு மகலல்குல்**
**கொன்னிளம் பருதியுங் குறுமுயலின் குருதியும்போன்று**
**இன்னரத்தப் பட்டசைத் திந்திரற்கும் புகழ்வரிதே** 173

[கலை-மேகலை; கொன்-எல்லாராலும் வணங்கப் படும் பெருமையெனலுமாம்; குருதி-இரத்தம்; அரத்தப்பட்டு-செந்நிறப்பட்டு.]

**வேழவெண் டிரள்தடக்கை வெருட்டிமற் றிளங்கன்னி**
**வாழைத்தண் டெனத்திரண்டு வாலரக்குண் செம்பஞ்சி**
**தோழமைகொண் டெனமென்மை யுடையவா யொளிதிகழ்ந்து**
**மாழைகொண் மணிமகரங் கௌவிவீற் றிருந்தனவே** 174

[வேழம்-யானை; வெருட்டி-வெருட்டும் துடைகள்; கன்னி வாழை-குலை ஈனாத வாழை; வால்-தூய்மை; அரக்கு-செந்நிறம்; மாழை-பொன்.]

**பக்கத்தாற் கவிழ்ியவாய் மேல்பிறங்காப் பாண்டிலா**
**ஒக்கநன் குணராமை பொருந்திய சந்தினவாய்**
**நெக்குப்பின் கூடாது நிகரமைந்த முழந்தாளும்**
**மக்களுக் கில்லாத மாட்சியின் மலிந்தனவே** 175

[பக்கத்தால்-பக்கத்தில்; கவிழ்ியவாய்-கவிழ்ந்தன வாய்; பாண்டில்-வட்டம்; சந்து-மூட்டுவாய்; நிகர் அமைந்த-ஒப்பு இல்லாத; அமைதல்-இல்லையாதல்.]

படமெடுத்தாடும் நாகப்பாம்பின் தலையையும், தேர்த்தட்டையும், அழகிய பொன்னாலான ஆலவட்டக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குடையையும், ஒத்த மேகலை அணிந்த அவளின் அகன்ற அல்குல், உதய ஞாயிற்றின் ஒளியையும் சிறு முயலின் இரத்தத்தையும் போன்ற அழகிய செம்பட்டணிந்து, கண்டவர் மதிமயக்க இந்திரனாலும் புகழமுடியாத அழகுடையதாயிருக்கும். வெள்ளையானையின் துதிக்கையை வெட்கச் செய்யும் அவளுடைய தொடைகள் குலையீனாத வாழைத்தண்டின் திரட்சியும், நல்ல சிவந்த செம்பஞ்சின் மென்மையும் பெற்று ஒளிசிந்த—பொன்னில் பதித்த மகரமணி ஆபரணம் அணிந்த அழகோடு விளங்கும். முன்புறம் கவிந்து கெடாத வட்டம் ஆமாறு இதைவிட அழகு வேறு இல்லை என்னும்படிக்கு உட்குவிந்த, நெகிழ்ந்து வளையாது இணைந்து நிற்கும் அவளுடைய முழங்கால்கள் மற்ற மக்களுக்கு வாய்க்காத சிறப்புடையன.

**ஆடுதசை பிறங்காது வற்றாது மயிரகன்று**
**நீடாது குறுகாது நிகரமைந்த அளவினவாய்ச்**
**சேடாவ நாழிகையிற் புடைதிரண்டு தேனெய்பெய்**
**வாடாத காம்பேபோற் கணைக்காலின் வனப்பினவே 176**

[ஆடுதசை-கெண்டைத்தசை; சேடு-பெருமை; ஆவ நாழிகை-அம்பு வைக்கும் புட்டில்; தேன் நெய்-தேனாகிய நெய்.]

**பசும்பொன்செய் கிண்கிணியும் பாடகமும் பாடலைப்ப**
**நயந்தெரி பொற்சிலம்பு முத்தரிபெய் தகநக**
**இயைந்தெழிலார் மணியாமை யிளம்பார்ப்பின் கூன்புறம்போல்**
**அசைந்துணர்வு மடிந்தொழியு மடியிணை புகழ்வார்க்கே**

[பாடகம்-ஒருவகைக் காலணி; முத்து அரி-முத்தாகிய பரல்.]

**அரக்கியல் செங்கழுநீ ரகவிதழ்போ லுகிர்சூடிப்**
**பரப்பின்றி நுதியுயர்ந்து பழிப்பறத் திரண்டுநீண்டு**
**ஒருக்குற நெருங்கிப்பொன் னொளியாழி யகங்கௌவித்**
**திருக்கவின்கொண் மெல்விரல்க டேனார்க்குந் தகையவே**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[அரக்கியல்-செந்நிறம் இயன்ற; அகவிதழ்-உள்ளிதழ்; உகிர்-நகம்; நுதி-நுனி; ஒருக்குற-ஒருங்குதல் பெற; பொன் ஆழி-பொன்னாற் செய்யப்பட்ட மோதிரம்.]

கெண்டைத் தசை இடம்பெயராமலும், குறையாமலும் மயிர் நிறைந்து, நீளாமலும் குறுகாமலும் சம அளவுடன், பெருமை தரும் அம்பினைப் போட்டுவைக்கும் அம்பறாத் தூணிபோலத் திரண்டு, தேனும் நெய்யும் பெய்துவைக்கும் வாடாத பச்சை மூங்கில் போன்றும் வளைந்த அவளின் கணைக்கால்கள் மிக்க அழகுடையன. அழகிய பொன்னால் செய்த முத்துப்பரல் இட்ட கிண்கிணியும், பாடகமும், அணிந்திருந்த இடத்தை வருத்த—அதைக் கண்டு ஒளிசிந்தும் பொற்சிலம்பு சற்றே நகும். அத்தகைய, சிலம்பணிந்த, சிறு ஆமையின் முதுகைப் போன்ற இரு பாதங்களையும் போற்றிப் புகழ்வார்க்குப் பொறிகலங்கும்—புலன் மயங்கும். செக்கச் சிவந்த செழுங்கழுநீர்ப் பூவின் உள்ளிதழ் போன்று விரல்களின் நகங்களில் மருதாணி அணிந்தும், நுனிதடிப்பின்றி திரண்டு நீண்டு நெருங்கிச் சேர்ந்திருக்கும் விரல்களில் பொன் மோதிரம் அணிந்தும், அழகுக்கு அழகுகொண்டு விளங்கும் அவள் மென்விரல்கள், மலர் என்று நினைத்து வண்டுகள் மொய்க்கும் இயல்புடையனவாகும்.

**என்பொடு நரம்பின்றி யிலவம்பூ அடரனுக்கி**
**இன்புற வரம்புயர்ந் திருநில முறப்புல்லி**
**ஒன்பதின்சா ணடப்பினு மொருகாத மென்றஞ்சும்**
**மென்பஞ்சிச் சீறடியு மேதக்க விழைவினவே** 179

[இலவம் பூ அடர்-இலவம்பூவின் இதழை; அனுக்கி-வருத்தி; பஞ்சிச்சீறடி-செம்பஞ்சு ஊற்றிய சிறிய அடி; விழைவின-விரும்பத் தக்கன.]

**இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கி**
**அவ்வுருவு நினைப்பென்னுந் துகிலிகையால் வருத்தித்துக்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கவ்விய த னோக்கினாற் கண்விடுத்துக் காதனீர்**
**செவ்விதிற் றெளித்தானாக் காமப்பூச் சிதறினான் 180**

*[இலக்கித்து-குறித்து வைத்து; கிழியில் உருவை எழுதல். கவ்விய-கவர்ந்த.]*

**மெய்பெறா வெழுத்துயிர்க்கு மழலைவா யின்முறுவல்**
**தையலா ணெடுந்தடங்கண் வலைப்பட்டுச் சச்சந்தன்**
**ஐயுறா னணங்கெனவே யகத்தடக்கிச் செல்கின்றான்**
**மொய்யறாக் களியானை முழங்கித்தே னிமிர்தாரான்**

*[எழுத்து மெய்பெறா-எழுத்துக்கள் வடிவம் பெற்று; பெறா-பெற்று; தையல்-இளமை; மொய்-வன்மை.]*

எலும்பும், நரம்பும் இன்றி இலவம் பஞ்சைப் பொதித்து வைத்ததுபோல், கண்ணுக்கு விருந்தாக நீண்டு உயர்ந்து மண்ணிலே தடம்பதித்து ஏழடி தூரம் நடந்தாலும் பத்து மைல் தூரம் நடந்து விட்டதைப்போல் வருந்தும் பஞ்சினும் மெல்லிய அவள் பாதங்களும் பெருமை உடையவாகும். இப்படிப்பட்ட அழகு நிறைந்த எழிலுருவைச் சச்சந்தன் தன் நெஞ்சம் என்னும் படத்திலே எழுதி, அதனை நினைப்பு என்னும் எழுதுகோலால் மேலும் நலம் விளங்கத்தீட்டி, ஓயாத தன் சிந்தனையால் அதன் கண்களைத் திறந்து, அன்பு என்னும் நீர்பாய்ச்சி, இன்பம் என்னும் மலர்களைக் கொண்டான். வரிவடிவம் பெறாது ஒலிவடிவாய் மழலை மொழி சிந்தும் புன்னகை பூத்த வாயுடைய விசையையின் நீண்ட கண்ணாகிய வலையிலே சிக்கிக் கால் நிலம் தோய்தல் கண் இமைத்தல் ஆகிய குணங்களைக் கண்டும் அவள் மண் மகளே அல்லாது தெய்வ மகள் அல்லள் என்று தேறாமல், அவளுடனேயே அந்தப்புரத்திலேயே இருந்தான், நீங்காது போர்புரியும், மதயானை போன்று ஒலியெழுப்பும் வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலை அணிந்த சச்சந்த மன்னன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வேறு

வண்டின முகபடா மணிந்து வார்மதம்
உண்டுகுத் திடுகளிற் றுழவன் தன்மகள்
பெண்டிர்தம் பெருநலங் கடந்து பெற்றபேர்
விண்டலர் கோதைக்கு விசயை யென்பவே 182

[வண்டினம் முகபடாம்-வண்டின் கூட்டமாகிய முகத்திலணியும் ஆடையை; அலர்தல்-மலர்தல்.]

அருமணி மரகதத் தங்க ணாறிய
எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத்
திருமக ளிவளெனத் திலக வெண்குடைப்
பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே 183

[நாறிய-தோன்றிய; எரிநிறம்-நெருப்பைப் போன்ற நிறம்; பேதை-விசையை.]

கலம்புரி யகலல்குற் றாயர் தவ்வையர்
சிலம்புரி திருந்தடி பரவச் செல்பவள்
வலம்புரி சலஞ்சலம் வளைஇய தொத்தனள்
குலம்புரிந் தனையதோர் கொடியி னீர்மையாள்

[கலம்புரி-மேகலை யென்னும் ஆபரணம் விரும்பிய; அடிபரவ-அடிபோற்ற; தவ்வையர்-மூத்தவர்; சலஞ்சலம்-சங்கு.]

மதத்தை மொய்க்கின்ற வண்டுகளே முகபடாம் போர்த்தியது போலிருக்க—அத்தகைய மதத்தை உண்டு உமிழும் யானைப் படைகளை உடைய மன்னன் மகள், பிற பெண்களின் அழகையெல்லாம் வென்ற அரும்பவிழ்ந்து தேன் சிதறும் மலர்மாலை அணிந்த அவள் பெற்ற பெயர் விசையை என்பதாகும். அவள் மரகதப் பாறையில் பதுமப் பொய் கையில் தோன்றிய—செக்கச் சிவந்த எரிநெருப்புச் சுடர்போன்ற இதழ்கள் உடைய தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் இவள் தானோ என்று நினைக்கும்படி, நெற்றிப் பொட்டுப்போலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வெண்கொற்றக் கொடிகட்டியாளும் விதயநாட்டரசன் அரண்மனையில் வாழ்ந்திருந்தாள். மேகலை அணிந்த அகன்ற அல்குலை உடைய தாயாரும், தவ்வையரும் (தமக்கை, தங்கை, செவிலித்தாய், செவிலிக்கு மூத்தவள், தாய்க்கு மூத்தவள் முதலியோர்) சிலம்பணிந்த அடிகளைப் போற்ற, வலம்புரிச் சங்கங்கள் சலஞ்சலத்தைச் சூழ்ந்திருப்பதுபோல் அவர்கள் சூழ்ந்திருக்க வாழும் இவள் குலமுறையும் கொடிமுறையும் போற்றி வாழும் பண்பினள்.

**இன்னகிற் கொழும்புகை உயிர்க்கு மீர்ங்குழல்**
**மென்மலர்க் கோதைதன் முலைகள் வீங்கலின்**
**மின்னுருக் குறுமிடை மெலிய மெல்லவே**
**கன்னிதன் றிருநலங் கனிந்த தென்பவே 185**

*[புகை உயிர்க்கும்-புகையின் மணத்தை வீசுகின்ற; நலம்-பெண்மையழகு; மின்னுருக்குறும்-மின்னலைப் பழிக்கும்.]*

**முந்துநாங் கூறிய மூரித் தானையக்**
**கந்துகொல் கடாக்களி யானை மன்னவன்**
**பைந்தொடிப் பாசிழைப் பரவை யேந்தல்குல்**
**தந்தைமாட் டிசைத்தனன் தனது மாற்றமே 186**

*[கந்து-யானையைக் கட்டும் கம்பம்; மூரி-வலிமை; பாசிழை-புத்தணி.]*

**மருமகன் வலந்தது மங்கை யாக்கமும்**
**அருமதிச் சூழ்ச்சியி னமைச்ச ரெண்ணிய**
**கருமமுங் கண்டவர் கலத்தற் பான்மையிற்**
**பெருமகற் சேர்த்தினார் பிணைய னாளையே 187**

*[மருமகன்-சச்சந்தன்; வலந்தது-சொல்லியது; ஆக்கம்-அமைத்துக் கோடல்; சூழ்ச்சி-தந்திரம்; பெருமகன்-சச்சந்தன்.]*

இனிய மணம் வீசும் அகிற் புகை ஊட்டிய அழகிய கூந்தலும், மெல்லிய மலர்மாலை அணிந்த பூ மார்பும்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மின் போன்ற அவள் இடை வருந்தப் பெருத்ததால் அவளின் அழகுநலம் கூடக் கொஞ்சம் கெட்டது என்று சொல்லவேண்டும். நான் முன்னே கூறியபடி பெரிய படை வரிசையும், கட்டுத்தறியை முறித்துவரும் கடாக் களிற்றையும் உடைய சச்சந்த மன்னன், புத்தும் புது மலர் மாலைகளையும், பொன் அணிகளையும் அணிந்த, விரிந்து பரந்த அல்குலுடைய விசையையின் தந்தையிடத்தில் தான் அவளை மணந்து கொள்ள விரும்புகின்ற எண்ணத்தைத் தெரிவித்தான். மைத்துனன் கூறியதையும், மகளும் அவன்மேல் விருப்பம் வைத்திருப்பதையும், வரும் பொருள் உரைக்கும் தேர்ந்து—தெளிந்த மதி உடைய அமைச்சர்கள் கூறிய கருத்தையும் கேட்டுக் கண்டு உணர்ந்த விசையையின் தாயும் தந்தையும், சச்சந்தன் உறவுமுறையாலும் அவர்களுக்கு மைத்துனன் ஆக வேண்டியவன் என்பதையும் உணர்ந்து பெண்மான் போன்ற தங்கள் மகளைப் பெருமன்னனாகிய சச்சந்தனுக்குத் துணை ஆக்கினார்கள்.

## வேறு

பொனங்கொடி யமிர்த னாளும் பொன்னெடுங் குன்ற னானும்
அனங்கனுக் கிலக்க மாகி யம்புகொண் டழுத்த விள்ளார்
இனந்தமக் கெங்கு மில்லா ரியைந்தன ரென்ப முக்கட்
சினந்திகழ் விடையி னானுஞ் செல்வியுஞ் சேர்ந்த தொத்தே

[பொனங்கொடி-பொற்கொடி; அனங்கன்-மன்மதன்; இலக்கம்-இலட்சியம்; விள்ளார்-நீங்கார்; இனம்-ஒப்பு; விடையினான்-சிவபெருமான்; செல்வி-உமை தேவியார்.]

காதலாற் காம பூமிக் கதிரொளி யவரு மொத்தார்
மாதருங் களிற னானு மாசுண மகிழ்ச்சி மன்றல்
ஆதரம் பெருகு கின்ற வன்பினா லன்ன மொத்தும்
தீதிலார் திளைப்பி னாமான் செல்வமே பெரிது மொத்தார் 189

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[காமபூமி-போக பூமி; ஆதரம்-ஆசை; ஆமான்-காட்டுப்பசு; மாசுணம்-பாம்பு.]

**தன்னமர் காத லானுந் தையலு மணந்த போழ்திற்**
**பொன்னனா ளமிர்த மாகப் புகழ்வெய்யோன்பருகி யிட்டான்**
**மின்னவிர் பூணி னானை வேற்கணார்க் கியற்றப் பட்ட**
**மன்னிய மதுவின் வாங்கி மாதரும் பருகி யிட்டாள் 190**

[தன்னமர்காதல்-தன்னை விரும்பும் காதல்; அமர்தல்-விரும்புதல்; புகழ் வெய்யோன்-புகழை விரும்பிய சச்சந்தன்.]

பொற்கொடி போன்ற அழகுடைய அமுதொத்த விசையையும், பொன் நெடுங்குன்றம் போன்ற வலிவுடைய சச்சந்தனும், காமன் அம்புக்கு இலக்காகி, இணை பிரியாமல், தமக்கிணை யாரும் இல்லை எண்ணும்படி, முக்கண்ணுடையை சிவனும் உமையும் ஒருடலாய் இணைந்திருப்பதுபோல் சேர்ந்திருந்தனர். இன்ப வேட்கையில், பொன்னொளி சிந்தும் போக பூமியில் இருப்பவரை ஒத்த மங்கையர்க்கரசியாகிய விசையையும், ஆண்ஏறு போன்ற சச்சந்தனும், இன்ப முயக்கத்தில் பாம்பு போலும் பொங்கிப் பெருகுகின்ற அன்பு முயக்கத்தில் அன்னம் போலும், மகிழ்ச்சி விளையாட்டில் காட்டுப் பசுவினைப் போலும், இன்ப விளையாட்டில் போக பூமியில் உள்ளவர்களின் இத் தன்மைகளைப் பெற்றிருந்தனர். தான் விரும்பிய காதலனும் அவளும் கூடியபோது, பொன் போலும் எழிலுடைய அவளை, புகழ்ப் பெருமை மிக்க சச்சந்தன் அமுதம்போல் அள்ளிப் பருகினான். அவளும், ஒளி சிந்தும் பூண் அணிந்த சச்சந்தனை வேல்விழி மாதர்க்கு வழங்க வைத்திருக்கிற மதுவைப்போல் எண்ணி மனங் குளிரப் பருகினாள்.

**பவழவாய் பரவை யல்கு லென்றிவை பருகும் வேலான்**
**கவழமார் களிறு போன்றான் காதலி கரும்பை யொத்தாள்**
**தவழ்மதுக் கோதை மாதர் தாமரைப் பூவ தாக**
**உமிழ்நகை வேலி னானு மொண்சிறை மணிவண் டொத்தான்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

[கவழமார்களிறு-கவளத்தை உண்ணும் யானை; ஒண்சிறை-அழகிய சிறகு.]

**பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயற்**
**களிக்கயல் பொருவ போன்று கடைசிவந் தகன்ற கண்ணாள்**
**ஒளிக்கவின் கொண்ட காமத் தூழுறு கனியை யொத்தாள்**
**அளித்தயில் கின்ற வேந்த னஞ்சிறைப் பறவை யொத்தான் 192**

[பரிசு-தன்மை; ஊழுறுகனி-முதிர்ந்த பழம்; அளித்து-விருப்ப முண்டாக்கி; அயிலுதல்-உண்ணுதல்; பறவை-வெளவால்.]

## வேறு

**துறுமலர்ப் பிணையலுஞ் சூட்டுஞ் சுண்ணமும்**
**நறுமலர்க் கண்ணியு நாறு சாந்தமும்**
**அறுநிலத் தமிர்தமு மகிலு நாவியும்**
**பெறுநிலம் பிணித்திடப் பெரியர் வைகினார் 193**

[துறுதல்-நெருங்குதல்; சுண்ணம்-வாசனைப்பொடி; நாவி-கஸ்தூரி.]

சிவந்த பவழவாயையும் சிறந்த அல்குலையும் அள்ளிப் பருகுகின்ற வேலேந்திய சச்சந்தன், கவளத்தை விரைந்து உண்கின்ற யானையைப் போன்றிருக்க, காதலியாகிய விசையையோ அது தின்னத் தருகின்ற கரும்பை ஒத்தனள். தேன்சிந்தும் மலர்மாலை அணிந்த விசையையின் அல்குல் தாமரைப் பூவை ஒத்திருக்க, ஒளிபொருந்திய வேலேந்திய சச்சந்தனோ தாமரைப் பூவை நீங்காது மொய்த்திருக்கும் மணிவண்டைப் போலிருந்தான்.

பளிங்கு அறையில் வைத்த பவழப்பாவை எனத் திகழும் மென்மையும், துள்ளி ஓடுகின்ற பெரிய மீன்களைப் போன்ற நீண்ட சிவந்த கண்களும் உடைய விசையை, எழிலும் அழகும் கொண்ட இன்பம் ஊறும் இனிய நறுங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கனியை ஒத்திருக்க, அவளுக்கு இடையறாது இன்பம் ஊட்டுகின்ற வேலேந்திய சச்சந்தன், அக்கனியை உண் கின்ற அழகிய சிறகுடைய பறவையானான். இன்னும், நெருங்கத் தொடுத்தணிந்த நெஞ்சில் புரளும் மலர்மாலை யும், மேலே பூசிய சுண்ணப்பொடியும், புதுமலர் புனைந்து தலையிலேயே சூடிய கண்ணியும், வாசமிகு சந்தனமும்; அறுசுவை உண்டியும், அகிலும் புனுகும் சுற்றிச் சூழ இவர்கள் ஐம்புலன்களும் திளைக்கப் பேரின்ப முற்றனர்.

துடித்தலைக் கருங்குழற் சுரும்புண் கோதைதன்
அடித்தலைச் சிலம்பினோ டரவ மேகலை
வடித்தலைக் கண்மலர் வளர்த்த நோக்கமோடு
அடுத்துலப் பரிதுஅவர் ஊறுஇல் இன்பமே 194

[சுரும்பு-வண்டு; வடித்தலை-மாவடுப் போன்ற; உலப் பரிது-முடிவற்றது; ஊறுஇல்-இடையூறில்லாத.]

இழைகிள ரிளமுலை யெழுது நுண்ணிடைத்
தழைவளர் மதுமலர் தயங்கு பூஞ்சிகைக்
குழைமுகக் கொடியொடு குருதி வேலினான்
மழைமுகின் மாரியின் வைகு மென்பவே 195

[பூஞ்சிகை-பூவை அணிந்த முடி; குழை முகக்கொடி-காதணியைத் தன்னிடத்தேயுடைய கொடி போன்ற விசயை.]

படுதிரைப் பவழ்வா யமுத மாந்தியும்
கொடிவளர் குவிமுலைத் தடத்துள் வைகியும்
இடியினுங் கொடியினு மயங்கி யாவதும்
கடிமணக் கிழமையோர் கடலின் மிக்கதே 196

[கிழமை-உரிமை; தடம்-வழி; மாந்தி-உண்டு.]

கப்புரப் பசுந்திரை கதிர்செய் மாமணிச்
செப்பொடு சிலதிய ரேந்தத் தீவிய
துப்புமிழ்ந் தலமருங் காம வல்லியும்
ஒப்பரும் பாவைபோன் றுறையு மென்பவே 197

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[திரை-வெற்றிலைச்சுருள்; தீவிய-இனிய; துப்பு-நுகரும் பொருள்கள்; காமவல்லி-கற்பகத்திற் படரும் கொடி; சிலதியர்-தோழியர்.]

**மண்ணகங் காவலின் வழுக்கி மன்னவன்**
**பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பேரருள்**
**விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி**
**ஒண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே 198**

[காவலின் வழுக்கி - காத்தலினின்றும் தவறி; மன்னவன் - சச்சந்தன்; பிணைந்த - சேர்ந்த; உரோணி-உரோகிணி; ஒளித்தது-மறைந்தது.]

ஏலம் எனும் மணச்சாந்தணிந்த கருங்கூந்தலை உடைய வண்டு மொய்க்கும் மலர்மாலை போன்ற விசையையின் மேகலை ஊடலினால் சச்சந்தனின் தலையில் படும்போது உண்டான ஒலியோடு, மாவடுப்போன்ற விழியுடைய அவள் அத்தகைய ஊடலை மேலும் விரும்பித் தோற்று வித்த குறிப்பினாலே அவர்களிருவரும் நுகர்ந்திருந்த இடையூறில்லாத இன்பம் முடிவற்றிருந்தது. அணிஒளி வீசும் இளமுலையும், ஒரு கோட்டில் எழுதியதைப்போன்ற மெல்லிய இடையும், செடியிலே பூத்துத் தேனிலே நனைந்த மலர் அணிந்த மென் கூந்தலும், தோடணிந்த முகமுடைய கொடிபோன்ற விசையையுடன், செங்குருதி தோய்ந்த வீரவேலுடைய சச்சந்தன், மாரிக்காலத்து மழைமேகம் போல் அருள்சுரக்க இன்பம் நுகர்ந்திருந் தான். கடல் பவழம்போன்ற வாயின் அமுதத்தை உண்டும், இடையாகிய கொடியிலே பூத்த குவிந்த முலையாகிய தடத்திலே—பாதையிலே சென்றும் அதாவது உடல்தோய அணைந்தும், இடிபட்டலைக்கின்ற மாவைப் போலவும், நூழிக் கொடி போலவும் உணர்வும் உடலும் மயங்க அவர்கள் துய்க்கின்ற இன்பம் அளவிற் கடலிலும் பெரியதாகும். கற்பூரத்தையும், பச்சை வெற்றிலைச் சுருளையும், ஒளிவீசும் மாணிக்கச் செப்புகளிலே சேடியர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


ஏந்திநிற்க, ஐம்புலன்கட்கும் இன்பம் ஊட்டும் பொருள்களைத் தானும் தன் கணவனுமாக நுகர்ந்து, இன்ப வேட்கையை விரும்பும் காமவல்லி போன்ற விசையை ஒப்புவமை அற்ற ஓவியப் பாவைபோல் இருந்தனள். மண்ணுலகைக் காக்கும் கடமையில் இருந்து தவறிச் சச்சந்தன் பெண்ணில் பேரழகியான விசையையோடு இத்தகைய காதல் விளையாட்டில் ஈடுபட்டுக் கடமையை மறந்ததானது—விண்ணுக்கு ஒளிவீச வேண்டிய திங்கள் அதை இருளடைய விட்டு விட்டு, வெண்ணிறத் தாரகையாம் உரோகிணியின்மேல் காதல் கொண்டு அதோடு மறைந்ததைப் போன்றிருந்தது.

### வேறு

குங்குமத் தோளி னானுங் கொழுங்கயற் கண்ணி னாளும்
தங்கிய காதல் வெள்ளந் தணப்பறப் பருகு நாளுள்
திங்கள்வெண் குடையி னாற்குத் திருவிழுக் குற்ற வண்ணம்
பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத் துரைத்து
மன்றே 199

[தணப்பு அற-நீங்குதல் இல்லாமல்; திரு-செல்வம்; இழுக்குறல்-கெட்டுப்போதல்; தெள்ளி-தெளிந்து.]

களிறனா னமைச்சர் தம்முட் கட்டியங் கார னென்பான்
ஒளிறுவாட் டடக்கை யானுக் குயிரென வொழுகு நாளுட்
பிளிறுவார் முரசிற் சாற்றிப் பெருஞ்சிறப் பியற்றி வேந்தன்
வெளிறிலாக் கேள்வி யானை வேறுகொண் டிருந்து
சொன்னான் 200

[தடக்கையான் - கட்டியங்காரன்; பெருஞ்சிறப்பு-முடியும் குடையு மொழிந்த மற்ற எல்லாச் சிறப்புக்களையும் செய்தல்; வெளிறு-அறிவின்மை; கேள்வியான்-நிமித்திகன்.]

அசைவிலாப் புரவி வெள்ளத் தரிஞ்சயன் குலத்துட்
டோன்றி
வசையிலாள் வரத்தின் வந்தாள் வான்சுவை யமிர்த
மன்னாள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விசையையைப் பிரித லாற்றேன் வேந்தனீ யாகி வையம்
இசைபடக் காத்தல் வேண்டு மிலங்குபூண் மார்ப
வென்றான் 201

[அசைவு-ஓய்வு; புரவி-குதிரை; அரிஞ்சயன்-விசையை யின் பாட்டன்; வரம்-வேண்டுகோள்; இசைபட-கீர்த்தியுண்டாகும்படி; வசையிலாள் - குறை வற்றவள்.]

குங்குமம் அணிந்த தோளுடைய சச்சந்தனும், அழகிய மீன்போன்ற கண்ணுடைய விசையையும், ஊறிப் பெருகும் காதல் வெள்ளத்தை ஓய்வின்றி அள்ளிப் பருகி வரும் நாளில், திங்கள்போன்ற வெண்கொற்றக் குடை யுடைய அவனின் திரண்ட செல்வம் திங்கள் தேய்வதைப் போல் திரிந்து குறைந்ததைத் தேர்ந்து தெரிந்து சொல்வோம்.

ஆண் யானைபோன்ற சச்சந்தனின் அமைச்சர்களுள் கட்டியங்காரன் என்பான், ஒளிமிக்க வாளேந்திய கையுடைய மன்னனுக்கு உயிர்போலப் பழகி வரும் நாளில், முரசொலி முழக்கிப் பறையறிவித்து, கவடில்லாத அறிவுடைய அக்கட்டியங்காரனுக்குப் பெரும்விழாவும் எடுத்து, பரிசுகள் ஈந்து அவனைத் தனியேயும் அழைத்து வேந்தன் சொல்லுவான்; ''ஓய்வில்லாத குதிரைப் படை வரிசைகளுடைய அரிஞ்சயன் குலத்திலே பிறந்து, குறை வற்ற திருவுடையவளாய்ப் பெறற்கரிய பெரும் பேறாய்ப் பிறந்தவளான—மூப்பின்றிக் காக்கும் சுவைமிக்க வான முதம்போன்ற விசையை விட்டுப் பிரிந்து நான் ஆட்சி மேற்கொள்ள முடியாதவனா யிருக்கிறேன். எனவே எழில்விளங்கும் பூண் அணிந்த மணிமார்பனே நீ என் பொருட்டு மன்னனாகி வையகம் புகழுறக் காக்க வேண்டும்'' என்றான்.

அண்ணல்தா னுரைப்பக் கேட்டே யடுகளிற் றெருத்தி
னிட்ட
வண்ணப்பூந் தவிசு தன்னை ஞமலிமே லிட்ட தொக்குங்
கண்ணகன் ஞாலங் காத்த லெனக்கெனக்கமழுங் கண்ணி
மண்ணகம் வளருந் தோளான் மறுத்துநீ மொழிய
லென்றான் 202

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[அண்ணல்-சச்சந்தன்; எருத்து-கழுத்து; வண்ணம்-அழகு; ஞமலி-நாய்; மொழியல்-சொல்லாதே.]

எழுதரு பருதி மார்ப னிற்றென விசைத்த லோடும்
தொழுதடி பணிந்து சொல்லுந் துன்னலர்த் தொலைத்த வேலோய்
கழிபெருங் காத லாள்கட் கழிநலம் பெறுக வையம்
பழிபடா வகையிற் காக்கும் படுநுகம் பூண்ப லென்றான்

[இற்றென-இத்தன்மைத்தென்று; சொல்லும்-பகையென்று கூறப்படும்; துன்னலர்-பகைவர்; கழிநலம்-மிக்க இன்பத்தை; படுநுகம்-பெரிய பாரம்.]

வலம்புரி பொறித்த வண்கை மதவலி விடுப்ப வேகிக்
கலந்தனன் சேனை காவல் கட்டியங் கார னென்ன
உலந்தரு தோளி னாய்நீ யொருவன்மேற் கொற்றம் வைப்பின்
நிலந்திரு நீங்கு மென்றோர் நிமித்திக னெறியிற் சொன்னான் 204

[வலம்புரி-சங்கரேகை; மதவலி-சச்சந்தன்; உலம்-உருண்டைக்கல்; கொற்றம்-அரசுரிமை; ஓர்-உணர்.]

சச்சந்த மன்னன் இவ்வண்ணம் உரைக்கக் கேட்ட கட்டியங்காரன், "நானிந்த விரிந்த உலகை ஆள எனக்குப் பொறுப்பினைத் தருவது, பட்டத்து யானைமேல் இட வேண்டிய அழகிய பட்டு மெத்தையை நாயின்மேல் இடுவதைப் போன்றதாகும்" எனக் கூறி மறுக்க; மாலை மணக்கின்ற, நிலவுலகைக் காக்கின்ற தோளுடைய சச்சந்தன், கட்டியங்காரனிடம் "என் மொழியை மறுத்துரைக்காதே"—என்றான். உதய சூரியனை ஒப்ப ஒளியெழுப்பும் மார்புடைய சச்சந்தன் இவ்விதம் சொன்னவுடனே, அவனது தாளிலே விழுந்து பணிந்த கட்டியங்காரன் "பகைவர்களையெல்லாம் அழித்த வலிவுடைய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வேலேந்திய வேந்தனே, நீ நின் காதலின்ப மனையாளிடம் பேரின்பம் பெறுக; நான் பழியின்றி இந் நிலவுலகைக் காக்கின்ற பெரும் பணியை மேற்கொள்கின்றேன்'' என்றான். வலம்புரிச் சங்கு பொறித்த கொடையளிக் கின்ற கையால் சச்சந்த மன்னன் குறிப்புக் காட்டியதைக் கொண்டே, கட்டியங்காரன் சேனையை ஏவல் கொண்டான் எனக் கூறக் கேட்டு, ''கற்றூண்போன்ற தோளுடைய சச்சந்த மன்னனே, நீ உன் ஆட்சிப் பொறுப்பை வேறு ஒருவன்மேல் சுமத்தினால் செல்வமும், வாழ்வும் உன்னைவிட்டு நீங்கிவிடும் என்று'' நிமித்திகன் என்னும் அமைச்சன் ஆராய்ந்து அறிவுரை கூறினான்.

**எனக்குயி ரென்னப் பட்டா னென்னலாற் பிறரை யில்லான்**
**முனைத்திற முருக்கி முன்னே மொய்யமர் பலவும் வென்றான்**
**தனக்கியான் செய்வ செய்தேன் றான்செய்வ செய்க வொன்றும்**
**மனக்கினா மொழிய வேண்டா வாழிய ரொழிக வென்றான் 205**

[முனைத்திறம் முருக்கி-போர்க்களங்களின் கூறு பாட்டை அழித்து; முன்னே-பட்டங்கள் அளித்துச் சிறப்பிக்கும் முன்னே; மனக்கு இனா-மனத்திற்குத் துன்பம் தருவனவற்றை; மனக்கு மனத்துக்கு என்பதன் விகாரம்; இனா-இன்னா.]

**காவல குறிப்பன் றேனுங் கருமமீ தருளிக் கேண்மோ**
**நாவலர் சொற்கொண் டார்க்கு நன்கலாற் றீங்கு வாரா**
**பூவலர் கொடிய னார்கட் போகமே கழுமி மேலும்**
**பாவமும் பழியு முற்றார் பற்பலர் கேளி தென்றான் 206**

[குறிப்பு-கருத்து; கருமம்-காரியம்; அருளிக்கேண்மோ-கேட்டருளும்; பூ அலர் கொடியனார்-பூக்கள் மலர்ந்த கொடி போன்ற மகளிர்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பெரும்பெயர்ப் பிரம னென்னும் பீடினாற் பெரிய நீரான்
அரும்பிய முலையி னாளுக் கணிமுக நான்கு தோன்ற
விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்த தன்றித்
திருந்தினாற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்ற தன்றே

[பிரமனுக்குத் திலோத்தமை பொருட்டு நான்கு முகமுண்டானமை; சிறுசொல் - பழிச்சொல்; பெயர்-புகழ்; பீடு-பெருமை.]

அவ்வறிவுரையைக் கேட்ட கச்சந்தன்; "என்னுயிர் போன்றவன், என்னையல்லாமல் பிறரை நேசிக்காதவன், இதற்கு முன்னும் பல போர்க்களங்களிலே பகைவரைக் கொன்று எனக்கு வெற்றி பல தேடித் தந்தவன் கட்டியங்காரன். அத்தகையவனுக்கு நான் செய்ய வேண்டியதைச் செய்தேன். அவனும் தான் விரும்பியதை எனக்குச் செய்யட்டும். எனவே நீ இதிலே பொருந்தாத பழிச் சொற்கள் எதையும் பேச வேண்டாம், இதோடு செல்க; இனி இம்மொழி புகலாது ஒழிக" என்று கடிந்துரைக்க, அதைச் செவிமடுத்த நிமித்திகன் "வேந்தே விருப்பம் இல்லாவிடினும் நான் கூறுவதைக் கடமை எனக் கொண்டு அருள் கூர்ந்து கேட்பாயாக! அமைச்சர் சொற் கேட்ட யார்க்கும் நன்மையே அல்லாது தீமை வராது, மேலும் புதுமலர் பூங்கொடி போன்ற பெண்களின் இன்பமே நிலையெனக் கொண்டு மயங்கிப் பாவமும் பழியும் அடைந்தோர் பலபேர் இருக்கிறார்கள், எனவே நான் கூறும் அறிவுரையைக் கேள்" என்றான். இன்னும், "பெரும் புகழ் பெற்ற—பெருந்தவம் செய்து சிறந்த, பெருமை உடைய பிரமதேவனே அரும்பு மலரொத்த மார்புடைய திலோத்தமையை மோகித்து, அவள் சென்ற திசையெல்லாம் கழுத்தைத் திருப்பாமல் பார்ப்பதற் கேதுவாய் நான்கு திசைகளுக்கும் நான்கு முகங்கள் பெற்றும், அவளை அடைய முடியாமல் போனதோடு, விண்ணுலக வாழ்வையும் இழந்து, பின்னர்த் தவம் செய்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



திருந்திய காலத்தும் பழி நீங்காது நிற்பதை நீ அறியமாட்டாயோ'' என்றும் இடித்துரைத்து அறிவுரை கூறினான்.

**கைம்மலர்க் காந்தள் வேலிக் கணமலை யரையன் மங்கை**
**மைம்மலர்க் கோதை பாகங் கொண்டதே மறுவ தாகக்**
**கொய்ம்மலர்க் கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணி யாற்குப்**
**பெய்ம்மல ரலங்கன் மார்ப பெரும்பழி யாயிற் றன்றே 208**

*[கொய்-கொய்த; பறித்த. மறு-குற்றம்; குளிர்மதி-பிறைநிலவு.]*

**நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்**
**பானிற வண்ண னோக்கிற் பழியுடைத் தென்று கண்டாய்**
**வேனிறத் தானை வேந்தே விரிபுனற் றொழுனை யாற்றுள்**
**கோனிற வளையி னார்க்குக் குருந்தவ னொசித்த தென்றான் 209**

*[நீல்-நீலம்; தம்முன்-தமையன்; பால்நிறவண்ணன்-பலராமன்; தொழுனை-யமுனை; குருந்து-குருந்த மரம்.]*

**காமமே கன்றி நின்ற கழுதைகண் டருளி னாலே**
**வாமனார் சென்று கூடி வருந்தினீ ரென்று வையத்**
**தீமஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே**
**நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியி னென்றான்**

*[கன்றி-அடிப்பட்டு; வாமனார்-புத்தர்; ஈமம்-சுடுகாடு; நாமம்-அச்சம்; தெரி-ஆராய்ந்து தெளி.]*

''கைவிரல்போல் மலரும் காந்தள் மென்மலர் பூத்திருக்கும் வேலியை அரணாக உடைய மலை நாட்டரசன் மனைவி மேனை பெற்ற—நீலமலர் மாலை அணிந்த—இறைவியாகிய உமையை இடப்பாகம் கொண்டதே, கொன்றை மலர்மாலையும் குளிர் வெண்பிறை நிலவும் அணிந்த இறைவனுக்கு இழுக்காகவும் பழியாகவும் ஆனதல்லவா? இன்னும் கார்மேக வண்ணனாகிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கண்ணன் அன்று மங்கையரின் துகிலைக் கவர்ந்து கொள்ள அதைப் பலதேவன் பார்த்தால் பழிவரும் என்றஞ்சிப் பயந்து, ஒளிமிக்க வேலேந்திய படை உடைய வேந்தே, அக் கண்ணனே, துகிலைக் கவர்ந்து கொண்டு தான் ஏறி ஒளிந்திருந்த குருந்தமரம் ஒடிந்து விழச்செய்து, அதனால் கீழே விழுந்த துகிலை அத் தோகையர்கள் எடுத்துக் கொள்ளும்படியும் செய்தானல்லவா? மேலும், காமத் திளைப்பிலேயே ஊறிநின்ற ஆண் கழுதைக்குப் புத்தன் பெண் கழுதையாகச் சென்று கூடி இக்காம வேட்கைக்காக இப்படி வருந்தினீரே என்ன அவர் சொன்ன மொழியை நாம் ஆராய்ந்தால், பகையைக் கொள்கின்ற வேலேந்திய, அரசே, இக்காம வேட்கை சுடுகாட்டில் பிணத்தின்மேல் இடுகின்ற மாலையைப் போன்றது என்று நாம் தெளிய வேண்டும் அல்லவா?'' என்றான்.

**படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற**
**வடுவுரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி**
**இடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காமம்**
**நடுவுநின் றுலக மோம்ப நல்லதே போலு மென்றான் 211**

[பஞ்சவர்-பாண்டவரைவர்; வாய்ப்பறை அறைந்து-வாயாகிய பறையை அடித்து; இழுக்கு-குற்றம், அம்ம-கேட்பித்தற் பொருளில் வரும் இடைச்சொல்.]

**ஆரறி விகழ்தல் செல்லா வாயிரஞ் செங்க ணானும்**
**கூரறி வுடைய நீரார் சொற்பொருள் கொண்டு செல்லும்**
**பேரறி வுடையை நீயும் பிணையனாட் கவலஞ் செய்யும்**
**ஓரறி வுடையை யென்றா னுருத்திர தத்த னென்பான் 212**

[ஆரறிவு-நிறைந்த அறிவு; கூரறிவு-மிக்க அறிவு; பிணை-பெண் மான்; அவலம்-துன்பம்.]

**அளந்துதாங் கொண்டு காத்த வருந்தவ முடைய நீரார்க்**
**களந்தன போக மெல்லா மவரவர்க் கற்றை நாளே**
**அளந்தன வாழு நாளு மதுவெனக் குரைய லென்றான்**
**விளங்கொளி மணிகள் வேய்ந்து விடுசுட ரிமைக்கும் பூணான் 213**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[உரையல்-சொல்லாதொழி; வேய்ந்து-பதித்து.]

மூரித்தேந் தாரி னாய்நீ முனியினும் உறுதி நோக்கிப்
பாரித்தேன் தரும நுண்ணூல் வழக்கது வாதல் கண்டே
வேரித்தேங் கோதை மாதர் விருந்துனக் காக வின்பம்
பூரித்தேந் திளைய கொங்கை புணர்கயான் போவ
லென்றான் 214

[மூரி-பெருமை; முனியினும்-கோபித்தாலும்; பாரித்தேன்-விரித்துக் கூறினேன்; வேரி-தேன்; பூரித்து-நிறைந்து.]

''இதுபோலக் காமத்தால் பிறந்த பழியை மறக்க முடியுமா? பஞ்சபாண்டவர்கள் ஐவரும் அன்று ஒருத்தியையே மனைவியாகப் பெற்றிருந்ததால் வந்த பழியை யார் போக்கமுடியும்? வாய்ச்சொல்லால் பலர் தூற்ற வரும் பழியை மட்டுமல்லாது இக்காமம் இன்னும் வருகின்ற தலைமுறைக்கும் பழியைக்கொண்டு வந்து சேர்க்கும் தன்மை உடையதல்லவா? எனவே நடுவு நிலைமை பிறழாது அரசாட்சி நடத்துவதே நல்லது அல்லவா? யாரும் இழித்துரைக்க முடியாத, பேரறிவுடைய ஆயிரம் கண்ணமைந்த இந்திரனும், கூர்த்த அறிவுடைய அமைச்சர்களின் சொற்கேட்டு நடப்பான். நீயும் இந்திரனைப் போன்ற பேரறிவுடையாய் எனினும் இப்போது அமைச்சர் சொற்கேளாது, பெண்மான் போன்ற விசையைக்குத் துன்பம் விளைவதற்குக் காரணமான இச் செயலாலே ஓரறிவு உடையவனாக ஆகிவிட்டாயே'' என்றுரைத்தான் உருத்திரதத்தன். இவ்விதம் உருத்திர தத்தன் உரைக்கக் கேட்டு, ''அவரவர் நோற்ற தவத்திற் கேற்ப அவரவர்க்குப் போகமும் புகழும் அமைந்துள்ளன. அவரவர் வாழ்நாளும் அவ்வாறே அளவிடப்பட்டுள்ளன. எனவே இந்நிலையாமை பற்றி எனக்குக் கூறவேண்டாம்'' என்றான் அழகிய மணிகள் பதித்த—ஒளி சிந்தும் பூண் அணிந்த சச்சந்த மன்னன். சச்சந்தன் இவ்விதம் கூறவும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அமைச்சன், ''இனிய தேன் நிறைந்த மலர் மாலை அணிந்த மன்னனே, நீ வெறுத்தாலும், தவற்றைச் சுட்டிக் காட்டித் திருத்துவது அமைச்சர் கடன் என்னும் தருமநூல் கட்டளையால் இதைச் சொன்னேன். தேன்மலர் மாலை அணிந்த மங்கையின் கவிந்து, குவிந்து திரண்ட எழில் மார்பின் புது இன்பம் நீங்காது அடைக! நீ என்னை வெறுத்தாலும் நான் உன்னைக் காக்கும் கடமையினின்று பிரியேன்'' என்று கூறினான்.

## வேறு

இனமாம் என்றுரைப் பினும்ஏ தமெணான்
முனமா கியபான் மைமுளைத் தெழலாற்
புனமா மலர்வேய் நறும்பூங் குழலாள்
மனமா நெறியோ டியமன் னவனே 215

[ஏதம்-துன்பம்; எணான்-எண்ணான்; முனமாகிய பான்மை-முப்பிறப்பின் தீவினை; நெறிஓடிய-நெறி தவறிய.]

கலையார் துகிலேந் தல்குலுங் கதிர்சூழ்
முலையார் தடமும் முனியா துபடிந்
துலையாத் திருவின் னமிர்துண் டொளிசேர்
மலையார் மணிமார் பன்மகிழ்ந் தனனே 216

[கலை - மேகலை; முனியாது - வெறுப்பில்லாமல்; உலையா-கெடாத; திரு-விசையை.]

விரிமா மணிமா லைவிளங் குமுடித்
திருமா மணிசிந் துதிளைப் பினராய்
எரிமா மணிமார் பனுமேந் திழையும்
அருமா மணிநா கரினா யினரே 217

[முடிமணி-சூடாமணி; நாகர்-நாகலோகத்தவர்; எரி-ஒளி; திளைத்தல்-அநுபவித்து மகிழ்தல்.]

நறுவார்ந் ததொர்நா கிளந்தா மரைவாய்
உறவீழ்ந் ததொரொண் மணிபோன் றுரவோன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அறவாக் கியவின் பமமர்ந் தவிருட்
கறைவேற் கணினாள் கனவுற் றனளே 218

[நறவு-தேன்; ஆர்தல்-நிறைதல்; நாகிளமை-மிக்க இளமை; மணி-முத்து; உரவோன்-சீவகன்; உரவோன் உற என மாறுக, அறவு-அறுதல்; ஆக்கிய கனவு உற்றனள் என இயைக்க. கறைவேல்-விடம் பூசிய வேல்.]

மங்கையர் ஆசையில் ஈடுபட்டு மன்னவன் நெறியை மறப்பது, இப்படிப்பட்ட செயலால் பழியேற்ற முன்னே கூறிய தேவர்களின் நிலைக்கொப்பானது என்று கூறியும் அத்தவற்றை உணராதவனாகி, முற்பிறப்பின் தீவினை முன்வந்து தோன்ற, முல்லை நறுமலர் சூடிய மண மிகுந்த அழகிய கூந்தலுடைய விசையையை விரும்பி அரச நெறியை மறந்தவன் ஆனான். அழகிய மேகலையும் துகிலும்அணிந்த அல்குலையும், ஒளிமுத்து மணிவடம் அணிந்த முலையையும், நீங்காது அணைந்து; சலிப்பின்றி இளமை இன்பம் உண்டு இவ்வுலகை மறந்து மகிழ்ந்திருந்தான், ஒளிவீசும் மணி மார்புடைய சச்சந்த மன்னன். விரிந்த மார்பில் கிடந்த மாமணி மாலையும், தலைமுடியில் சூடிய தெய்வ உத்தியும் சிதற நுகரும் இன்ப முயக்கத்தில் அவர்கள் நாகமணி உடைய நாகரை ஒத்தனர். இத்தகைய இடையறா இன்ப முயக்கத்தால் தேன் பிலிற்றும் அழகிய இளந்தாமரைத் தட்டிலே விழுந்த ஓர் ஆணிப்பொன் முத்தைப்போன்று சீவகன் விசையின் கருவில் உற, இன்பத்தைக் கொன்றழிக்கும் கனவொன்றை அப்போது சிவந்த வேல் போலும் விழியுடைய விசையை கண்டாள்.

### வேறு

பஞ்சி யடிப்பவ ளத்துவர் வாயவள்
துஞ்சு மிடைக்கன மூன்றவை தோன்றலின்
அஞ்சி நடுங்கின ளாயிழை யாயிடை
வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே 219

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[பஞ்சியடி-செம்பஞ்சு பூசிய அடி; துவர்வாய்-சிவந்த வாய்; கன-கனவு; வெஞ்சுடர்-சூரியன்.]

**பண்கெழு மெல்விர லாற்பணைத் தோளிதன்**
**கண்கழூஉச் செய்து கலைநல தாங்கி**
**விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய**
**வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள் 220**

[பணைத்தோளி - மூங்கில் போன்ற தோளினையுடையாள்; கழூஉச் செய்து-கழுவுதலைச் செய்து; நேமிய-அறவாழி.]

**இம்பரி லாநறும் பூவொடு சாந்துகொண்டு**
**எம்பெரு மான்அடிக் கெய்துகென் றேத்தி**
**வெம்பரி மாநெடுந் தேர்மிகு தானையத்**
**தம்பெரு மானடி சார்ந்தன ளன்றே 221**

[இம்பரில்லா-இவ்வுலகில் இல்லாத; எய்துக-அடைக; ஏத்தி-போற்றி.]

பஞ்சில் மெல்லிய பாதமும் பவளம்போல் சிவந்த வாயும் உடைய விசையை துயிலில் கண்ட கனவுகள் மூன்று. அம்மூன்று கனவுகளும் அவள் நெஞ்சிலே மீண்டும் மீண்டும் நினைவுறத் தோன்ற அழகியவள் அஞ்சி நடுங்கினள். அந்நேரத்தில் வைகறை விடிந்து வானில் செங்கதிர் தோன்றியது. பொழுது புலர்ந்ததும், யாழோடு விளையாடும் இளமென் விரல்களால்-மூங்கிலைப் போன்ற வளைந்த தோளுடைய விசையை, கண் மலர் கழுவிப் பொன்நல ஆடை அணிந்து, விண்ணவர் பொழியும் பூமழையையும் வெல்லும், அறச்சுடரை மிகுபுகழுடைய அருகப்பெருமானை வணங்கினாள். அதோடு நில்லாது இவ்வுலகில் இல்லாத பூவையும் சந்தனத்தையும் கொண்டு, ''எம்பெருமானே நின் பொன்னடி இவை ஏற்க'' என்று போற்றிப் பின்னர், வேகமிக்க குதிரைப் படையும் நெடுந் தேரும், பிறபடையும் உடைய தன் கணவன் தாளினைப் பணிந்தாள்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**தானமர் காதலி தன்னொடு மாவலி**
**வானவர் போன்மகிழ் வுற்றபின் வார்நறுந்**
**தேனெனப் பாலெனச் சில்லமிர் தூற்றெனக்**
**கானமர் கோதை கனாமொழி கின்றாள்** **222**

[தானமர்-தான் விரும்பிய; மாவலி-மிக்க வலியையுடைய சச்சந்தன்; கான்-மணம்; வார்-உயர்ந்த; சில்-சிலவாகிய.]

**தொத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்ததெண்**
**முத்தணி மாலை முடிக்கிட னாக**
**ஒத்ததன் றாள்வழி யேமுளை யோங்குபு**
**வைத்தது போல வளர்ந்ததை யன்றே** **223**

[தொத்து-பூங்கொத்து; பிண்டி-அசோக மரம்; முடி-கிரீடம்; தாள்வழி-வேரின் வழியே; முளை-அசோகங் கன்று; இடன்-இடம்.]

**வார்குழை வில்லிட மாமுடி தூக்குபு**
**கார்கெழு குன்றனை யான்கன வின்னியல்**
**பார்கெழு நூல்விதி யாற்பயன் றான்றெரிந்து**
**ஏர்குழை யாம லெடுத்துரைக் கின்றான்** **224**

[வில்லிட-ஒளிவீச; பார்கெழு-பெருமை பொருந்திய; ஏர்-விசையையின் அழகு; தூக்குபு-அசைத்து; கார்கெழு-முகில் தவழும்.]

தான் விரும்பி மகிழும் காதலி விசையையினுடன் வலிமை மிக்க சச்சந்த மன்னன் தேவர்களைப்போல் திளைத்து இன்பம் நுகர்ந்தவுடன், தேன்போலும், பால் போலும் இனிக்கும் அமுதம்போலும் தான் கண்ட கனவுகளைப் பற்றி மணமிகு மலர்மாலை அணிந்த விசையை தன் கணவனுக்குக் கூறலுற்றாள். அக்கனவுகளாவன:- ஒரு அசோக மரம் கிளைகள் முறிய அடிசாய்ந்து வீழ்ந்தது. அதன் வேரிலே நட்டு வைத்தது போல் அதன் கன்று ஒன்று எட்டு முத்துமாலையும் மணிமுடியும் தாங்கி வளர்ந்தது;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


என்பதாகும். விசையை உரைத்த இக்கனவினைக் கேட்ட கருமுகில் குன்றொத்த தோளுடைய சச்சந்தன், நீண்ட குழைஆடி ஒளிவீசத் தலையை அசைத்து, கனவின் தன்மையை, கனாக்குறி விளக்கும் நூலோடு ஆராய்ந்து அவற்றை அழகுற அவளுக்கு எடுத்துச் சொல்வான்.

**நன்முடி நின்மக னாம்நறு மாலைகள்**
**அன்னவ னாலம ரப்படுந் தேவியர்**
**நன்முளை நின்மக னாக்கம் அதாமெனப்**
**பின்னத னாற்பயன் பேசலன் விட்டான் 225**

[நறுமை-நன்மை; அமரப்படும்-விரும்பப்படும்; ஆக்கம்-உயர்வு; பேசலன்-பேசாது.]

**இற்றத னாற்பய னென்னென வேந்திழை**
**உற்றதின் னேயிடை யூறெனக் கென்றலும்**
**மற்றுரை யாடல ளாய்மணி மாநிலத்**
**தற்றதொர் கோதையிற் பொற்றொடி சோர்ந்தாள்**

[கோதையின்-மாலையைப் போல; இற்றது-முறிந்தது; உற்றது-தேர்ந்தது.]

**காவி கடந்தகண் ணீரொடு காரிகை**
**ஆவி நடந்தது போன்றணி மாழ்கப்**
**பாவியெ னாவிவ ருத்துதி யோவெனத்**
**தேவியை யாண்டகை சென்றுமெய் சார்ந்தான் 227**

[கடந்த-வென்ற; மாழ்க-கெடுதலால்; ஆண்டகை-சச்சந்தன்.]

"நீ கனவில் கண்ட மணிமுடி நின்மகன் ஆகும். மேலும் நீ கண்ட எட்டுமாலைகளும் அவனால் மணக்கப் பெறும் மங்கையர் ஆவர். முளைத்த கன்று நின்மகனின் பெருகி வரும் வாழ்வைக் குறிக்கும்" என்று கூறியதோடு நிறுத்தி மரம் கிளைமுறித்து அடிசாய்ந்ததைப் பற்றிக் கூறாது விட்டான். ஆனால் அவளோ, மரம் முறிந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



விழுந்ததற்குப் பொருள் என்ன என்று கேட்கவும், "பெண்ணே அந்தகைய தீமை ஒன்று எனக்கு வருவதை அதுகுறித்தது" என்று கூறினான். இம்மொழி கேட்டதும் பூங்கொடி போன்ற விசையை வேறு எதுவும் பேசாது, பூமாலை அறுந்து பூமியிலே விழுந்ததுபோல் தரை மண்ணில் சாய்ந்தாள். பெருக்கெடுக்கும் குவளை மலர்விழி வடித்த கண்ணீரோடு விசையை அழகிழந்து உயிர்விட்டது போலாக, சச்சந்தன் உடனே அவளை வாரி எடுத்துப் பாவி என்னுடைய உயிரை வாட்டுகின்றாயே எனக்கூறித் தழுவிக்கொண்டான்.

**தண்மலர் மார்புற வேதழீயி னானவள்**
**கண்மலர்த் தாள்கன வின்இயல் மெய்யெனும்**
**பெண்மய மோபெரி தேமட வாய்க்கெனப்**
**பண்ணுரை யாற்பர வித்துயர் தீர்த்தான் 228**

[மலர் மார்பு-அகன்ற மார்பு; பண்ணுரை-உபசார வார்த்தை; பரவி-புகழ்ந்து.]

**காதலன் காதலி னாற்களித் தாய்மலர்க்**
**கோதையங் கொம்பனை யார்தங் குழாந்தொழத்**
**தாதுகு தாமம ணிந்தகில் விம்மிய**
**போதுகு மெல்லணைப் பூமகள் சேர்ந்தாள் 229**

[ஆய்மலர்க் கோதை - ஆராயப்பட்ட மலராற் றொடுத்த மாலை; கொம்பனையார்-சேடியர்; தாமம்-பூமாலை; அகில்-அகிற்புகை; போது-மலர்; பூமகள்-விசையை.]

**பண்கனி யப்பரு கிப்பய னாடகம்**
**கண்கனி யக்கவர்ந் துண்டுசின் னாள்செல**
**விண்கனி யக்கவின் வித்திய வேற்கணி**
**மண்கனிப் பான்வள ரத்தளர் கின்றாள் 230**

[கவர்ந்து-விரும்பி; விண்-தேவர்கள்; கனிப்பான்-சீவகன்.]

CC-0. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அப்படி அவன் தன் குளிர்ந்த மார்புற அவளைத் தழுவிக்கொள்ளவும் அவளும் கண்விழிக்கச் சச்சந்தன் அவளை நோக்கி, ''பெண்ணே உனக்குக் கனவையும் நிசம் என்று நம்பி வருந்தும் பெண்புத்தி மிகுந்திருக்கிறதே'' என — அவள் மகிழ்ச்சியுறும் விதம் பேசினான். காதலனின் இத்தகைய இன்பமொழி கேட்டதும் களிப்பு மிக எய்திக் காம்பாய்ந்து தொடுத்துக் கட்டிய மாலைகள் அணிந்த தோழியர்கள் தொழுது பணிய, மகரந்தப் பொடிசிந்தும் மலர்மாலை அணிந்து அகிற்புகை மணக்கும், அழகிய மலர் பரப்பிய பஞ்சணைப்பள்ளியைத் திருமகள் போன்ற விசையை அடைந்தாள்.

இவ்விதமாக இன்னிசையைக் காது குளிரக் கேட்டும், சுவைதரும் நாடகங்களை விழி மகிழக் கண்டும், இருவரும் சிலநாள் இன்பமாகக் களித்தனர். விண்ணவர் வியக்க அழகொளி பரப்பும் வேல் போன்ற விழியுடைய விசையை, மண்ணுலகை ஆளவரும் சீவகன் கருவிலே வளரத் தான் உடலிலே தளர்வுற்றாள்.

## வேறு

**கரும்பார்தோண் முத்தங்கழன்று செவ்வாய்விளர்த்துக்**
**கண்பசலைபூத்தகாமம்**
**விரும்பார்முலைக் கண்கரிந்து திங்கள்வெண் கதிர்கள்**
**பெய்திருந்த பொற்செப்பே போல்**
**அரும்பால்பரந்து நுசுப்புங்கண்ணின் புலனாயிற்றாய்ந்**
**தவனிச்சமாலை**
**பெரும்பாரமாய்ப் பெரிதுநைந்துநற்கூற் சலஞ்சலம்போனங்**
**கைநலந்தொலைந்ததே 231**

[கரும்பார் தோள்-கரும்பை ஒத்த தோள்; தொய்யிலாகிய கரும்பையுடைய தோள் என்றுமாம். தோள் முத்தம்-தோளிலணியும் மகர மீன் வடிவமாகச் செய்யப்பட்ட ஆபரணத்தின் வாயினின்றும் தொங்கும் பலவட முத்துமாலை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


## வேறு

**தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளி லேபோற்**
**றேம்புடை யலங்கன் மார்பிற் றிருமகன் றமிய னாக**
**ஓம்படை யொன்றுஞ் செப்பா டிருமக ளொளித்து நீங்க**
**ஆம்புடை தெரிந்து வேந்தற் கறிவெனு மமைச்சன்**
**சொன்னான் 232**

[தூம்பு-உள் துளை; நெடுங்கை-துதிக்கை; துற்றிய-உண்ட; வெள்ளில்-விழாம்பழம்; தேம்புடை அலங்கல் - தேனைத் தன்னிடத்தே உடைய மாலை; ஓம்படை-பாதுகாப்பு.]

கரும்பைப் போன்ற தோளில் அணிந்த முத்துமாலை கழன்று விழும் அளவுக்கு மெலிந்து, பவளம் போன்ற சிவந்தவாய் வெளுத்துக் கண் பசலை பூத்து, இன்பவெறி யூட்டும் முலைக்காம்பு கருத்து, நிலவொளியைப் பிடித்து அடைத்து வைத்த பொற்செப்புப்போல் தூயவெண் பால் நிறைந்து, இல்லையோ என இதுவரை நினைத்திருந்த இடையும் பருத்துக் கண்ணுக்குத் தெரிய, காம்பாய்ந்து தொடுத்த மெல்லிய அனிச்சமலர் மாலையே பெரும் பாரமாக, சூலுற்ற துயராலே வருத்த மிக விசையையின் அழகும் கெட்டது. துளைபொருந்திய நீண்ட துதிக்கை உடைய யானை உண்ட விளாம்பழம்போல, கவலை கொண்ட மனமுடைய, மலர்மாலை அணிந்த சச்சந்தன், அரசிழந்து தனியாளாக, திருவும் செல்வமும் அவனை விட்டு நீங்க, இனி அடுத்து ஆகவேண்டியதைப் பற்றி எண்ண அறிவென்னும் அமைச்சன் அவனுக்கு அறிவுரை கூறினான்.

**காதிவேன் மன்னர் தங்கள் கண்ணென வைக்கப் பட்ட**
**நீதிமேற் சேறல் தேற்றாய் நெறியலா நெறியைச் சேர்ந்து**
**கோதியல் காம மென்னு மதுவினிற் குளித்த ஞான்றே**
**ஓதிய பொறியற் றாயோ ரரும்பொறி புனைவி யென்றான்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[காதி-பொருது; கோது-குற்றம்; ஞான்று-தினம்; பொறி-நல்வினை, யந்திரம்.]

## வேறு

**அந்தரத் தார்மய னேயென வையுறும்**
**தந்திரத் தாற்றம நூல்கரை கண்டவன்**
**வெந்திற லான்பெருந் தச்சனைக் கூவியோர்**
**எந்திர வூர்தி யியற்றுமி னென்றான் 234**

[அந்தரம் - ஆகாயம்; மயன் - தெய்வத்தச்சன்; தந்திரம் - தொழில்; தமநூல் - தம்முடைய குலத்துக்குரிய சிற்பநூல்.]

**பல்கிழி யும்பயி னுந்துகி னூலொடு**
**நல்லரக் கும்மெழு குந்நலஞ் சான்றன**
**அல்லன வும்மமைத் தாங்கெழு நாளிடைச்**
**செல்வதொர் மாமயில் செய்தன னன்றே 235**

[பயின்-பிசின்; நலம் சான்றன-நன்மை அமைந்தன; மயில்-யந்திரமயிலை.]

போர்வேலேந்திய மன்னர்கள் கண்ணுக்கு நிகராகக் கருதிய அறவழியில் செல்லாது, தீய வழிகளில் சென்று, துயர் தரக்கூடிய காமவெள்ளத்தில் அழுந்திய அன்றே போற்றத்தக்க நல்வினைகளை இழந்தாய்; (எனவே இனி வாழும் வழியை எண்ணி) நல்லோர் விசைப் பொறியைச் செய்க என்றான். விண்ணுலகத் தெய்வத் தச்சன் மயனோ எனச் சந்தேகிக்கத்தக்க, தொழில் திறமிக்க சிற்பநூல் கரை கண்டவனாகிய சச்சந்தன், கைதேர்ந்த சிற்பி ஒருவனை அழைத்து விசைப்பொறி ஒன்றைச் செய்க என்றனன். அவனும் உடனே, பல்வகைத் துணிகளையும், பசையும், நூலும், நல்ல அரக்கும், மெழுகும், நல்ல விதத்தில் இன்னும் பல பொருள்களையும் சேர்த்து, ஏழே நாட்களில் வானில் பறந்து செல்லக்கூடிய விசைப்பொறி ஒன்றினை அமைத்தனன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**பீலிநன் மாமயி லும்பிறி தாக்கிய**
**கோலநன் மாமயி லுங்கொடு சென்றவன்**
**ஞாலமெல் லாமுடை யானடி கைதொழு**
**தாலுமிம் மஞ்ஞைுய றிந்தரு ளென்றான்** **236**

[பீலி-மயில்தோகை; கோலம்-அழகு; நன்மாமயில்-உயிருடைய மயில்; சென்றவன்-தச்சன்; ஆலும்-அசைந்து ஒலிக்கும்.]

**நன்னெறி நூல்நயந் தானன்று நன்றிது**
**கொன்னெறி யிற்பெரி யாயிது கொள்கென**
**மின்னெறி பல்கல மேதகப் பெய்ததொர்**
**பொன்னறை தான்கொடுத் தான்புகழ் வெய்யோன்** **237**

[நயம்-நீதி; கொல்நெறி-கொற்றொழில்; மின் எறி-ஒளி வீசுகின்ற என்றுமாம்; கலம்-ஆபரணம்; மேதக-மேன்மை பொருந்த; பொன்னறை-பொக்கிஷ அறை; புகழ் வெய்யோன்-புகழை விரும்பியவன்.]

**ஆடியன் மாமயி லூர்தியை யவ்வழி**
**மாடமுங் காவும டுத்தொர்சின் னாள்செலப்**
**பாடலின் மேன்மேற் பயப்பயத் தான்றுரந்**
**தோடமு றுக்கியு ணர்த்தவு ணர்ந்தாள்** **238**

[அவ்வழி-அவ்விடத்து; மடுத்து-சேர்த்து; துரந்து-செலுத்தி.]

தோகை உடைய அழகிய மயிலையும், மயில் உருவில் செய்யப்பட்ட விசைப்பொறி மயிலையும் எடுத்துச் சென்ற அச்சிற்பி அவற்றை, உலகெல்லாம் புரக்க ஆண்ட சச்சந்தன் முன்வைத்து அவன் திருவடிகளைக் கையால் தொட்டு வணங்கி, இவ்விரண்டு மயில்களில் உயிருள்ள உண்மை மயில் எதுவென்று கண்டுகொள்க என்றான். அதைக் கண்ட புகழ்மிக்க வேந்தன், சிற்பத்தொழில் நூல் சிறப்பிது நன்று நன்று என, கொல்லர் தொழிலிற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தேர்ந்தவனே இதைப் பெறறுக்கொள்க என மின்னைப் போல் ஒளிவீசும் பல அணிமணிகள் நிறைந்த ஒரு கருவூலக் காப்பு அறையையே (பொக்கிஷ அறை) அவனுக்குத் தந்தான். ஆடிச் செல்லத்தக்க மயில்போன்ற அந்த வானூர்தியைச் செலுத்தி மாடமும் சோலையும், தாண்டிச் சென்ற, சிலநாள் கழித்தபின், விசையையின் பாட்டுப்போலத் தொடர்ந்து செல்லும் அவ்வூர்தியை முடுக்கி இயக்கும் விதத்தை அவளுக்கு உணர்த்த அவளும் அறிந்து கொண்டாள்.

## வேறு

**பண்டவழ் விரலிற் பாவை பொறிவலந் திரிப்பப் பொங்கி**
**விண்டவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும் வெய்ய**
**புண்டவழ் வேற்கட் பாவை பொறியிடந் திரிப்பத் தோகை**
**கண்டவர் மருள வீழ்ந்து கால்குவித் திருக்கு மன்றே 239**

[பண்-பண்ணையுடைய யாழ் நரம்பு; பாவை-விசையை; பொறி-யந்திரம்; போழ்ந்து-பிளந்து; தோகை-மயிற்பொறி; மருள-மயங்கும்படி.]

## வேறு

**காதி வேல்வல கட்டியங் காரனும்**
**நீதி யானிலங் கொண்டபி னீதிநூல்**
**ஓதி னார்தமை வேறுகொண் டோதினான்**
**கோது செய்குணக் கோதினுட் கோதனான் 240**

[வேல்வல-வேற்போரில் வல்ல; ஓதினார்-தருமதத்தன் முதலாயினார்.]

**மன்ன வன்பகை யாயதொர் மாதெய்வம்**
**என்னை வந்திடங் கொண்டஃ திராப்பகற்**
**றுன்னி நின்று செகுத்திடு நீயெனும்**
**என்னை யான்செய்வ கூறுமி னென்னவே 241**

[செகுத்திடு-அரசனைக் கொல்வாய்; துன்னி-நெருங்கி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இசை கூட்டும் யாழோடு விளையாடும் மெல்லிய விரல்களால் விசையை அம்மயிற்பொறியை வலப்புறமாகத் திருப்ப அது பொங்கி மேலெழுந்து விண்முகிலைப் பிளந்து செல்லும். அதனை இடப்புறமாகத் திருப்பினால் தோகைகள் மடங்கி கண்டவர்கள் வியக்கும் வண்ணம் கால்குவித்துக் கீழே இறங்கும். போர் வேலேந்திய வலிமை மிக்க கட்டியங்காரன், நல் வழியிலே நாட்டை அடிமை கொண்டபின், நீதிநூல் கூறிய வழியில் செல்லும் பெரியோரை எல்லாம் பகையாகக் கொண்டு, தீயது என நீதி நூல்கள் கூறுகிற குணங்களில் எல்லாம் தீயதான செய்நன்றி மறக்கின்ற தீயகுணமுடைய அவன் சொல்லுவான், ''வேந்துனுக்குப் பகையானதொரு பெரிய தெய்வம் என்னை வந்தடைந்து, இரவும் பகலுமாக என்னை நெருக்கி நீ அரசனைக் கொல்க என்று கூறிக் கொண்டே இருக்கிறது. இதற்கு நான் என்ன செய்வது கூறுக''—என்றான்.

**அருமை மாமணி நாக மழுங்கவோர்**
**உருமு வீழ்ந்தென வுட்கின ராவவன்**
**கருமங் காழ்த்தமை கண்டவர் தம்முளான்**
**தரும தத்தனென் பானிது சாற்றினான் 242**

[நாகம்-பாம்பு; அழுங்க - அழிய; உட்கினரா-அஞ்சினராக.]

**தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக்**
**குவளை யேயள வுள்ள கொழுங்கணாள்**
**அவளை யேயமிர் தாகவவ் வண்ணலும்**
**உவள கந்தன தாகவொ டுங்கினான் 243**

[தவளைக் கிண்கிணி-கிண்கிணி; தவளையினது வாய் போன்ற வாயையுடைய கிண்கிணி.]

**விண்ணி னோடமிர் தம்விலைச் செல்வது**
**பெண்ணின் னின்பம் பெரிதெனத் தாழ்ந்தவன்**
**எண்ண மின்றி யிறங்கியிவ் வையகம்**
**தண்ணந் தாமரை யாளொடுந் தாழ்ந்ததே 244**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[விண்-சுவர்க்கலோகம்; பெண் நின் இன்பம். பெரி தெனை-பெரிதென்று; தாழ்ந்தவன்-இங்கே நிமித் திகன்; இறங்கி-இறங்க.]

ஒளிமிக்க அருமையான மாணிக்கத்தை உமிழ்கின்ற நாகம் கலங்க விழுகின்ற இடியோசைபோல் கட்டியங் காரன் இது கூறக்கேட்ட அமைச்சர்கள் நடுங்க, அவனின் இத்தகைய முடிவைக் கண்ட அவர்களுள் ஒருவனாகிய தருமதத்தன் என்பவன் கட்டியங்காரன் மேற்கொண்டி ருக்கிற இம்முடிவைப் பலரும் அறியக் கூறினான். ஆனால் மன்னவனோ எதையும் கேளாமல் தவளை வாய் போன்ற கிண்கிணிச் சிலம்பும் தாமரை மலர்போன்ற பாதமும், குவளை மலர்போன்ற அழகிய கண்களும் உடைய விசயையே உயிரளிக்கும் அமுதாகக் கொண்டு அவள் வாழும் அந்தப்புரமே கதியென்று சென்று தங்கி னான். விண்ணையும் உயிரளிக்கும் அமுதையும் விலை யாகக் கொள்ளக்கூடிய பெண்மை இன்பம் பெரிதெனினும் அதனினும் பெரிய சுவை உடைய அரசாட்சியை நிமித் திகன் வெறுத்தொதுக்கிச் சென்றதாலே, சச்சந்தனின் உலகமும் வாழ்வும் குளிர்ந்த தாமரைமலர் போன்ற விசை யையுடன் அடங்கியது.

**தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்**
**பின்னை வௌவிற் பிறழ்ந்திடும் பூமகள்**
**அன்ன வன்வழிச் செல்லினிம் மண்மிசைப்**
**பின்னைத் தன்குலம் பேர்க்குந ரில்லையே** 245

[ஆக்கிய-மேன்மைப் படுத்திய; தார்-மாலை; வௌவு தல்-கொல்லுதல்; பிறழ்ந்திடும்-அழிந்திடும்.]

**திலகு நீண்முடித் தேவரும் வேந்தரும்**
**உலக மாந்தர்க ளொப்பவென் றோதுப**
**குலவு தார்மன்னர்க் கியானிது கூறுவன்**
**பலவு மிக்கனர் தேவரிற் பார்த்திவர்** 246

[திலகம்-மேலாதல்; பலவும்-பலவகையிலும்; தேவரின் -தேவரைக் காட்டிலும்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அருளு மேலர சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி யாக்க லழித்தலங் காபவோ 247

[அருளுமேல்-அருள்செய்யுமேல்; காயுமேல்-கோபம் கொண்டால்; மருளி - மயக்கம்; ஆபவோ-ஆகுமோ?]

தன்னை உருவாக்கி மேல்நிலைக்கு உயர்த்திய மலர் மாலை அணிந்த வேந்தனைப் போரிட்டு அழித்தால் செல்வமும் வாழ்வும் சிதைந்துவிடும். இதைவிட்டு அவன் காட்டிய வழியில் சென்றால் தன் புகழையும் வாழ்வையும் அழிப்பார் இவ்வுலகிலின்றி வாழலாம். இன்னும் விளங்கு பேரொளி உடைய முடி அணிந்த தேவரும், வேந்தரும் ஒன்றே என்று பலரும் கூறுவர். என்றாலும் தேவரைவிட மன்னர்கள் பலவகையிலும் மேம்பட்டவர்கள். அப்படிப் பட்ட மன்னவர்களின் சிறப்பைக் கூறுகிறேன். வேந்தன் என்னும் பெரிய தெய்வம் விரும்பினால் நலம்பல கொடுக்கும். வெறுத்தால் மண்ணோடு மண்ணாகுமாறு அழித்துவிடும். ஆனால் வானுறையும் தெய்வங்களோ ஒருவன் வாழ்த்தினால் அவனுக்கு அப்போதே நலம் கொடுக்கவோ அல்லது பழித்துத் தூற்றினால் அவனை அப்போதே அழித்து ஒழிக்கவோ முடியாதாகும். அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும் என்பது பொருள்.

உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்
இறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வௌவ வதன்புறங் காக்கலார் 248

[கறங்கு-ஒலி உடைய; தெண்-தெளிந்த; திரை-அலை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யாவ ராயினு நால்வரைப் பின்னிடிற்
றேவ ரென்பது தேறுமிவ் வையகம்
காவன் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவி னும்முரை யார்நவை யஞ்சுவார் 249

[பின்னிடின்-பின் போகவிட்டால்; நவை-இழிவு; சிந்தியார்-சிந்திக்கமாட்டார்.]

தீண்டி னார்தமைத் தீச்சுடு மன்னர்தீ
ஈண்டு தங்கிளை யோடு மெரித்திடும்
வேண்டி லின்னமிர் துந்நஞ்சு மாதலான்
மாண்ட தன்றுநின் வாய்மொழித் தெய்வமே 250

[தீ-நெருப்பு, கோபம். கிளை-உறவினர்; மன்னவன் அமிர்தும் நஞ்சும் போல்வான். மாண்டதன்று-மாட்சிமையுடையதன்று.]

வேலின் மன்னனை விண்ணகங் காட்டியிஞ்
ஞால மாள்வது நன்றெனக் கென்றியேல்
வாலி தன்றெனக் கூறினன் வாண்ஞமற்
கோலை வைத்தன்ன வொண்டிற லாற்றலான் 251

[மன்னனை-சச்சந்தனை; என்றியேல் என்பாயாயின்; வாலிதன்று-நல்லது அன்று; ஞமன்-நமன், யமன்.]

இன்னும் மன்னவர்கள் உறங்குவார் ஆயினும் அவர்களின் செங்கோல் ஒலிமிக்க அலைகடல் சூழ்ந்த உலகைக் காக்கும். ஆனால் தெய்வத்தன்மை பொருந்திய தேவர்கள் எப்போதும் இமைக்காது விழித்தேயிருந்தாலும் அவர்களால் உலகில் நல்லறங்கெட நடக்கும் காரியங்களைத் தடுக்க முடியாது. எத்தன்மையராயினும் அவர் பின்னே நான்கு பேரைத் திரியவிட்டால் அவரைத் தெய்வம் என்று மக்கள் உணர்ந்துகொள்வர். ஆனால் அரசனைக் காணாதவிடத்தும், அவனுடைய பகையை மேற்கொள்ள விரும்பாதவர் வேந்தனுக்கு விருப்பம் இல்லாதவற்றை வாயாலும் பேசமாட்டார்கள், மன

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தாலும் நினைக்கமாட்டார்கள். தீ நெருப்பானது தொட்டவர்களை மட்டுந்தான் சுடும். ஆனால் வேந்தனின் வெறுப்பால் விளைந்த கோபமாகிய தீயோ, கோபத்துக் காளானவரை மட்டுமல்லாது அவருடைய சுற்றத்தாரையும் சேர்த்துக் கொன்றுவிடும். எனவே விரும்பின் அமுதம்போல் உயிரளிக்கவும், வெறுப்பின் நஞ்சுபோல் கொல்லவும் வல்ல வேந்தாகிய தெய்வத்தைப் போல் நீ கூறிய வானுறையும் தெய்வம் சிறப்புடைய தல்ல. எனவே இத்தகைய சிறப்பெல்லாமிக்க, மன்னனை வேல்வலி கொண்டே மேலுலகுக்கு அனுப்பி இவ்வுலகை ஆள்வது எனக்கு நன்று என்று சொன்னாலும்,—அது உனக்கும் நல்லதல்ல என்று சொன்னான், வாள்வலிமை மிக்க எமனுக்கே, வேண்டுமாயின் என்னைப் போரில் வந்து வென்று பார் என்று சேதி அனுப்பிய தருமதத்தன்.

## வேறு

**குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவனி ருப்ப மற்றோர்**
**நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்**
**பிழைப்பிலாட் புறந்தந் தானுங் குரவரைப் பேணல் செய்யா**
**திழுக்கினா ரிவர்கள் கண்டா யிடும்பைநோய்க் கிரைக ளாவார் 252**

[குழற்சிகை-மயிர்முடி; கோதை-மலர் மாலை; கொண்டவன்-தன் கணவன்; நிழல்-ஒளி; நேடிய-தேடிய; புறந்தத்தான்-கொள்ளாது வெளியே போகவிட்டவன்; இழுக்கினார் - தவறியவர்; இடும்பை-துன்பம்.]

**நட்பிடைக் குய்யம் வைத்தான் பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான்**
**கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கி னானும்**
**அட்டுயி ருடலந் தின்றா னமைச்சனா யரசு கொன்றான்**
**குட்டநோய் நரகந் தம்முட் குளிப்பவ ரிவர்கள் கண்டாய்**

[குய்யம்-வஞ்சனை; கட்டழல்-மிக்க நெருப்பைப் போன்ற; கட்டு-மிகுதி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாட்
குறைபடு மதியந் தேயக் குறுமுய றேய்வ தேபோல்
இறைவனாத் தன்னை யாக்கி யவன்வழி யொழுகி
னென்றும்
நிறைமதி யிருளைப் போழு நெடும்புகழ் விளைக்கு
மென்றான் 254

[அது-முயல், திங்களும் முயலும்; போழும்-நீக்கும்.]

தன் கூந்தலிலே, அவன் தலையில் சூட்டிய மாலையைச் சூட்டிக் கரம் பிடித்தவன் இருக்கையிலேயே ஒளிவேலேந்திய வேறு ஒருவனைத் தேடிய நீண்ட கண்ணுடையவளும், தவறிழைக்காத மனைவியைக் கைவிட்டவனும், மூத்தோரை வழிபடாது விட்டவனும் ஆகிய இவர்கள் துன்பந்தரும் பலவகை நோய்களுக்கு ஆளாவார்கள். நண்பரை வஞ்சித்தவனும், பிறர்மனைப் பெண்டிரை விரும்பிச் சென்றவனும், வருத்துகின்ற காமத்தீமீதுறக் கன்னியைக் கெடுத்துப்பின் கைவிட்டவனும், உயிரைக் கொன்று அதன் உடலைப் புசித்தவனும், அமைச்சனாய் இருந்து பின் அரசனைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்றியவனும் ஆகிய இவர்கள் தொழுநோய் நரகத்துள் கிடந்து துயருறுவர். பிறைநிலவோடு வளர்ந்து பெரிதாகிப் பின் அது தேயும்போது தானும் அதனுடனேயே தேய்ந்து மறையும் திங்களில் உள்ள முயல் போன்ற களங்கத்தைப் போலவே தன்னை அரசனாக்கியவன் வழியிலே அவனுடன் இணைந்து செல்பவன் எப்போதும், இருளைப் போக்கி ஒளியைத் தரும் முழுமதி போல் சிறப்பான்.

கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி
ஆணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[கோள் நிலை திரிந்து-கிரகங்கள் தாம் நிற்கவேண்டிய நல்ல நிலையினின்றும் மாறுபட்டு; மாரி-மழை; அஃகி-கெட்டு; கோடின்-கெட்டால்.]

**தார்ப்பொலி தரும தத்தன் றக்கவா றுரைப்பக் குன்றிற்**
**கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்**
**போர்த்ததன் னகல மெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி**
**நீர்க்கடன் மகரப் பேழ்வாய் மதனன்மற் றிதனைச் சொன்னான் 256**

[குவளை-செங்குவளை; அகலம்-மார்பு; பொள்ளென விரைவாக.]

**தோளினால் வலிய ராகித் தொக்கவர் தலைகள் பாற**
**வாளினாற் பேச லல்லால் வாயினாற் பேச றேற்றேன்**
**காளமே கங்கள் சொல்லிக் கருனையாற் குழைக்குங் கைகள்**
**வாளமர் நீந்தும் போழ்தின் வழுவழுத் தொழியு மென்றான்**

[தொக்கவர்-ஒன்று கூடிய பகைவர்; காளம்-கருமை; கருனையால்-பொரிக்கறியால்.]

கோள்கள் தம் நிலையில் மாற இரவுப்போது குறைந்து பகல்பொழுது மிக, மழையின்றி விளைவு குறைய, வறுமை மிக, பொன்அணிப் பூண்பூட்டிய முலைமாதர்தம் கற்பு நலங்கெட, நல்லறம் தொலைந்து தவச்சாலைகளும் அழிய இவ்வுலகம் கெட்டழிந்துபோகும். இது அரசன் ஆணை என்றான். வாகைமாலை விளங்கும் அழகுடைய தருமதத்தன் இவ்வாறெல்லாம் நிலையை அமைச்சர்க்கு எடுத்துக் கூறினானாக, குன்றின் மேல் இட்ட கார்த்திகை விளக்குப்போல மணங்கமழும் குவளை மலர்மாலை அணிந்த மார்பு முழுதும் வியர்த்துப் பொங்க, அலைகடல் வாழும் மகர மீனின் வாயைப் போன்ற பெருவாயுடைய, மதனன் கூறுவான்: ''தோள் வலிமை மிக்க பகைவர்களின் தலைகிழிய வாள்கொண்டு பகை முடிப்பதல்லால் நான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வாய்கொண்டு பேசி முடிப்பதறியேன். கரியமுகில் போல் முழங்கி நீங்கள் சொல்வதைக் கேட்க, கறியுடன் சோற்றைத் திரட்டும் கைகள் வாளேந்திப் போர்க்கடல் நீந்தும்போது வியர்ப்பதாலே ஏந்திய வாளும் கைநழுவிப் போகும்' என்றான்.

நுண்முத்த மேற்றி யாங்கு மெய்யெலாம் வியர்த்து நொய்தின்
வண்முத்த நிரைகொ ணெற்றி வார்முரி புருவ மாக்கிக்
கண்ணெரி தவழ வண்கை மணிநகு கடக மெற்றா
வெண்ணகை வெகுண்டு நக்குக் கட்டியங் காரன் சொன்னான் 258

[முத்து வியர்வைத்துளிக்கு உவமை. வார் முரிபுருவம்-நீண்ட வளைந்த புருவம்; கடகம் எற்றா-கடகத்தை அறைந்து; நக்கு-சிரித்து.]

என்னலாற் பிறர்கள் யாரே யின்னவை பொறுக்கு நீரார்
உன்னலாற் பிறர்கள் யாரே யுற்றவற் குறாத சூழ்வார்
மன்னன்போய்த் துறக்க மாண்டு வானவர்க் கிறைவ னாக
பொன்னெலாம் விளைந்து பூமி பொலியயான் காப்ப லென்றான் 259

[துறக்கம் ஆளுதல்-போரில் இறந்து வீர சுவர்க்க மடைந்து இன்பம் நுகர்தல்; பொலிய-விளங்க.]

விளைக பொலிக அஃதே யுரைத்திலம் வெகுள வேண்டா
களைகம் எழுக மின்னே காவலற் கூற்றங் கொல்லும்
வளைகய மடந்தை கொல்லுந் தான்செய்த பிழைப்புக் கொல்லும்
அளவறு நிதியங் கொல்லு மருள்கொல்லு மமைக வென்றான் 260

[களைகம்-களைவதற்கு; கூற்றம்-யமன்; அமைக-பொருந்துக.]

இவ்வுரை கேட்டதும் சிறுமுத்துக்களைப் பதித்தது போல் உடலெங்கும் வியர்க்க, அத்தகைய முத்துப்போல்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



துளிர்த்த வியர்வை நீர் நிறைந்த நெற்றிப் புருவத்தை நெருக்கி உயர்த்தி, கண்களில் தீப்பொறி பறக்க, அழகிய கையில் அணிந்த மணிகள் நிறைந்த கடகம் உடைபடக் குலுக்கி, வெடிபோலக் கோபம் பொங்கச் சிரித்துக் கட்டியங்காரன் கூறுவான்: 'என்னையல்லாமல் நீ கூறிய இக்கொடிய சொற்களைப் பொறுக்கும் தன்மை உடையவர்கள் வேறு யார் இருக்கிறார்கள்? மற்றும் வேண்டியவர்கட்கும் கேடு செய்வோர் உன்னைப்போல் வேறு யார் இருக்கிறார்கள்? சச்சந்தன் வானுலகம் சென்று அங்கு உள்ளவர்களுக்கும் தலைவன் ஆக. நில மெல்லாம் பொன் விளைந்து கொழிக்க நான் காக்கின்றேன்' என்றான். 'அவ்வாறே நிலமெல்லாம் விளையட்டும், பொன்னாக விளங்கட்டும், நாங்கள் அது பற்றிக் கூறவில்லை. அதற்காக நீ வருந்தவும் வேண்டாம். இப்போதே எழுவோம்: அரசனைக் கொல்ல வரும் கூற்றமாக வளமிக்க நிலமடந்தை ஆகும். மேலும் அவனின் தவறுகள் அவனைக் கொல்லுகின்ற கூற்றமுமாக ஆகும். அவனுடைய திரண்ட செல்வம் அவனுடைய அருள் திறம் இவையெல்லாமே அவனைக் கொல்லும் எனவே இக் கொலை அவனுக்குப் பொருந்துவதாக' என்றான்.

**நிலத்தலைத் திருவ னாள்தன் நீப்பருங் காதல் கூர**
**முலைத்தலைப் போக மூழ்கி முகிழ்நிலா முடிகொள் சென்னி**
**வெலற்கருந் தானை நீத்த வேந்தனை வெறுமை நோக்கிக்**
**குலத்தொடுங் கோற லெண்ணிக் கொடியவன் கடிய**
**சூழ்ந்தான் 261**

[நீப்பருங் காதல்-விடுவதற்கரிய அன்பு; கூர-மிகுதலால்; முகிழ் நிலா - அரும்புகின்ற ஒளி; வெறுமை-தனிமை; கருவுற்றிருக்கும் விசையையையும் கொல்ல எண்ணினமையால் 'குலத்தொடும் கோறலெண்ணி' என்றார்.]

**கோன்றமர் நிகள மூழ்கிக் கோட்டத்துக் குரங்கத் தன்கீழ்**
**ஏன்றநன் மாந்தர்க் கெல்லா மிருநிதி முகந்து நல்கி**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**ஊன்றிய நாட்டை யெல்லா மொருகுடை நீழல் செய்து**
**தோன்றினான் குன்றத் துச்சிச் சுடர்ப்பழி விளக்கிட்**
**டன்றே 262**

[நிகளம்-விலங்கு; கோட்டம்-சிறைக் கோட்டம்; ஊன்றிய-ஊன்றும் பொருட்டு.]

**பருமித்த களிறு மாவும் பரந்திய தேரும் பண்ணித்**
**திருமிக்க சேனை மூதூர்த் தெருவுதொ றெங்கு மீண்டி**
**எரிமொய்த்த வாளும் வில்லு மிலங்கிலை வேலு மேந்திச்**
**செருமிக்க வேலி னான்றன் றிருநகர் வளைந்த தன்றே 263**

[பருமித்த-அலங்கரித்த; பண்ணி-ஏறுதற்குரியவாக அமைத்து; இலைவேல் - இலை போன்ற வடிவத்தையுடைய வேல்.]

பூமியிலே தோன்றிய பூமகள் போன்ற விசையையின் மீதுற்ற தவிர்க்க முடியாத காதலால் அவளது பூமார்பின் போகஇன்பத்திலே மூழ்கி, வெற்றி கொள்ளமுடியாத படைவீரரை இழந்து முத்துச்சுடர் வீசும் நிலவொளி போன்ற மணிமுடி விளங்கும் தலையுடைய வேந்தனை, அவன் தனித்துவிடப்பட்டதை எண்ணி அவனைக் குலத்தோடும் அழிக்கக் கொடிய கட்டியங்காரன் சூழ்ச்சிகள் செய்ய முற்பட்டான். எனவே அரசனது உறவினர்களை யெல்லாம் சிறையிலே பூட்டி, தன்னுடைய இத்தகைய இழிசெயலை ஒப்பி ஏற்றுக் கொண்டவர்களுக்கெல்லாம் பொன்னும் பொருளும் அள்ளிக்கொடுத்து, நாடுமுழுவதையும் தன் ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்து ஆள, குன்றத்தின் உச்சியில் இட்ட விளக்குப்போல் கொடுமை விளங்கத் தோன்றினான். எனவே அலங்கரிக்கப்பட்ட யானைப்படையும், குதிரைப் படையும் பெரிய தேர்ப்படையும் துணையாக நிற்க, வலிமை மிக்க காலாட்படைகள், புகழ்ப் பெருமை மிக்க இராசமாபுரத்தின் தெருக்கள் தோறும், கையிலே தீக்குளித்து மின்னுகின்ற வாளும், வளைந்த வில்லும், அரசிலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



போன்று நுனி உடைய கூரிய வேலும் ஏந்தியபடித் திரண்டிருக்க, போராற்றல் மிக்க வேலேந்திய சச்சந்த மன்னனின் அழகிய அரண்மனையைச் சூழ்ந்து கொண்டான்.

**நீணில மன்ன போற்றி நெடுமுடிக் குருசில் போற்றி**
**பூணணி மார்ப போற்றி புண்ணிய வேந்தே போற்றி**
**கோணினைக் குறித்து வந்தான் கட்டியங் காரனென்று**
**சேணிலத் திறைஞ்சிச் சொன்னான் செய்யகோல் வெய்ய சொல்லான் 264**

[போற்றி-பாதுகாத்தருளுக; பூண்-கவசம்; கோள்-கொலை; சேண் நிலத்து-நெடுந்தூரத்தில்.]

**திண்ணிலைக் கதவ மெல்லாந் திருந்துதா ழுறுக்க வல்லே**
**பண்ணுக பசும்பொற் றேரும் படுமதக் களிறு மாவும்**
**கண்ணகன் புரிசை காக்குங் காவல ரடைக வென்றான்**
**விண்ணுரு மேறு போன்று வெடிபட முழங்குஞ் சொல்லான்**

[வல்லே-விரைய; தாழுறுக்க-தாழிடுக; உருமேறு-இடி; வெடிபட-ஓசை உண்டாக.]

**புலிப்பொறிப் போர்வை நீக்கிப் பொன்னணிந் திலங்கு கின்ற**
**ஒலிக்கழன் மன்ன ருட்கு முருச்சுடர் வாளை நோக்கிக்**
**கலிக்கிறை யாய நெஞ்சிற் கட்டியங் கார னம்மேல்**
**வலித்தது காண்டு மென்று வாளெயி றிலங்க நக்கான் 266**

[புலிப்பொறிப் போர்வை-புலியின் தோலால் செய்யப் பட்ட வரிகளையுடைய கவசம்; உட்கும்-அஞ்சுகின்ற; கலி-தீய குணங்கள்; இறை-தங்குமிடம்; வலித்தது-துணிந்த காரியத்தை.]

கட்டியங்காரன் இவ்வாறு சூழ்ந்துகொள்ளவும் அந்தப் புரத்தைக் காத்துநின்ற, சிவந்த வேலையும், சீற்றமொழி பகரும் வாயையும் உடைய வாயிற்காப்போன், உள்ளே சென்று. சச்சந்தனுக்கு வெகு தொலைவிலேயே நின்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தரையிலே விழுந்து வணங்கி "பெருநிலத்துக்கு அரசே போற்றி! நீண்ட மணிமுடியணிந்த மன்னவனே காத்தருள்க! வீரக்கவசம் அணிந்து விளங்கும் மார்புடைய தலைவனே காத்தருள்க! நல்லறம் மிக்க வேந்தனே காத்தருள்க, கட்டியங்காரன் நின்னைக் கொல்லும் குறிக்கோளுடன் வந்திருக்கிறான் காத்திடுக" என்றான். இது கூறக் கேட்டதும் சச்சந்தன், "பெரிய அரண்மனையின் வாயில் கதவுகளையெல்லாம் அசைக்கமுடியாதபடி இறுக்கித் தாழிடுக. புதிய பொற்றேரும், போர் யானைகளும், குதிரைகளும் வரிசைப்படுத்தி வைக்க. கண் போன்று அரண்மனைத் தலைவாயில் கதவைக் காத்து நிற்கும் காவலர்கள் விரைந்து வருக" என்று முழக்கமிட்டான் இடிமுழக்கம் போன்ற குரல்முழங்க, ஆண் ஏறு போன்ற சச்சந்தன்: பின் சச்சந்த மன்னனும் புலித்தோல் போர்த்திய மேலுறையை நீக்கி உள்ளே பொன்னுறை அணிந்து விளங்குகின்ற, ஒலிசெய்யும் வீரக்கழல் அணிந்த வேந்தர்கள் கண்டஞ்சுகின்ற ஒளி சிந்தும் அழகிய வேலைப் பார்த்து, "கொடுமைக்குத் தலைவனாகிய கட்டியங்காரன் நம்மோடு போரிட வந்ததை ஒருகை பார்ப்போம்" என்று தனது ஒளிப்பற்கள் வெளித்தோன்ற வீரநகை புரிந்தான்.

**நங்கைநீ நடக்கல் வேண்டு நன்பொருட் கிரங்கல் வேண்டா**
**கங்குநீ யன்று கண்ட கனவெலாம் விளைந்த வென்னக்**
**கொங்கலர் கோதை மாழ்கிக் குழைமுகம் புடைத்து வீழ்ந்து**
**செங்கயற் கண்ணி வெய்ய திருமகற் கவலஞ் செய்தாள்**

[கங்குல் - இரவு; விளைந்த - பயனையளித்தன; கொங்கு-தேன்; மாழ்கி - மயங்கி; குழை- குண்டலம்; அவலம்-துன்பம்.]

**மல்லலைத் தெழுந்து வீங்கி மலைதிரண் டனைய தோளான்**
**அல்லலுற் றழுங்கி வீழ்ந்த வமிர்தமன் னாளை யெய்திப்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

புல்லிக்கொண் டவல நீக்கிப் பொம்மல்வெம் முலையி
னாட்குச்
சொல்லுவா னிவைகள் சொன்னான் சூழ்கழற் காலி
னானே . 268

[மல் அலைத்து-மல்லர்களை வருத்தி; தோளான்-சச்சந்தன்; அல்லல்-துன்பம்; அழுங்கி - கெட்டு; புல்லி-தழுவி; பொம்மல்-பெருமை.]

சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தி னாகும்
ஆதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளி
யென்றான் 269

[அவை-அவ்வினைகள்; நோதல்-வருந்துதல்; பரிவு-அன்பு; பெய்வளை - வளைபெய்த, அதாவது வளையணிந்த.]

இவ்விதம் வெற்றி நகைபுரிந்த சச்சந்தன் விசையையை நோக்கி, ‘‘அழகுருவே நீ நான் சொன்னபடி கேட்க வேண்டும். நம்முடைய பெரும் பொருளைக் காக்க நீ மனங்கொள்ளவேண்டும். இதன் பொருட்டாக வருந்த வேண்டாம். நீ அன்றொருநாள் விடியலில் கண்ட கனவு எல்லாம் பலிக்கும் நேரம் வந்துவிட்டது’’—என்று கூறவும், தேன்சிதறும் மலர்மாலை வாடித்துவளத் தோடணிந்த முகத்திலறைந்து கொண்டு தரையில் வீழ்ந்து, செவ்வரி படர்ந்த கயல்போலும் கண்ணுடைய விசயை தன்வயிறு சுமந்திருக்கும் திருமகனுக்கும் வருத்தம் உண்டாக அழுது புரளவும், மற்போரிலே சிறந்து பருத்துத் திரண்ட மலை போலும் தோளுடைய மன்னன், துன்புற்று வீழ்ந்து புரண்டழும் அமுதம்போன்ற விசயையை அள்ளி அணைத்து அவளது துயரைப்போக்கி, பொங்கிப் பருத்து இன்ப மூட்டும் மார்புடைய அவளுக்கு ஆறுதல் தோன்ற வீரக் கழல் அணிந்த காலுடைய வேந்தன் சொல்லுவான்:

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

''இறப்பதும் பிறப்பதும், அவரவர் வினைப்பயனுக்கேற்ப நடப்பதாகும்? இன்னும் பொருள்கள் தோன்றுவதும் அழிவதும் உலகின் இயற்கை நியதியுமாகும். இதை விட்டு, இறப்பை எண்ணி வருந்துவதும், பிறப்பை எண்ணி மகிழ்வதும் ஆகிய எல்லாம் அறியாமையே என்பதை வளையணிந்த மென்தோளுடைய பேதைப் பெண்ணே நீ அறியமாட்டாயா''—என்றவன் மேலும் சொல்வான்.

**தொல்லைநம் பிறவி யெண்ணிற் றொடுகடன்**
**மணலு மாற்றா**
**எல்லைய வவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச்**
**செல்லுமக் கதிக டம்முட் சேரலஞ் சேர்ந்து நின்ற**
**இல்லினு ளிரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா**

*[தொல்லை-பழமை; தொடுகடல்-தோண்டப்பட்ட கடல்; ஏதிலம்- வேறுபட்டோம்; கதி-பிறப்பு; சுற்றம்-உறவு.]*

**வண்டுமொய்த் தரற்றும் பிண்டி வாமனால் வடித்த**
**நுண்ணூல்**
**உண்டுவைத் தனைய நீயு முணர்விலா நீரை யாகி**
**விண்டுகண் ணருவி சோர விம்முயிர்த் தினையை யாதல்**
**ஒண்டொடி தகுவ தன்றா லொழிகநின் கவலை**
**யென்றான் 271**

*[உண்டுவைத்த- தேக்கிவைத்த; பிண்டி-அசோகம்; வாமன்-அருகதேவன்; வடித்த-சொல்லப்பட்ட; நீரையாகி- தன்மையையுடையையாகி; விண்டு- வேறுபட்டு.]*

**உரிமைமுன் போக்கி யல்லா ளொளியுடை மன்னர் போகார்**
**கருமமீ தெனக்கு மூர்தி சமைந்தது கவல வேண்டா**
**புரிநரம் பிரங்குஞ் சொல்லாய் போவதே பொருண்மற்**
**றென்றான்**
**எரிமுயங் கிலங்கு வாட்கை யேற்றிளஞ் சிங்க மன்னான்**

*[ஒளி-கடவுட் தன்மை; ஊர்தி-மயிற் பொறி; புரி நரம்பு-முறுக்கிய நரம்பு; கவல-வருந்த.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


''நம்முந்தைப் பிறவிகளை எண்ணிக் கணக்கிடப் போனால் அலை தொடுகின்ற கடலின் மண்ணும்பத்தா தல்லவா? அப்படிப்பட்ட முந்திய பிறவிகளில் எல்லாம் நாம் பிரிந்திருந்தோம். இனிப் பிறக்கவரும் பிறவி களிலும் ஒன்று பட்டிருப்போம் என்பது உறுதியில்லை. இப்போது இங்கே நாம் கூடியிருந்து வாழ்வதும் இரண்டு நாள் உறவே போன்றதல்லவா, இதற்காக வருந்தலாமா? வண்டுகள் மொய்த்துப் பாடும் அசோக மரநீழல் அமர்ந் திருக்கும் அருகனார் கூறிய நல்லறத்தின் உறைவிடமா யிருக்கும் நீயும், இவ்வுண்மைகளை அறிந்துணரும் தன்மை அற்றுப்போய், கண்ணீர் பெருக்கெடுக்க, அழுது அரற்றி இப்படி வருந்துவது நல்லதல்லவே! எனவே ஒளிமிகுந்த வளையணிந்த எழிலுருவே, நின் கவலையை விடு'' என் றான். அவன் மேலும் சொல்வான்: ''தம் உரிமை மகளிரை முன்னே (பாதுகாப்பான இடத்துக்குப்) போகவிட்டால் அல்லது புகழ்ப்பெருமை மிக்க மன்னர்கள் தாங்கள் (போர்முனைக்குப்) போகமாட்டார்கள். எனக்கும் இது கடமையானதால் நானும் அவ்விதம்தான் செய்ய வேண்டும். அதற்கேற்றபடி நம் நல்வினைப் பயனால் விசைப்பொறியும் சமைந்தது. எனவே வருந்துவதை விட்டு விட்டு, முறுக்கிய யாழ்நரம்பில் எழும் பண்போன்ற இனிய சொல்லுடையவளே, நீ அவ்வூர்தியில் ஏறிப்போவதே முறை'' யென்றான், நெருப்பில் தோய்த்தெடுத்ததுபோல் ஒளிவீசும் வாளேந்திய கையுடைய இளஞ்சிங்கம் போன்ற சச்சந்தன்.

என்புநெக் குருகி யுள்ள மொழுகுபு சோர யாத்த
அன்புமிக் கவலித் தாற்றா வாருயிர்க் கிழத்தி தன்னை
இன்பமிக் குடைய சீர்த்தி யிறைவன தாணை கூறித்
துன்பமில் பறவை யூர்தி சேர்த்தினன் றுணைவி
சேர்ந்தாள் 273

[யாத்த-கட்டிய; சீர்த்தி-மிகுபுகழ்; பறவையூர்தி- மயில் வடிவமான யந்திரம்; சோர-சோர்வடைய; யாத்த-பிணித்த.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

நீரு டைக்கு வளையி னெடுங்க ணின்ற வெம்பனி
வாரு டைம்மு லைமுகந் நனைப்ப மாதர் சென்றபின்
சீரு டைக்கு ருசிலுஞ் சிவந்த ழன்றொர் தீத்திரள்
பாரு டைப்ப னிக்கடல் சுடுவ தொத்து லம்பினான் 274

[வெம்பனி - துன்பத்தால் வருங்கண்ணீர் வெப்ப முடையது; வார் உடை-கச்சை உடைக்கின்ற; சிவந்து-கோபங்கொண்டு; உலம்பல்-முழங்குதல்.]

முழைமு கத்துஇ டியரி வளைத்த வன்ன மள்ளரிற்
குழைமு கப்பு ரிசையுட் குருசில் தான் அகப்பட
இழைமு கத்தெ றிபடை யிலங்கு வாட்க டலிடை
மழைமு கத்த குஞ்சரம் வாரி யுள்வ ளைத்தவே 275

[முழை-குகை; அரி-சிங்கம்; மள்ளர்-வீரர்; புரிசை-மதில்; குழை முகப்புரிசை-அந்தப்புரம்; வாரி-யானைக்கூடம்.]

அயிலி னிற்பு னைந்தவாள் அழன்று உருத்து உரீஇயுடன்
பயில்க திர்ப்ப ருமணிப் பன்ம யிர்ச்செய் கேடகம்
வெயில னத்தி ரித்துவிண் வழுக்கி வந்து வீழ்ந்ததோர்
கயில லரிக்க திர்நகைக் கடவு ளொத்து லம்பினான் 276

[அயில்-கூர்மை; உருத்து-கோபித்து; உரீஇ-உருவி; பயில் கதிர்ப்பருமணிப் பன்மயிர் செய்கேடகம்-தங்கப்பெற்ற கதிர்களையுடைய பரிய மாணிக்கங்கள் அழுத்தியதும் கரடித் தோலாற் செய்யப் பட்டதுமாகிய கேடகம்; வழுக்கி-தவறி.]

என்பு நெகிழ்ந்துருகி உள்ளம் கலங்க உடல் சேர்ந்து அன்புமீதூர அழுதுவிழுந்து புரளும் அன்பு மனைவியை, இன்பம்மிகு புகழுடைய அருகப்பெருமானின் ஆணையைச் சொல்லித் துன்பமில்லாது செல்லவல்ல மயிற்பொறியின் மேலேற்றி அமர்த்தி வைத்தான். நீரோடைகளில் மிதக்கின்ற குவளை மலர்களில் இருந்து வடிகின்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பனிமுத்துக்களைப் போல், குவளை மலர் போன்று நீண்ட கண்களில் இருந்து வடிகின்ற கண்ணீர் கச்சணிந்த முலை முகட்டை நனைக்க அழுதபடி விசயை சென்ற பின் பெருமைமிக்க வேந்தனும் உளம் வருந்திக் கடுங்கோபம் கொண்டு உலகைச் சூழ்ந்திருக்கும் பனிக்கடலைச் சுடுகின்ற ஊழித் தீயென முழங்கினான். மலைக்குகைக்குள்ளே இருந்து வாழுகின்ற சிங்கத்தை அதன் குகையிலேயே சென்றெதிர்க்கும் யானைக் கூட்டம்போல, வீரர்கள் எதிர்க்க அவர்களுக்கிடையில் அந்தப் புரத்தில் வேந்தன் சிக்கிக்கொள்ள, நூல் துளைக்க எறியும் வேற்படை ஏந்திய வாள்வீரர்களாகிய கடல் நடுவே, மதநீர் பெருக் கெடுக்கும் வேழப்படைகள் செண்டெறிந்து விளையாடும் பந்தயவெளியிலே வளைய வந்தன. எனவே வேந்தனும் கூர்மையுடன் வடித்த வாளினைக் கடுங்கோபத்துடன் உருவி எடுத்து அதோடு சேர்த்து ஒளிவீசும் மணிகள் பதித்த கரடித் தோலிட்டுத் தைத்த கேடயத்தை, சூரியனைப் போல் தோன்றச் சுழற்றி விண்ணிருந்து மண்ணிழிந்து வந்த, கதிரொளியும் மூட்டு வாயுமுடைய முத்துமாலை அணிந்த ஒரு கடவுளைப் போல முழங்கினான்.

**மாரி யிற்க டுங்கணை சொரிந்து மள்ள ரார்த்தபின்**
**வீரி யக்கு ருசிலும் விலக்கி வெங்க ணைமழை**
**வாரி யிற்க டிந்துட னகற்ற மற்ற வன்படைப்**
**பேரி யற்பெ ருங்களி றுபின்னி வந்த டைந்தவே 277**

[மாரியின்-மழையைப் போல; அவன்-கட்டியங்காரன்; பின்னி வந்த-அடுத்தடுத்து வந்தன.]

**சீற்ற மிக்க மன்னவன் சேர்ந்த குஞ்சரம் நுதல்**
**கூற்ற ருங்கு ருதிவாள் கோடு றவ்வ ழுத்தலின்**
**ஊற்று டைநெ டுவரை யுருமு டன்று இடித்தென**
**மாற்ற ரும்ம தக்களி றுமத்த கம்பி ளந்தவே 278**

[நுதல்-நெற்றி; கோடு-யானைத் தந்தம்; உடன்று-கோபித்து; மத்தகம்-யானை நெற்றி; மாற்றரு-மாறாத; உருமு-இடி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**வேன்மி டைந்த வேலியும் பிளந்து வெங்கண் வீரரை**
**வான்ம யிர்ச்செய் கேடகத் திடித்து வாள்வ லையரிந்து**
**ஊனு டைக்கு ருதியுள் ளுழக்கு பூதி ரிதிரத்**
**தேன்மி டைந்த தாரினான் செங்க ளஞ்சி றந்ததே 279**

*[வேல் மிடைந்த வேலி-வேற்படை வீரரின் சூழ்தல்: ஊன்-தசை; உழக்குபூ-கலக்கி.]*

மழையைவிட மேலாகப் பகைவீரர்கள் அம்புகளைப் பொழிந்து ஆர்ப்பரித்தபின், வலிமைமிக்க மன்னனும் அக்கொடிய அம்பு மழைகளை விலக்கிச் செண்டு விளையாடும் பந்தயவெளிவரை விரட்டியடிக்க, பின்னும் பெரிய யானைகள் உடைய வேறு படைகள் வந்து சேர்ந்தன. கோபமிக்க மன்னவனும் தன்னை எதிர்த்து வந்த யானைகளின் நெற்றியிலே கூற்றினைப்போல் கொல்கின்ற தன்வாளினைத் தந்தங்கள் பிளக்க அழுத்தவும், ஊற்றுடைய பெருமலையிலே இடிவீழ்ந்து தாக்கினது போலத் தீராத மதமுடைய அக்களிறுகளின் மத்தகங்களைப் பிளந்தான். வேலிபோல் பிணைத்த வேற்படையை விலக்கி வென்று, அக்கொடிய வீரரைக் கரடிமயிர்த் தோலால் ஆக்கிய கேடயத்தால் அடித்து வலைபோல் சூழ்ந்த வாள் படையையும் அழித்து, ரத்தமும் சதையும் மிதக்கும் குருதிவெள்ளத்தில் திரிய, வண்டுகள் மொய்க்கும் தேன் நிறைந்த மலர்மாலை அணிந்த சச்சந்த மன்னனின் இத்தகு தீரமிக்க போர்த் திறத்தினால் போர்க்களம் சிறந்து விளங்கியது.

## வேறு

**உப்புடைய முந்நீ ருடன்றுகரை கொல்வ**
**தொப்புடைய தானையு ளொருதனிய னாகி**
**இப்படி யிறைமக னிருங்களிறு நூற**
**அப்படையு ளண்ணலு மழன்றுகளி றுந்தி 280**

*[முந்நீர்-கடல்; நூற-அழிக்க; அண்ணல்-கட்டியங் காரன்; உந்தி-செலுத்தி.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**நீடக மிருந்தநிழல் நேமிவல னேந்திக்**
**கேடக மறுப்பநடு வற்றரவு சேர்ந்தாங்**
**கோடுகதிர் வட்டமென வொய்யென வுலம்பிக்**
**காடுகவர் தீயின்மிகை சீறுபு வெகுண்டான் 281**

[நீடு அகம் இருந்த-நீண்ட நாள் உள்ளேயிருந்த; நேமி-சக்கரம்; அரவு-இராகு வென்னும் பாம்பு; கதிர் வட்டம்-சூரியமண்டலம்; ஒய்யென-ஒலிக் குறிப்பு; உலம்பி-முழங்கி; காடுகவர் தீ-காட்டுத் தீ; சீறுபு-சீறி.]

**நெய்ம்முக மணிந்துநிழல் தங்கியழல் பொங்கி**
**வைம்முக மணிந்தநுதி வாள்அழல வீசி**
**மைம்முக மணிந்தமத யானைதவ நூறிக்**
**கைம்முதல் துணிந்துகளி றாழவது நோனான் 282**

[நிழல்-ஒளி; வை-கூர்மை; நுதி-நுனி; கைம்முதல்-துதிக்கையின் அடி; ஆழ-கீழே விழ; நோனான்-பொறாதவனாகி; அழல-சினந்து; தவ-மிக.]

**மாலைநுதி கொண்டுமழை மின்னென விமைக்கும்**
**வேலைவல னேந்திவிரி தாமமழ கழியச்**
**சோலைமயி லார்கடுணை வெம்முலைக டுஞ்சும்**
**கோலவரை மார்பினுறு கூற்றென வெறிந்தான் 283**

[மாலை நுதி கொண்டு-பூமாலையை நுனியில் கொண்டு; மயிலார்கள்-மயிலின் தன்மைகொண்ட மகளிர்.]

உப்புடைய கடல்நீர் முறைதவறி வந்து கரையை அரிப்பதுபோல் படைவரிசையிலே தான் ஒரு தனிஆளாக நின்று இவ்விதம் சச்சந்தன் போர்மதக் களிறுகளைப் பிளந்தெறியும் போது, எதிர்ப்படையின் தலைவனாகிய கட்டியங்காரனும், இதுகண்டு சினம் அடைந்து யானையைச் செலுத்தி, நீண்டநாள் போரின்றி முடங்கிக் கிடந்த சக்கரத்தைக் கையிலே எடுத்து, பாம்பு மறைக்கப் பாதி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தெரிகின்ற சூரிய வட்டம்போல் சச்சந்தன் பிடித்திருந்த கேடயத்தை இரண்டாக உடைக்கவும்; சச்சந்தனும் கட்டியங்காரனின் இம்முறை தவறிய செயலை எண்ணிக் கடுங்கோபம் கொண்டு ஓங்கார ஒலியெழுப்பிக் காட்டுத் தீயைப்போல் சீறி, நெய் தடவி நெருப்பிலே இட்டெடுத்த ஒளிமிக்க கூரிய நுனி உடைய வாளை எடுத்து வீசி, கரிய முகத்தை உடைய முகபடாம் அணிந்த மதயானையை வெட்டவும், அம்மத யானையும் துதிக்கை துணிப்புண்டு விழ்வதனைக் காணச் சகியாத கட்டியங்காரன்—நுனியில் மலர்மாலைசூட்டிய, மேகத்திடைய மின் என ஒளிவிடு கின்ற வேலைக் கையில் எடுத்து, சோலை மயில்போன்ற கோலக் குமரிகளின் குவிந்த சுவையூட்டும் முலைகள் தோய்ந்து திளைத்த அழகிய மலைபோன்று விரிந்து பரந்த மன்னன் மார்பிலே அணிந்த மலர் மாலை வீணாக அவனைக் கொல்ல விடுக்கின்ற கூற்றம் என எறிந்தான்.

## வேறு

புண்ணிடங் கொண்ட வெஃகம் பறித்தலிற் பொன்ன
னார்தம்
கண்ணிடங் கொண்ட மார்பிற் றடாயின காது வெள்வேல்
மண்ணிடங் கொண்ட யானை மணிமருப் பிடையிட் டம்ம
விண்ணிட மள்ளர் கொள்ள மிறைக்கொளி திருத்தி
னானே 284

[எஃகம்-வேல்; தடாயின-வளைந்த; மள்ளர்-வீரர்; மிறை-வளைவு.]

ஏந்தல்வேல் இருத்த யானை யிரிந்தன வெரிபொற் கண்ணி
நாந்தக வுழவர் நண்ணார் கூற்றென நடுங்கி மள்ளர்
சாய்ந்தபின் றறுக ணாண்மைக் கட்டியங் காரன் வேழம்
காய்ந்தனன் கடுக வுந்திக் கப்பணஞ் சிதறி னானே 285

[ஏந்தல்-சச்சந்தன்; வேல் திருத்த-வேலின் வளைவை நிமிர்த்தலால்; கண்ணி-மாலை; உழவர்-வீரர்; தறுகண்-அஞ்சாத; கடுக-விரைய; நாந்தகம்-வாள்; கப்பணம்-ஒரு வகைப் படைக்கருவி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**குன்றமார் பரிந்து வெள்வேற் குடுமிமா மஞ்ஞை யூர்ந்து**
**நின்றமால் புருவம் போல நெரிமுரி புருவ மாக்கிக்**
**கொன்றவன் வேழம் வீழ்ப்ப மற்றுமோர் களிற்றிற் பாய்ந்து**
**நின்றமா மன்னர்க் கெல்லா நீண்முடி யிலக்க மானான் 286**

[குன்றம்-கிரவுஞ்சகிரி; குடுமிமஞ்ஞை-உச்சிச் சூட்டை யுடைய மயில்; மால்-முருகன்; புருவம் நெரி முரி ஆக்கி-புருவத்தை நெரித்து; அவன்-கட்டியங் காரனது.]

விழுப்புண் உண்டாக மார்பிலே தைத்த அவ்வேலைச் சச்சந்தன் பிடுங்கி எடுத்தான். அழகிய மகளிரின் ஆசை விழிகள் தைத்த மார்பிலே தைத்து வளைந்த அவ்வேலினை வாளால் துணிக்கப்பட்டு கீழே விழுந்து கிடக்கின்ற யானையின் தந்தங்களிடையே வைத்து நிமிர்த்திப் பலவீரர் களை அதற்கு இரையாக்கினான். (எறிந்த வேல் மார்பிலே தைக்க வளைந்தது என்றது சச்சந்தனின் உடல் வலிமை யையும் அப்படித்தைத்த வேலினைப் பிடுங்கி எடுத்து அதன் வளைவை நிமிர்த்தி அதைக்கொண்டே மேலும் பல வீரரை அவன் கொன்றான் என்பது அவன் மனவலிமையையும் குறித்தது) இவ்விதம் சச்சந்தன் வேலை வளைத்து வீரம் விளைக்கவும் யானைகள் பயந்து ஓடின. ஒளிவீசும் பொற்கண்ணி அணிந்த வாள் வீரரும் அருகே நெருங்கி வரப் பயந்தவராய்ப் புறமுதுகிட, கொல்லவரும் எமனோ இவன் என்று மறவர்களும் பயந்து ஓட அஞ்சா நெஞ்சுடைய கட்டியங்காரன் மட்டும் தன் வீரர்களின் இச்செயல் கண்டு கோபித்து, தன்னுடைய யானையை முன்னே செலுத்தி வந்து கப்பணம் என்னும் முள் போன்ற ஒரு படைக்கலத்தை மன்னனை நோக்கி வீசி எறிந்தான். குன்றின் மார்பைப் பிளந்து வெள்ளிய வேலொடும், கொண்டையுடைய அழகிய மயிலேறி நின்ற குமரனைப் போலத் தன்புருவ வில்லை வளைத்து நிமிர்த்திய சச்சந்தன், கட்டியங்காரனின் வேழத்தைக் கொன்றபின் அவன் மேலும் ஒரு போர் யானை மீதேறி வந்து தாக்கத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தொடங்கியதால், மற்ற வீரர்களும் குறிவைத்துத் தாக்கத்தக்க இலக்காகத் தான் தனியன் ஆனான்.

## வேறு

**நஞ்சுபதி கொண்டவள நாகணையி னான்றன்**
**நெஞ்சுபதி கொண்டுபடை மூழ்கநிலம் வீசு**
**மஞ்சுதவழ் குன்றனைய தோளொசிந்து மாத்தாட்**
**குஞ்சரங்க ணூறிக்கொலை வாளொடித்து நின்றான்**

*[பதிகொண்ட-பதிதல் கொண்ட; நாகணையினான்-திருமால்; மாத்தாள்-பெரிய அடி; நூறி-அழித்து; தோளொசிந்து-தோள் தளர்ந்து.]*

**ஆரமரு ளாண்டகையு மன்னவகை வீழும்**
**வீரரெறி வெம்படைகள் வீழவிமை யானாய்ப்**
**பேரமரு ளன்றுபெருந் தாதையொடும் பேராப்**
**போரமருள் நின்றஇளை யோனிற்பொலி வுற்றான் 288**

*[ஆண்டகை-சச்சந்தன்; அமர்-பாரதப்போர்; பெருந் தாதை-கன்னன், இவன் அபிமனுக்குப் பெரிய தந்தை. பேரா-பின்னிடாமல்; இளையோன்-அபிமன்.]*

**போழ்ந்துகதிர் நேமியொடு வேல்பொரு தழுந்தத்**
**தாழ்ந்துதறு கண்ணிணைகள் தீயழல விழியா**
**வீழ்ந்துநில மாமகள்தன் வெம்முலை ஞெமுங்க**
**ஆழ்ந்துபடு வெஞ்சுடரி னாண்டகை யவிந்தான் 289**

*[போழ்ந்து-பிளந்து; ஞெமுங்க - அழுந்த; நேமி-சக்கரம்; படுவெஞ்சுடர்-மலைவாயில் படுகின்ற மாலைக்கதிர்.]*

நச்சினை வைத்திருக்கும் பாம்பை அணையாகக் கொண்டு பள்ளி கொண்ட திருமாலைப் போன்ற சச்சந்தனின் மார்பைக் குறிவைத்துப் போர்ப்படைகள் குவியவும் (அவனும் கலங்காது) நிலம்நோக்கிப் பொழி கின்ற மழை மேகங்கள் சூழ்ந்த மலைக்குன்றைப் போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பெரிய கால்களுடைய யானைகள் பலவற்றை வெட்டி, தன் வீர வாள் முறிந்து நின்றான். ஆண் மக்களிற் சிறந்த சச்சந்தனும், தன்னைச் சுற்றியிருக்கும் வீரர்கள் ஏற்கின்ற படைக்கலங்களைக் கண்டஞ்சிக் கண்ணையும் இமைக்காமல் போரிடவே, முன்னம் நடந்த பெரும் பாரதப் போரில் தனியனாய்க் கன்னனை எதிர்த்து நின்ற வீர அபிமன்யுவைப் போல விளங்கினான். எனினும் பொறி பறக்கும் சக்கரமும் வேலும் உடலிலே தைத்து அழுத்த, உடல் வலிவு தளர அஞ்சாமை முழக்கும் இரு கண்களும் கோபத்தீ கொப்பளிக்க விழித்து நோக்கினும் உடலுற்ற தளர்வால் அவையும் கவிந்து சோரவும், நிலமடந்தை முலை அழுந்த, சிறப்புறத் தோன்றிப்பின் மலைவாயில் வீழ்ந்து மறைகின்ற கதிரவனைப்போல் சச்சந்தன் தரையில் வீழ்ந்தான்.

### வேறு

தோய்ந்தவிசும் பென்னுந்தொன்னாட்ட கந்தொழுது
புலம்பெய்தி மைந்தர்மாழ்க
ஏந்துமுலை யாரினைந்திரங்கக் கொடுங்கோலிருள்
பரப்பவே எபாவம்
ஆய்ந்தகுருகுல மாமாழ்கடலினுண் முளைத்தவறச்
செங்கோலாய்கதிரினை
வேந்தர்பெருமானைச் சச்சந்தனை மந்திரிமா நாக
முடன் விழுங்கிற்றன்றே 290

[மாழ்க-மயங்க; இனைந்து-வருந்தி; மந்திரி-கட்டியங்காரன்; நாகம்-இங்கே, இராகுவென்னும் பாம்பு; சச்சந்தன் மந்திரியால் விழுங்கப்பட்டது.]

பாலருவித்திங்கள்தோய் முத்தமாலைப் பழிப்பினெடுங்
குடைக்கீழ்ப் பாய்பரிமான்தேர்க்
கோலருவிவெஞ் சிலையான்கூர் வாளோடு மணிக்கேட
கமுமறமுமாற்றி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வாலருவிவா மனடித்தா மரைமலர்சூடி மந்திரமென்
சாந்துபூசி
வேலருவிக்கண்ணினார் மெய்காப்போம் பவேந்தன்
போய் விண்ணோர்க்குவி ருந்தாயினானே 291

*[பாய்பரி-தாவுகின்ற; மான்தேர்-குதிரைகள் பூட்டிய தேர்; மறம்-வீரம்; வாமன்-அருகதேவன்; மெய்-உடலை; காப்போம்ப-காத்தலைச் செய்ய; விருந்து-புதுமை.]*

செந்தீக்கருந்துளைய தீங்குழல்யாழ்தேந்தே மென்னு
மணிமுழவமும்
தந்தாங்கிளையார் மெல்விரல்கள் தீண்டத்தாந்தா
மென்றிரங்குந் தண்ணுமைகளும்
அந்தீங்கிளவி யாரைஞ்ஞூற்றுவர்அவை துறைபோய்
ஆடலரம்பையன்னார்
எந்தாய்வெறு நிலத்துய்ச் சேர்தியோவென்றினைந்
திரங்கிப் பள்ளிபடுத்தார்களே 292

*[''தேந்தேம் தாந்தாம்'' என்பன இன்னிசைப் பண் ஒலிகள். இளையார்-மகளிர்; தண்ணுமை-மத்தளம்: துறை-ஆடல், பாடல் முதலியன; இனைந்து-வருந்தி.]*

மடையவிழ்ந்த வெள்ளிலைவேலம்பு பாயமணிச்
செப்பகங் கடைகின்றவேபோல்
தொடையவிழ்ந்த மாலையுமுத்துந் தோய்ந்த துணை
முலையினுள்ளரங்கி மூழ்கக் காமன்
படையவிழ்ந்த கண்பனிநீர்பாய விம்மாப் பருமுத்த
நாமழலைக் கிண்கிணியினார்
புடையவிழ்ந்த கூந்தல் புலவுத் தோயப் பொழிமழையுண்
மின்னுப்போற் புலம்பினாரே 293

*[மடை-மூட்டு; வெள்ளிலை வேல்-வெற்றிலைபோலும் வடிவுள்ள வேல்; புலவு-இரத்தம்.]*

9

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விண்ணின் இன்பங்கள் தோய்ந்து கிடக்கின்ற புகழுடையது எனும் பாராட்டுப் பெற்ற ஏமாங்கத நாட்டில், சான்றோர்கள் புலம்பி அழ, இன்பமகளிர் துன்புற்று வருந்த, கொடுங்கோல் ஆட்சியின் இருள் பரவ, குறை போக்கிய நிறையுடைய அறிவென்னும் ஆழியில் தோன்றிய நல்லறம் என்னும் செங்கோல் ஏந்திய இளஞாயிற்றைப் போன்ற, வேந்தர் புகழும் தார்வேந்தனை, சச்சந்தனை மந்திரியாகிய நாகம் அவன் வாழ்வெல்லாம் கொள்ள விழுங்கிற்று. பால் அருவி போலக் கதிர் பரப்பும் நிலவு போன்ற, முத்துமணிவடம் பூட்டி நலம் பெறத் திகழும் வெண்கொற்றக் குடையின்கீழே, தாவிப் பாயும் குதிரைகள் பூட்டிய தேரிலே அமர்ந்து அருவிபோல் பகைவர்மேல் அம்புமழை பொழிகின்ற வில்லுடைய சச்சந்தன் இப்போது வாளும் கேடயமும் கொண்டு போரிட்டு அவற்றை இழந்து, மேலான அறிவுடைய அருகப்பெருமானை மனதால் நினைத்து அந்நினைவே சந்தனமாகத் தன் உடலிலே பூசி அவ்வருகனின் திருவடித் தாமரைகளையே தலைசூடும் மலராக அணிந்து, வேல் போன்ற கண்களில் நீர் உகுத்து வான்மங்கையர் காவல் வர விண்ணுறையும் தேவர்களுக்கு விருந்தாகப் போனான். செந்தீயால் கருக்கித் துளையிட்ட இனிய குழலும் யாழும் இசைக்கத் 'தோம், தோம்' என்றிசை எழுப்பும் முழவும் பாட, மென்விரலால் இன்னிசை மீட்டத் 'தாம், தாம்' என்று ஒலிக்கும் மத்தளமும், இசை கூட்ட, இனிய மொழியுடைய அகப் பரிவார மகளிர் ஐந்நூற்றுவரும், ஆடல்துறையிலே வல்ல அரம்பையரைப் போன்றவரும், ''எந்தையே எம் தலைவனே நீ எம்மைவிட்டு வேறுலகம் போயினையோ'' என்று அழுது கலங்கிச் சச்சந்தன் உடலை ஈமப்பள்ளியிலே வைக்கவும், இணைந்திருந்த மூட்டுக்கள் கழன்று போர்க் களத்திலே விழுந்து கிடக்கும் வேல் அம்புகளின் நுனிகள், மாணிக்கச் செப்பு போன்ற முலைமார்பை அழுத்தவும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கட்டுச் சிதறிய மாலைகளும், முத்துவடங்களும், அதன் மேல் படியவும், காமன் படைகளையும் வெல்லும் அழகிய கண்களில் இருந்து நீர் பெருக்கெடுக்க அழுகின்ற; முத்துப் பரல் அமைத்த கிண்கிணிக் கொலுசணிந்த மகளிர் கூந்தல் போர்க்களக் குருதிதோய நிலத்திலே புரண்டு அவிழ்ந்து விழுந்து அவர் உடல் மறைக்க அவர் புலம்புவது, மேகத் திடை நெளிந்தோடும் மின்னல் ஒத்திருந்தது.

**அரிமானோர் மெல்லணைமேன் மஞ்ஞை சூழக் கிடந்தாங்கு**
**வேந்தன் கிடந்தா னைத்தான்**
**கரிமாலை நெஞ்சினான் கண்டான் கண்டேகைதொழுதான்**
**கண்ணீர்கலுழ்ந்து உகுத்தபின்**
**எரிமாலை யீமத்தில் இழுதார்குட மேனை நூறுமேற்பச்**
**சொரிந்தலறிஎம்**
**பெருமானே யெம்மை யொளித்தியோவென்னாப் பெரிய**
**கண்ணீர் சொரிந்தலறுவார் 294**

[அரிமான்-சிங்கம்; சிங்கம் சச்சந்தனுக்கும் மயில்கள் மகளிருக்கும் உவமை. கரிமாலை நெஞ்சினான்-கட்டியங்காரன்; கலுழ்ந்து-கலங்கி; ஈமம்-பிணம் சுடும் விறகடுக்கு.]

**கையார் வளைகள்புடைத்திரங்குவார் கதிர்முலை**
**மேலாரம்பரிந்தலறுவார்**
**நெய்யார் கருங்குழன்மேன்மாலை சிந்தி நிலத்திடுவார்**
**நின்று திருவில் வீசும்**
**மையார்கடிப் பிணையும்வார் குழையுங்களைந்திடுவார்**
**கையால்வயிறதுக்குவார்**
**ஐயாவோ வென்றழுவார் வேந்தன்செய்த கொடுமை**
**கொடி தென்பார்கோல் வளையினார் 295**

[புடைத்தல்-உடைத்தல்; பரிந்து-அறுத்து; மைஆர்-மைநிறத்து; கடிப்பிணை-காதிலணியும் அணி.]

**பானாள் பிறைமருப்பிற் பைங்கண் வேழம் பகுவாயோர்**
**பையணல்மா நாகம் வீழ்ப்பத்**
**தேனார் மலர்ச்சோலைச் செவ்வரை யின்மேற் சிறுபிடிகள்**
**போலத் துயருழந் துதாம்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விண்ணின் இன்பங்கள் தோய்ந்து கிடக்கின்ற புகழுடையது எனும் பாராட்டுப் பெற்ற ஏமாங்கத நாட்டில், சான்றோர்கள் புலம்பி அழ, இன்பமகளிர் துன்புற்று வருந்த, கொடுங்கோல் ஆட்சியின் இருள் பரவ, குறை போக்கிய நிறையுடைய அறிவென்னும் ஆழியில் தோன்றிய நல்லறம் என்னும் செங்கோல் ஏந்திய இளஞாயிற்றைப் போன்ற, வேந்தர் புகழும் தார்வேந்தனை, சச்சந்தனை மந்திரியாகிய நாகம் அவன் வாழ்வெல்லாம் கொள்ள விழுங்கிற்று. பால் அருவி போலக் கதிர் பரப்பும் நிலவு போன்ற, முத்துமணிவடம் பூட்டி நலம் பெறத் திகழும் வெண்கொற்றக் குடையின்கீழே, தாவிப் பாயும் குதிரைகள் பூட்டிய தேரிலே அமர்ந்து அருவிபோல் பகைவர்மேல் அம்புமழை பொழிகின்ற வில்லுடைய சச்சந்தன் இப்போது வாளும் கேடயமும் கொண்டு போரிட்டு அவற்றை இழந்து, மேலான அறிவுடைய அருகப்பெருமானை மனதால் நினைத்து அந்நினைவே சந்தனமாகத் தன் உடலிலே பூசி அவ்வருகனின் திருவடித் தாமரைகளையே தலைசூடும் மலராக அணிந்து, வேல் போன்ற கண்களில் நீர் உகுத்து வான்மங்கையர் காவல் வர விண்ணுறையும் தேவர்களுக்கு விருந்தாகப் போனான். செந்தீயால் கருக்கித் துளையிட்ட இனிய குழலும் யாழும் இசைக்கத் 'தோம், தோம்' என்றிசை எழுப்பும் முழவும் பாட, மென்விரலால் இன்னிசை மீட்டத் 'தாம், தாம்' என்று ஒலிக்கும் மத்தளமும், இசை கூட்ட, இனிய மொழியுடைய அகப் பரிவார மகளிர் ஐந்நூற்றுவரும், ஆடல்துறையிலே வல்ல அரம்பையரைப் போன்றவரும், ''எந்தையே எம் தலைவனே நீ எம்மைவிட்டு வேறுலகம் போயினையோ'' என்று அழுது கலங்கிச் சச்சந்தன் உடலை ஈமப்பள்ளியிலே வைக்கவும், இணைந்திருந்த மூட்டுக்கள் கழன்று போர்க் களத்திலே விழுந்து கிடக்கும் வேல் அம்புகளின் நுனிகள், மாணிக்கச் செப்பு போன்ற முலைமார்பை அழுத்தவும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கயில்-ஆபரணத்தின் மூட்டுவாய்; வளிமுகச்சுடரின்-காற்றின் முன்னுள்ள தீபம் போல; சுளிமுகக் களிறு-குத்துக்கோலைக் கோபிக்கின்ற முகத்தை யுடைய ஆண்யானை; கிளவிக்கு-சொற்களை யுடைய விசயைக்கு.]

**எஃகென விளங்கு வாட்க ணெறிகட லமிர்த மன்னாள்**
**அஃகிய மதுகை தன்னா லாய்மயி லூரு மாங்கண்**
**வெஃகிய புகழி னான்றன் வென்றிவெம் முரச மார்ப**
**எஃகெறி பிணையின் மாழ்கி யிறுகிமெய்ம் மறந்து சோர்ந்தாள் 299**

[எஃகு-வேல்; வாட்கண்-ஒளியையுடைய கண்; எறி கடல்-அலைகளை எறிகின்ற கடல்; அஃகிய மதுகை-குறைந்த வன்மை; மயில்-மயிற்பொறி; பிணை-பெண்மான்.]

**மோடுடை நகரி னீங்கி முதுமரந் துவன்றி யுள்ளம்**
**பீடுடை யவரு முட்கப் பிணம்பல பிறங்கி யெங்கும்**
**காடுடை யளவை யெல்லாங் கழுகிருந் துறங்கு நீழற்**
**பாடுடை மயிலந் தோகை பைபய வீழ்ந்த தன்றே 300**

[மோடு-பெருமை; பிறங்கி-மிக்கு; காடு-மயானம்; பைபய-மெல்ல மெல்ல; உட்க-வருந்த; அஞ்ச.]

**மஞ்சுசூழ் வதனை யொத்துப் பிணப்புகை மலிந்து பேயும்**
**அஞ்சுமம் மயானந் தன்னுள் அகில்வயி றார்ந்த கோதை**
**பஞ்சிமேல் வீழ்வ தேபோற் பல்பொறிக் குடுமி நெற்றிக்**
**குஞ்சிமா மஞ்ஞை வீழ்ந்து கால்குவித் திருந்த தன்றே**

[மஞ்சு-வெண்மேகம்; அகில்-அகிற்புகை; கோதை-மாலை; பஞ்சி-பஞ்சு; குடுமி நெற்றி-கொண்டையை உச்சியிலே உடைய.]

தேனுண்டு பாடிக்களிக்கும் வண்டுகள் மொய்க்கின்ற மாலை அணிமணிகள் அணிந்த கழுத்திலே கலைந்துவிழ, காற்றின் முன்னே நிற்காது ஆடும் எரிவிளக்குச் சுடர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போன்று தவிக்கின்ற கலங்கிய உள்ளத்தோடு, வெற்றிச் சுளி விளங்கும் முகமுடைய ஆண்யானை போன்ற சச்சந்தன் கூறிய அறிவுரையைக் கருத்தில் கொண்டு, மயிற்பொறியில் ஏறிச் சென்ற கிளிபோலும் மொழிபேசும் விசயைக்கு நேர்ந்ததனை இனி எடுத்துச் சொல்கின்றேன். கூர்மையே உருவாய்க் கொண்டு விளங்கும் வாள்போன்ற கண்ணுடைய அலைகடல் பிறந்த அமுதம் ஒத்த விசயை குறைந்த வலுவோடு மெதுவாக மயிற்பொறியைச் செலுத்திச் செல்கின்ற வானிலே, வஞ்சித்த புகழுடைய கொடியோனாகிய கட்டியங்காரன் தான் வேந்தன் எனப் பறையறிவிக்க ஒலித்த முரசொலி கேட்கவும்; விசயை வேலால் தாக்குண்ட பெண் மான் போல் மனம் மயங்கி மெய் சோர்ந்து வீழ்ந்தாள். இவ்விதம் பொறியை இயக்க மறந்து மெய் சோர்ந்து விசயை வீழவும் அம்மயிற்பொறி பெருமைமிகு நகர்ப்புரம் தாண்டி, நெடுமரங்கள் நிறைந்து மனவலி உடையோரையும் நடுங்கச் செய்யும் பிணங்கள் பல நிறைந்திருக்க, காடு கொண்டிருக்கும் அளவு கழுகு குடிகொண்டிருக்கும் சுடுகாட்டிடை வேலைப் பாடமைந்த தோகை மயில் போன்ற அவ்வூர்தியும் மெல்ல இறங்கியது. மழை மேகம் சூழ்வது போல் எரிக்கும் பிணப்புகை மண்டிக் கிடக்கப் பேயும் வரநடுங்கும் அப்பாழுஞ் சுடுகாட்டில், அகில்புகை மணஞ்சுமந்த மலர்மாலை பஞ்சு மெத்தையிலே வீழ்வதைப் போல், பல புள்ளிகளையும் தலை உச்சியிலே கொண்டையையும் தோகையும் உடைய பெரிய மயில் போன்ற அவ்வூர்தியும் கால்குவித்து மெல்லத் தரையில் இறங்கி வந்து வீழ்ந்தது.

**வார்தரு தடங்க ணீர்தன் வனமுலை நனைப்ப ஏல்பெற்று**
**ஊர்கட லனைய காட்டுள் அச்சமொன் றானு முள்ளாள்**
**ஏர்தரு மயிலஞ் சாய லிறைவனுக் கிரங்கி யேங்கிச்**
**சோர்துகில் திருத்தல் தேற்றாள் துணைபிரி மகன்றி**
**லொத்தாள் 302**

[வார்தல்-ஒழுகுதல்; ஏல்பெற்று-எழுச்சி பெற்று; ஏர்தரு-எழுச்சி பெற்ற; மயிலஞ்சாயல்-மயில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


போன்ற அழகிய; சோர்துகில் திருத்தல்-நழுவு கின்ற ஆடையை உடுத்தல்; துணைபிரி மகன்றில்-ஒன்றினை விட்டு ஒன்று பிரியாத இணையொத்த நீர்வாழ் பறவை.]

**உண்டென வுரையிற் கேட்பார் உயிருறு பாவ மெல்லாம்**
**கண்டினித் தெளிக வென்று காட்டுவாள் போல வாகி**
**விண்டொட நிவந்த கோயில் விண்ணவர் மகளிற் சென்றாள்**
**வெண்டலை பயின்ற காட்டுள் விளங்கிழை தமிய ளானாள் 303**

[உரையில்-நூல்களில்; உண்டென உரையிற் கேட்பார். வெண்டலை-இறந்தவருடைய வெள்ளிய தலை; பயின்ற - மிக்க; நிவந்தகோவில் - அரண்மனை; தமியளானாள்-தனியானாள்.]

**இருள்கெட இகலி யெங்கு மணிவிளக் கெரிய வேந்தி**
**அருளுடை மனத்த வாகி யணங்கெலாம் வணங்கி நிற்பப்**
**பொருகடற் பருதி போலப் பொன்னனான் பிறந்த போழ்தே**
**மருளுடை மாத ருற்ற மம்மர்நோய் மறைந்த தன்றே 304**

[மணிவிளக்கு-இரத்தின விளக்கு; பருதி-சூரியன்; பொன்னனான்-சீவகன்; மம்மர் நோய்-வருத்த மாகிய நோய்; இகலி- துரத்தி.]

பெரிய கண்களில் இருந்து வழிகின்ற கண்ணீர் தன் மார்பை நனைக்கவும், மனந்துணிந்து கடல்போல் பரவிய அக்காட்டினுள், எதைக் கண்டும் பயப்படாத வளாய், சச்சந்தன் நிலையாதோ என்றெண்ணி அழுது அழகிய மயில் போன்ற சாயல் உடைய விசயை, நிலை குலையும் ஆடையையும் திருத்தும் நினைவற்றவளாய்ப் பெண் துணை பிரிந்துவாடும் மகன்றில் பறவையை ஒத்தாள். உயிர் வருத்தம் தரக்கூடிய துன்பங்கள் இவை என்று பிறர் சொல்லக் கேட்டுத் தெரிந்தவர்கள் எல்லாம் இங்கே இப்போது என்னை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்க எனப் பலர்க்கும் எடுத்துக் காட்டுபவள் போல்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வானுயர வளர்ந்த அரண்மனையில் வானவர் மகளினைப் போல் விளங்கிய விசையை, மண்டையோடுகள் சிதறிக் கிடக்கும் சுடுகாட்டிடைத் தனியாய் வருந்தினாள். எங்கும் இருளை விரட்ட ஒளிமணி விளக்குகள் சுடர்பரப்ப, அக்காடுறையும் தெய்வம் எல்லாம் வணங்கித் துணை நிற்கப் பேரலைவீசும் பெரிய கடல்மேல் தோன்றுகின்ற உதயசூரியனைப்போல் பொன்னனைய சீவகன் பிறந்த வுடன் மயங்கிச் சோர்ந்த விசயையின் மன வருத்த மெல்லாம் மறைந்தது.

**பூங்கழற் குருசில் தந்த புதல்வனைப் புகன்று நோக்கித்**
**தேங்கம ழோதி திங்கள் வெண்கதிர் பொழிவ தேபோல்**
**வீங்கிள முலைகள் விம்மித் திறந்துபால் பிலிற்ற வாற்றாள்**
**வாங்குபு திலகஞ் சேர்த்தித் திலகனைத் திருந்த வைத்தாள்**

[குருசில்-சச்சந்தன்; புகன்று-விரும்பி; தேங்கமழ் ஓதி-விசயை; பிலிற்ற-சுரக்க; வாங்குபு-வாங்கி; திலகம் சேர்த்தி-மண்பொட்டை அணிவித்து.]

## வேறு

**கறைபன் னீராண் டுடன்விடுமின் காமர் சாலை**
**தளிநிறுமின்**
**சிறைசெய் சிங்கம் போன்மடங்கிச் சேரா மன்னர்**
**சினம ழுங்க**
**உறையுங் கோட்ட முடன்சீமின் ஒண்பொற் குன்றந்**
**தலைதிறந்திட்டு**
**இறைவன் சிறுவன் பிறந்தானென்று ஏற்பார்க்கு ஊர்தோ**
**றுய்த்தீமின் 306**

[கறை-சிற்றரசர் கொடுக்கும் கப்பம்; சேராமன்னர்-பகையரசர்; சினம் அழுங்க-சினம் கெடும்படி; கோட்டம் - சிறைக்கோட்டம்; சீமின் - இடித் தொழிப்பீர்; உய்த்து ஈமின்-கொண்டு போய்க் கொடுமின்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



மாட மோங்கும் வளநகருள் வரம்பில் பண்டந்
தலைதிறந்திட்டு
ஆடை செம்பொ னணிகலங்கள் யாவும் யாருங்
கவர்ந்தெழுநாள்
வீட லின்றிக் கொளப்பெறுவார் விலக்கல் வேண்டா
வீழ்ந்தீர்க்குக்
கோடி மூன்றோ டரைச்செம்பொன் கோமான் நல்கு
மென அறைமின் 307

[வளநகர் - இராசமாபுரம்; எழுநாள் - ஏழுநாள்; வீடலின்றி-இடைவிடாமல்; வீழ்ந்தீர்க்கு-விரும்பி னீர்க்கு.]

வீரக்கழல் அணிந்த சச்சந்தன் தந்த மக்கட் செல்வத்தை மகிழ்ந்து நோக்கி, தேன்மணக்கும் மலர் நிறைந்த கூந்தலுடைய விசயை, நிலவு கதிர் விடுவதே போல் விம்மிப்புடைத்த முலைகள் பொங்கிப் பால் பெருக்கும்வரை பொறாதவளாய்த் தானே பாலை வலியக் கொண்டு சென்று வாயூட்டித் திலகம் இட்டு, நெற்றித் திலகம் போன்ற திருமகனை உறங்க வைத்தவள், 'இறைப் பொருள் கோரலைப் பனிரெண்டு ஆண்டுகள் நீக்கி வையுங்கள், அழகிய அறச்சாலைகளையும் கோவில் களையும் கட்டுங்கள், சிறைப்பட்ட சிங்கம்போல் சினம் அடங்கிப் பகையரசர் கிடக்கின்ற சிறைச்சாலைகளைக் காலி செய்யுங்கள், ஒளிமிகுந்த பொற்குவியலைப் பூட்டி வைத்திருக்கிற பண்டாரத்தைத் திறந்துவிட்டு ஊர் தோறும் கொண்டு சென்று வேந்தனுக்கு மகன் பிறந்திருக் கிறான் என்ற விழா எடுக்கும் சேதியினைக் கேட்பாரிடம் எல்லாம் சொல்லுங்கள்—பொன்னை அள்ளிக் கொடுங்கள்; இவையுமல்லாமல், மாடம் உயர்ந்த வளமிகு அரண்மனை யில் வரம்பின்றிப், பொருள் குவித்திருக்கும் பொக்கிஷங் களை எல்லாம் திறந்துவிட்டு, ஆடை- அணிமணிகள், பொன், பொருள் இவற்றையெல்லாம் இன்றிருந்து ஏழு நாள்வரை யாரும் தடையின்றி எடுத்துச்செல்ல

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



அனுமதியுங்கள். யாரும் அதனைத் தடுக்கவேண்டாம்! மேலும் விரும்பிக் கேட்பவருக்கு அரசன் மூன்றரைக் கோடி செம்பொன் தானமாகவும் தருவான் என்று முரசறைந்து தெரிவியுங்கள்' என்றும் சொன்னாள்.

அரும்பொற் பூணு மாரமு மிமைப்பக் கணிகள்
அகன்கோயில்
ஒருங்கு கூடிச் சாதகஞ்செய்து ஓகை யரசர்க்
குடன்போக்கிக்
கருங்கைக் களிறுங் கம்பலமுங் காசுங் கவிகள் கொளவீசி
விரும்பப் பிறப்பாய் வினைசெய்தேன் காண வி:தோஒ
பிறக்குமா 308

[ஆரம்-முத்துமாலை; இமைப்ப-ஒளிவிட; கணிகள்-சோதிடர்கள்; சாதகம்செய்து - சாதகத்தைக் கணித்து; ஓகை-உவகை; கம்பலம் - ஆடை வகைகள்; காசு-பொற்காசு; கவிகள்-புலவர்கள்; பிறக்குமா-பிறக்கும்விதம்.]

வெவ்வாய் ஓரி முழவாக விளிந்தா ரீமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட் டுயரரங்கி னிழல்போ னுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கு மிருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வா றாகிப் பிறப்பதோ விதுவோ மன்னர்க் கியல்வேந்தே

[ஓரி-நரியின் குரல்; விளிந்தார் ஈமம்-இறந்தவரைச் சுடுதற்குரிய விறகடுக்கு; அரங்கு - ஆடுமிடம்; நுடங்கி-அசைந்து; கூகை-கோட்டான்.]

பற்றா மன்ன னகர்ப்புறமால் பாயல் பிணஞ்சூழ் சுடுகாடால்
உற்றா ரில்லாத் தமியேனா லொதுங்க லாகாத்
தூங்கிருளால்
மற்றிஞ் ஞால முடையாய்நீ வளரு மாறும் அறியேனால்
எற்றே யிதுகண்டு ஏகாதே யிருத்தி யாலென் இன்னுயிரே

[பற்றா மன்னன்-பகைவனான அரசன்; பாயல்-படுக்கை; ஒதுங்கல்-நடத்தல்; எற்று - என்ன; தூங்கிருள்-வல்லிருள்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



"அரிய பொன்னணியும் பூமாலையும் விளங்கிட நாளும் ஓரையும் கணிக்கின்ற நிமித்திகர்கள் எல்லாம் அரண்மனையில் ஒன்றுகூடி சீவகனின் சாதகத்தைக் கணிக்க, எல்லா அரசர்க்கும் சேதி அனுப்பி, கரிய கைகளை உடைய யானையும், பட்டுடையும், பொற்காசுகளும், பாவலர் கொள்ளத் தந்து எல்லோரும் போற்றப் பிறக்கவேண்டிய நீ, நான்செய்த தீவினையோ இப்படித் துயர்சூழப் பிறந்தாயே" என்று வருந்தி, "வாய்பிளந்து ஊளையிடும் நரியின் குரல் முழவு ஆகவும், பிணம் எரிக்கும் தீச்சுடர் விளக்காகவும், இழிவுற்ற சுடுகாட்டுயர் மேடையிலே, பேய் நிழல்போல் அசைந்தாட, ஆந்தைகள் எல்லாம் பக்கம் இருந்து பாராட்டுவதுபோல் அலற, இவ்விதமோ பிறப்பது?—இதுவோ அரசர்க்கு அழகு" எனவும் அலறி, "மழலைச் செல்வமே, நீ இப்போது இருக்கின்ற இடமும் பகையரசர் நாடாகும். நீ கிடக்கும் படுக்கையோ பிணங்கள் சூழ்ந்த சுடுகாடாகும், நானோ துணையின்றித் தனியாளாக இருக்கிறேன், இதைவிட்டு வெளியேறலாம் என்றாலோ விலக்கமுடியாத இருள் எங்கும் சூழ்ந்திருக்கின்றது. உலகாளப் பிறந்திருக்கின்ற மன்னவன் மகனே, மற்றும் நீ வளரும் வகை எனக்குத் தெரியவில்லையே, என் இனிய உயிரே இவ்வளவு துன்பங்கள் வந்தடைந்தும் நீ என்னைவிட்டுப் போகாமல் இருக்கிறாயே இது எத்தகைய கொடுமை" என்று கலங்கினாள்.

**பிறந்த நீயும் பூம்பிண்டிப் பெருமா னடிகள் பேரறமும்**
**புறந்தந் தென்பாற் றுயர்க்கடலை நீந்தும் புணைமற்**
**றாகாக்காற்**
**சிறந்தா ருளரேல் உரையாயால் சிந்தா மணியே கிடத்தியால்**
**மறங்கூர் நுங்கோன் சொற்செய்தேன் மம்மர் நோயின்**
**வருந்துகோ 311**

[பிண்டிப் பெருமானடிகள் - அருகன்; பிண்டி- அசோகம்; புணை-தெப்பம்; சிந்தாமணியென்றது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பிள்ளையை நோக்கி. மறம்-வீரம்; மம்மர்-மயக்கம்; வருந்துகோ-வருந்துவேனோ.]

அந்தோ விசயை பட்டனகொண்டு அகங்கை புறங்கை
யானாற்போற்
கந்தார் களிற்றுத் தங்கோமான் கழிய மயிலோர் மயிலூர்ந்து
வந்தாற் போலப் புறங்காட்டுள் வந்தாள் தமியே எனமரங்கள்
சிந்தித்து இரங்கி யழுவனபோற் பனிசேர் கண்ணீர்
சொரிந்தனவே 312

[அந்தோ-ஐயோ; கந்து-கட்டுத்தறி; கழிய-இறக்க; மயில் ஊர்ந்து-மயிற்பொறியை ஊர்ந்து; புறங்காட்டுள்-சுடுகாட்டுள்.]

அடர்பொற் பைம்பூ ணரசழிய வரும்பொற் புதல்வற்
பெற்றிருந்த
இடர்கொள் நெஞ்சத் திறைவியு மிருங்கண் ஞாலத்
திருள்பருகிச்
சுடர்போய் மறையத் துளங்கொளிய குழவி மதிபெற்று
அகங்குளிர்ந்த
படர்தீர் அந்தி யதுவொத்தாள் பணைசெய் கோட்டுப்
படாமுலையாள் 313

[பொன்அடர்-பொற்றகடு; இடர்கொள் - துன்பத்தைக் கொண்ட; இருங்கண் ஞாலத்து-பெரிய இடத்தையுடைய பூமியில்; இருள் பருகி-இருளை அழித்து; சுடர்-சூரியன்; பணை-பருத்த; படர்தீர்-இருள் தீர்க்கும்.]

"பிறந்திருக்கின்ற நீயும் அசோக மரநீழலில் அமர்ந்திருக்கின்ற அருகப்பெருமானின் திருவருளும் எனக்காதரவாய், என் துயர்க்கடல் கடக்கத் தோணியாக உதவாவிட்டால், வேறு யார் வந்து உதவுவார்கள் சொல்வாய்! சிந்தாமணியே ஒன்றும் கூறாது வாளா கிடக்கின்றனையே! திறன்மிக்க உன்தந்தை கூறியபடி செய்தநான் மதிமயங்கி வருந்துவேனோ?" என்று விசயை வருந்தவும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

உள்ளங்கையைத் திடீரென்று புறங்கையாகத் திருப்பினாற் போன்று விசயை பட்ட துன்பங்களை உய்த்துணர்ந்து, கந்து சுளியும் கடாக்களிறுகளை உடைய வேந்தன் இறக்க, மயில் ஒரு மயிலைச் செலுத்தி வருதல்போல் மயில் ஊர்தியைச் செலுத்தி வந்த தோகை மயில் போன்ற விசயை சுடுகாட்டிடைத் தனியே வந்து சேர்ந்ததை எண்ணி அழுவதேபோல் மரங்கள் குளிர்ப் பனிநீரைச் சொரிந்தன. நிறையப் பொற்கலன்கள் பூட்டிய அரசன் அழியவும்; பெறற்கரிய பொன்போலும் புத்திரனைப் பெற்றிருந்த, துயர்மிக்க நெஞ்சுடைய, கவிந்து குவிந்த-சாயாத பூ மார்பும் உடைய விசயை, விரிந்து பரந்த இவ்வுலகில் இருளைப்போக்கி ஒளி உமிழ்ந்த ஞாயிறு—சூரியன் சென்று மறையவும், ஒளிவீசும் இளம்பிறையின் எழில்பெற்று விளங்கும், துன்பம் போக்கிய அந்திவானைப் போன்றிருந்தாள். (ஞாயிறு சச்சந்தனையும் பிறைநிலவு பிறந்திருக்கின்ற பிள்ளையையும் குறித்தன. ஒளியிழந்து, தலைவனிழந்து கிடப்பதால் விசயை அந்திவானுக்கு உவமை ஆனாள்.)

## வேறு

தேனமர் கோதை மாதர் திருமகன் றிறத்தை யோராள்
யானெவன் செய்வ லென்றே யவலியா விருந்த போழ்திற்
றானமர்ந் துழையி னீங்காச் சண்பக மாலை யென்னும்
கூனிய துருவங் கொண்டோர் தெய்வதங் குறுகிற் றன்றே

*[ஓராள்-அறியாளாய்; அவலியா-வருந்தி; அமர்ந்து-விரும்பி; உழையின் நீங்கா-பக்கத்தினின்றும் நீங்காத.]*

விம்முறு விழும வெந்நோ யவணுறை தெய்வஞ் சேரக்
கொம்மென வுயிர்த்து நெஞ்சிற் கொட்புறு கவலை நீங்க
எம்மனை தமியை யாகி யிவ்விட ருற்ற தெல்லாம்
செம்மலர்த் திருவின் பாவா யான்செய்த பாவ மென்றாள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[அவண்-அவ்விடத்தில்; கொம்மென-விரைய; கொட்புறு கவலை-சுழலுதற்குக் காரணமான கவலை; எம்மனை-தாய்.]

**பூவினுட் பிறந்த தோன்றற் புண்ணியன் அனைய நம்பி**
**நாவினு ளுலக மெல்லா நடக்குமொன் றாது நின்ற**
**கோவினை யடர்க்க வந்து கொண்டுபோம் ஒருவ னின்னே**
**காவியங் கண்ணி னாயா மறைவது கரும மென்றாள் 316**

[பூ-இங்கே தாமரைமலர்; முருகக்கடவுள் தாமரை மலரிற் பிறந்தமை. நம்பி-பிள்ளை; ஒன்றாது-பொருந்தாமல்; கோ என்றது கட்டியங்காரனை. அடர்க்க-கொல்ல.]

தேன்சிந்தும் மலர்மாலை அணிந்த விசயை தன் புதல்வனின் நல்வினையை உணராமல் ''நான் இவனை வளர்க்க இனி என்ன செய்வேன்'' என்று வருந்தியிருக்க, எப்போதும் உடன் இருக்கும் சண்பகமாலை என்னும் பெயருடைய கூனியின் வடிவம் கொண்ட ஓர் தெய்வம் விசயையை அடைந்தது. விசயையின் விம்மியழும் துன்ப ஒலி கேட்டு, அவள் துயர்போக்கத் தெய்வம் ஒன்று துணைவந்தவுடன், நெடுமூச்சு விட்டு உள்ளத்தில் கொண்டகவலை நீங்கவும், ''எம் அன்னையே! செந்தாமரைப் பூவில் வாழும் பெண்மையே, நீ தனியாகி இத்துயர் அடைவதெல்லாம் நான் செய்த பாவமே என்று கூறிய கூனி உருவுடைய தெய்வம், தாமரைப் பூவிலே தோன்றிப் பொலிகின்ற முருகனைப் போன்ற இக்குழந்தையின் சொல்கேட்டு உலகமெல்லாம் நடக்கின்ற நாள்வரும். பகையுற்ற அரசனைக் கொல்லத் தக்கவிதத்திலே இவனை வளர்க்க இவனை இப்போதே ஒருவன் வந்து கொண்டு போவான் எனவே நாம் மறைந்து கொள்வது நல்லது'' என்றாள்.

**சின்மணி மழலை நாவிற் கிண்கிணி சிலம்பொடேங்கப்**
**யன்மணி விளக்கி னீழல் நம்பியைப் பள்ளி சேர்த்தி**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மின்மணி மிளிரத் தேவி மெல்லவே யொதுங்கு கின்றாள்
நன்மணி யீன்று முந்நீர்ச் சலஞ்சலம் புகுவ தொத்தாள் 317

[சின்மணி-சிலவாகிய மணிகள்; மழலைக் கிண்கிணி. நீழல்-நிழலில்; ஒதுங்குகின்றாள்-செல்கின்றாள்; மணி-முத்துக்களை; முந்நீர்-கடலில்.]

ஏதிலா ரிடர்பன் னூறு செய்யினுஞ் செய்த வெல்லாம்
தீதில வாக வென்று திருமுலைப் பான்ம டுத்துக்
காதலான் பெயர்சு மந்த கதிர்மணி யாழி சேர்த்திக்
கோதைதாழ் குழலி னாளைக் கொண்டுபோய் மறைய
நின்றாள் 318

[நூறு என்றது பல என்னும் பொருளில் வந்தது. காதலான்-சச்சந்தன்; ஆழி-மோதிரம்; கோதை-மாலை.]

நல்வினை செய்தி லாதே னம்பிநீ தமியை யாகிக்
கொல்வினை மாக்கள் சூழக் கிடத்தியோ வென்று விம்மாப்
புல்லிய கொம்பு தானோர் கருவிளை பூத்த தேபோல்
ஒல்கியோர் கொம்பு பற்றி யொருகணா னோக்கி நின்றாள்.

[மாக்கள்-விலங்குகள்; புல்லிய-தழுவிய; கருவிளை-ஒரு வகைக் கொடி; ஒல்கி-ஒதுங்கி; கணால்-கண்ணால்.]

மழலை மொழிபோல் ஒலிக்கும் பரல்களாகிய நாவினை உடைய கிண்கிணியும் சிலம்பும் ஏங்க, அணிந்திருக்கும் பல மணிகள் வீசும் ஒளியாகிய விளக்கின் நிழலிலே அமைத்த படுக்கையில் பிள்ளையைக் கிடத்தி, ஒளிசிந்தும் அணிமணிகள் சுடர்வீச மறையும் விசயை, ஒளி முத்தை ஈன்றுவிட்டுப் பின் உவர்க்கடல் உள்ளே செல்கின்ற சங்கினை ஒத்தாள். மாற்றார்கள் துயர்பல விளைத்தாலும், விளைத்த அத்துயர் எல்லாம் தீதின்றி நன்றாகுக என்று கூறித் தாய் முலைப்பாலூட்டி, சச்சந்தன் பெயர் பொறித்த கணையாழியை—மோதிரத்தை அக் குழந்தையின் மேல் வைத்துப் பின்னர் பூமாலை அணிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குழலுடைய விசயையை இழுத்துக் கொண்டுபோய்க் கூனி உருவுடைய தெய்வம் மறைந்து நிற்கவும் ''உனைப்பெற நல்வினைகள் நான் செய்திருந்தும் வளர்க்கப் பேறு பெறவில்லையே மகனே! நீ இப்போது தனியாகிக் கொடிய விலங்குகளுக்கு இரையாய்க் கிடக்கின்றனையே'' என்று அழுது ஒரு கொம்பைச் சுற்றிக் கருவிளைக் கொடி படர்ந்தது போல், ஒரு கொம்பிலே தன்னுடலை மறைத்துக் கொண்டு ஒரு கண்ணால் தன் மகனைப் பார்த்தபடி நின்றாள்.

## வேறு

**நாளொடு நடப்பது வழுக்கி மின்னொடூர்**
**கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தெனக்**
**காளக வுடையினன் கந்து நாமனும்**
**வாளொடு கனையிருள் வந்து தோன்றினான் 320**

*[நாளொடு - நட்சத்திரங்களோடு; வழுக்கி - தப்பி; காளகவுடை-கரிய உடை; காளகம்-கருமை; கனை இருள்-மிக்க இருள்.]*

**வாள்கடைந் தழுத்திய கண்ணி னார்கடந்**
**தோள்கடைந் தழுத்திய மார்பன் றூங்கிருள்**
**நீள்சுடர் நிழன்மணி கிழிப்ப நோக்கினான்**
**ஆள்கடிந் தணங்கிய வணங்கு காட்டுளே 321**

*[மார்பன்-கந்துக்கடன்; தூங்கிருள்-செறிந்த இருள்; நிழல்-ஒளி; அணங்கிய-வருத்திய; அணங்கு-தீண்டி வருத்தும் தெய்வம்.]*

**அருப்பிள முலையவர்க் கனங்க னாகிய**
**மருப்பிளம் பிறைநுதன் மதர்வை வெங்கதிர்**
**பரப்புபு கிடந்தெனக் கிடந்த நம்பியை**
**விருப்புள மிகுதியின் விரைவி னெய்தினான் 322**

*[அருப்பு-அரும்பு; அனங்கன்-மன்மதன்; நுதல்-நெற்றி; பரப்புபு-பரப்பி; உளமிகுதி-மனச் செருக்கு.]*

10

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நாள் மீன்களோடு செல்வதில் இருந்தும் தவறி, மின்னோடும் கோள்களுடனும் செல்கின்ற முழுமதி விண்ணை விட்டு மண்ணிலே வந்து வீழ்ந்து கிடப்பதனைப்போல, கரிய உடையணிந்த கந்துக்கடன் என்னும் வணிகன், அக்காரிருள் போர்த்த காட்டினுள் வாளொடும் வரலானான். வாள் பதித்தது போன்று வளைந்து நீண்ட கண்ணினை உடைய மங்கையரின் மார்பு அழுந்தத் தழுவிய மார்பை உடைய அவ்வணிகன், காரிருளைப் பிளந்து கொண்டு வீசும் மாணிக்கச்சுடர் போன்ற ஒளி வந்த திசையை, ஆட்களை வருத்தும் பேய்கள் வாழ்கின்ற அக்காட்டிடை நோக்கினான். நோக்கிய திசையில் தாமரை அரும்பு போன்ற கொங்கைகளை உடைய மங்கையருக்கு இன்பவேளாக, பிறைநுதல் போன்ற நெற்றியுடைய மங்கையருக்கு மயலூட்டும் விதத்தில் இள ஞாயிறு கதிர்பரப்பிக் கிடப்பதுபோல் கிடந்த அழகிய குழந்தையை அவ்வணிகனும் ஆவலோடு கண்டடைந்தான்.

**புனைகதிர்த் திருமணிப் பொன்செய் மோதிரம்**
**வனைமலர்த் தாரினான் மறைத்து வண்கையால்**
**துனைகதிர் முகந்தென முகப்பத் தும்மினான்**
**சினைமறைந் தொருகுரல் சீவ வென்றதே 323**

[தாரினான்-கந்துக்கடன்; துனை-விரைவு; முகப்ப-எடுப்ப; சீவ-சீவீத்திரு; தும்மியவுடன், 'ஜீவ நூறும் புகுக' என்றல் மரபு; சீவகன் என்று பெயர் வந்ததற்குக் காரணம். சினை-மரக்கிளை.]

**என்பெழுந் துருகுபு சோர ஈண்டிய**
**அன்பெழுந் தரசனுக் கவலித் தையனை**
**நுன்பழம் பகைதவ நூறு வாயென**
**இன்பழக் கிளவியி னிறைஞ்சி யேத்தினாள் 324**

[உருகுபு - உருகி; அரசனுக்கு - சச்சந்தனுக்கு; அவலித்து-வருந்தி; ஐயனை-பிள்ளையை; நுன்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உன்; நூறுவாய்-அழிப்பாய்; பழக்கிளவி-பழத்தின் சுவை போன்ற சொல்.]

ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினார்
அழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே
வழுக்கிய புதல்வனங் கொழிய மாமணி
விழுத்தகு மகனொடும் விரைவி னேகினான் 325

[ஒழுக்கு-ஒழுக்கம்; வழுக்கிய-இறந்த; ஒழிய-நீங்க; மணி-முத்து.]

கண்டதும் ஒளிவிடும் அழகிய மணிபதித்த பொன் மோதிரத்தை மலர்மாலை அணிந்த வணிகன் பிறர் அறியாதிருக்க மறைத்து வளமிக்க தன் கையால், இருள் போக்க விரைகின்ற கதிரை அள்ளி எடுப்பதுபோல் வாரி யெடுக்க, குழந்தையும் தும்மியது. தும்மலும், கிளை மறைவில் இருந்தொரு குரல், இறையருளால் நன்கு சீவிப்பாயாக எனுங்குறிப்பில் 'சீவ' என்றது. விசயையும் உயிருள்ளே தோன்றி உடலுருக அன்பு காட்டிய அரசனுக்காக இரங்கி, 'நின் பகைவரையெல்லாம் வேருடன் அழிப்பாய்' என்று இனிய கனிமொழியால் மகனை வாழ்த்தி இறைவனை வணங்கிப் போற்றினாள். நல்லொழுக்க நெறிவழி நின்று ஊனுடலை விட்டவர்கள் ஒப்புயர்வற்ற, ஒருவரும் அழிக்க முடியாத பொன் னுடம்பைப் பெற்றதுபோல், இறந்துபட்ட தன் புதல்வனைச் சுடுகாட்டிலே விட்டுவிட்டுக் கந்துக்கடன் மாமணி போன்ற வேறு ஒரு மகனோடு வீடு சேர்ந்தான்.

மின்னடு கனையிரு ணீந்தி மேதகு
பொன்னுடை வளநகர் பொழியப் புக்கபின்
தன்னுடை மதிசுடத் தளருந் தையலுக்
கின்னுடை யருண்மொழி யினிய செப்பினான் 326

[கனையிருள்-மிக்க இருள்; மேதகு-சிறந்த; நகர்-மனை; மதி-அறிவு; தையல்-கந்துக்கடனுடைய மனைவி; இன்னுடை-இனிமையயுடைய.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொருந்திய வுலகினுட் புகழ்கண் கூடிய
அருந்ததி யகற்றிய வாசில் கற்பினாய்
திருந்திய நின்மகன் றீதி னீங்கினான்
வருந்தனீ யெம்மனை வருக வென்னவே 327

[தீது-மரணம்; ஆசுஇல்-குற்றம் அற்ற.]

கள்ளலைத் திழிதருங் களிகொள் கோதைதன்
உள்ளலைத் தெழுதரு முவகை யூர்தர
வள்ளலை வல்விரைந் தெய்த நம்பியை
வெள்ளிலை வேலினான் விரகி னீட்டினான் 328

[கள்-தேன்; கோதை-சுநந்தை; வள்ளல்-கந்துக்கடன்; வல்விரைந்து-மிக விரைந்து; விரகு-உபாயம்.]

ஒளியையும் விழுங்கும் காரிருள் வனத்தைக் கடந்து சென்று, செல்வமிக்க நகரடைந்து வீடு சென்றபின் அங்கே, மகனைப் பிரிந்து மனச் சோர்வுற்றுத் தவிக்கும் தன் மனைவியிடம் முன்பொருமுனிவன் கூறிய இனிய மொழி பயன் தந்ததை எடுத்துச் சொல்வான்: ''உலகில் உள்ள புகழ் எல்லாம் ஒன்றுசேர்ந்து பிறந்த அருந்ததிக்கும் மேலான தூய கற்புடைய என்துணைவியே, நல்வினைகளாலே நின்மகன் சாதலினின்றும் தப்பினான். எனவே நீ வருந்தாமே அருகே வாவென்றழைத்து, வண்டுகள் மொய்த்து மலரிதழ்களை அலைக்கழிக்கத் தேன் சிதறும் மாலையணிந்த அவன் மனைவி சுநந்தை, உள்ளத்திலே உவகை பொங்க வியப்பு மேலிட்டவளாய், தன் கணவனை அன்போடு கடிந்து கொண்டு, குழந்தையை வாங்க நெருங்கவும், கந்துக்கடனும், வெள்ளிலை வேல் போன்ற முகமுடைய குழந்தையை — சீவகனை, விசயை அவனுக்கிட்டிருந்த நெற்றிப் பொட்டையும், விரல் மோதிரத்தையும் மறைத்து, சுநந்தை அவனைத் தன்மகன் என நம்புமாறு செய்து அவள் கையில் கொடுத்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**சுரிமுக வலம்புரி துவைத்த தூரியம்**
**விரிமுக விசும்புற வாய்விட் டார்த்தன**
**எரிமுக நித்தில மேந்திச் சேந்தபோற்**
**கரிமுக முலையினார் காய்பொன் சிந்தினார் 329**

*[சுரிமுகம்-சுழித்த முகம்; துவைத்த-இசைத்தன; விரிமுக விசும்பு - விரிந்த இடத்தையுடைய ஆகாயம்; எரி-நெருப்பு; நித்திலம்-முத்து; சேந்த போல் - சிவந்தனபோல; தூரியம் - நால்வகை வாத்தியம்.]*

**அழுகுரன் மயங்கிய அல்ல லாவணத்**
**தெழுகிளை மகிழ்ந்தெம தரசு வேண்டினான்**
**கழிபெருங் காதலான் கந்து நாமனென்று**
**உழிதரு பெருநிதி யுவப்ப நல்கினான் 330**

*[அல்லல்-துன்பம்; ஆவணம்-கடைத்தெரு; கிளை-சுற்றம்; கழிபெருங்காதல்-மிக்க பேரன்பு; கந்து நாமன்-கந்துக்கடன் என்னும் பெயரினோன்.]*

**திருமகற் பெற்றெனச் செம்பொற் குன்றெனப்**
**பெருநல நிதிதலை திறந்து பீடுடை**
**இருநிலத் திரவலர்க் கார்த்தி யின்னணம்**
**செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லுமே 331**

*[பொற்குன்று-மேருமலை; பீடு-பெருமை; இரவலர்-யாசகர்; ஆர்த்தி-நிரம்பக் கொடுத்து; செருநிலம்-போர் செய்யும் இடம்; பயப்பு-பயன்.]*

சுநந்தை கந்துக்கடனிடம் இருந்து குழந்தையை வாங்கிய அப்போது சுருண்ட வாயுடைய வலம்புரிச் சங்குகள் முழங்கின. இசைக்கருவிகள் வான்அதிர வாய் விட்டு ஆர்த்தன. ஒளிவிடும் முத்துக்கள் அணிந்ததால் சிவந்ததுபோல் தோன்றும் கரியமுகமுலையுடைய பெண்கள் பொற்காசுகளை வறியவர்க்கு வழங்கினர். சச்சந்தன் இறந்த துக்கத்தில் தோய்ந்திருக்கும் அங்காடி வீதிகளில், கந்துக்கடன் பிள்ளை கிடைத்ததால் கொண்டாடும் விழா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



முழக்கத்தின் ஒலி சென்று மோத, அவ்வொலி முழக்கத்தை, தன் உறவை விரும்பித் தான் ஆட்சிப் பொறுப் பேற்றதை மகிழ்ந்து கொண்டாடக் கந்துக்கடன் எடுக்கின்ற விழா முழக்கம் என்று நம்பிய கட்டியங்காரன் அவனுக்குப் பெருநிதியைப் பரிசாகத் தந்தான். இவ்விதமாகச் செல்வனை வளர்க்கப் பெற்ற பேற்றினை எண்ணிப் பொற்குன்றம் எனப்பெருகிக் கிடந்த நிதிக்குவியலைத் திறந்துவிட்டு, புகழ் மிக்க இப்பூவுலகில் இரப்போர்க்குத் தந்து, இன்னும் வரும்நாளில் அவன் போரிலும் புகழ் பெற்று விளங்க வாரி வழங்கினான்.

## வேறு

**நல்லுயிர் நீங்கலு நன்மாண் புடையதொர்**
**புல்லுயிர் தன்னொடு நின்றுழிப் புல்லுயிர்**
**கல்லுயிர் காட்டிற் கரப்பக் கலங்கவிழ்த்து**
**அல்லலுற் றாளுற்ற தாற்ற வுரைப்பாம்** **332**

[மாண்பு-மாட்சிமை; புல்லுயிர்-சீவகன்; கல்லுயிர் காடு-கல்லைப் பெற்ற மயானம்; கரப்ப-மறைத்தலால்; கலம்-மரக்கலம்.]

**பொறியறு பாவையிற் பொம்மென விம்மி**
**வெறியுறு கோவை வெறுநில மெய்த**
**இறுமுறை யெழுச்சியி னெய்துவ தெல்லாம்**
**நெறிமையிற் கூற நினைவி னகன்றாள்** **333**

[விம்மி-அழுது; வெறி-வாசனை; இறுமுறை-இறுதி; எழுச்சி - தொடக்கம்; நினைவு - வருத்தம்; பொம்ம-கடுகி.]

**பெருமகற் காக்கம் பிறழ்வின்றிக் கேட்டே**
**திருமகள் தானினிச் செய்வதை யெல்லாம்**
**ஒருமனத் தன்னா யுரையென லோடும்**
**தெருமரு தெய்வதஞ் செப்பிய தன்றே** **334**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[பெருமகன்-சீவகன்; திருமகள்-விசையை; தெருமரல்-சுழலுதல்; தெய்வம்-விசையையின் தோழியாகிய தெய்வம்.]

**மணியறைந் தன்ன வரியறல் ஐம்பாற்**
**பணிவருங் கற்பிற் படைமலர்க் கண்ணாய்**
**துணியிருட் போர்வையிற் றுன்னுபு போகி**
**அணிமணற் பேர்யாற் றமரிகை சார்வாம் 335**

[அறல்-கருமணல்; ஐம்பால் - ஐந்து பிரிவுடைய கூந்தல்; பணி-ஏவல்; அமரிகையாறு-ஏமாங்கத நாட்டிற்கும் தண்டகாரணியத்திற்கும் இடையிலுள்ள ஒரு நதி என்பர்.]

நல்லுயிர் போன்ற கணவன் சச்சந்தனை நீங்கி, புகழ் மிக்க சிற்றுயிராகிய குழந்தையுடன் இருக்க, கல்லும் முள்ளும் நிறைந்த சுடுகாட்டிலே அச்சிற்றுயிராகிய குழந்தையையும் தீவினையால் இழந்து; மரக்கலம் இழந்து கடலிலே தவிக்கின்றவர் அடைகின்ற துன்பத்தைப் போலத் துயருற்று வருந்திய விசையைக்குற்ற துன்பத்தை முற்றும் கூறுவோம். விசை அற்ற பாவைபோல் விம்மி அழுது இன்பவெறியூட்டும் எழிலுடையாள் தரையில் வீழ, தொடக்கத்திலும் முடிவிலும் வரக் கூடியவையெல்லாம் வரிசையுறக் கூனி சொல்லக் கேட்டும், தன் கனவின் பலனை எண்ணியும் கவலையை மறந்தாள். புகழ்ப் பெருமை அடையப்போகும் தன்மகனுக்கு வாய்க்கப் போகின்ற நலன்களையெல்லாம் நன்கு சரியுறக் கேட்டுத் தெரிந்துகொண்டு, ''நான் இனிச் செய்யவேண்டிய காரியங்களை எல்லாம், அன்னையே, எனக்கு அன்போடு சொல்லுக'' என்று திருமகள் போன்ற விசையை கேட்கவும் அவளுக்காக இரங்கி அத்தெய்வமும் ''நீல மணிகள் பதித்ததைப்போல் வரிவரியான கருமணல் போன்ற ஐம்பால் கூந்தலும், நல்லோர்கள் போற்றுகின்ற கற்புநெறியும், படர்பூப்போன்ற கண்களும் உடையவளே,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



இருட்போர்வையிலே மறைந்து சென்று அழகிய மணல் நிறைந்த பெரிய அமரிகை ஆற்றை அடைவோம்; அஞ்சா திரு'' என்று கூறியது.

அமரிகைக் கோசனை யைம்பது சென்றாற்
குமரிக் கொடிமதிற் கோபுர மூதூர்
தமரிய லோம்புந் தரணி திலகம்
நமரது மற்றது நண்ணல மாகி 336

[ஓசனை-நாற்காதம்; குமரி-அழிவின்மை; ஓம்பும்-பாதுகாக்கும்; தரணிதிலகம் - இராசமாபுரத்திற்கும் தண்டகாரணியத்திற்கும் இடையே உள்ளதோர் ஊர்; நண்ணலமாகி - அடையேமாகி.]

வண்டார் குவளைய வாவியும் பொய்கையும்
கண்டார் மனங்கவர் காவுங் கஞலிய
தண்டா ரணியத்துத் தாபதப் பள்ளியொன்
றுண்டாங் கதனு ளுறைகுவ மென்றாள் 337

[கா-சோலை; கஞலிய-தழைத்த; தாபதப்பள்ளி-தவஞ் செய்வோர் உறையுமிடம்.]

பொருளுடை வாய்மொழி போற்றினள் கூற
மருளுடை மாதர் மதித்தன ளாகி
அருளுடை மாதவ ரத்திசை முன்னி
இருளிடை மின்னி னிலங்கிழை சென்றாள் 338

[மாதர்-விசையை; மாதவரத் திசை-தாபதரைக் கொண்ட தண்ட காரணியம்; முன்னி-நினைத்து.]

## வேறு

உருவ மாமதி வாண்முகத் தோடிய
இருவி லும்மெறி மாமக ரக்குழைத்
திருவி லும்மிவை தேமொழி மாதரைப்
பொருவி னீளதர் போக்குவ போன்றவே 339

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[உருவம்-அழகு; ஓடிய-கெட்ட; வில்-ஒளி; திருவில்-பல நிறத்தையுடைய ஒளி; அதர்-வழி; பொருவில்-கொடுமை மிக்க.]

அத்தெய்வம் மேலும் ''அமரிகை ஆற்றைத் தாண்டி நூறுகாத தூரம் சென்றால் கொடிமரத்தையும், அழியா மதிற்கோபுரத்தையும் உடைய பழம்பெரும் பதியாகிய, எல்லோரையும் தமர் என்று காக்கின்ற தரணிதிலகம் என்னும் நம்மவர் ஊரினை அடைவோமாகில், வண்டுகள் மொய்க்கும் குவளைமலர்கள் நிறைந்த ஓடையும், பொய்கையும், கண்டவர் உள்ளம் கவரும் சோலைகளும் நிறைந்த தண்டகாரணியம் என்னும் காட்டிடைத் தவம்புரிவோர் தங்கும் இடம் ஒன்றிருக்கிறது. நாமும் அதனுள் சென்று தங்குவோம்'' என்றது. இவ்வித மாக அக்கூனிய உருவுடைய தெய்வமகளும் நல்லுரைகளை அன்போடு கூற, மயங்கிய நிலையில் கலங்கிக் கிடந்த விசையையும் அம்மொழிகளைச் சரியென்று ஏற்று அருளுடைய தவசிகள் வாழும் அத்தாபதப்பள்ளியிருக்கும் திசையை நோக்கி இருளிடை நெளிகின்ற மின்னலைப் போல், ஒளிவிளங்கும் அணியணிந்த விசயை, அக்கரிய காட்டிசைச் சென்றாள். அழகிய முழுமதி போன்ற முகத்தின் ஒளிநீங்க இப்போது நிறைந்த வருத்தத்தால் வந்து தங்கிய கரிய ஒளியும் காதில் அணிந்த மகரக் குழை வீசும் ஒளியும் ஆகிய இவை இன்மொழி பேசும் விசயையை அக்கொடிய இருட்பாதையிலே வழிநடத்திச் சென்றன.

## வேறு

**சிலம்பிரங்கிப் போற்றிசைப்பத் திருவிற்கைபோய் மெய்காப்ப**
**இலங்குபொற் கிண்கிணியுங் கலையுமேங்க வெறிவேற்கண்**
**மலங்கமணி மலர்ந்த பவளக்கொம்பு முழுமெய்யும்**
**சிலம்பிவலந் ததுபோற்போர் வைபோர்த்துச் செல்லுற்றாள்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கை-பக்கம்; கலை-மேகலை; மலங்க-சுழல; சிலம்பி என்றது சிலம்பியினூலை. வலந்ததுபோல்-சூழ்ந்தது போல.]

பஞ்சியட ரனிச்சநெருஞ்சி யீன்றபழ மாலென்று
அஞ்சுமல ரடிகளரங் கண்டன்ன வருங்காட்டுள்
குஞ்சித்த சைந்தசைந்து குருதிகான்று வெய்துயிரா
வஞ்சியிடை நுடங்கமயில் கைவீசி நடந்ததே 341

[அடர்-நெருக்கம்; குருதிகான்று-இரத்தத்தைக் கக்கி; வஞ்சியிடை-வஞ்சிக்கொடி போன்ற இடை; மயில்-விசயை; அரம்-வாளரவம்; குஞ்சித்து-குந்தி.]

காற்சிலம்பு வருந்திக் கதற, காதுக் குழை வீசும் ஒளி உடன் சென்று காக்க, பொன்னாலான பாதச்சிலம்பும் மேகலையும் பரிவுகூர, எரியும் வேல்போன்ற கண்கள் கலங்க, மணிபூத்த பவளக்கொடியொன்று, நூல்போர்த்து வலை பின்னும் சிலந்தி செல்வதேபோல் அக்காட்டு வழி யிடை அணிப் போர்வை அதுபோர்த்து நடக்கலுற்றாள். பஞ்சுப் பொதியையும் அனிச்ச மலரையும் நெருஞ்சி முள் ளென்று நினைத்து வருந்தும், பஞ்சிலும் மெல்லிய பாதங்கள், வாள்போலும் கூரிய பருக்கைக் கற்கள் நிறைந்த அக்காட்டு வழியிலே குந்திக் குந்தி இளைப்பாறி நடந்தபடியிருக்கும். கற்கள் கிழித்துப் பாதங்களில் வடியும் இரத்தத்தைக் கண்டு மனச்சோர்வு மிக அடைந்து, வஞ்சிக் கொடி போன்ற மெல்லிடை வருந்தி வாடத் தோகை மயில் போன்ற விசயை கைவீசி மெய்சோர்ந்து மேலும் நடந்தாள்.

## வேறு

தடங்கொள் தாமரைத் தாதுறை தேவியும்
குடங்கை போலுண்கட் கூனியுங் கூர்ம்பரற்
கடங்க ளும்மலை யுங்கடந் தார்புனல்
இடங்கொள் யாற்றக மெய்தின ரென்பவே 342

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[தேவி-திருமகள்; இங்கே விசயை. குடங்கை-உள்ளங்கை; பரல்-பருக்கைக்கல்; கடம்-காடு; யாறு-அமரிகையாறு.]

எல்லை யெய்திய வாயிரச் செங்கதிர்
மல்லல் மாக்கடல் தோன்றலும் வைகிருள்
தொல்லை நல்வினை முற்படத் தோன்றிய
அல்லல் வெவ்வினை போல வகன்றதே 343

[எல்லை எய்திய-உலகம் பகற்பொழுதை அடையும் பொருட்டெனினுமாம்; மல்லல் - வளப்பம்; தொல்லை-பழமை; வெவ்வினை-பாவம்.]

நுணங்கு நுண்கொடி மின்னொர் மழைமிசை
மணங்கொள் வார்பொழில் வந்துகி டந்ததொத்
தணங்கு நுண்டுகின் மேலசைந் தாளரோ
நிணங்கொள் வைந்நுதி வேனெடுங் கண்ணினாள் 344

[நுணங்கு-நுண்மை; கொடிமின்-கொடியைப் போன்ற மின்னல் எனினுமாம்; மழை-மேகம்.]

விரிந்த தாமரை மலரில் வாழும் திருமகள் போன்ற விசயையும், உள்ளங்கை போன்ற மையுண்ட கண்களை உடைய கூனியும் கூரிய பருக்கைக் கற்கள் நிறைந்து கிடக்கின்ற காட்டையும் மலையையும் கடந்து, நீர் நிறைந்து போகின்ற அமரிகை ஆற்றின் கரையை அடைந்ததும், இருளின் முடிவிலே தோன்றுகின்ற எண்ணற்ற கதிருடைய செங்கதிரோன், வளமிக்க பெருங்கடலில் தோன்றி எழ, பரவிக்கிடந்த இருளும், நல்வினை வந்துறச் சூழ்ந்திருக்கும் துன்பத் தீவினை தொலைவதுபோல் சென்றுகழிய, விசயையும் மிகமெலிந்த மின்னல் கீற்றொன்று, மழைமுகில் மேல் படிந்து கிடந்ததுபோல், இழை தெரியாது நெய்த பூந்துகில் போர்த்து, சதை பொருந்திய கூரிய நுனி உடைய வேல் போன்ற கண்களோடும், அவ்வமரிகையாற்றின் கரையில் உள்ள பொழிலிலே வந்து கிடந்தாள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வைகிற் றெம்மனை வாழிய போழ்தெனக்
கையி னானடி தைவரக் கண்மலர்ந்து
ஐய வோவென் றெழுந்தன ளாய்மதி
மொய்கொள் பூமி முளைப்பது போலவே 345

[வைகிற்று - விடிந்தது; எம்அனை - எம்அன்னாய்; போழ்து-பொழுது; தைவர-தடவ.]

தூவி யஞ்சிறை யன்னமுந் தோகையும்
மேவி மென்புன மானின மாதியா
நாவி நாறெழின் மேனியைக் கண்டுகண்டு
ஆவித் தாற்றுகி லாதழு திட்டவே 346

[தூவி-அன்னச்சிறகு; தோகை-மயில்; மேவி-விசயை யிருக்குமிடம் அடைந்து; புனம்-கொல்லை; நாவி. கஸ்தூரி மணம்; ஆவித்தல்-கொட்டாவி விடுதல்; ஆற்றுகிலாது-பொறுக்கமாட்டாமல்.]

கொம்மை வெம்முலைப் போதிற் கொடியனாள்
உம்மை நின்றதொ ரூழ்வினை யுண்மையால்
இம்மை யிவ்விட ருற்றன ளெய்தினாள்
செம்மை மாதவர் செய்தவப் பள்ளியே 347

[கொம்மை-பெருமை; போதிற் கொடியனாள்-தாமரை மலரிலுள்ள பூங்கொடி போன்ற திருமகள்; இங்கே விசையை. உம்மை-முற்பிறப்பு; ஊழ்வினை-தீவினை; செம்மை-சிறந்த.]

## வேறு

வாளுறை நெடுங்க ணாளை மாதவ மகளி ரெல்லாம்
தோளுறப் புல்லு வார்போற் றொக்கெதிர் கொண்டு புக்குத்
தாளுறு வருத்த மோம்பித் தவநெறிப் படுக்க லுற்று
நாளுறத் திங்க ளூர நல்லணி நீக்கு கின்றார் 348

[புல்லுதல்-தழுவுதல்; தொக்கு-கூடி; ஓம்பி - பாதுகாத்து; நாள்-நல்ல நாள், வளர்பிறையிலென்பார். அணி-ஆபரணம்; புக்கு-சென்று.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

''இருள் கழிந்தது, எம் அன்னையே எழுக—பொழுதும் புலர்ந்தது'' எனக் கூனி தன் கைகளால் விசையையின் திருவடிகளைத் தழுவி எழுப்பவும், ஐயோ எனத் துடித்துக் கண்விழித்த அவளும், முழுமதி மண்ணிலே முளைத்து எழுந்ததுபோல் விழித்து எழுந்தாள். அவள் விழிமலர் திறந்து எழுந்திடக் கண்ட மென்சிறகுடைய அன்னப் பறவையும், தோகை மயிலும், காட்டிடை வாழும் சிறு மான்களும், அங்குவந்து வாசங்கமழும் விசையையின் உடலைப் பார்த்துப் பார்த்து அவளுக்குற்ற துன்பத்தை எண்ணி வாய்விட்டழுதன. பருத்த வெதுவெதுப்பான முலையுடைய, மலர் நிறைந்தகொடி போன்ற உடலுடைய விசையையும் முற்பிறவியில் செய்த தீவினை வந்துற இங்கு இப்பிறவியில் இத்தகைய துன்பம் அடைந்தவளாகிச் சிறந்த மாதவர் தவம்புரியும் அறப்பள்ளியை அடைந்தாள். அடைந்ததும், வாள்போன்று நீண்ட கண்களை உடைய விசையையை அம்மாதவப் பள்ளியில் உள்ள மகளிர் எல்லாம் ஒன்று சேர்ந்து, தோளுறத் தழுவுதல்போல் எதிர்கொண்டழைத்துச் சென்று, அவள் நடந்திளைத்த வருத்தம் நீக்கித் தவநெறியில் செலுத்த எண்ணி, திங்கள் பிறை வளரும் நாளில்—வளர்பிறைப் பருவத்தில் அவள் அணிந்திருந்த அணிமணிகளைக் களைந்தனர். (கணவனை இழந்தாள் ஆதலாலும் தவம் பயில்வார்க்கு அணிமணிகள் கூடாதாகையினாலும் அவற்றைக் களைந்து நீக்கினர்.)

## வேறு

திருந்து தகரச் செந்நெருப்பிற் றேன்றோய்த் தமிர்தங்
கொளவுயிர்க்கும்
கருங்கா ழகிலி னறும்புகையிற் கழுமிக் கோதை
கண்படுக்கும்
திருந்து நானக் குழல்புலம்பத் தேனும் வண்டு மிசைப்புலமப
அரும்பொன் மாலை யலங்கலோ டாரம் புலம்ப வகற்றினாள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations.


[தகரம்-ஒருவகை வாசனை மரம்; கழுமி-மயங்கி; கண்படுக்கும்-உறங்கும்; நானம்-கஸ்தூரி; தேன்-ஒருவகை வண்டு; அலங்கல்-நெற்றிச்சுட்டி; கருங் காழ் அகில்-கரிய அகில் கட்டை.]

திங்க ளுகிரிற் சொலிப்பதுபோல் திலகம் விரலிற் றாணீக்கிப்
பைம்பொன் மகர குண்டலமும் பாவை கழுத்தி னணிகலமும்
வெங்கண் வேந்தற் கமிர்தாகி வேற்கட் பாவை பகையாய
அங்கண் முலையி னணிமுத்து மரும்பொற்பூணு
மகற்றினாள் 350

[உகிர்-நகம்; சொலிப்பது போல்-நீக்குவதுபோல்; அங்கண்-அழகியதாகிய.]

பஞ்சி யனைய வேய்மென்றோட் பகுவாய் மகரங் கான்றிட்ட
துஞ்சாக் கதிர்கொ டுணைமுத்தந் தொழுதே னும்மை
யெனத்துறந்து
அஞ்சி வருத்து நுசுப்பினாள் வளைகை யுடைத்து
மணிக்காந்தள்
அஞ்சச் சிவந்த மெல்விரல்சூ ழரும்பொ னாழி யகற்றினாள்

[பஞ்சி அனைய-பஞ்சணையைப் போன்ற; மகரம் கான்றிட்ட-மகரமீன் உமிழ்ந்த கொடி; நுசுப்பு-இடை; காந்தள்-காந்தளின் மலர்; ஆழி-மோதிரம்.]

நல்ல தகர விறகிட்டு எரிக்கின்ற பெருநெருப்பில் தேனில் தோய்த்து இட்ட கரிய அகில்கட்டையின் இனிய மணத்திலே தோய்ந்து வளர்ந்த; மலர்மாலை அணிந்த புனுகுமணங் கமழும் கூந்தல் வருந்தவும் தேனுண்ணும் மலர்வண்டு வருந்தி வாடவும், பொன்மணி மாலையையும், நெற்றிச் சுட்டியையும், தலைமுடி சுமந்த முத்து வடத்தையும் நீக்கினாள். திங்களை நகத்தால் கீறுவது போல் நெற்றித் திலகத்தை விரலால் நீக்கி, பசும் பொன்னால் செய்தணிந்த காதுக் குழையையும், தோட்டையும், கழுத்துமணிகளையும், விருப்பமிகு கண்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ணுடைய மன்னனுக்கு விருந்தூட்டும் அமுதமாகி; அரசனின் அவ்வேட்கை மிகுதியே தனக்குக் கேடாகவும் ஆகக் காரணமாகிய அழகிய முலைமேல் அணிந்த முத்துச் சரங்களையும், அழகிய பொற்பூண்களையும் அகற்றினாள். மேலும் பஞ்சுபோன்று மெல்லிய மூங்கில் போலும் வளைந்த தோள்களில் அணிந்த, வாய்பிளந்து வரும் மகரமீன் போன்று நீங்காத ஒளி உடைய பல முத்துக்களால் செய்தமைத்த அணியையும் அரசே உம்மை வணங்கினேன் எனக்கூறி நீக்கி, கைவளையல்களைக் கழற்றி உடைத்துக் காந்தள் மென்மலர் வருந்தச் சிவந்த மெல்லிய மணிவிரல்களில் அணிந்திருந்த மோதிரத்தையும் கழற்றினாள்.

**பூப்பெய் செம்பொற் கோடிகமும் பொன்னா ரால வட்டமும்**
**ஆக்கு மணிசெய் தேர்த்தட்டு மரவின் பையு மடுமல்குல்**
**வீக்கி மின்னுங் கலையெல்லாம் வேந்தன் போகி யரம்பையரை**
**நோக்கி நும்மை நோக்காநீர் நோவா தொழிமி னெனத்துறந்தாள் 352**

*[கோடிகம்-தட்டு; வீக்கி - கட்டப்பட்டு; கலை-மேகலை; நோவாது-வருந்தாது.]*

**பிடிக்கை போலுந் திரள்குறங்கி னணியு நீக்கிப் பிணையன்னாள்**
**அடிக்கிண் கிணியு மஞ்சிலம்பும் விரன்மோ திரத்தோ டகற்றியபின்**
**கொடிப்பூத் துதிர்ந்த தோற்றம்போற் கொள்ளத் தோன்றி யணங்கலற**
**உடுத்தாள் கற்றோய் நுண்கலிங்க முரவோன் சிறுவ னுயர்கெனவே 353**

*[பிடிக்கை-பெண்யானையின் துதிக்கை; குறங்கினணி-குறங்கு செறி என்னும் ஆபரணம்; பிணை-பெண் மான்; விரல் மோதிரம்-கால் விரலில் அணியும்*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மோதிரம்; அணங்கு - கூனிவடிவமாக வந்த தெய்வம்; கல்தோய் நுண்கலிங்கம்-காவிக்கல்லில் தோய்த்த நுண்ணிய நூலாற் செய்யப்பட்ட புடைவை; உரவோன்-அறிவுடையவன்.]

## வேறு

**பாலுடை யமிர்தம் பைம்பொற் கலத்திடைப் பாவை யன்ன**
**நூலடு நுசுப்பி னல்லா ரேந்தவு நேர்ந்து நோக்காச்**
**சேலடு கண்ணி காந்தட் டிருமணித் துடுப்பு முன்கை**
**வாலடகு அருளிச் செய்ய வனத்துறை தெய்வ மானாள்**

[பாவையன்ன-கொல்லிப் பாவையைப் போன்ற அழகுடைய; நூலடு-பஞ்சுநூலை வருத்துகின்ற; அடகு-தூய்மையான இலைகளை; சேல்-மீன்; அடு-பழிக்கின்ற.]

பூச்சூடும் பொன்னாலான தட்டையும், பொன் ஆல வட்டத்தையும், மணியாலமைத்த தேர்த்தட்டையும், பாம்பின் படத்தையும் பழிக்கின்ற அல்குலிலே அழகுற அணிந்து மின்னுகின்ற மேகலையை, அரசனாகிய சச்சந்தன் விண்ணுலகு சென்றதால், அரம்பையர் போன்ற வான் மகளிரை விரும்புவதல்லாமல் ''நும்மைத் திரும்பியும் பாரான் எனவே நீங்கள் எல்லாம் வருந்தாமல் செல்க'' — எனச் சொல்வதுபோல் கழற்றி வைத்தாள். பெண்யானையின் துதிக்கை போன்ற திரண்ட தொடையில் அணிந்திருந்த 'குறங்குசெறி' என்னும் அணிகலனை நீக்கி, பெண்மான் போன்ற விசையை, காலில் அணிந்திருந்த கிண்கிணியையும் சிலம்பையும், விரல் மோதிரங்களையும் கழற்றிவிட்டுப் பூத்துக் குலுங்கிய கொடி ஒன்று பூமலர்களை எல்லாம் உதிர்த்துவிட்டு மொட்டையாய் இருப்பதுபோல், அணிமணிகளை எல்லாம் களைந்தெறிந்துவிட்டு அவள் இருந்த தோற்றத்தைக் கண்டு கூனி உருக்கொண்டு உடன்வந்த தெய்வமும் அவள் நிலைக்கு இரங்கி வாய்விட்டுக் கதற அவளும், அறிவுடை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யோனாகத் தன் மகன் உயர்வடைய எண்ணிக் காவி நனைத்த துவராடையை உடுத்துக் கொண்டாள். பால் ஊற்றிப் பெய்த அமுதம் போன்ற உணவை, பொற் கிண்ணத்திலே இட்டு, பொற்பாவை போன்ற சிற்றிடை மகளிர் ஏந்தி வந்து எதிர்நிற்பினும், அதனை விரும்பி நோக்காத, மீனைப் பழிக்கின்ற விழியுடைய விசையை, இப்போது அழகிய காந்தள் மென்மலர் போன்ற தன் முன்கை விரல்நீட்டி இலை கறியை ஏற்று உண்ணக் வனத்திடை வாழும் தெய்வம் போல் விளங்கினாள். (தூய்மையும் எளிமையும் நோக்க வனத்துறை தெய்வம் என்றார்.)

**மெல்விரன் மெலியக் கொய்த குளநெல்லும் விளைந்த வாம்பல்**
**அல்லியும் உணங்கு முன்றி லணில்விளித் திரிய வாமான்**
**புல்லிய குழவித் திங்கட் பொழிகதிர்க் குப்பை போலு**
**நல்லெழிற் கவரி யூட்ட நம்பியை நினைக்கு மன்றே 355**

[குளநெல்-ஒருவகைத் தானியம்; அல்லி-அல்லியரிசி; இஃது அல்லிப்பூவின் உட்கொட்டையில் உள்ளது. உணங்கும் - உலரும்; அணில் - அணிற்பிள்ளை; ஆமான் - காட்டுப்பசு; கதிர்க்குப்பை - கதிரின் கற்றை; கவரி-கவரி என்னும் மான்; விளித்திரிய- கத்தி அலற.]

**பெண்மைநாண் வனப்புச் சாயல் பெருமட மாது பேசின்**
**ஒண்மையி னொருங்கு கூடி யுருவுகொண் டனைய நங்கை**
**நண்ணிய நுங்கட் கெல்லா மடைக்கல மென்று நாடும்**
**கண்ணிய குலனுந் தெய்வங் கரந்துரைத் தெழுந்த தன்றே**

[நாண்-நாணம்; வனப்பு-அழகு; சாயல்-மென்மை; மாது-காதல்; ஒண்மை-விளக்கம்; கண்ணிய- கருதிய; தெய்வம்-கூனி; கரந்து-மறைத்து.]

தங்கள் மென்விரல் சோர்வுறத் தவமகளிர் பறித்த குள நெல்லும், முற்றிய ஆம்பலல்லி அரிசியும் உலரும் தவப்


CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பள்ளியின் முன்வாயிலில், அணில் கத்திக்கொண்டோடப் பயந்து வந்து அணைத்துக் கொண்ட காட்டுப் பசுவின் கன்றினுக்கு, திங்கள் பொழியும் கதிர்க்கற்றை போலும் அழகிய மயிர்க்கற்றை உடைய கவரிமான் பாலூட்ட, அது கண்ட விசையையும் இதுபோன்றே தன் தாய்முலைப் பால் இன்றிப் பிறர் முலைப் பாலுண்டு வளரும் தன் மகனை எண்ணி வருந்துவாள். ''பெண்மைக்குரிய நாணமும், அழகும், மென்மையும், பெருமைமிக்க நீங்காத காதலும் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்தால் அவையெல்லாம் ஒன்றுகூடி ஓர் உருவாய்ச் சமைந்ததுபோல் விளங்கும் நங்கையாகிய இவள், நற்பண்புகள் எல்லாம் பொருந்தி இருக்கின்ற தவமகளிராகிய உங்களுக்கு எல்லா வகையிலும் ஏற்ற அடைக்கலப் பொருளாயினள்'' என்று கூறி, விசையையின் நாட்டையும், போற்றற்கரிய அவள் குலப் பெருமையையும் மறைத்துக் கூறிப் பின்போவதற்கு முற்பட்டது.

## வேறு

உறுதி சூழ்ந்தவ ணோடலி னாயிடை
மறுவில் வெண்குடை மன்னவன் காதலஞ்
சிறுவன் றன்மையைச் சேர்ந்தறிந் திவ்வழிக்
குறுக வம்மெனக் கூனியைப் போக்கினாள் 357

[உறுதி-நன்மை; ஓடல்-போதல்; சிறுவன்-சீவகன்; வம்மென-வாருமென்று.]

நெஞ்சி னொத்தினி யாளையென் னீர்மையால்
வஞ்சித் தேனென வஞ்சியங் கொம்பனாள்
பஞ்சி மெல்லடிப் பல்கல னார்ப்பச்சென்று
இஞ்சி மாநகர்த் தன்னிட மெய்தினாள் 358

[நீர்மை - தெய்வத்தன்மை; கொம்பனாள்-கூனி; பஞ்சி-செம்பஞ்சு; கலன்-ஆபரணம்; இஞ்சி-மதில்; ஆர்ப்ப-ஒலிக்க.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தானுந் தன்னுணர் விற்றளர்ந் தாற்றவும்
மானி னோக்கிவ ரும்வழி நோக்கிநின்று
ஆனி யம்பல வாசையிற் செல்லுமே
தேனி யம்புமொர் தேம்பொழிற் பள்ளியே 359

[ஆற்றவும்-மிகவும்; பல ஆனியம்-பல நாள்; தேன்-ஒருவகை வண்டு; பொழிற்பள்ளி - சோலையிலுள்ள பள்ளியிடம்.]

இவ்விதமாகத் தெய்வம் விசையைப் பிரிந்து செல்ல உறுதி கொள்ளவும், இராசமாபுரத்தில், குற்றமற்ற வெண்கொற்றக் குடைக்கீழ் ஆண்ட மன்னன் சச்சந்தனின் அன்புக்குரிய மகனின் நிலையைக் கண்டறிந்து வந்து எனக்குச் சீக்கிரம் சொல் என்று கூறிக் கூனியைப் போக விட்டாள். மனம் விரும்புகிற இனிய பண்புடைய விசையை மனமறிய என் தெய்வத்தன்மை காரணமாக வஞ்சித்து விட்டேனே என வருந்தி வஞ்சிக் கொடிபோன்ற அழகிய தெய்வமாதும், பஞ்சிலும் மெல்லிய அடிகளில் பூட்டிய பலகலன்களும் ஒலிக்கப் பெரிய மதில் சூழ்ந்த இராசமாபுரத்தின் புறத்தே உள்ள சுடுகாட்டை அடைந்தது. விசையையின் மகனின் நிலையறிந்து அத்தெய்வம் மீண்டும் வந்து சொல்லப் போவதில்லை எனினும், அவளின் மன நிறைவுக்காக அப்படிச் செய்வதாக ஒப்புக் கொண்டதையே (தன் உண்மை உருக்காட்ட முடியாததால்) மனமறிய வஞ்சித்தேன் என்று கூறியது. விசையையும் அக்கூனியைத் தெய்வம் என்று உணர்ந்து கொள்ள முடியாது தவித்து, மான்போன்ற நோக்கோடு அக்கூனி (மீண்டும் வருவாள் என்று நம்பி) ஆசையோடு வாசல்வழி பார்த்து நின்று பல நாள் செல்ல வண்டுகள் மொய்க்கும் மலர்ப் பொழிலிலே உள்ள அத்தவப்பள்ளியில் வாழ்வாளாயினள்.

## வேறு

மட்டவிழ் கோதை வாளன வுண்கண் மயிலன்னாள்
கட்டழ லெவ்வங் கைம்மிக நீக்கிக் களிகூர
விட்டகல் வாற்றா வேட்கையி னோடும் பொழுதுஇப்பாற்
பட்டதை யெல்லாம் பல்லவர் கேட்கப் பகர்குற்றேன் 360

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[மட்டு-தேன்; எவ்வம்-துன்பம்; கூர-மிக; பட்டது-உண்டான செயல்; கட்டழல்-பெருநெருப்பு.]

**கூற்றம் மஞ்சுங் கொன்னுனை யெஃகின் னிளையானும்**
**மாற்றம் மஞ்சும் மன்னிய கற்பின் மடவாளும்**
**போற்றித் தந்த புண்ணியர் கூடிப் புகழோனைச்**
**சீற்றத் துப்பிற் சீவக னென்றே பெயரிட்டார் 361**

[கூற்றம்-யமன்; கொன்னுனை-கொல்லுகின்ற நுனி; எஃகு-வேல்; இளையான்-கந்துக்கடன்; மாற்றம்-சொல்; மன்னிய - நிலைபெற்ற; மடவாள்-சுநந்தை; புகழோன்-சீவகன்; சீற்றத்துப்பு-கோபவன்மை.]

**மேகம் மீன்ற மின்னனை யாள்தன் மிளிர்பைம்பூண்**
**ஆகம் மீன்ற வம்முலை யின்பா லமிர்தேந்தப்**
**போகம் மீன்ற புண்ணிய னெய்த கணையேபோல்**
**மாகம் மீன்ற மாமதி யன்னான் வளர்கின்றான் 362**

[மின்னனையாள்-சுநந்தை; ஆகம்-மார்பு; போகம்-இன்பம்; புண்ணியன்-சிவபெருமான்; கணை-அம்பு; மாகம்-ஆகாயம்.]

தேன்வழியும் மலர்மாலையும் வாள்போன்ற மை உண்ட கண்ணும் மயிலனைய சாயலும் உடைய, சுநந்தையின் மகனை இழந்த துயரப்பெரு நெருப்பாகிய துன்பம் சிறிதும் இன்றி, இன்பம் உண்டாக, பலரும் குழந்தைகளை விட்டு நீங்காத விருப்பத்துடன் கழித்த இராப்பொழுதிற்குப் பிறகு சீவகச் சிறுவனுக்கு நேர்ந்ததையெல்லாம், எல்லாருங் கேட்கக் கூறுகின்றேன் கேண்மின்.

கொல்கின்ற காலனே கண்டஞ்சுகின்ற நுனிமுனை உடைய வேலேந்திய கந்துக்கடனும், கணவன் சொல்லுக்கு மாற்றுரைக்க அஞ்சுகின்ற சிறந்த கற்புடைய சுநந்தையும், வந்திருந்த பெரியோர்களும் சேர்ந்து, புகழ்பெறத்தக்க சினவலி உடையோனைச் ''சீவகன்'' என்றழைத்துப் பெயர் சூட்டினர். மழைமுகிலிடைப் பிறந்த மின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போன்ற சுநந்தை பொன்னணி புனைந்த மார்பிடைத் தோன்றிய அழகிய முலையின் இனிய பாலாகிய அமுதத்தைக் கொடுக்க, உலகுக்கு இன்பஉயிர் ஊட்டிய அருளாளனாகிய சிவபிரான் எய்த அம்பாகிய திருமால் ஆய்ப்பாடியில் நந்தகோபன் மகனாக மறைந்து வளர்ந்தது போல், விண்ணிலே பிறந்த பிறைநிலவு பெருகி வளர்வதுபோல் கந்துக்கடன் மகனாகச் சீவகன் அவன் வீட்டிலே வளர்ந்து வருவான்.

**அம்பொற் கொம்பி னாயிழை ஐவர் நலனோம்பப்**
**பைம்பொற் பூமிப் பல்கதிர் முத்தார் சகடம்மும்**
**செம்பொற் றேரும் வேழமு மூர்ந்து நிதிசிந்தி**
**நம்பன் செல்லு நாளினு நாளு நலமிக்கே** 363

*[பூமி-பூமியில்; சகடம்-வண்டி; நம்பன்-விரும்பத் தக்கவன்.]*

**பல்பூம் பொய்கைத் தாமரை போன்றும் பனிவானத்**
**தெல்லார் கண்ணு மின்புற வூரும் மதிபோன்றும்**
**கொல்லுஞ் சிங்கக் குட்டியும் போன்றிவ் வுலகேத்தச்**
**செல்லும் மன்னோ சீவகன் தெய்வப் பகைவென்றே** 364

*[பல்பூம் பொய்கை-பல பூக்களையுடைய பொய்கையில்; எல்லார்-ஒளியையுடைய தேவர்; எல்-ஒளி; தெய்வப்பகை-தெய்வ தோஷத்தால் வரும் பகை.]*

**மணியும் முத்தும் மாசறு பொன்னும் பவளம்மும்**
**அணியும் பெய்யும் மாரியி னேற்பார்க் கவைநல்கிக்**
**கணிதம் மில்லாக் கற்பகங் கந்துக் கடனொத்தான்**
**இணைவே லுண்கண் சுநந்தையு மின்பக் கொடியொத்தாள்**

*[மணி-மாணிக்கம்; அணி-ஆபரணம்; மாரி-மேகம்; நல்கி-கொடுத்து; கணிதம் - அளவு; இன்பக் கொடி-காமவல்லிக்கொடி; உண்கண்-மைஉண்ட கண்.]*

அழகிய பொன்னணி பூட்டிய ஐவகைச் செவிலித் தாயாரும் அவன் நலத்தையெல்லாம் காத்திருக்கப் பசும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொன் மணி பதித்த தரையில் ஒளி சிந்தும் பல முத்துக்கள் பதித்த வண்டியைச் செலுத்தியும் செம் பொன்னாலான தேரை உருட்டியும், பொன்யானை ஊர்ந்தும், பொன்னைப் பிறர்க்கு ஈந்தும் நாள்தோறும் நாள்தோறும் நல்லழகு சேரச் சீவகனும் வளரலானான். பல பூக்கள் நிறைந்த பொய்கையிலே பூத்துக் கிடக்கின்ற பெரிய தாமரை மலர் போலும், குளிர் வானில் தோன்றி எல்லார் கண்களுக்கும் இன்பம் அளிக்கின்ற நிலவு போலும், கொல்லும் வலிமை மிக்க சிங்கக்குட்டியும்போல் இவ்வுலகோர் புகழ, தெய்வக் குறைகளால் குழந்தைகளுக்கு உண்டாகும் துன்பம் ஒன்றும் சேராமல் சீவகன் வளரலானான். மணியும், முத்தும், மாசறு பசும் பொன்னும், பவளமும், அணிகளும், மழைபோல் பலர்க்கும் வாரி வழங்கி, கந்துக்கடன் கணக்கின்றித் தரும் கற்பகத்தருவை ஒத்தான்; இணைந்த வேல் போன்ற மைதீட்டிய கண்ணுடைய அவன் மனைவியாகிய சுநந்தையோ அக்கற்பகத் தருவிலே படரும் காமவல்லிக் கொடியை ஒத்தாள்.

**சாதிப் பைம்பொன் தன்னொளி வெளவித் தகைகுன்றா**
**நீதிச் செல்வம் மேன்மே னீந்தி நிறைவெய்திப்**
**போதிச் செல்வம் பூண்டவ ரேத்தும் பொலிவின்னால்**
**ஆதிக் காலத் தந்தணன் காதல் மகனொத்தான் 366**

[சாதிப் பைம்பொன்-உயர்ந்த சாதிப் பொன்; வெளவி-கைக் கொண்டு; தகை-பெருமை; போதி-ஞானம்; மேன்மேல்-மேலும் மேலும்; அந்தணன் மகள்-பிரமன் மகன் சுவாயம்பு.]

## வேறு

**நனந்தலை யுலகின் மிக்க நன்னுதன் மகளிர் தங்கள்**
**மனந்தளை பரிய நின்ற மதலைமை யாடு கென்றே**
**பொனங்கொடி யிறைஞ்சி நின்று பூமகள் புலம்பி வைக**
**அனங்கனுக் கவலஞ் செய்யும் அண்ணல் நற்றாய்**
**உரைத்தாள் 367**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[நனந்தலை உலகு-பரந்த இடத்தையுடைய உலகம்; மனந்தளை - மனவருத்தம்; பரிய - நீங்க; மைஆடுக-மை ஓலை பிடிக்க; பொனங்கொடி-பொற்கொடி; அனங்கன்-மன்மதன்; அவலஞ் செய்யும்-பழிக்கும்.]

**முழவெனத் திரண்ட திண்டோள் மூரிவெஞ் சிலையி னானும்**
**அழலெனக் கனலும் வாட்க ணவ்வளைத் தோளி னாளும்**
**மழலையாழ் மருட்டுந் தீஞ்சொன் மதலையை மயிலஞ் சாயற்**
**குழைமுக ஞான மென்னுங் குமரியைப் புணர்க்க லுற்றார்**

[மூரி-பெருமை; தோளினாள்-சுநந்தை; மதலை-சீவகன்; தீஞ்சொல்-இனிய சொல்; குமரி-கன்னி, ஞானமென்னும் குமரி.]

மாற்றுக் குறையாத பசும்பொன்னின் ஒளியைப் பெற்று, குறைவுறாத நன்னெறிகளை மேலும் மேலும் ஆராய்ந்தறிந்து கல்வி கற்கும் பருவம் அடைந்து, போதிச்சத்துவனின் அருட்செல்வம் பெற்றவர் போற்றும் புகழினால் முற்காலத்தில் நான்முகன் மகன்ஆன சுவாயம்பு மனுவை ஒத்தான். 'விரிந்து பரந்த இடமுடைய இவ்வுலகிலே நிறைந்திருக்கின்ற மகளிருடைய மனவருத்தம் நீங்க, இருக்கின்ற மைஓலை பிடிக்க' என்று பூமகள் தனித்துப் போகப்பொற்கொடி போன்ற,காமனை வெல்லும் அழகுடைய சீவகனின் தாய் வேண்டிக்கேட்டுக் கொண்டாள். முழவினைப்போல் உருண்டு திரண்ட பெரிய தோளையும், பெரிய கொடுமைமிக்க வில்லையும் உடைய கந்துக்கடனும், நெருப்பெனச் சிவந்த வாள் போலும் கண்ணுடைய அழகிய வளைந்த தோள்களை உடைய சுநந்தையும் யாழ் போலும் இனிய மழலை மொழி உதிர்க்கும் சீவகச் சேய்க்கு மயில் போன்ற எழிலும் குழையணிந்த காதும் உடைய கலைச்செல்வியின் கலையின்பம் கற்க விட்டனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அரும்பொனு மணியு முத்துங் காணமுங் குறுணி யாகப்
பரந்தெலாப் பிரப்பும் வைத்துப் பைம்பொன்செய் தவிசி
னுச்சி
இருந்துபொன் னோலை செம்பொ னூசியா லெழுதி யேற்பத்
திருந்துபொற் கண்ணி யாற்குச் செல்வியைச் சேர்த்தி
னாரே 369

[காணம்-பொற்காசு: செல்வி-நாமகள்; நாமகளைச் செல்வி யென்றார், கல்விச் செல்வத்தைக் கொடுப்பவளாதலின்; பிரப்பும்-பிரப்பரிசியும்.]

நாமக ணலத்தை யெல்லா நயந்துடன் பருகி நன்னூல்
ஏமுத லாய வெல்லாப் படைக்கலத் தொழிலு முற்றிக்
காமனுங் கனிய வைத்த புலங்கரை கண்டு கண்ணார்
பூமகள் பொலிந்த மார்பன் புவிமிசைத் திலக மொத்தான்

[நாமகள் நலம்-கல்வி நலம்; ஏ-அம்பு; முற்றி-முற்றக் கற்று; காமன்-மன்மதன்; புலம்-இசை நூல்.]

மின்தெளித் தெழுதி யன்ன விளங்குநுண் ணுசுப்பி னல்லார்
பொன்தெளித் தெழுதி யன்ன பூம்புறப் பசலை மூழ்கிக்
குன்றொளித் தொழிய நின்ற குங்குமத் தோளி னாற்குக்
கன்றொளித் தகல வைத்த கறவையிற் கனிந்து நின்றார்

[தெளித்து-தெளிவித்து; நல்லார்-மங்கையர்; பூம்புறம்-பொலிவு பெற்ற மெய்யிடம்; பசலை-தேமல்; ஒளித்து ஒழிய-இவனுடைய தோளைக் கண்டு மறைந்து போக, கறவை-பசு.]

விலைபகர்ந் தல்குல் விற்கும் வேலினும் வெய்ய கண்ணார்
முலைமுகந் திளையர் மார்ப முரிவில ரெழுதி வாழும்
கலையிகந் தினிய சொல்லார் கங்குலும் பகலு மெல்லாம்
சிலையிகந் துயர்ந்த திண்டோட் சீவகற் கரற்றி யாற்றார்

[பகர்ந்து-கூறி; இளையர்-சிறுவர்; முரிவிலர்-நீங்கார்; சிலை-வில்; இகந்த-தெரிந்த; அரற்றி-அழுது.]

சிறந்த பொன்னும் மணியும் முத்தும் பொற்காசுகளும் குறுணி அளவு எல்லாப்பிரப்பரிசியும் வைத்து, புதிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொன் இருக்கையின் மேலமரச்செய்து, பசும்பொன் ஓலையிலே செம்பொன் ஊசிகொண்டு எழுதி, அழகிய பொன் மாலை அணிந்த சீவகன் கல்வி கற்கவிட்டனர். கலைச் செல்வியின் நயமிகு பயனைஎல்லாம் நலமுறக் கற்றுத்தேறி, நல்ல நூலறிவு முதல் படைக்கலப் பயிற்சியெல்லாம் குறைவறக் கற்று, காமனும் கேட்க மயங்கும் இசைக் கலையிலும் கரைகண்டு கண்மயங்கும் அழகுடைய, திருப்பொலியும் மார்பனாகிய சீவகன் நிலமகள் நெற்றித் திலகமென விளங்கினான். மின்னை இழுத்திப் பதித்து விளங்கவைத்தது போன்ற மெல்லிடை உடைய பெண்கள், பொன் அள்ளித் தெளித்தது போல் காதலால் உடலிலே பசலை படரக் குன்றை மறைத்தொளிக்கும் பெரிய, குங்குமம் அணிந்த தோளுடைய சீவகனை எண்ணி, பாலுண்ணாமல் கன்றை மறைத்து எடுத்துச் செல்லத் தவித்து நிற்கின்ற தாய்ப் பசுவைப் போல் உருகி நின்றனர். அல்குலை விலைகூறித் தரத்தக்க வேல் போன்ற கொடிய இன்பமூட்டும் கண்ணுடையவரும், இளைஞர் மார்பை தம் முலையால் உழுது இடைவிடாது இன்பச்சுவை எழுதி வாழும் இனிய மொழி பேசுவோரும் இரவும் பகலுமாக, வில்வித்தையில் சிறந்தோங்கிய திண்தோளுடைய சீவகனை எண்ணி யெண்ணி ஏங்குவர்.

வான்சுவை யமிர்த வெள்ளம் வந்திவட் டொக்க தென்னத்
தான்சுவைக் கொண்ட தெல்லாந் தணப்பறக் கொடுத்த பின்றைத்
தேன்சுவைத் தரற்றும் பைந்தார்ச் சீவக குமர னென்ற
ஊன்சுவைத் தொளிறும் வேலாற் குறுதியொன் றுரைக்க லுற்றான் 373

[இவண் தொக்கது-இவ்விடத்தில் நிறைந்தது; தணப் பற-தடையின்றி.]

நூனெறி வகையி னோக்கி நுண்ணிதி னுழைந்து தீமைப்
பானெறி பலவு நீக்கிப் பருதியங் கடவு ளன்ன
கோனெறி தழுவி நின்ற குணத்தொடு புணரின் மாதோ
நானெறி வகையி னின்ற நல்லுயிர்க் கமிர்த மென்றான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[நூல்-இங்கே ஆகமம்; பருதியங்கடவுளன்ன கோன்-அருகன்; நால்நெறி-நான்கு கதி.]

**அறிவினாற் பெரிய நீரா ரருவினை கழிய நின்ற**
**நெறியினைக் குறுகி யின்ப நிறைகட லகத்து நின்றார்**
**பொறியெனும் பெயர ஐவாய்ப் பொங்கழ லரவின் கண்ணே**
**வெறிபுலங் கன்றி நின்றார் வேதனைக் கடலுள் நின்றார்**

[நீரார்-தன்மையை யுடையார்; வினை-தீவினை; அழல்-விடம்; வெறி-களிப்பு; புலம்-இடம்; கன்றி-அடிபட்டு.]

சுவைமிக்க, உயிரூட்டும் அமுதவெள்ளம் கொட்டிக் குவித்தது போல் தான் கற்றுத் தேர்ந்தவற்றின் பயனையெல்லாம், தடையின்றிச் சீவகனுக்கும் கற்பித்தபின், வண்டுகள் தேனுண்டு மொய்க்கின்றபூமலர் மாலையணிந்த சீவகன் என்கின்ற ஊனைச் சுவைபார்க்கத் தைக்கின்ற ஒளிவேலேந்திய சிறுவனிடம், ஆசிரியன் மேலுமோர் உண்மையினைச் சொல்லுவான். நீதி நூல் முறை கூறுகின்ற வழியில் சென்று நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்து, அந்நூற்கள் கூறுகின்ற நல்வழியிலேயே சென்று, தீமையை எல்லாம் விலக்கிச் செம்பருதி அன்னத்தோன்றும் அருகப்பெருமானின் அருள்நெறி வழிச் செல்கின்ற குணம் வாய்க்கப் பெற்றால், அது உலகில் வாழும் நெறிக்கு உயிர் ஊட்டும் அமுதம் போலாகும். மேலும், அறிவால் உயர்ந்த பெரியோர் தீயதென்று ஒதுக்கித் தள்ளிய தீநெறிச் செல்வதைவிட்டு நல்வழியிலே சென்றவர்கள் இன்பக் கடலிலே மிதப்பார்கள். அப்படியில்லாமல், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பெயருடைய, ஐந்து வாய் வழியேயும் நஞ்சை உமிழ்கின்ற நச்சரவாகிய ஐம்பொறிகளின் வெறியாட்டத்தில் சிக்கிப் புலனழிந்து நிற்பவர்கள் வேதனைக் கடலுள் சிக்கித் தவிப்பார்கள்.

**கூற்றுவன் கொடிய னாகிக் கொலைத்தொழிற் கருவி சூழ்ந்து**
**மாற்றரும் வலையை வைத்தான் வைத்ததை யறிந்து நாமும்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**நோற்றவன் வலையை நீங்கி நுகர்ச்சியி லுலக நோக்கி**
**ஆற்றுறப் போதல் தேற்றாம் அளியமோஓ பெரிய**
**மேகாண் 376**

*[கூற்றுவன் - யமன்; மாற்றரும் - தடுத்தற்கரிய; நோற்று-தவம் செய்து; அவன்-யமன்; நுகர்ச்சியில் உலகம்-விருப்பு வெறுப்புணர்வு அற்ற இடம்; ஆற்றுற-சென்றடைய; ஓஓ-இகழ்ச்சிக் குறிப்பு.]*

**பேரஞ ரிடும்பை யெல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும்**
**ஆரமிர் தரிதிற் பெற்றா மதன்பயன் கோடல் தேற்றாம்**
**ஓருமைம் பொறியு மோம்பி யுளபகல் கழிந்த பின்றைக்**
**கூரெரி கவரும் போழ்திற் கூடுமோ குறித்த வெல்லாம்**

*[அறிஞர்-துன்பம்; அஞரிடும்பை-இருபெயரொட்டு; ஆரமிர்து - ஆக்கத்திற்குக் காரணமானமையின் மக்களுடம்பு; பகல்-நாள்; எரி-நெருப்பு.]*

**தழங்குரன் முரசிற் சாற்றித் தத்துவந் தழுவல் வேண்டிச்**
**செழுங்களி யாளர் முன்ன ரிருளறச் செப்பி னாலும்**
**முழங்கழல் நரகின் மூழ்கு முயற்சிய ராகி நின்ற**
**கொழுங்களி யுணர்வி னாரைக் குணவதங் கொளுத்த**
**லாமோ 378**

*[தழங்குரல்-தழங்கு குரல், முழங்குகின்ற ஒலி; குணவதம்-குண விரதம்; வதம்-விரதமென்பதன் சிதைவு; செழுங்களி, கொழுங்களி-மிகுமயக்கம்.]*

இன்னும் கூற்றுவன் கொடியவன் ஆகிக் கொல்லுதற்குரிய வழிகளை ஆராய்ந்து நோய்களாகிய பல நீக்க முடியாத வலைகளை விரித்து வைத்துள்ளான். அப்படி அவன் விரித்து வைத்திருக்கிற வலைகளை அறிந்து, தவச் செயல்களால் அத்துயர் மிக்க வலையை நீக்கி விருப்பு வெறுப்பு உணர்வற்ற பேரின்ப வீட்டை நோக்கிச் செல்லும் வழியறியாத அநுதாபத்துக்குரிய பெரியவர்கள் நாமே அல்லவா? மேலும் மிகப் பெரிய துன்பங்களை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


யெல்லாம் போக்குதற்குக் காரணமான பிறவித் துயரையே போக்கடிக்க, தவமேற்கக் கூடிய—அமுதொத்த மனிதப் பிறவியை அடைந்தோம். எனினும் அதன் பயனறியாது வாழ்கின்றோம்! பெற்றிருக்கின்ற ஐம்பொறிகளையும் அவற்றின் வழியே செல்லவிட்டு நம் வாழ்நாள் பொழுதெல்லாம் கழிந்தபின், ஈமத்தீயில், சுடுநெருப்பு நம்முடலைப் பற்றிச் சுடும்போது, நாம் செய்ய நினைத்த நல்லறங்களைச் செய்ய முடியுமா? அல்லாமலும் எல்லாரும் உண்மையைக் கைக் கொண்டொழுக வேண்டி மருளுடைய மனம் உடையோர் முன் முரசறைந்து அவர் தெளிவு பெற எடுத்துச் சொன்னாலும், அலைகடல்போல் துயர் முழங்கும் நரகத்தைச் சென்றடைய முயல்கின்ற அறிவற்ற மடையர்களை நல்ல தவச் செயலில் ஈடுபடுத்த முடியுமா? முடியாதல்லவா!

பவழவாய்ச் செறுவு தன்னுள் நித்திலம் பயில வித்திக்
குழவிநா றெழுந்து காளைக் கொழுங்கதி ரீன்று பின்னாக்
கிழவுதான் விளைக்கும் பைங்கூழ் கேட்டிரேற் பிணிசெய் பன்மா
உழவிர்காண் மேயுஞ் சீல வேலியுய்த் திடுமி னென்றான்

[நித்திலம்-முத்து; வித்தி-விதைத்து; குழவி நாறு-குழவிப் பருவமாகிய நாற்று, காளைப் பருவ மாகிய கதிர்; செறுவு-கழனி; பன்மா-பலவிலங்கு; கிழவு-முதுமை; பைங்கூழ்-பயிர்.]

சூழ்கதிர் மதிய மன்ன சுடர்மணிப் பூணி னானும்
வீழ்தரு கதியி னீங்கி விளங்குபொன் னுலகத் துய்க்கும்
ஊழ்வினை துரத்த லானு முணர்வுசென் றெறித்த லானும்
ஆழ்கடற் புணையி னன்ன அறிவரன் சரண டைந்தான் 380

[பூணினான்-சீவகன்; கதி-நரககதி; ஊழ்வினை-நல்வினை; எறித்தல்-பரவுதல்; புணை-தெப்பம்; சரண் பாதம் என்றுமாம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

காட்சிநன் னிலையின் ஞானக் கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிசா லொழுக்க மென்னும் வயிரத்தாழ் கொளுவிப்
பொல்லா
மாட்சியில் கதிக ளெல்லா மடைத்தபின் வரம்பி லின்பத்
தாட்சியி லுலக மேறத் திறந்தனன் அலர்ந்த தாரான் 381

[காட்சி-நற்காட்சி; பூட்சி-மேற்கொள்ளும்; கொளுவி-பொருத்தி; மாட்சிஇல்-மாளுதல் இல்லாத.]

நல்லறத் திறைவ னாகி நால்வகைச் சரண மெய்தித்
தொல்லறக் கிழமை பூண்ட தொடுகழற் காலி னாற்குப்
புல்லற நெறிக்க ணின்று பொருள்வயிற் பிழைத்த வாறும்
இல்லறத் தியல்பு மெல்லா மிருளறக் கூறி யிட்டான் 382

[சரணம்-பாதுகாப்பு; கிழமை-உரிமை; தொடு கழல்-இடப்பட்ட கழல்; காலினாற்கு-சீவகனுக்கு; பொருள்-வீடுபேறு; இருள்-மயக்கம்; நால்வகைச் சரணமாவது அருகசரணம், சித்தசரணம், சாது சரணம், தன்மசரணம்.]

எனவே, பவழவாய் என்னும் கழனியிலே முத்தினை வித்தாக விதைக்கப் பின் அது குழந்தையாகிய நாற்றாக வளர்ந்து, காளைப் பருவம் என்னும் கதிராகத் தழைத்துப் பின்னர் முடிவில் முதுமையை விளைவிக்கும் பயிராக முடிவதனை உணர்வீர்களே ஆனால் பிணி மூப்பு ஆகிய பல விலங்குகள் மேய்ந்து மனிதப் பயிரை அழிக்காதவாறு மனிதர்களே ஒழுக்க வேலியை உயர்வாக அமைப்பீர்கள் என்றான். கதிர் வீசும் மதி போன்ற, சுடர்மணிப் பூண் அணிந்த சீவகனும், நரகத்தில் விழக் காரணமான தீநெறிகளில் இருந்து தப்பி, பொன்னொளி வீசும் மதிற் சுவருடைய சமவசரணம் என்னும் அருகன் திருக்கோயில் சென்றடைய ஊழ்வினை தூண்டுவதாலும், மெய்யுணர்வு சென்று படிதலாலும் ஆழ்கடலில் தவிப்போர்க்குத் தெப்பம் என உதவும் வாலறிவனைச் சரண் என்று சென்றடைந்தான். அடைந்து காட்சி நிலையிலே மனதை இருத்தி, மணிபோல் கதிரொளி வீசும் அறிவாகிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[illegible] சாத்தி. மேற்கொண்ட நல்லொழுக்கமாகிய [illegible] பொருத்திப் பூட்டி, தீய இழிசெயல்கள் [illegible] வழியை எல்லாம் அடைத்துப் பின், [illegible] பேரின்ப ஆட்சியில் திளைக்கின்ற இன்ப [illegible] வழி திறந்தான், பூவிரித்த மலர்மாலை [illegible] சீவகன். நல்லறங்களுக்குத் தலைவனாகி, அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தன்ம சரணம் என்னும் நான்கனைச் சரணங்களையும் அடைந்து, புகழ் [illegible] தன் தவப்பெருமைக்கு உரிமை யேற்ற வீரக் [illegible] காலுடைய சீவகனுக்கு, தீநெறிச் செல்வோர் [illegible] இல்லற வாழ்வாலே வீட்டின்பம் [illegible] வீட்டின்பம் தப்பாமல் இல்வாழ்வு [illegible] ஆகிய பிறவற்றையும் தெளிவுற [illegible].

எரிமுயங் கிலங்கு வைவே லிளையவர் குழாத்தி னீங்கித்
திருமுயங் கலங்கன் மார்பிற் சீவகற் கொண்டு வேறா
விரிமலர்க் கண்ணி கட்டி விழைதக வேய்ந்த போலும்
எரிமலர்க் காவு சேர்ந்து பிறப்பினைத் தெருட்ட லுற்றான்

[குழாம்-கூட்டம்; திரு-இலக்குமி; கண்ணி-மாலை; விழைதக-விரும்பும் வண்ணம்; கா-சோலை; தெருட்டல்-தெளிவித்தல்; எரி முயங்கி-அனல் தழுவி; வைவேல்-கூர்வேல்.]

பூவையுங் கிளியு மன்ன ரொற்றெனப் புணர்க்குஞ் சாதி
யாவையு மின்மை யாராய்ந் தந்தளிர்ப் பிண்டி நீழற்
றேவியன் றவிசி னுச்சிப் பொலிவினோ டிருந்த போழ்தில்
ஏவியன் சிலையி னானை யிப்பொருள் கேண்மோ வென்றான்

[பூவை-நாகணவாய்ப் பறவை; பிண்டி-அசோகமரம்; அசோக மரத்தின் கீழுள்ள பீடத்திலிருத்தல் சாரண பரமேஷ்டிகளுக்குரிய விதி என்பர்; ஏ-அம்பு; சிலையினான்-சீவகன்; பொருள்-கதை; தவிசு-இருக்கை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**வையக முடைய மன்னன் சச்சந்த னவற்குத் தேவி**
**பைவிரி பசும்பொ னல்குற் பைந்தொடி விசையை யென்பாள்**
**செய்கழன் மன்னன் தேர்ந்து தேவியைப் பொறியிற் போக்கி**
**மையல்கொ ணெஞ்சிற் கல்லா மந்திரி விழுங்கப் பட்டான்**

*[வையகம்-பூமி; தேர்ந்து-அறிவால் ஆராய்ந்து; பொறி-யந்திரமயில்; மையல்-மயக்கம்.]*

*தீக்குளித்து மின்னுகின்ற கூரிய வேலேந்திய இளைஞர் கூட்டத்தை விட்டுப் பிரித்து, திருவிளங்கும் மலர்மாலை அணிந்த மார்புடைய சீவகனைத் தனியே அழைத்துச் சென்று, விரிந்த மலர்களைக் கண்ணியாகத் தொடுத்து அழகுற வேய்ந்து வைத்தது போல் விளங்கும் இனிய மலர்ப்பொழிலை அடைந்து சீவகனுக்கு அவன் பிறப்பினைப் பற்றி அவன் ஆசிரியன் தெரிவிக்கத் தொடங்கி, பூவையும் கிளியும் போன்ற மன்னர்கள் அனுப்பும் ஒற்றர்கள் கூட்டம் அங்கில்லாததை ஆராய்ந்து அறிந்து, பின் அழகிய தளிர்கள் உடைய அசோகமர நிழலில் பூ விரித்த தவிசின் மேலமர்ந்து, அம்பெறியும் வில்லுடைய சீவகனை நோக்கி இக்கதையைக் கேட்பாயாக எனக் கூறி அவன் ஆசிரியன் சொல்லத் தொடங்குவான்.*

*''இவ்வுலகம் முழுதாண்ட மன்னன் சச்சந்தன் என்பான். அவனுடைய மனைவி பாம்புப் படமென விரிந்த, பசும்பொன் மேகலை அணிந்த அல்குலையும், வளையும் உடைய விசையை எனப்படுவாள். வீரக்கழல் அணிந்த அச்சச்சந்த மன்னன் தன் கட்டியங்காரனின் சூழ்ச்சியை அறிந்து, தன் துணைவி விசையையை மயிற் பொறியில் வைத்துத் தப்பிப் போகவிட்டு, தெளிவற்ற மன முடைய அறிவற்ற மந்திரியினால் கொல்லப்பட்டான்.''*

**புலம்பொடு தேவி போகிப் புகற்கருங் காடு நண்ணி**
**வலம்புரி யுலகம் விற்கு மாமணி யீன்ற தென்ன**
**இலங்கிழை சிறுவன் தன்னைப் பயந்துபூந் தவிசி னுச்சி**
**நலம்புரி நங்கை வைத்து நல்லறங் காக்க வென்றாள்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[புலம்பு-வருத்தம்; புகற்கு-புகுதற்கு; காடு-மயானம்; வலம்புரி-ஒருவகைச் சங்கு; மணி-முத்து. வலம்புரி யீன்ற முத்து; சிறுவன்-சீவகன்; நங்கை-கூனி.]

வானத்தின் வழுக்கித் திங்கட் கொழுந்துமீன்
குழாங்கள் சூழக்
கானத்திற் கிடந்த தேபோற் கடலக முடைய நம்பி
தானத்து மணியுந் தானு மிரட்டுறத் தோன்றி னானே
ஊனத்தில் தீர்ந்த சீர்த்தி யுத்தரட் டாதி யானே 387

[வழுக்கி-தவறி; திங்கட்கொழுந்து-பிறைச்சந்திரன்; கடலகம்-பூமி; இரட்டுற-மாறுபட; சீர்த்தி-மிக்க புகழ்; தான் அத்து-தான் அவ்விடத்தில்.]

அருந்தவன் முந்து கூற அலங்கல்வே னாய்கன் சென்று
பொருந்துபு சிறுவற் கொண்டு பொலிவொடு புகன்று
போகத்
திருந்திய நம்பி யாரத் தும்மினன் தெய்வம் வாழ்த்திற்று
அரும்பொனாய் கொண்மோ வென்றா னலைகடல்
விருப்பிற் கொண்டாள் 388

[நாய்கன்-வணிக குலத்தவனாகிய கந்துக்கடன்; ஆர-நிறைய; தெய்வம் - கூனி; கொண்மோ-கொள்ளுக.]

"வருந்தியவாறே தேவியும் மயிற்பொறியிலே புறப்பட்டுப் போய், பிறர்புக அஞ்சும் சுடுகாட்டை அடைந்து, வலம்புரிச் சங்கம் உலகை விலைபேசத் தக்க பெரிய முத்தை ஈன்றதுபோல் பெற்ற, மணிபோல் ஒளிவீசும் மகனை நலம் பல கொடுக்கும் கூனி உருவுடைய பெண் தெய்வம் பூவிரித்த நல் இருக்கையிலே வைக்க, விசையையும் 'நான் புரியும் நல்லறங்கள் என்மகனைக் காக்க' என்று வேண்டினாள். விண்ணில் இருந்த பிறைநிலவு, விண்ணைவிட்டு நட்சத்திரங்கள் சூழக் காட்டிடை வந்து கிடப்பதைப்போல், கடல் சூழ்ந்த உலகாளும் மன்னன் மகனாகிய சிறுவன் அவ்விடமாகிய சுடுகாட்டில் உள்ள

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மணியும் தானும் வேறுபடத் தோன்றியவன்-குறைவற்ற நிறைவுடைய உத்திரட்டாதி நட்சத்திரத்திலே பிறந்தவன் ஆவான். சிறந்த தவமுனிவன் ஒருவன் முன்னர்க் கூறியபடி மாலை அணிந்த வேலுடைய கந்துக்கடன், இறந்த தன்மகனுடன் அங்கே சென்று, தன்மகனை அங்கே கிடத்திவிட்டு, பிறைநிலவு தரையில் கிடப்பதுபோல் கிடந்த அக்குழந்தையை அள்ளி எடுக்க, அக்குழந்தையும் தும்ம, அவ்வனத்துறை தெய்வம் அக்குழந்தையை வாழ்த்தக்கேட்டு அதனை எடுத்துச் சென்று, தன் மனைவியிடம் 'பொன் போன்றவளே இக்குழந்தையை ஏற்றுக் கொள்க' என்னவும் அவளும் கடல்போல் பெருகிய விருப்புடனே அதனை வாங்கிக் கொண்டாள்.''

**கரியவன் கன்னற் கன்று பிறப்பினைத் தேற்றி யாங்கப்**
**பெரியவன் யாவ னென்ன நீயெனப் பேச லோடும்**
**சொரிமலர்த் தாரும் பூணு மாரமுங் குழையுஞ் சோரத்**
**திருமலர்க் கண்ணி சிந்தத் தெருமந்து மயங்கி வீழ்ந்தான்**

*[கரியவன் - கண்ணபிரான். கண்ணபிரான் கன்னனுக்குப் பிறப்புணர்த்திய வரலாறு; என்ன-என்று சீவகன் கேட்க; பேசலோடும்-முனிவன் கூறியவுடன்; ஆரம் - முத்தமாலை; சொரி-தேன் சொரியும்; தெருமந்து-சுழன்று.]*

**கற்பகங் கலங்கி வீழ்ந்த வண்ணம்போற் காளை வீழச்**
**சொற்பகர் புலவன் வல்லே தோன்றலைச் சார்ந்து புல்லி**
**நற்பல குழீஇய தம்மால் நவையறத் தேற்றத் தேறிக்**
**கற்புனை திணிதிண் தோளான் கவலைநீர்க் கடலுட் பட்டான் 390**

*[கற்பகம்-கற்பகத்தரு; புலவன்-ஆசிரியன்; நவையற-துயர் நீக்க.]*

**இனையைநீ யாய தெல்லா மெம்மனோர் செய்த பாவம்**
**நினையனீ நம்பி யென்று நெடுங்கணீர் துடைத்து நீவிப்**
**புனையிழை மகளிர் போலப் புலம்பல்நின் பகைவ னின்றான்**
**நினைவெலா நீங்கு கென்ன நெடுந்தகை தேறி னானே**



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[புலம்பு-வருத்தம்; புகற்கு-புகுதற்கு; காடு-மயானம்; வலம்புரி-ஒருவகைச் சங்கு; மணி-முத்து. வலம்புரி யீன்ற முத்து; சிறுவன்-சீவகன்; நங்கை-கூனி.]

**வானத்தின் வழுக்கித் திங்கட் கொழுந்துமீன் குழாங்கள் சூழக்**
**கானத்திற் கிடந்த தேபோற் கடலக முடைய நம்பி**
**தானத்து மணியுந் தானு மிரட்டுறத் தோன்றி னானே**
**ஊனத்தில் தீர்ந்த சீர்த்தி யுத்தரட் டாதி யானே 387**

[வழுக்கி-தவறி; திங்கட்கொழுந்து-பிறைச்சந்திரன்; கடலகம்-பூமி; இரட்டுற-மாறுபட; சீர்த்தி-மிக்க புகழ்; தான் அத்து-தான் அவ்விடத்தில்.]

**அருந்தவன் முந்து கூற அலங்கல்வே னாய்கன் சென்று**
**பொருந்துபு சிறுவற் கொண்டு பொலிவொடு புகன்று போகத்**
**திருந்திய நம்பி யாரத் தும்மினன் தெய்வம் வாழ்த்திற்று**
**அரும்பொனாய் கொண்மோ வென்றா னலைகடல் விருப்பிற் கொண்டாள் 388**

[நாய்கன்-வணிக குலத்தவனாகிய கந்துக்கடன்; ஆர-நிறைய; தெய்வம் - கூனி; கொண்மோ-கொள்ளுக.]

''வருந்தியவாறே தேவியும் மயிற்பொறியிலே புறப் பட்டுப் போய், பிறர்புக அஞ்சும் சுடுகாட்டை அடைந்து, வலம்புரிச் சங்கம் உலகை விலைபேசத் தக்க பெரிய முத்தை ஈன்றதுபோல் பெற்ற, மணிபோல் ஒளிவீசும் மகனை நலம் பல கொடுக்கும் கூனி உருவுடைய பெண் தெய்வம் பூவிரித்த நல் இருக்கையிலே வைக்க, விசையை யும் 'நான் புரியும் நல்லறங்கள் என்மகனைக் காக்க' என்று வேண்டினாள். விண்ணில் இருந்த பிறைநிலவு, விண்ணைவிட்டு நட்சத்திரங்கள் சூழக் காட்டிடை வந்து கிடப்பதைப்போல், கடல் சூழ்ந்த உலகாளும் மன்னன் மகனாகிய சிறுவன் அவ்விடமாகிய சுடுகாட்டில் உள்ள

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மணியும் தானும் வேறுபடத் தோன்றியவன்-குறைவற்ற நிறைவுடைய உத்திரட்டாதி நட்சத்திரத்திலே பிறந் தவன் ஆவான். சிறந்த தவமுனிவன் ஒருவன் முன்னர்க் கூறியபடி மாலை அணிந்த வேலுடைய கந்துக்கடன், இறந்த தன்மகனுடன் அங்கே சென்று, தன்மகனை அங்கே கிடத்திவிட்டு, பிறைநிலவு தரையில் கிடப்பதுபோல் கிடந்த அக்குழந்தையை அள்ளி எடுக்க, அக்குழந்தையும் தும்ம, அவ்வனத்துறை தெய்வம் அக்குழந்தையை வாழ்த்தக்கேட்டு அதனை எடுத்துச் சென்று, தன் மனைவி யிடம் 'பொன் போன்றவளே இக்குழந்தையை ஏற்றுக் கொள்க' என்னவும் அவளும் கடல்போல் பெருகிய விருப் புடனே அதனை வாங்கிக் கொண்டாள்.''

**கரியவன் கன்னற் கன்று பிறப்பினைத் தேற்றி யாங்கப்**
**பெரியவன் யாவ னென்ன நீயெனப் பேச லோடும்**
**சொரிமலர்த் தாரும் பூணு மாரமுங் குழையுஞ் சோரத்**
**திருமலர்க் கண்ணி சிந்தத் தெருமந்து மயங்கி வீழ்ந்தான்**

[கரியவன் - கண்ணபிரான். கண்ணபிரான் கன்ன னுக்குப் பிறப்புணர்த்திய வரலாறு; என்ன-என்று சீவகன் கேட்க; பேசலோடும்-முனிவன் கூறிய வுடன்; ஆரம் - முத்தமாலை; சொரி-தேன் சொரியும்; தெருமந்து-சுழன்று.]

**கற்பகங் கலங்கி வீழ்ந்த வண்ணம்போற் காளை வீழச்**
**சொற்பகர் புலவன் வல்லே தோன்றலைச் சார்ந்து புல்லி**
**நற்பல குழீஇய தம்மால் நவையறத் தேற்றத் தேறிக்**
**கற்புனை திணிதிண் தோளான் கவலைநீர்க் கடலுட்**
**பட்டான் 390**

[கற்பகம்-கற்பகத்தரு; புலவன்-ஆசிரியன்; நவையற- துயர் நீக்க.]

**இனையைநீ யாய தெல்லா மெம்மனோர் செய்த பாவம்**
**நினையனீ நம்பி யென்று நெடுங்கணீர் துடைத்து நீவிப்**
**புனையிழை மகளிர் போலப் புலம்பல்நின் பகைவ னின்றான்**
**நினைவெலா நீங்கு கென்ன நெடுந்தகை தேறி னானே**



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[நீ இனையையாயது - நீ இத்தன்மையையுடையாய் ஆனது; நீவி-தடவி; புலம்பல் - புலம்பாதே; நினைவு-சென்றதை நினைத்தல்; நெடுந்தகை-சீவகன்.]

கரிய நிறமுடைய கண்ணன் கன்னனுக்கு முன்பு அவன் பிறப்பினை எடுத்துக் கூறியதுபோல் ஆசிரியன் கூறவும், சீவகன் அத்தகைய பெரியோன் யார் என்று கேட்க, அவன் நீயே என்று ஆசிரியன் சொல்லவும், கேட்ட சீவகன் தேன் சொரியும் மலர்மாலையும், அணிகளும் முத்து மாலையும் கலைந்துவிழ, தலையில் சூட்டிய மலர்க்கண்ணி சிதறி ஓட மூர்ச்சையுற்றுக் கீழே வீழ்ந்தான். கற்பகத்தரு நிலைகுலைந்து வீழ்ந்தது போல் சீவகன் நிழத்தில்விழ, சொல்வல்ல ஆசிரியன் உடனே சீவகனைத் தழுவி எடுத்து, நல்ல பல வாசனைப் பொருள்களால் ஆன குழம்பினைத் தெளித்துச் சோர்வு நீங்கத் தேற்றியவுடன் தெளிந்து கற்றூண் போன்று திரண்ட தோளுடைய சீவகனும் மயக்கம் தெளிந்து கவலைக் கடலுள் வீழ்ந்தான். ஆசிரியனும், ''இத்தகைய துன்பம் எல்லாம் நீ உற்றது என்னைப் போன்றவர்கள் செய்த பாவமே, எனவே இளைஞனே நீ சென்றதை நினைத்து வருந்த வேண்டாம்'' என்று, நீண்ட கண்களில் இருந்து வடியும் கண்ணீரைத் துடைத்து, உடலைத் தடவி விட்டு, ''நினக்குப் பகைவன் இன்னும் இருக்கிறான் (எனவே அவனை வெல்லும் வழியறிவதை விட்டு) அணிமணிகள் பூண்ட பெண்களைப் போலப் புலம்பாதே கவலையை விடு'' என்று கூறிச் சீவகனைத் தேற்றினான்.

**மலைபக விடிக்குஞ் சிங்க மடங்கலின் முழங்கி மாநீர்**
**அலைகடற் றிரையிற் சீறி யவனுயிர் பருக லுற்றுச்**
**சிலையொடு பகழி யேந்திக் கூற்றெனச் சிவந்து தோன்றும்**
**இலையுடைக் கண்ணி யானை யின்னணம் விலக்கி னானே**

[பக-பிளவுபட; அவன்-கட்டியங்காரன்; பருகலுற்று-உண்ணத் தொடங்கி; பகழி-அம்பு; சிவந்து-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கோபித்து; மடங்கல்-சிங்கம்; சிங்கமடங்கல்-இரு பெயரொட்டு.]

வேண்டுவ னம்பி யானோர் விழுப்பொரு ளென்று சொல்ல
ஆண்டகைக் குரவிர் கொண்மின் யாதுநீர் கருதிற் றென்ன
யாண்டுநே ரெல்லை யாக அவன்றிறத் தழற்சி யின்மை
வேண்டுவ லென்று சொன்னான் வில்வலா னதனை
நேர்ந்தான் 393

[சொல்ல-ஆசிரியன் கூற; கருதிற்று-கருதியது; என்ன-என்று சீவகன் மறுமொழி கூற; அழற்சியின்மை-கோபமில்லாமை; எல்லை-காலவரை; நேர்ந்தான்-ஒப்பினான்.]

வெவ்வினை வெகுண்டு சாரா விழுநிதி யமிர்த மின்னீர்
கவ்விய வெஃகி னின்ற கயக்கமில் நிலைமை நோக்கி
அவ்விய மகன்று பொங்கு மழல்படு வெகுளி நீக்கி
இவ்விய லொருவற் குற்ற திற்றெனக் கிளக்க லுற்றான்

[கவ்விய-உண்ட, உறிஞ்சிய; எஃகு-இரும்பு; இவ்வியல்-இத்தன்மை; கயக்கமில்-கலக்கமில்லாத; அவ்வியம்-மனவருத்தம்.]

மலைமுகட்டைப் பிளந்தெறியும் வண்ணம் கர்ஜிக்கும் சிங்கக் குட்டியைப்போல் முழங்கி, நீர் நிறைந்த கடலலை போல் சீறிப்பாய்ந்து, கட்டியங்காரனைக் கொல்லும் துணிவோடு, அம்பையும் வில்லையும் ஏந்திக் காலனைப் போல் முகஞ் சிவந்து கனன்று எழும், இலையும் மலரும் சேர்த்துத் தொடுத்த கண்ணியணிந்த சீவகனைத் தடுத்து நிறுத்தி அவ்வாசிரியன் சொல்லுவான். ''இளைஞனே! துயர் தரும் ஒன்றை நான் விரும்புகிறேன்'' என்ன, சீவகனும் ''பெருமை மிக்க ஆசிரியர் பெருமானே நீர்விரும்பியது யாது அதனைப் பெற்றுக் கொள்க'' என்ன ஆசிரியனும் ''நீ கட்டியங்காரன் மேல் வஞ்சம் தீர்த்துக் கொள்வதை ஓராண்டிற்குப் பொறுத்திருக்கவேண்டும்'' (அதுவே நீ எனக்குத் தரும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


குருகாணிக்கை) என்று சொல்ல வில்வல்லானாகிய சீவகனும் அதற்கு உடன்பட்டான். தீவினை வந்துறுத் தாத உயிரளிக்கும் அமுதம் போன்றும், காய்ச்சிய இரும்பில் பட்டநீர் சுவறி இரும்போடே சேர்ந்து விடு வதைப் போலும், கலங்காத உள்ளத்துடன், மனவருத்தம் போக்கி, தீயெனப் பொங்கி வந்த சீவகனின் கோபத்தை யும் ஆற்றி, ஒருவனுக்கு நேர்ந்த துன்பத்தின் தன்மை இத்தகையது என்று கூறிக் கீழ்வரும் செய்தியைச் சொல்லத் தொடங்குவான்.

**வானுறை வெள்ளி வெற்பின் வாரண வாசி மன்னன்**
**ஊனுறை பருதி வெள்வே லுலோகமா பால னென்பான்**
**தேனுறை திருந்து கண்ணிச் சிறுவனுக் கரசு நாட்டிப்**
**பால்நிறக் குருகி னாய்ந்து பண்ணவர் படிவங் கொண்டான்**

[வான்-மேகம்; வெள்ளி வெற்பு-வித்தியாதரர்களுக்கு உறைவிடம் என்று கூறப்படும் வெள்ளிமலை; பால்நிறக்குருகு-வெள்ளை அன்னம்; பண்ணவர்-முனிவர்; படிவம்-உருவம்.]

**வெஞ்சினங் குறைந்து நீங்க விழுத்தவந் தொடங்கி நோற்கும்**
**வஞ்சமில் கொள்கை யாற்குப் பாவம்வந் தடைந்த தாகக்**
**குஞ்சர முழங்கு தீயிற் கொள்கையின் மெலிந்திம் மூதூர்**
**மஞ்சுதோய் குன்ற மன்ன மாடவீட் டகம்பு குந்தான்** 396

[கொள்கையான்-உலோகபால முனிவன்; குஞ்சர முழங்கு தீ-எதனாலும் தணியாத பெரும்பசியை உண்டாக்கும் யானைத்தீ என்னும் நோய்.]

**உரைவிளை யாமை மைந்தன் கேட்கிய வுவந்து நோக்கி**
**வரைவிளை யாடு மார்பன் யாரவன் வாழி யென்ன**
**விரைவிளை யாடுந் தாரோ யானென விரும்பித் தீம்பாற்**
**றிரைவிளை யமிர்த மன்ன கட்டுரை செல்க வென்றான்**

[கேட்கிய-கேட்க; வரை-மலை; மார்பன்-சீவகன்; விரை-வாசனை; என-என்று ஆசிரியன் கூற; பாற்றிரை-பாற்கடல்; கட்டுரை-கதை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விண்ணைத் தொடும் வெள்ளிய பனிமலையில் வாரணவாசி என்னும் ஊரின் மன்னனாகிய, ஊன் தோய்ந்த, செம்பருதி போன்ற சிவந்த ஒளிவேலேந்திய உலோகமாபாலன் என்பவன், தேன்சிந்தும் மலர்நிறைந்த முடிக்கண்ணி சூடிய தன்மகனுக்குப் பட்டம் சூட்டி ஆட்சிப் பொறுப்பை அவனிடம் தந்துவிட்டு, நீரையும் பாலையும் பிரித்துணரும் அன்னப் பறவையைப்போல் உலக வாழ்வின் நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்து தவக்கோலம் பூண்டான். கொடுஞ் சினம் குறைந்து நீங்க, மேலான தவம் மேற்கொண்ட தூய மனமுடைய அவ் வரசனுக்கு முன் செய்த தீவினைப் பயன் வந்து சேர, நீங்காத யானைத்தீ என்னும் பசி நோயால் துன்புற்றுத் தவம் செய்ய முடியாது வாடி மெலிந்து, புகழ்மிக்க இவ்வூரின் முகில் தோயும் மலைபோன்ற மாடவீடுகளின் இடையே நுழைந்தான். இவ்விதம் ஆசிரியன் சொல்லி முடிக்கு முன்னமேயே ஆவல் மீதூறச் சீவகன் ஆசிரியனை நோக்கி ''குன்றெடுத்துப் பந்தாடும் அவ்வீரன் யார், அவன் வாழ்க'' என்ன, ஆசிரியனும் ''மணம் புகுந்து விளையாடும் மலர்மாலை யணிந்தவனே, அவன் நானே'' —என்று கூற, மகிழ்ச்சியுற்று ''அலைகடல் விளைந்த அமுதையொத்து இனிக்கும் இக்கதையினை மேலும் தொடர்ந்து சொல்க'' என்றான்.

**பூத்தின்று புகன்று சேதாப் புணர்முலை பொழிந்த தீம்பால்**
**நீத்தறச் செல்ல வேவித் தட்டவின் னமிர்த முண்பான்**
**பாத்தரும் பசும்பொற் றாலம் பரப்பிய பைம்பொற் பூமி**
**ஏத்தருந் தவிசி னம்பி தோழரொ டேறி னானே 398**

[புகன்று-விரும்பி; சேதா-பசு; வேவித்து-வேவச் செய்து; அமிர்தம்-பாலன்னம்; பாத்தல்-பகுத் தல்; தாலம் - உண்கலம்; நம்பி - கந்துக்கடன்; நீத்தறச் செல்ல-முற்றும் வற்றிக்கலக்க.]

**புடையிரு குழையு மின்னப் பூந்துகில் செறிந்த வல்குல்**
**நடையறி மகளி ரேந்த நல்லமிர் துண்ணும் போழ்தின்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடைகழி நின்ற வென்னை நோக்கிப்போந் தேறு
கென்றான்
கடல்கெழு பருதி யன்ன பொற்கலத் தெனக்கு மிட்டார் 399

[புடை-பக்கம்; இடைகழி-வழிக்கு இடையே கழிந்துள்ள இடம்; ரேழி என வழங்கும். பருதி-சூரியன்; போந்து-வந்து; கடல் கெழு-கடலில் தோன்றும்.]

கைகவி நறுநெய் பெய்து கன்னலங் குடங்கள் கூட்டிப்
பெய்பெயென் றுரைப்ப யானும் பெருங்கடல் வெள்ளிக்
குன்றம்
பெய்துதூர்க் கின்ற வண்ணம் விலாப்புடை பெரிதும் வீங்க
ஐயன தருளி னால்யா னந்தணர் தொழிலன் ஆனேன் 400

[கைகவி நறுநெய்-போதுமென்று கை கவித்தற்குக் காரணமான நல்ல நெய்; கன்னல்-சருக்கரை; உரைப்ப-கந்துக்கடன் சொல்ல; ஐயன தருளினால்-ஐயனாகிய உனது அருளினால்.]

சுரும்புடை யலங்கல் மாலைச் சுநந்தையுந்
துணைவன் றானும்
விரும்பின ரெதிர்கொண் டோம்ப வேழவெந் தீயி னீங்கி
இருந்தெனன் ஏம முந்நீ ரெறிசுற வுயர்த்த தோன்றற்
கரும்புடைக் காளை யன்ன காளைநின் வலைப்பட்
டென்றான் 401

[வேழவெந்தீ-யானைப்பசி; ஏமம்-காவல்; உயர்த்த-மேம்படுத்திய; தோன்றல்-தோன்றிய; கரும்புடைக்காளை - கரும்பு வில்லை உடைய மன்மதன்.]

பூமலர்களைத் தின்று வயிறு நிறைந்து மனம் விரும்பி மடிசுரக்கும் பசுக்களின் இனிய பால் முழுதும் வற்றச் சுண்டக் காய்ச்சி வேகவைத்த அமுதொத்த உணவை உண்பதற்காகத் தூய பசும்பொன் கலங்கள் பரப்பிய பொன் நிலத்திலே அமைத்த புகழ்மணித் தவிசில் கந்துக்கடன் தோழரொடும் சென்றமர்ந்தான். இருபுறக் காதிலும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அணிந்துள்ள குழைகள் ஒளிவிட்டு மின்ன, பூம்பட்டுடை அணிந்த அல்குலை உடைய உணவு படைக்கும் வழி யறிந்த பெண்கள் பரிமாற அவ்வுணவை அவன் உண்ணும் போது, உள்வாயில் நடையில் சென்று நின்ற என்னைப் பார்த்து, 'வந்து நீயும் பந்தியில் அமர்க' என்றான். அவன் இவ்விதம் கூறவும் கடலில் தோன்றும் இளஞாயிறு போன்ற பொன் வட்டிலில் பணிமகளிர் எனக்கும் அந்நல்லுணவைப் படைத்தனர். கை கவித்துப் போதும் என்னும் அளவுக்கு நறுநெய் படைத்து, தேன் பாகினைக் குடம் குடமாகக் கந்துக்கடன் 'பெய்' 'பெய்' என்ன அப்பணிமகளிரும் அளவின்றிப் பெய் தலால், கடலிலே வெள்ளிமலைகளைப் பெயர்த்துத் தூர்ப்பது போல் பாலன்ன உணவைத் தேன்பாகிடைப் பிசைந்து, விலாப்புரம் பருத்துப்புடைக்க ஐய, நின் அருளால் நானும் அந்தணர் போல் உண்டு மகிழ்ந்தேன். (பிராமணர்கள் போஜனப் பிரியர்கள் என்றபடி). வண்டுகள் மொய்க்கும் அழகு மலர்மாலை யணிந்த சுநந்தையும் அவள் கணவனாகிய கந்துக்கடனும் இவ்வித மாக வரும் விருந்தினரைப் பரிந்து வரவேற்றுப் போற்ற, கொல்லும் யானைத்தீ நோயில் இருந்த நானும், உலகைக் காவலுறக் காக்கின்ற அலைகடலில் புரளும் சுறாமீனை உயர்வுபடுத்திய மீனக்கொடியும், கரும்பு வில்லும் உடைய—காமனைப் போன்ற காளை—உன்னுடைய தொடர்பால் தப்பினேன்'' என்றான். ஆசிரியன் மேலும் சொல்வான்.

**நிலம்பொறுக் கலாத செம்பொன் நீள்நிதி நுந்தை யில்லம்**
**நலம்பொறுக் கலாத பிண்டி நான்முகன் தமர்கட் கெல்லாம்**
**உலம்பொறுக் கலாத தோளா யாதலா லூடு புக்கேன்**
**கலம்பொறுக் கலாத சாய லவருழை நின்னைக் கண்டேன்**

[நிதி-பெரிய பொருள்; நுந்தை-உன் தந்தை; நான் முகன் தமர்-அருகதேவனுடைய அடியார்கள்; உலம்-உருண்டைக்கல்; ஊடு-உள்ளே; கலம்-ஆபரணம்; அவருழை-அவரிடை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



ஐயனைக் கண்ணில் காண யானைத்தீ அதகம் கண்ட
பையணல் நாகம் போல வட்கயான் பெரிது முட்கித்
தெய்வங்கொ லென்று தேர்வேற் கமிர்துலாய் நிமிர்ந்த தேபோல்
மொய்குரன் முரச நாணுந் தழங்குரன் முழங்கக்கேட்டேன்

[அதகம்-அகதம், மருந்து; அணல்-கீழ்வாய்; வட்க-கெட; உட்கி-அஞ்சி; தேர்வேற்கு - ஆராயும் எனக்கு; உலாய்-உலாவும்; தழங்கும்-ஒலிக்கும்.]

கோட்டிளந் திங்கள் சூழ்ந்து குலவிய திருவிற் போல
மோட்டொலி முத்தஞ் சூழ்ந்து முருகுகொப் புளிக்குந் தாரோய்
கேட்டளப் பரிய சொல்லுங் கிளரொளி வனப்பு நின்னைச்
சேட்டிளஞ் சிங்க மன்னாய் சாதகஞ் செய்த வென்றான்

[கோடு-பிறையின் இருபக்கத்தும் உள்ள முனை; திருவில்-இந்திரவில்; மோடு-பெருமை; முருகு-வாசனை; சேடு-பெருமை; கொப்புளிக்கும்-உமிழும்; அளப்பரிய-அளவிடற்கியலாத; கிளர் ஒளி-விளங்கும் ஒளி.]

கோளியங் குழுவை யன்ன கொடுஞ்சிலை யுழவன் கேட்டே
தாளியல் தவங்கள் தாயாத் தந்தைநீ யாகி யென்னை
வாளியங்கு உருவப் பூணோய் படைத்தனை வாழி யென்ன
மீளியங் களிற னாயான் மெய்ந்நெறி நிற்ப லென்றான் 405

[உழுவை-புலி; உழவன்-வீரன், சீவகன். தாள்-முயற்சி; ஆசிரியன் ஞான பிதாவாதலின் 'தந்தை நீயாகி' என்றான். வாள்-ஒளி; மீளி-பெருமை; கோள் இயங்கு-கொல்லுதலை உடைய; வாள் இயங்கு-வாளினை உடைய.]

''பூமித் தாய் பொறுக்க முடியாத பெருஞ்செல்வம் குவிந்துள்ள உன் தந்தையின் வீடு, அளவிட முடியாத நலம் பல கொடுக்கும் அசோக மரநிழலின்கீழ் அமர்ந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அருகன் அடி பரவுவார்க் கெல்லாமும் இல்லம் ஆதலின் கற்றூணும் தாங்க முடியாத வலிவுடைய தோளுடையவனே, நான் தடையின்றி உள்ளே சென்றபோது, பூட்டிய அணிமணிகளைச் சுமக்க முடியாத மெல்லிடை மகளிரிடையே இருந்த உன்னைப் பார்த்தேன். உன்னைக் கண்டவுடன், என் பானைப் பசியும், மருந்தினைக் கண்டவுடன் அகலுகின்ற, படத்தையும் கீழ் வாயையும் உடைய பாம்பின் விஷம் போல் சென்று மறைய, நான் பெரிதும் ஆச்சரியம் உற்று இது தெய்வமோ என்றெண்ணிக் கொண்டிருக்கையில், வானமுதம் உயிர் பெற்று உலவுதல்போல் வந்த உன் வீரமிக்க, முரசும் வெட்கி நாண ஒலிக்கின்ற குரல் முழக்கம் கேட்டேன். கோடுபோல் வளைந்த இளம்பிறை நிலவு சூழ விளங்குகின்ற வானவில்லைப் போல, உயர்ந்த ஒளிமிக்க முத்துமாலையைச் சூழ்ந்து அழகுமிகும் மலர்மாலை அணிந்து விளங்குபவனே; சொல்லில் அளவிட முடியாத உன் பொன் ஒளியும் பேரெழிலும், வலிமை மிக்க இளஞ்சிங்கம் போன்றவனே நின் பிறப்பை எனக்கு உணர்த்தினை'' என்று கூறினான். கொலைத் திறமிக்க புலியைப் போன்று, வரிவில் ஏந்திய வலிமை மிக்க சீவகன் ஆசிரியன் இவ்விதம் கூறக்கேட்டு, ''ஒளிமிக்க நல்லறம் பூண்டவனே, கற்றுத் தேர்ந்த தவங்கள் தாயாக நீ தந்தையுமாகி என்னை உருவாக்கி வளர்த்தனை எனவே வணக்கம்'' என்று கூறி ஆசிரியனைப் பணிந்து போற்ற, ஆசிரியனும் ''பெருமை மிக்க நல்ல யானையைப் போன்றவனே நான் மேன்மைத் தவநெறியைத் தொடர எண்ணினேன்'' என்றும் கூறினான்.

மறுவற மனையி னீங்கி மாதவஞ் செய்வ லென்றாற்
பிறவற மல்ல பேசார் பேரறி வுடைய நீரார்
துறவறம் புணர்க வென்றே தோன்றனற் றான்றொ ழுது
நறவற மலர்ந்த கண்ணி நன்மணி வண்ண னானான் 408

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations.


[மறு-குற்றம்; தோன்றல்-ஆசிரியன்; மணிவண்ணன் அன்னான்-திருமாலைப்போன்ற சீவகன்.]

**கைவரை யன்றி நில்லாக் கடுஞ்சின மடங்க லன்னான்**
**தெவ்வரைச் செகுக்கு நீதி மனத்தகத் தெழுதிச் செம்பொற்**
**பைவிரி யல்கு லாட்கும் படுகடல் நிதியின் வைகும்**
**மைவரை மார்பி னாற்கு மனமுறத் தேற்றி யிட்டான் 407**

[கைவரை-ஒழுக்கத்தின் எல்லை; கை-ஒழுக்கம்; யானையுமாம். அன்னான்-ஆசிரியன்; தெவ்வர்-பகைவர்.]

**அழலுறு வெண்ணெய் போல அகங்குழைந்து உருகி ஆற்றாள்**
**குழலுறு கிளவி சோர்ந்து குமரனைத் தமிய னாக**
**நிழலுறு மதியம் அன்னாய் நீத்தியோ எனவு நில்லான்**
**பழவினை பரிய நோற்பான் விஞ்சையர் வேந்தன் சென்றான்**

[அழலுறு-நெருப்பிலிட்ட; கிளவி-வாய்மொழி; நிழல்-ஒளி; நீத்தியோ-துறக்கின்றாயோ; பரிய-கெட; வேந்தன்-ஆசிரியன் உலோகபாலன்.]

''பிறவித் துயர் நீங்க ஒருவன் இல்லற இன்பம் விட்டுப் பெருந்தவம் மேற்கொள்ள முனைவான் என்றால், அதனைப் போற்றிப் பாராட்டுவதே அல்லாமல் அதைத் தடுக்க வேறு வீண் வார்த்தைகளைப் பேசமாட்டார்கள் பேரறிவுடைய பெரியோர்கள்; எனவே துறவினை மேற்கொள்க'' என்று, தன்னைத் தோற்றுவித்த ஆசிரியனின் திருவடி பணிந்து நின்றான், தேன் சிதற இதழ் விரித்து மலர்ந்த பூமலர் மாலையணிந்த மணிவண்ணனாகிய கண்ணனைப் போன்ற சீவகன், ஒழுக்க நெறிகளின் எல்லைக் கோட்டினைத் தாண்டாத, கடுங்கோபம் உடைய சிங்கம் போன்ற சீவகன்; மனதிலே அவன் தன் பகையை அழிக்கும் வகையை நன்கு தெளிவுறுத்திப் பின், செம்பொன் மேகலை அணிந்த பாம்பின் படம்போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அல்குலுடைய சுநந்தைக்கும், பெருங் கடல்போல் நிறைந்து கிடக்கும் செல்வம் நிறைந்த, முகில் தவழும் மலை போன்ற மார்புடைய கந்துக்கடனுக்கும் துறவு பூணத் தான் கொண்ட முடிவை அவர் மனதில் படியுமாறு எடுத்துக் கூறினான். இவ்விதம் ஆசிரியன் துறவு பூணக் கொண்ட முடிவைக் கேட்டு, நெருப்பிடைப் பட்ட வெண்ணெய்போல நெஞ்சுருகி, உளம் வருந்தி, ஆற்றொணாத் துயர் அடைந்து, இனிய குழல்போல் ஒலிக்கும் வாய்மொழி சோர்ந்த சுநந்தை' மகனையும் எம்மையும் தனியாக விட்டுப் போவையோ, ஒளிவிடும் முழு நிலவு போன்றவனே எங்களைப் பிரிவையோ' என்று வேண்டவும் நிற்காது, வானவர் தலைவனுன வாரண வாசி மன்னன்—உலோகமா பாலன், முன்னைப் பழவினை தீர மெய்த்தவம் தொடங்கச் சென்றான்.

நாமகள் இலம்பகம் முடிவுற்றது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 2. கோவிந்தையார் இலம்பகம்

ஆர்வ வேரரிந்து அச்ச ணந்திபோய்
வீரன் தாணிழல் விளங்க நோற்றபின்
மாரி மொக்குளின் மாய்ந்து விண்தொழச்
சோர்வில் கொள்கையான் றோற்ற நீங்கினான் 409

*[ஆர்வம்-ஆசை; மொக்குள்-நீர்க்குமிழி; மாய்தல்-மறைதல்; விண்-விண்ணுலகத்திலுள்ள தேவர்; ஆகுபெயர். கொள்கை - தவம்; தோற்றம்-பிறவி.]*

நம்ப னித்தலை நாக நன்னகர்ப்
பைம்பொ னோடைசூழ் பரும யானையும்
செம்பொ னீள்கொடித் தேரும் வாசியும்
வெம்ப வூர்ந்துலாம் வேனி லானினே 410

*[நம்பன்-நமக்குச் சிறந்தவன்; நாகம்-பவணலோகம்; பாம்புகளின் உலகம். ஓடை-யானையின் நெற்றிப் பட்டம்; வெம்புதல்-விரும்புதல்; வேனிலான்-மன்மதன்; வாசி-குதிரை.]*

## வேறு

கலையின தகலமுங் காட்சிக் கின்பமும்
சிலையின தகலமும் வீணைச் செல்வமும்
மலையினி னகலிய மார்ப னல்லதிவ்
உலகினி லிலையென வொருவ னாயினான் 411

*[காட்சி-காணுதல்; அகலிய-அகன்ற; இலை-இல்லை; ஒருவனாயினான்-ஒப்பற்றவன் ஆனான்.]*

சீவகனை விட்டுப் பிரிந்து இராசமாபுரத்தை விட்டுச் சென்ற நல்லாசிரியன், பாசவேரினை அறுத்துப் பற்றினை எல்லாம் விட்டு, ஸ்ரீவர்த்தமானரின் திருவடிப் பேற்றினை அடைய நோன்புகள் இருந்து, தளராது தவமியற்றி, நீர்க்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குமிழி போன்ற பொய்யுடம்பை விட்டு விண்ணவர் போற்ற மண்ணகம் துறந்தான். சீவகன் நாகலோகம் போல எழில் கொள்ள விளங்கும் அந்நகரின் கண்ணே புதிய பொன்னுருக்கிச் செய்த முகபடாம் அணிந்த யானையும், பொன் பூட்டிய நீண்ட கொடியுடைய தேரும், குதிரையும் செலுத்திக்காமனைப் போல்மகளிர் காதல் துயர் நிறைந்து வாட உலாவருவானாயினான். இன்னும், கலைஅறிவும் காண மகிழ் வூட்டும் அழகுருவும், படைக்கலப் பயிற்சியும், வீணைப்பாட்டிசைத் தேர்ச்சியும் ஒருங்கே பெற்றவன் மலை போன்ற மார்புடைய சீவகனே அல்லாது வேறு யாரும் இவ்வுலகில் இல்லை என்னும்படி ஒப்பற்று விளங்கினான்.

## வேறு

**நாம வென்றிவேல் நகைகொண் மார்பனைக்**
**காம னேயெனக் கன்னி மங்கையர்**
**தாம ரைக்கணாற் பருகத் தாழ்ந்துலாம்**
**கோம கன்திறத் துற்ற கூறுவாம் 412**

[நாம் - அச்சம்; நகை - முத்தமாலை; மார்பன் - சீவகன்.]

**சில்லம் போதின்மேல் திரைந்து தேனுலாம்**
**முல்லை காரெனப் பூப்ப மொய்ந்நிரை**
**புல்லு கன்றுளிப் பொழிந்து பால்படும்**
**கல்லென் சும்மையோர் கடலின் மிக்கதே 413**

[சில் அம் போது எனப்பிரிக்க. போது-மலரும் பருவத்து அரும்பு; கார் என-கார்காலமென் றெண்ணி; முல்லை கார்காலத்தில் மிகுதியாகப் பூக்கும். நிரை-பசுக்கூட்டம்; கன்று உள்ளி-கன்றை நினைத்து; சும்மை-ஒலி; திரைந்து-சாய்ந்து.]

**மிக்க நாளினால் வேழ மும்மதம்**
**உக்க தேனினோ டூறி வார்சுனை**
**ஒக்க வாய்நிறைந் தொழுகு குன்றின்மேல்**
**மக்க ளீண்டினார் மடங்கல் மொய்ம்பினார் 414**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[உக்க-சிந்திய; ஊறி-ஊறுதலால்; ஒக்க-ஒன்றுசேர; மக்கள் இங்கே வேடர்களைக் குறித்தது. மடங்கல்-சிங்கம்; ஈண்டினார்-கூடினார்.]

இப்படிப் பல வகையிலும் சிறந்து, பகைவர் மனதில் அச்சத்தை ஊட்டும் வெற்றிவேலையும் முத்துமாலைகளையும் அணிந்த சீவகனை, இன்பக் கடவுளான மன்மதனே என்றெண்ணிக் கன்னிப் பெண்கள் தாமரை மலர் போன்ற தம் கண்களால் அவன் அழகை அள்ளிப்பருக வாழும் நாளிலே, அவன் வீரம் விளைத்த நிகழ்ச்சி பற்றிக் கூறுவோம். பூத்த சில மலர்களிலே சாய்ந்து வண்டுகள் மொய்க்க முல்லைப் பூக்கள் கார்காலம் எனப் பூத்து மலர அப்படிப் பூத்து நிறைந்த பூக்களைப் பசுக்கூட்டங்கள் தங்களை அணைய வரும் கன்றுகள் என நினைத்து மடி சுரந்து பால்பொழிய உண்டாகும் 'கல்' என்னும் ஓசை கடலோசையிலும் மிக்குடையதாகும். இவ்வித ஒலி நிறைந்து ஒருபுறமிருக்க, யானையின் மும்மதமும், மலர்கள் சிந்திய தேனோடு சேர்ந்து வழிவது போல், பெரிய நீர்ச்சுனைகள் வாய்நிறைந்து வழியும் மலையின் மேல், சிங்கம் போன்ற வலிமை மிக்க வேடரெல்லோரும் ஒன்று கூடினர்.

**மன்ன வன்னிரை வந்து கண்ணுறும்**
**இன்ன நாளினாற் கோடு நாமெனச்**
**சொன்ன வாயுளே யொருவன் புட்குரல்**
**முன்னங் கூறினான் முழுது ணர்வினான்** 415

[கண்ணுறும்-சேரும்; ஒருவன்-ஒரு வேடன்; புள்-இங்கே ஆந்தை; சொன்னவாயுள்-சொன்ன உடனேயே.]

**அடைது நாநிரை யடைந்த காலையே**
**குடையும் பிச்சமு மொழியக் கோன்படை**
**உடையும் பின்னரே யொருவன் தேரினால்**
**உடைதுஞ் சுடுவில்தேன் உடைந்த வண்ணமே** 416

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[குடையும் பிச்சமும் - வெண்கொற்றக் குடையும் கொடியும்; உடைதும் - தோற்றுப்போவோம்; சுடுவில்-சுடுதலால்; சுடுதலால் தேனினம் வெருண்டோடுவதைப் போல.]

**என்று கூறலும் ஏழை வேட்டுவீர்**
**ஒன்று தேரினா லொருவன் கூற்றமே**
**என்று கூறினு மொருவ னென்செயும்**
**இன்று கோடுநா மெழுகென் றேகினார் 417**

[என்று கூறலும்-என்று நிமித்திகன் கூறுதலும்; ஏழை-அறிவின்மை; கோடும்-பற்றுவோம்.]

மன்னனுடைய ஆநிரைகள் வந்து சேரும் இந்த இளவேனில் பருவத்திலே நாம் அவற்றைக் கைப்பற்றுவோம் என்று கூடிய வேடர் தலைவன் ஒருவன் கூறவும், அவன் அப்படிச் சொன்ன உடனேயே முன்னர் கூவிய பறவையின் ஒலிக்குறிப்பின் பயனை முழுதாய்ந்து உணர்ந்த முதியோனாகிய நிமித்திகன் ஒருவன், ''நாம் வேந்தனின் ஆநிரையைக் கவர்வோம், கவர்ந்தவுடனேயே அரசனது படைகள் வந்து போரிட்டு வெண்கொற்றக் குடையும், படையும் சிதறிக் கிடக்கத் தோற்று ஓடும். பின்னர் தேரேறி ஒருவன் வருவான். அவனிடம், தீப் பந்தம் பற்றிய தேன்கூட்டில் உள்ள தேனீக்கள்போல் நம் படைகள் தோற்று ஓடும்''—என்று கூற, பின்னொருவன் சொல்லுவான் ''ஏழை வேடர்களே ஒருவன் கொலை வல்ல எமனே என்றாலும் அவன் தனியாக வந்து நம்மை என்ன செய்ய இயலும், எனவே நாம் ஆநிரை கவரப் போவோம் வருக'' எனவும் அனைவரும் உடன் போயினர்.

**வண்டு மூசறா நறவ மார்ந்தவர்**
**தொண்ட கப்பறை துடியொ டார்த்தெழ**
**விண்டு தெய்வதம் வணங்கி வெல்கென**
**மண்டி னார்நிரை மணந்த காலையே 418**

[மூசு அறா-மொய்த்தல் நீங்காத, நறவம்-கள்; தொண்டகப் பறை குறிஞ்சி நிலத்துக்குரியது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



தெய்வதம்; இங்கே முருகக் கடவுள். மண்டினார்- மிக்குச் சென்றார்; நிரை மணந்தகாலை-பசு- நிரைகள் கூடிய சமயத்தில்.]

பூத்த கோங்குபோற் பொன்சு மந்துளார்
ஆய்த்தி யர்நலக்கு ஆசெல் தூணனான்
கோத்த நித்திலக் கோதை மார்பினான்
வாய்த்த வந்நிரை வள்ளு வன்சொனான் 419

[கோங்கு-ஒருவகை மரம்; அதன் பூக்கள் பொன்னிற முடையன. ஆய்த்தியர்-ஆய்ச்சியர்; நலக்கு- நலத்துக்கு; வாய்த்த-நிமித்தம் கூறுதல் தப்பாத; வள்ளுவன் - வருங்காரியம் உரைப்பவனாகிய நிமித்திகன்; ஆசெல்-பசுக்கள் சென்று உராயும்.]

பிள்ளை யுள்புகுந் தழித்த தாதலால்
எள்ளன் மின்னிரை யின்று நீரென
வெள்ளி வள்ளியின் விளங்கு தோணலார்
முள்கு மாயரும் மொய்ம்பொ டேகினார் 420

[பிள்ளை-காரியென்னும் பறவை; காரிப்புள். வள்ளி- வளை; முள்குதல்-முயங்குதல்; ஆயர்-இடையர்; மொய்ம்பு-வன்மை.]

வண்டுகள் நீங்காது மொய்க்கின்ற தேன்மதுவை நிறையப் பருகித் தொண்டகப் பறையும் உடுக்கையும் சேர்ந்து ஆரவாரத்துடன் ஒலிக்க, வெற்றி கிடைப்பதாக என்று தெய்வத்தை வணங்கி, பசுக்கூட்டங்கள் வந்த வுடன் அவற்றைக் கவர வேடர்களும் சென்றனர். பூத்து மலர்ந்த கோங்குமரம்போல் பொன்னணி சுமந்த ஆய்ச்சி யர்க்கு நலம் செய்யும் பசுக்கள் உராயும் தூண் போன்ற வலிவுடையவனும், கோத்துத் தொடுத்த முத்துமாலை அணிந்த மார்புடையவனுமாகிய நந்தகோனின் ஆநிரை யிலிருந்த குறிகூறும் நிமித்திகன், காரிப்புள் என்னும் பறவை பசுக் கூட்டத்திலே புகுந்து அழிவுக்குறி காட்டியது; ஆகவே இன்று நீர் நிரை காவலை இகழாது செம்மையுறச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

செய்க என்றுகூற, வெள்ளை வளை அணிந்த தோளுடை மகளிர் காதல் துய்க்கும் இளைஞரும் மிக்க வலிவோடு அன்று காவல் காக்கப் புறப்பட்டனர்.

காய மீனெனக் கலந்து கானிரை
மேய வெந்தொழில் வேட ரார்த்துடன்
பாய மாரிபோற் பகழி சிந்தினார்
ஆயர் மத்தெறி தயிரி னாயினார் 421

[காயம் - ஆகாயம்; மீன் - விண்மீன்; நிரை - பசுக்கூட்டம்; ஆர்த்து - ஆரவாரித்து; ஆயர் - இடையர்.]

குழலு நவியமும் ஒழியக் கோவலர்
கழலக் காடுபோய்க் கன்று தாம்பரிந்து
உழலை பாய்ந்துலா முன்றிற் பள்ளியுள்
மழலைத் தீஞ்சொலார் மறுக வாய்விட்டார் 422

[நவியம்-கோடரி; கோவலர்-இடையர்; கழல-நீங்க; கன்று தாம்பு அரிந்து-கன்றுகள் கயிற்றை அறுத்து; உழலை-தடைமரம்; உலாம்-உலாவும்; பள்ளி-இடைச்சேரி; மழலைத் தீஞ்சொலார்-ஆய்ச்சியர்; மறுக-மயங்கும்படி; முன்றில்-வாயில்.]

மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவர்
அத்த லைவிடின் இத்த லைவிடார்
உய்த்த னரென வுடைத யிர்ப்புளி
மொய்த்த தோணலார் முழுது மீண்டினார் 423

[மத்தம்-மத்து; இத்தலையென்றது இடையரிருக்கும் இடத்தை. புளி-புள்ளி; நலார்-மகளிர்; புல்லிய-பிணித்த.]

### வேறு

வலைப்படு மானென மஞ்ஞையெ னத்தம்
முலைப்படு முத்தொடு மொய்குழல் வேய்ந்த
தலைப்படு தண்மலர் மாலைபி ணங்க
அலைத்த வயிற்றின ராயழு திட்டார் 424



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[பிணங்க-பின்னிக்கொள்ளும்படி; வேய்ந்த-அணிந்த; அலைத்த-அடித்த.]

வானம் போன்று இருண்ட காட்டில் விண்மீன் போன்ற வெள்ளை நிறப் பசுக்கள் மேய்ந்திருக்கையில், கொலைத் தொழில் மிக்க வேடுவர்கள், ஆரவாரித்துப் பொழிகின்ற மழைபோல் அம்புகளை விடுக்க' இடையர்கள் மத்திடைப் பட்ட தயிர்போல் நிலைகுலைந்து சிதறி ஓடினர். தம் கைக் குழலும், கோடரியும் நழுவி விழச் சிதறி ஓடிய இடையர்கள், காட்டை விட்டுப் போய், கன்றுகள் கயிற்றை அறுத்துக் கொண்டு தடைமரத்தில் பாய்ந்து துள்ளும் வாயிலுடைய இடைச்சேரியில் புகுந்து. குழந்தை மழலைபோல் இனியசொல் உதிர்க்கும் ஆய்ச்சியர் மனம் வருந்தத் தம் ஆநிரைக்கு நேர்ந்ததனைக் கூறி வாய்விட்டுக் கதறினர். மத்தினை ஊன்றித் தயிரைக் கடையும்போது ஒரு பக்கம் கயிற்றை நெகிழ விட்டாலும் மறுபக்கம் நெகிழாமல் சேர்த்து இழுப்பதைப் போல் வேடர்கள் இருபக்கமும் சூழ்ந்து ஆநிரையைக் கவர்ந்து சென்றனர் என்று அவர்கள் கதறிக் கூறியயைக் கேட்டு, தயிரைக் கடையும் போது தெறித்து விழுந்த மோர்ப் புள்ளிகள் மொய்த்திருக்கும் தோளுடைய ஆய்ச்சியர்கள் எல்லாம் ஒன்று கூடி, வலையில் சிக்கிய மான் போலவும் மயில்போலவும், முலை மீது அணிந்த முத்துமாலையும், தலையில் சூட்டிய குளிர்ந்த முல்லைமலர் ஆரமும் கலந்து சிக்குற, கூந்தல் கலைய வயிற்றிலடித்துக்கொண்டு அழுதனர்.

**எம்மனை மார்இனி யெங்ஙனம் வாழ்குவிர்**
**நும்மனை மார்களை நோவ வதுக்கி**
**வெம்முனை வேட்டுவ ருய்த்தன ரோவெனத்**
**தம்மனைக் கன்றொடு தாம்புலம் புற்றார்** 425

[எம் அனைமார் என்றது கன்றுகளை நோக்கி. நோவ-வருந்தும்படி; அதுக்கி-அடித்து; நும் அனைமார் என்றது தாய்ப் பசுக்களை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பாறை படுதயிர் பாலொடு நெய்பொருது
ஆறு படப்பள்ளி ஆகுல மாக
மாறு படமலைந் தாய்ப்படை நெக்கது
சேறு படுமலர் சிந்த விரைந்தே 426

[பாறை-கல்; ஆகுலம்-வருத்தம்; ஆய்-இடைச்சாதி; நெக்கது-கெட்டது; சேறு-தேன்.]

புறவணி பூவிரி புன்புலம் போகி
நறவணி தாமரை நாட்டக நீந்திச்
சுறவணி சூழ்கிடங்கு ஆரெயில் முதூர்
இறையணிக் கேட்கவுய்த் திட்டனர் பூசல் 427

[புறவு-சிறு காடு; புன்புலம்-முல்லை நிலம்; சுறவு-சுறாமீன்; கிடங்கு - அகழி; இறை - அரசன்; கட்டியங்காரன். ஆரெயில்-பெரிய மதில்.]

'எம் அன்னையரே, நீர் இனி எங்ஙனம் வாழ்வீர்? உம் அன்னையரை வருந்த அடித்துக் கவர்ந்து கொண்டு போயினரே கொடிய வேடர்கள்' என்று தம் வீட்டில் இருந்த கன்றுகளைக் கட்டிக்கொண்டு ஆய்ச்சியர்கள் புலம்பி அழ, பாறைபோல் தோய்ந்த கெட்டித் தயிரும் பாலும் நெய்யும் கலந்து ஆறென ஓட, இடைச்சேரி துன்புற்று வருந்த, வேடருடன் போரிட்டு அழிவுற்றபடை, முல்லைமலர்த் தேன்சிந்தத் தரைமண் சேறாகும்படி விரைந்து சென்று, பூவிரிக்கும் காடுடைய அழகிய முல்லை நிலத்தைக் கடந்து, தேன் சொரியும் தாமரை மலர் பூத்துக் கிடக்கும் மருத நிலத்தையும் தாண்டி, சுறா மீன்கள் நிறைந்து கிடக்கின்ற மதிலை உடைய மூதுரை அடைந்து அரசன் அறியத் தங்களுக்குற்ற துயரினை எடுத்துக் கூறினர்.

## வேறு

'கொடுமர எயின ரீண்டிக் கோட்டிமி லேறு சூழ்ந்த
படுமணி நிரையை வாரிப் பைந்துகி லருவி நெற்றி
நெடுமலை யத்தஞ் சென்றா ரென்றுநெய் பொதிந்த பித்தை
வடிமல ராயர் பூசல் வளநகர் பரப்பி னாரே 428

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கொடுமரம்-வில்; எயினர் - வேட்டுவர்; கோடு-கொம்பு; இமில்-ஏற்றின் முசுப்பு; வாரி-கைக்கொண்டு; அத்தம்-வழி; பித்தை-தலை மயிர்; பூசல்: வேட்டுவர் நிரை கொண்டாரென்பது பற்றிச் சண்டை.]

## வேறு

**காசில் மாமணிச் சாமரை கன்னியர்**
**வீச மாமக ரக்குழை வில்லிட**
**வாச வான்கழு நீர்பிடித் தாங்கரி**
**யாச னத்திருந் தானடல் மொய்ம்பினான்** 429

[காசுஇல்-குற்றமற்ற; சாமரை - வெண்சாமரம்; வில்லிட-ஒளி வீச; அடல்-வலிமை.]

**கொண்ட வாளொடுங் கோலொடுங் கூப்புபு**
**சண்ட மன்னனைத் தாள்தொழு தாயிடை**
**உண்டொர் பூசலென் றாற்குரை யாயெனக்**
**கொண்ட னர்நிரை போற்றெனக் கூறினான்** 430

[கூப்புபு-கைகுவித்து; சண்டம்-கொடுமை; ஆயிடை-அக்காட்டில்; பூசல்-பெரும் போர்; என-என்று கூற.]

'வில்லேந்திய வேடர்கள் ஒன்றுகூடி, திமிலை உடைய ஏறுகள் சூழ்ந்த, ஒலிக்கும் மணிபூட்டிய பசுக்கூட்டத்தைக் கவர்ந்துகொண்டு, புத்தாடை பொலிவதுபோல் வெள்ளருவி வீழுகின்ற மலை உச்சியை நோக்கிச் செல்கின்ற காட்டு வழியிலே சென்றார்' என்று, நறுநெய் பூசிய தலை மயிரிலே மணமலர் சூடிய இடையர்கள் அம்மூதூராகிய வளநகர் எங்கும் கேட்க இச்சேதியினைச் சொல்ல, குற்றமற்ற வெண்கவரி அழகிய மகளிர்வீச, காதிலணிந்த மகரமீன் குண்டலம் ஒளிவிட, மண மிகுந்த உயர்ந்த செழுங் கழுநீர்ப் பூவினைக் கையிலேந்தி, அரண்மனையில் அரியாசனத்தில் வீற்றிருந்த வலிமைமிக்க, ஆற்றலுடைய கட்டியங்காரனிடம், கையிலேந்திய வாளோடும் தண்டக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கோலோடும் சென்று கைகுவித்துக் கொடிய அவனின் தாள் தொட்டு வணங்கிக் காட்டிடைச் சிறு குழப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று வாயிலோன் கூறவும், அவ்வாயில் காவலனை நோக்கி அதனைச் சொல் என்று வேந்தன் பணிக்க, அவனும் பசுத்திரளை வேடர்கள் கவர்ந்து கொண்டு சென்றனர் என்ற சேதியினை அரசன் திருவுளம் அறிய எடுத்துச் சொன்னான்.

**செங்கட் புன்மயிர்த் தோல்திரை செம்முக**
**வெங்க ணோக்கிற்குப் பாயமி லேச்சனைச்**
**செங்கண் தீவிழி யாத்தெழித் தான்கையுள்**
**அங்கட் போதுபி சைந்தடு கூற்றனான் 431**

*[தோல் திரை செம்முகம்-தோல் சுருங்கிய சிவந்த முகம்; குப்பாயம் - சட்டை; மிலேச்சர்கள் பண்டைக்காலத்தில் வாயில் காவலர்களாக இருந்ததுண்டென்று தெரிகின்றது. தெழித்தல்-கோபித்தல்; மிலேச்சர்கள் - பண்பற்ற பிற நாட்டினர்.]*

## வேறு

**கூற்றின் னிடிக்குங் கொலைவேலவன் கோவ லர்வாய்**
**மாற்றம் முணர்ந்து மறங்கூர்கடற் றானை நோக்கிக்**
**காற்றின் விரைந்து தொறுமீட்கெனக் காவல் மன்னன்**
**ஏற்றை யரிமா னிடிபோல இயம்பி னானே 432**

*[வேலவன்-கட்டியங்காரன்; கோவலர்-இடையர்; மறம்-வீரம்; கடற்றானை-கடல்போன்ற சேனை; தொறு - பசுக்கூட்டம்; அரிமானேற்றை-ஆண் சிங்கம்.]*

## வேறு

**கார்விளை மேக மன்ன கவுளழி கடாத்த வேழம்**
**போர்விளை யிவுளித் திண்டேர் புனைமயிர்ப் புரவி காலாள்**
**வார்விளை முரசம் விம்ம வானுலாப் போந்த தேபோல்**
**நீர்விளை சுரிசங் கார்ப்ப நிலநெளி பரந்த வன்றே 433**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கவுள்-கன்னம்; அழிதல்-மறைதல்; கடாத்தவேழம்-மதமுடைய யானை; வார்-முரசத்திற் கட்டிய தோற்கயிறு; வான்-மேகம்; உலா-பவனி; சுரீ சங்கு-முகம் சுழித்த சங்கு.]

சிவந்த கண்களையும், நெருங்கிய மயிர் நிறைந்த தோல் சுருங்கி முதுமை அடைந்த சிவந்த முகத்தையும், கொடிய பார்வையையும் உடைய குப்பாயம் அணிந்த வாயிற் காவலனை, தன் சிவந்த கண்ணில் தீஉமிழக் கோபித்து நோக்கித் தன்கையில் இருந்த செழுங்கழுநீர்ப் பூவைச் சினத்தால் பிய்த்தெறிந்தான் கொல்லும் கூற்றைப் போன்றகட்டியங்காரன். கொல்லுகின்ற யமனைப்போல் முழங்கும் கொலை வேலேந்திய கட்டியங்காரன் இடையர்கள் சொன்ன குறையைக் கேட்டுணர்ந்து, வீரம் விளைக்கும் கடல்போன்ற வலிவுடைய தன்படையை நோக்கி, 'காற்றிலும் கடிது சென்று வேடர் கவர்ந்து சென்ற பசுக்கூட்டத்தை மீட்டு வருக' என்று ஆண்சிங்கம் போலும் இடிபோலும் முழங்கிச் சொன்னான். கார் காலத்துக் கருமுகில் போன்ற கன்னக் கதுப்புகளில் இருந்து பெருகும் மதம் உடைய களிறுகளும், போரிடத் தக்க குதிரை பூட்டிய தேர்களும், அழகிய பிடரி மயிருடைய குதிரைகளும், காலாட் படையும் ஆகிய நான்கு வகைப் படைகளும், தோல்வாரால் கட்டப்பட்ட முரசு முழங்கவும், சுழிந்த சங்குகள் ஒலிக்கவும், வான்முகில் வரிசையுற வந்ததேபோல் நிலம் நடுங்கி நெளியப் புறப் பட்டன.

**காலகம் புடைப்ப முந்நீர்க் கடல்கிளர்ந் தெழுந்த தேபோல்**
**வேலக மிடைந்த தானை வெஞ்சின வெயினர் தாக்க**
**வால்வளை யலற வாய்விட்டு இரலையுந் துடியு மார்ப்பப்**
**பால்வளைந் திரவு செற்றுப் பகலொடு மலைவ தொத்தார்**

[கால் காற்று; கிளர்ந்து - வளர்ந்து; வளை-சங்கு; இரலை - துத்தரிக்கொம்பு; ஒருவகை ஊது கொம்பு. துடி-ஒருவகைப்பறை; பால்வளைந்து-ஒரு பக்கம் வளைத்து.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**விற்பழுத் துமிழ்ந்த வெய்ய வெந்நுனைப் பகழி மைந்தர்**
**மற்பழுத் தகன்ற மார்பத் திடங்கொண்டு வைகச் செந்நாச்**
**சொற்பழுத் தவர்க்கும் ஆண்மை சொல்லலாந் தன்மைத் தன்றிக்**
**கொற்பழுத் தெரியும் வேலார் கொடுஞ்சிலை குழைவித் தாரே 435**

*[நுனி-கூர்மை; பகழி-வேடருடைய அம்பு; செந்நாச் சொற் பழுத்தவர் - கவிஞர்; மற்பழுத்த-மற் போரிலே தேர்ந்த.]*

**வாட்படை யனுங்க வேடர் வண்சிலை வளைய வாங்கிக்**
**கோட்புலி யினத்தின் மொய்த்தார் கொதிநுனைப் பகழி தம்மால்**
**வீட்டினார் மைந்தர் தம்மை விளிந்தமா கவிழ்ந்த திண்டேர்**
**பாட்டரும் பகடு வீழ்ந்த பனிவரை குனிவ தொத்தே 436**

*[அனுங்க-கெடும்படி; கோள்-கொலை; வீட்டினார்-கொன்றார்; மா - குதிரை; பகடு - யானை; விளிந்த-இறந்த.]*

*காற்று உட்புகுந்து மோதக் கடல் பொங்கி எழுவதைப் போல், வேலேந்திய, மிகுந்த அரசனது படையை வேடர்கள் தாக்க வெண்சங்கம் முழங்கவும் ஊதுகொம்பும் துடிப்பறையும் ஒலிக்கவும் ஒருபக்கமாக வளைத்துக் கொண்டு, கோபித்து இரவும் பகலும் ஒன்றோடு ஒன்று போரிட்டுக் கொள்வது போலப் போரிட்டனர். வில்லை வளைத்து வேடர்கள் எய்த கூரிய நுனியுடைய அம்புகள், அரசனது படையில், மற்போரிலே தேர்ந்த வீரர்களின் விரிந்த மார்பிலே சென்று தைக்க, சொற் செல்வம் பெற்ற கவிகளாலும் வர்ணிக்க முடியாதபடி; கொலைத் தொழில் தேர்ந்த ஒளிவேலேந்திய வேடர்களின் வளைந்த வில்லை வாளால் உடைத்தெறிந்தனர். தம் கையில் அறுபட வந்த வாள்வீரர்கள் அழியுமாறு வேடர்களும் மேலும் வில்லை வளைத்து, வேங்கைப் புலியைப் போலச் சீறி, நஞ்சிட்டுக் காய்ச்சிய நுனி உடைய அம்புகளால் அரசன்*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


படையினைச் சூழ்ந்து கொள்ள, குதிரைகள் வெருண் டோடின; பொற்றேர்கள் கவிழ்ந்து விழுந்தன; பயனு டைய வலிய யானைகள் பனி மலைகள் சாய்வதுபோல் தாழ்ந்து விழுந்து அழிந்தன.

**வென்றிநாங் கோடு மின்னே வெள்ளிடைப் படுத்தென் றெண்ணி**
**ஒன்றியுள் வாங்கு கென்ன வொலிகட லுடைந்த தேபோற்**
**பொன்றவழ் களிறு பாய்மா புனைமயிற் குஞ்சி பிச்சம்**
**மின்தவழ் கொடியொ டிட்டு வேற்படை யுடைந்த வன்றே**

*[கோடும்-கொள்வோம்; குஞ்சி - மயிலிறகாலான விருது; பிச்சம்-வெண்குடை; வெள்ளிடைப் படுத்தல்-வெளிப்படுத்தல்.]*

**பல்லினாற் சுகிர்ந்த நாரிற் பனிமலர் பயிலப் பெய்த**
**முல்லையங் கண்ணி சிந்தக் கால்விசை முறுக்கி யாயர்**
**ஒல்லென வொலிப்ப வோடிப் படையுடைந் திட்ட தென்ன**
**அல்லலுற் றழுங்கி நெஞ்சிற் கட்டியங் கார னாழ்ந்தான்**

*[சுகிர்தல்-கிழித்தல்; விசை முறுக்கி-வேகம் மிக்கு; ஒல்-ஆரவார ஓசை; அழுங்கி-இரங்கி; கண்ணி-தலையில் சூடும் மாலை.]*

**வம்புகொண் டிருந்த மாதர் வனமுலை மாலைத் தேன்சோர்**
**கொம்புகொண் டன்ன நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலும்**
**அம்புகொண் டரசர் மீண்டார் ஆக்கொண்டு மறவர் போனார்**
**செம்புகொண் டன்ன இஞ்சித் திருநகர்ச் செல்வ என்றார் 439**

*[வம்பு-கச்சு; மாதர்-காதல்; சோர்-சொரியும்; ஆக்கொண்டு-பசுக்களைக் கொண்டு; மறவர்-வேடர்; செம்பு கொண்டு-கலசம் அமைத்து.]*

**மன்னிரை பெயர்த்து மைந்தர் வந்தனர் கொள்க வாள்கண்**
**பொன்னிழை சுடரு மேனிப் பூங்கொடி யனைய பொற்பின்**
**கன்னியைத் தருது மென்று கடிமுர சியம்பக் கொட்டி**
**நன்னகர் வீதி தோறு நந்தகோ னறைவித் தானே 440**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[மன்-பெரிய; இழை-ஆபரணம்; கன்னி-நந்தகோனுடைய மகளான கோவிந்தை; இயம்ப-முழங்கும் படி; நந்தகோன்-பசுக்கூட்டத் தலைவன்.]

எஞ்சியவர்கள் நாம் இப்போதே வேடரை வெளிப் படுத்திப் போரிட்டு வெற்றி கொள்வோம் என்றெண்ணி, ஒன்று சேர்ந்து போரிட்டு அப்படையினை வெல்வீர் என்று தம் படைக்கு ஊக்கமூட்டிப் போரிட்டும்; அலை ஒலிமிக்க கடல் கரை புரண்டு ஓடுவதைப் போல, பொன்முகபடாம் அணிந்த யானையையும், பாயும் குதிரையையும், மயிற் பீலியையும், வெண்குடையையும் விட்டு விட்டு அரசனது வேற்படைகள் புறமுதுகிட்டு ஓடின. பல்லினால் கிழித் தெடுத்த நாரிலே சேர்த்துத் தொடுத்த அழகிய முல்லை மலர்க்கண்ணி சிதறவும், ஆயர்கள் 'ஒல்' என்று உண்டாக வேகமாக ஓடி நம் படை தோற்றதெனக் கட்டியங்கார னிடம் கூறவும் அவன் அல்லலுற்று வருந்தித் துன்ப நினை விலே கிடந்தான். கச்சணிந்த காதல் சுவையூட்டும் மார்பினைத் தேன்சொரியும் மலர்க்கொடி ஒன்று தனக்கு உறுப்பாகக் கொண்டதுபோல் விளங்கும், பெண்களின் அகன்ற பெரிய அழகிய கண்களைப் போன்ற அம்புகள் முதுகிலே தைக்க நம்வீரர்கள் ஓடி வந்திருக்கின்றனர்; வேடர்களோ பசுக் கூட்டத்தோடு போய்விட்டார்கள் என்று ஆயர்கள் கூறினர். அது கேட்டு அரசன் வாளா விருக்க 'பசுக் கூட்டத்தை மீட்டுவந்து தருகின்ற வீரர்கள் கொள்ள, வாள்போல் நீண்டு வளைந்த கண்களையும், பொன்னவிர் மேனிப் பொலிவும் உடைய பூங்கொடி போன்ற என்மகளைப் பரிசாகத் தருகிறேன்' என்று முரசறைந்து அப்பெருநகரின் வீதிதோறும் அம்முழக்கம் கேட்கும்படி நந்தகோன் அறிவித்தான்.

**வெதிர்ங்குதைச் சாபங் கான்ற வெம்நுனைப் பகழி மூழ்க**
**உதிர்ந்தது சேனை யீட்டங் கூற்றொடு பொருது கொள்ளும்**
**கருந்தடங் கண்ணி யன்றிக் காயம் ஆறுஆக ஏகும்**
**அரும்பெற லவளு மாகஎன் றாடவர் தொழுது விட்டார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[வெதிர்-மூங்கில்; குதை - நாணைக் கட்டுதற்கு வில்லின் இருபக்கத்தும் அமைந்துள்ள பள்ளம்; சாபம்-வில்; கான்ற-உமிழ்ந்த; ஆறுஆக-வழியாக; ஏகும்-செல்லும்.]

கார்விரி மின்ன னார்மேற் காமுகர் நெஞ்சி னோடும்
தேர்பரி கடாவித் தேந்தார்ச் சீவக னருளிற் போகித்
தார்பொலி புரவி வட்டந் தான்புகக் காட்டு கின்றாற்கு
ஊர்பரி வுற்ற தெல்லா மொருமக னுணர்த்தி னானே 442

[கார்-மேகம்; பரி-செலவு; கடாவி-செலுத்தி; காட்டு கின்றாற்கு - சீவகனுக்கு; பரிவுற்றது-துன்பமுற்றது.]

## வேறு

தன்பால் மனையாள் அயலான்தலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலாம்
நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனின்யான்அவ னாக வென்றான்

[மனையாள் - வீரமகள்; பாலடிசில் - பாற்சோறு; ஓம்புதல் - பாதுகாத்தல்; அவன்-கட்டியங்காரன்; தன்பால்-தன்னிடம்.]

மூங்கிலால் செய்த, நாண் பூட்டக் குழியுடைய வில் உமிழ்கின்ற கூரிய நுனையை உடைய அம்புகளிடைச் சிக்கி அரசனது பெரிய சேனையே சிதறிப் போயிற்று; எனவே எமனைப் போன்ற வேடர்களுடன் போரிடத் தகுந்தவள் கரிய பெரிய விழிகளை உடைய நந்தகோன் மகளான கோவிந்தையே அல்லாமல், வானமே வழியாக இயங்கும் அருந்திறல் மிக்க அவளை அடைய அக்காரியத்தைச் (வேடருடன் போரிடுவது) செய்ய நாங்கள் இல்லை என்று வீரர்கள் வாளாவிருக்க, கருமுகிலில் படரும் மின்னலைப் போன்ற பெண்களின் மேல் நினைவைப் பாயவிடும் காமுகர் உள்ளம்போல் விரைந்து ஓடுகின்ற தேரை அதன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


வழியிலே செலுத்திச் சென்ற, தேன்சிந்தும் மலர்மாலை அணிந்த சீவகன் அனுப்பப் போய்ச் செய்தி உணர்ந்து வந்த ஒருவன், பிடரிமயிர் செறிந்த குதிரைகளை அதன் வட்டத்திலே செல்லப் பழக்கிக் கொண்டிருந்த சீவகனிடம் ஊர்படும் துன்பத்தை எடுத்தியம்பினான். அதனைக் கேட்ட சீவகன் 'தன்னுடைய புகழ் வீரம் இவை அயலான் வசம் ஆகக்கண்டும், சாகாது உயிர்வாழ இனிய பால் சோற்றை விரும்பி உண்ணும் பேடியாகிய கட்டியங் காரனைப் போலாவேன்; நல்ஒழுக்கத்தையும், துன்பம் உற்ற பசுக்களையும், துறவிகளையும், பெண்களையும், குழந்தைகளையும், பார்ப்பாரையும் நான் காப்பாற்ற வில்லை என்றால். எனவே அவற்றை—பசுக்கூட்டத்தைக் காப்பாற்றல் என் கடமை' என்று தேர்ந்து,

**போர்ப்பண் ணமைத்து நுகம்பூட்டிப் புரவி பண்ணித்**
**தேர்ப்பண் ணமைத்துச் சிலைகோலிப் பகழி யாய்ந்து**
**கார்க்கொண்மு மின்னி நிமிர்ந்தான்கலி மான்கு ளம்பின்**
**பார்க்கண் எழுந்த துகளாற்பகல் மாய்ந்த தன்றே 444**

[பண்ணி-ஆயத்தம் செய்து; சிலைகோலி-வில்லை வளைத்து; கொண்மு-மேகம்; கலி - முழக்கம்; நுகம்-நுகத்தடி; பார்க்கண்-பூமியின் மேல்; துகள்-தூள், இங்கே புழுதி.]

**இழுதொன்று வாட்க ணிளையாரிளை யார்க ணோக்கிற்**
**பழுதின்றி மூழ்கும் பகழித்தொழில் வல்ல காளை**
**முழுதொன்று திண்டேர் முகஞ்செய்தவன் தன்னொ டேற்கும்**
**பொழுதன்று போது மெனப்புண்மொ ழிந்தான் மொழிந்தான்**

[இழுது-நெய்; இளையார்-மகளிர்; பழுதின்றி-தப்புதலில்லாமல்; காளை என்றது சீவகனை. புள் மொழிந்தான்-புள்ளின் நிமித்தம் கூறியவன்; ஏற்கும்-எதிர்க்கும்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**மோட்டும் முதுநீர் முதலைக்கு வலிய துண்டேல்**
**காட்டுண் ணமக்கு வலியாரையுங் காண்டு நாமென்று**
**ஏட்டைப் பசியி னிரைகவ்விய நாக மேபோல்**
**வேட்டந் நிரையை விடலின்றி விரைந்த தன்றே 446**

[மோடு-பெருமை; காண்டும்-காண்போம்; ஏட்டை-இளைப்பு; வேட்டு-வேட்டுவச்சாதி.]

வேடருடன் போர்புரிய ஆயத்தம் ஆகிக் குதிரைகளைத் தேர் நுகத்திலே பூட்டி, தேரினைச் சரிசெய்து, வில்லை வளைத்து, கணைகளைத் தேர்ந்தெடுத்து, கருமுகிலிடைப் பாய்ந்தோடும் மின்னலைப்போலத் தேரைச் செலுத்திச் செல்ல, அப்படிச் செல்லுகின்ற தேரில் பூட்டிய குதிரைகளின் குளம்படி பட்டுப் பூமியில் எழுந்த புழுதித் தூளால் சூரியனும் மறைந்தது. 'நெய் பூசிய வாள்போலும் கண்ணுடைய மகளிர் காதலரைப் பார்க்கும் பார்வைபோல வைத்த குறி தப்பாது சென்று தைக்கின்ற அம்பினை எய்வதில் வல்லவனும், எத்திக்கிலும் தேரைச் செலுத்திப் போரிடும் திறமை உடையவனுமான இவனோடு போரிடத் தகுந்த சமயம் இதுவல்ல; எனவே இப்போதே இவ்விடத்தை விட்டுப் போவோம்' என்று முன்னர்ப் பறவைக்குரல் கேட்டுக் குறி சொன்ன நிமித்திகன் கூறவும்; ஆழமான நீரில் முதலையையும் வெல்லக்கூடிய வலிமை உடையது இருக்குமானால், காட்டில் நமக்கு வலியார் யார் என்று பார்ப்போம் என்று, பசியால் இளைத்த பாம்பு கவ்விய இரையைவிடாது பற்றியிருப்பதுபோல் வேடர்களும் பசுக்கூட்டத்தை விடாது கைக்கொண்டு சென்றனர்.

## வேறு

**கடற்படை யனுங்க வென்ற கானவ ரென்னுங் கூற்றத்**
**திடைப்படா தோடிப் போமி னுய்யவென் றிரலை வாய்வைத்**
**தெடுத்தனர் விளியுஞ் சங்கும் வீளையும் பறையுங் கோடும்**
**கடத்திடை முழங்கக் காருங் கடலுமொத் தெழுந்த வன்றே**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

*[படாது-அகப்படாது; உய்ய-பிழைக்க; இரலை-ஊது கொம்பு; விளி-கொக்கரிப்பு; வீளை-நாவினது நுனியை மடித்துச் செய்யும் ஒலி; கடம்-காடு.]*

**கைவிசை முறுக்கி வீசுங் கொள்ளியுங் கறங்கும் ஏய்ப்பச்**
**செய்கழற் குருசில் திண்தேர் விசையொடு திசைக ளெல்லாம்**
**ஐயென வளைப்ப வீர ரார்த்தன ரவரு மார்த்தார்**
**மொய்யமர் நாட்செய் தையன் முதல்விளை யாடி னானே**

*[கறங்கு-காற்றாடி; குருசில் வீரர்-சீவகனுடைய படை வீரர்; அவர் - வேடர்; நாட்செய்து - நாள் கொண்டு; மொய்த்தல்-நெருங்குதல்.]*

**ஆழியா னூர்திப் புள்ளி னஞ்சிற கொலியி னாகம்**
**மாழ்கிப்பை அவிந்த வண்ணம் வள்ளல்தேர் முழக்கி னானும்**
**சூழ்துகள் மயக்கத் தானும் புளிஞருள் சுருங்கிச் சேக்கைக்**
**கோழிபோற் குறைந்து நெஞ்சி னறமென மறமும் விட்டார்**

*[ஆழி-சக்கரம்; பை-படம்; வள்ளல்-சீவகன்; புளிஞர்-வேடருள் ஒருவகையார்; உள்-மனம்; சேக்கை-வலை; மாழ்கி-வருந்தி.]*

'கடல்போன்ற உங்கள் படை அழிய, வேடர் என்னும் இந்த எமனிடம் அகப்படாமல் தப்பி ஓடிப்போங்கள்' என்று துத்தரிக் கொம்பை ஊதி, கொக்கரித்துச் சீழ்க்கை ஒலியெழுப்ப, காட்டிடைச் சீவகனது படைகள், சங்கும், பறையும், கொம்பும் கொண்டு ஒலியெழுப்ப அவ்விரு படைகளும் கருமுகிலும் கடலும் என ஒத்து எழுந்து ஒன்றோடு ஒன்று போரிட்டன. கை சுழற்றி விசையோடு வீசும் கொள்ளிக் கட்டையும் காற்றாடியும் போல வீரக் கழல் அணிந்த சீவகனுடைய பெரியதேர் எல்லாத் திசை களிலும் விசையோடு சென்று வளைக்க, சீவகனைச் சேர்ந்த வீரர்கள் ஆரவாரிக்க, வேடரும் ஆரவாரித்து எழுந்தனர். சீவகனும் விரையவரும் பெரும் போரின் முதல் நாளாக இதைக் கொண்டு சிறந்து போரிட்டான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

சக்கரதாரியான திருமாலின் வாகனமாகிய கருடனின் அழகிய சிறகொலி கேட்டு நாகம் அஞ்சிப் படம் ஒடுங்கிக் கிடப்பதுபோல், சீவகனுடைய தேர் முழக்கத்தாலும், அது எழுப்பிய புழுதி மயக்கத்தாலும், வேடர்கள் மனம் வருந்தி, வலையிடைப்பட்ட கோழிபோல் குன்றித் தம் நெஞ்சின் அறம் இழந்து நின்றதைப்போல் வீரமும் இழந்து நின்றனர்.

**புள்ளொன்றே சொல்லு மென்றிப் புன்றலை வேடன் பொய்த்தான்**
**வெள்ளந்தேர் வளைந்த நம்மை வென்றியீங் கரிது வெய்தா**
**உள்ளம்போற் போதும் நாமோர் எடுப்பெடுத்து உய்ய வென்னா**
**வள்ளன்மே லப்பு மாரி ஆர்ப்பொடு சிதறி னாரே** 450

*[புன்றலை-சிறிய தலை; வெய்தா-விரைவாக; அப்பு மாரி-அம்பு மழை; எடுப்பு எடுத்து-வீரப் போரிட்டு.]*

**மால்வரைத் தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னைக்**
**கால்இரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோல்**
**மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யப்பு மாரி**
**கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கி னானே**

*[மணிநிறம்-பளிங்கின் நிறம்; கல்-ஒலிக்குறிப்பு; பாற-சிதறும்படி; நிரைத்தெழுந்த-வரிசையாகித் தோன்றிய; கோல் - அம்பு; கால் - காற்று; இரைத்து-ஒலித்து.]*

**கானவர் இரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடும்**
**ஆனிரை பெயர்ந்த ஆய ரார்த்தனர் அணிசெய் திண்டோள்**
**தானொன்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி**
**போனின்ற வென்ப மற்றப் பொருவரு சிலையி னார்க்கே**

*[பெயர்ந்த-மீண்டன; முடங்கிற்று-வளைந்தது; சிலையினார்-வேடர்; இரிய-ஓட.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'ஒரு தேரே வரும் என்று பறவை குறி சொன்னதாகச் சொல்லி நம்மையெல்லாம் இந்தச் சிறுதலை உடைய நிமித்திகன் ஏமாற்றிவிட்டான். இங்கோ வெள்ளம் போல் தேர்கள் வந்து நம்மை வளைத்துக் கொண் டுள்ளன. இவற்றை வெல்வது அரிது. எனவே நாம் விரைவாக ஒரு முடிவுக்கு வந்து ஒன்று சேர்ந்து வீரப் போரிட்டுப் பிழைத்துப் போவோம்' என்று சீவகன் மேல் ஆரவாரத்தோடு அம்புமழை பெய்தனர். பெரிய மலை முகட்டைத் தொட்டு வீழ்கின்ற மணிஇழை போன்ற மழைத் தாரைகள் சிதறிவிழ, காற்று சீறியெழுந்து 'கல்' என்ற ஓசை உண்டாகத் தாக்குவது போல், தன்மேல் வேடர்கள் வரிசையுறப் பொழிந்த கூர் நுனியுடைய அம்பு மழையை, ஓயாது அம்புகளை உமிழ்கின்ற தன் வில்லால் சீவகன் தடுத்து நிறுத்தினான். வேடர்கள் அஞ்சி ஓடத் தன் வில்லிலே கொடிய அம்புகளைச் சீவகன் தொடுத்தவுடன், பசுக்கூட்டங்கள் மீண்டு வந்தன. இடையர்கள் மன மகிழ்ந்தனர். சீவகனின் அழகிய திண்தோள்களில் ஒன்று குறுக, ஒன்று நீள, (வில்லை நீட்டிப் பிடித்த இடக்கை நீளமாகவும், அம்பை இணைத்து வளைக்கையில் வலக்கை குறுகலாகவும் போவதை இது குறித்தது) பொழிகின்ற அம்புகள்வலிமைமிக்க வேடரைச் சுற்றிப் பெய்யும் மழைத் தாரைகள் போல் நின்றன.

## வேறு

**ஐந்நூறு நூறு தலையிட்ட வாறா யிரவர்**
**மெய்ந்நூறு நூறு நுதிவெங்கணை தூவி வேடர்**
**கைந்நூறு வில்லுங் கணையுமறுத் தான்க ணத்தின்**
**மைந்நூறு வேற்கண் மடவார்மனம் போல மாய்ந்தார்**

*[நூறும்-அழிக்கும்; மாய்தல்-மறைதல்; மைந்நூறு-அஞ்சனமை தீட்டிய.]*

**வாள்வாயு மின்றி வடிவெங்கணை வாயு மின்றிக்**
**கோள்வாய் மதிய நெடியான்விடுத் தாங்கு மைந்தன்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**தோள்வாய் சிலையி னொலியாற்றொறு மீட்டு மீள்வான்**
**நாள்வாய் நிறைந்த நகைவெண்மதி செல்வ னொத்தான்**

[வாள்வாய்-வாளாலுண்டாகிய வடு; கோள்-இராகு வென்னும் பாம்பு; தொறு-ஆனிரை, பசுக் கூட்டம்.]

**ஆளற்றம் இன்றி அலர்தாரவன் தோழ ரோடும்**
**கோளுற்ற கோவ னிரைமீட்டன னென்று கூற**
**வாளுற்ற புண்ணுள் வடிவேலெறிந் திற்ற தேபோல்**
**நாளுற்று லந்தான் வெகுண்டானக ரார்த்த தன்றே 455**

[ஆள்-வீரர்; அற்றம்-அறுதல்; குறைபாடு. தோழர்-சீதத்தன் முதலிய ஐந்நூற்று நால்வர்; நாளுற்று-முடிவு நாள் வந்து; உலத்தல்-அழிதல்.]

ஐயாயிரத்தை முன்னுடைய ஆறாயிரவர், அதாவது ஐம்பத்தாறாயிரம் வேடர்களின் உடலை நூறு கூறாக்குகின்ற கூர் நுனி உடைய கணைகளைச் சொரிந்து, அவர்களின் கையில் இருந்த நூற்றுக்கணக்கான வில்லையும் அம்புகளையும் சீவகன் உடைத்தெறிய மைஉண்ட வேல் போல் நீண்ட கண்களை உடைய விலைமகளிரின் மனம் போல வேடர்கள் ஒரு நொடியில் மறைந்து ஓடினர். வாளால் உண்டான காயமும் இன்றி, கூரிய அம்பு பட்டு உண்டான புண்ணும் இன்றி, இராகு என்னும் கோள் வாயிலிருந்து நிலவைத் திருமால் விடுவித்ததைப் போல், தோளில் தொங்குகின்ற வில்லின் ஒலிகொண்டே பசுக் கூட்டத்தை மீட்டுவந்த வலியுடைய சீவகன் நாள்தோறும் நிறைவெய்தி வளரும் முழுமதி போல் திகழ்ந்தான். இவ்விதமாக இருதரப்பிலும் ஒருவருக்கும் துன்பமில்லாமல், வேடரால் கவரப்பட்ட அரசனின் ஆநிரையைச் சீவகன் தன் தோழருடன் சென்று மீட்டு வந்தான் என்று கூற, வாள் பட்டு உண்டான புண்ணில் வேல் தைத்து முறிந்ததைப்போல், தன் முடிவு நாள் வந்துற்றதை எண்ணிக் கட்டியங்காரன் சினங்கொண்டு சீறினான்—நகர மக்கள் மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைத்தனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

இரவிதோய் கொடிகொண் மாடத் திடுபுகை
தவழச் சுண்ணம்
விரவிப்பூந் தாமம் நாற்றி விரைதெளித் தாரந் தாங்கி
அரவுயர் கொடியி னான்தன் அகன்படை யனுங்க வென்ற
புரவித்தேர்க் காளை யன்ன காளையைப் பொலிக
வென்றார் 456

*[சுண்ணம் - வாசனைப் பொடி; தாமம் - மாலை; நாற்றி-தொங்கவிட்டு; விரை-வாசனை; தேர்க் காளை-அருச்சுனன்; காளை-சீவகன்; புரவி-குதிரை.]*

இன்னமு தனைய செவ்வா யிளங்கிளி மழலை அஞ்சொல்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொங்கிள முலையி னார்தம்
மின்னிவர் நுசுப்பு நோவ விடலையைக் காண வோடி
அன்னமு மயிலும் போல அணிநகர் வீதி கொண்டார் 457

*[பொன் அவிர்-பொன்னைப் போல் விளங்குகின்ற; மின் இவர் நுசுப்பு-மின்னலின் தன்மை பொருந்திய இடை; விடலை-ஆண்பாற் பருவப் பெயர்.]*

சில்லரிச் சிலம்பின் வள்வார்ச் சிறுபறை கறங்கச்
செம்பொன்
அல்குற்றே ரணிந்து கொம்மை முலையெனும் புரவி பூட்டி
நல்லெழி னெடுங்க ணம்பாப் புருவவில் உருவக் கோலிச்
செல்வப்போர்க் காமன் சேனை செம்மன்மே லெழுந்த
தன்றே 458

*[சில அரி-சிலவாகிய பரல்; வள்வார்-சிறிய வார்; அணிந்து-சமைத்து; கொம்மை-பெருமை; கோலி-வளைத்து; செம்மல்-சீவகன்.]*

ஞாயிறு தோயும் கொடிகள் நிறைந்த மாடத்தில் மகளிர் எல்லாம் நறுமணப் புகையும் சுண்ணப் பொடியும் கலந்து தவழ இட்டும், மலர் மாலைகளைத் தொங்க



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விட்டும், நறுமணப் பொடிகளை எங்கும் தெளித்தும், முத்துமாலைகள் அணிந்து, பாம்புக் கொடி உடைய துரியோதனின் பெரும் படையை அழித்து வென்ற, புரவி பூட்டிய தேர் ஊர்ந்து சென்ற காளையாகிய அருச்சுனனைப்போல் வெற்றி கொண்டு வரும் சீவகனை வாழ்க என்று வாழ்த்தி வரவேற்றனர். இனிக்கும் அமுதூறும் செவ்வாயும் இளங் கிளிவாய் மழலை மொழியும் உதிர்க்கும் பொன் அள்ளித் தெளித்தது போல் தேமல் படர்ந்து பூரிக்கும் முலையும் உடைய இள மகளிர் மின் போன்ற தம் இடைவருந்தச் சீவகனைக் காண ஓடிவந்து அன்னமும் மயிலும்போல அந்நகரின் அவ்வழகிய தெருக்களை அடைத்துக்கொண்டு நின்றனர். சில பரல் களை உடைய சிலம்புகளாகிய சிறுவாரால் கட்டப் பெற்ற பறை முழங்கவும், மேகலையால் அல்குலாகிய தேர்த்தட்டை அணி செய்தும், பருத்த முலைகளாகிய குதிரைகளைப் பூட்டியும் மிக்க அழகுடைய நீண்ட கண்ணை அம்பாகக் கொண்டு, புருவமாகிய வில்லை வளைத்தும் இது போன்ற செல்வத்தே நின்று போரிடும் காமன் படை போன்ற மகளிர் பட்டாளம், சீவகனுடன் போரிடப் புறப்பட்டதுபோல் தெருக்களை மொய்த்தது.

**நூல்பொர அரிய நுண்மை நுசுப்பினை ஒசிய வீங்கிக்**
**கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கிக்**
**கோல்பொரச் சிவந்த கோல மணிவிரற் கோதை தாங்கி**
**மேல்வரல் கருதி நின்றார் விண்ணவர் மகளி ரொத்தார்**

[நுசுப்பினை ஒசிய-இடை ஒடியும்படி; வீக்கி-கட்டி; கோல்-வீணையின் நரம்பு; பொர-தாக்க; மேல் வரல்-மேலான வரவு.]

**ஆகமும் இடையு மஃக அடிபரந் தெழுந்து வீங்கிப்**
**போகமும் பொருளு மீன்ற புணர்முலைத் தடங்கள் தோன்றப்**
**பாகமே மறைய நின்ற படைமலர்த் தடங்க ணல்லார்**
**நாகம்விட் டெழுந்து போந்த நாகர்தம் மகளி ரொத்தார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[ஆகம்-மார்பு; வீங்கி-பெருத்து; தடம்-உயர்ந்த இடம்; படை-இங்கே வேல்; கண்ணுக்கு உவமை. அஃக-சுருங்க.]

**வாளரந் துடைத்த வைவே லிரண்டுடன் மலைந்த வேபோல்**
**ஆள்வழக் கொழிய நீண்ட அணிமலர்த் தடங்க ணெல்லாம்**
**நீள்சுடர் நெறியை நோக்கு நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்**
**காளைதன் தேர்செல் வீதி கலந்துடன் தொக்க வன்றே 461**

[வாளரம் துடைத்த-அரத்தினால் அராவப்பட்ட; மலைந்த போல்-மாறுபட்டன போல; ஆள் வழக்கு ஒழிய-ஆடவர்களின் நடை கெடும்படி; சுடர்-சூரியன்; நிரை-வரிசை; தொக்க-கூடின.]

நூலைக்கூட உவமை கூற முடியாத மெல்லிய இடை ஒடிந்து விழும்படி விம்மிப் புடைபருத்த சுவையூட்டும் அழகிய முலைகளைக் கச்சில் இறுக்கிக்கட்டி, யாழ்நரம்பு தாக்கச் சிவந்த கை விரல்களால் கூந்தலைத் தாங்கியபடி சீவகன் வரவை எதிர்நோக்கி நின்ற அம்மகளிர் விண்ணுலக மங்கையரைப் போன்றிருந்தனர். உடலும் இடையும் சுருங்கப் புடை பரந்து விம்மிப் பெருத்த, இன்பத்தையும் வாழ்வையும் தருகின்ற இணை முலைகள் வெளியே தெரிய, உடலின் அடிப்பாகம் மட்டுமே துணியில் மறைய நின்ற காமன் படையாகிய மலர் போன்ற பெரிய கண்ணுடைய பெண்கள், நாகலோகத்தை விட்டு வெளி வந்த நாக கன்னியரைப் போன்றும் இருந்தனர். வாளரத்தால் அராவிய கூரிய வேல்கள் இரண்டு தமக்குள் போரிட்டுக் கொள்வதைப்போல், ஆடவர் நலம் அழிய நோக்குகின்ற நீண்ட அழகிய மலரனைய மகளிரின் பெரிய கண்கள் எல்லாம், ஞாயிறு செல்லும் வழியையே பார்த்திருக்கும் பெரிய நெருஞ்சிப் பூக்களைப்போல், சீவகனுடைய தேர் செல்லும் வழியெல்லாம் சென்று சேர்ந்து கூடின.

**வடகமுந் துகிலுந் தோடு மாலையு மணியும் முத்தும்**
**கடகமுங் குழையும் பூணுங் கதிரொளி கலந்து மூதூர்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

இடவகை யெல்லை யெல்லா மின்னிரைத் திட்ட தேபோற்
படஅர வல்கு லாரைப் பயந்தன மாட மெல்லாம் 462

[வடகம்-மேற் போர்வை; தோடு-காதணி; பூண்-மற்றைய ஆபரணங்கள்; மூதூர்-இராசமாபுரம்; மின் நிரைத்திட்டதேபோல்-மின்னலை வரிசையாக வைத்ததைப்போல.]

மாதுகு மயிலி னல்லார் மங்கல மரபு கூறிப்
போதக நம்பி யென்பார் பூமியும் புணர்க என்பார்
தோதக மாக வெங்கும் சுண்ணமேற் சொரிந்து தண்ணென்
தாதுகு பிணையல் வீசிச் சாந்துகொண் டெறிந்து நிற்பார்

[போதக-புகுக; தோதகம்-வருத்தம்; சுண்ணம்-வாசனைப் பொடி; தாது-மகரந்தப் பொடி; பிணையல்-மாலை; மது-காதல்; உகும்-ஒழுகும்.]

கொடையுளு மொருவன் கொல்லுங் கூற்றினுங் கொடிய வாட்போர்ப்
படையுளு மொருவ னென்று பயங்கெழு பனுவல் நுண்ணூல்
நடையுளார் சொல்லிற் றெல்லா நம்பிசீ வகன்கட் கண்டாம்
தொடையலங் கோதை யென்று சொல்லுபு தொழுது நிற்பார்

[பயம்கெழு - பயனுடைய; பனுவல் - சான்றோர் ஆக்கிய பெருநூல்; நுண்ணூல் - சிறந்த நூல்; அறிவு நூலுமாம். சொல்லுபு-சொல்லி.]

மேலாடையும், பட்டுத்துணியும், தோடும், மாலையும், மணியும், முத்துக்கள் பதித்த கைவளையும், காதுக்குழையும் பூணும் ஆகிய அணிமணிகளின் ஒளி, திங்களின் ஒளியையும் ஞாயிற்றின் ஒளியையும் போல நிறைந்து விளங்க; புகழ்மிக்க பேரூராகிய இராசமாபுரத்தில் காணும் இடம் எல்லாம், மின்னலை அழகுற நிறுத்தி வைத்ததைப்போல் வீடுகளின் மாடங்களில் எல்லாம் பாம்பின் படம்போன்ற அல்குலுடைய பெண்கள் நிறைந்திருந்தனர். காதலைச் சொரிகின்ற மயில்போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பரத்தையர்கள் முறைப்படி மங்கல வாழ்த்துக் கூறி, ஆண் மகனே வருக என்பார்; புகழ்வாழ்வு உன்னைச் சேர்க என்பார்; மெய்வருந்த எங்கும் சுண்ணப் பொடியை அள்ளி வீசி, குளிர்ந்த மகரந்தம் சிந்தும் மலர்மாலைகளை அவன் மேல் வீசி, சந்தனத்தையும் வழித்தெடுத்து எறிவார். கொடை அளிப்பதில் ஒருவனே சிறந்து நிற்பான்; கொன்றழிக்கும் எமனிலும் கொடிய வாட் போரிலும் ஒருவனே சிறந்து விளங்குவான் என்று பயன் தரும் பழைய நீதி நெறி நூல்கள் ஆய்ந்த பெரியோர் சொல்லியவை எல்லாம் சீவகனிடம் (படைத்திறமும் கொடை வளமும் ஒருவனிடத்திலேயே) ஒன்று சேர்ந் திருக்கக் கண்டோம் என்று சில மங்கையர் அவனை வணங்கி நிற்பர்.

**செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவ முடைய ளென்பார்**
**எம்மலைத் தவஞ்செய் தாள்கொ லெய்துவம் யாமு மென்பார்**
**அம்முலை யமுத மன்னா ரகம்புலர்ந் தமர்ந்து நோக்கித்**
**தம்முறு விழும வெந்நோய் தந்துணைக் குரைத்து நிற்பார்**

*[அமர்ந்து நோக்கி-விரும்பிப் பார்த்து; விழுமவெந் நோய்-துன்பத்தைத் தரும் கொடிய காமநோய்; துணை-தோழி; அகம்புலர-மனம் உருக; எம் மலை-எத்தகைய.]*

**சினவுநர்க் கடந்த செல்வன் செம்மலர் அகலம் நாளைக்**
**கனவினி லருளி வந்து காட்டியாங் காண வென்பார்**
**மனவிரி யல்கு லார்தம் மனத்தொடு மயங்கி யொன்றும்**
**வினவுந ரின்றி நின்று வேண்டுவ கூறு வாரும்** 466

*[சினவுநர்-கோபிப்பவர், பகைவர். கடந்த-வஞ்சியாது எதிர் நின்று வென்ற; அகலம்-மார்பை; காட்டி-காட்டுக; வினவுநர்-கேட்பவர்; மனவு-மேகலை.]*

**விண்ணகத் துளர்கொல் மற்றிவ் வென்றிவேற் குருசி லொப்பார்**
**மண்ணகத் திவர்க ளொவ்வார் மழகளி றனைய தோன்றல்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**பண்ணகத் துறையுஞ் சொல்லார் நன்னலம் பருக வேண்டி**
**அண்ணலைத் தவத்தில் தந்தார் யார்கொலோ அளிய**
**ரென்பார் 467**

[மழகளிறு - குட்டியானை; கொலோ - வியப்புவிளி; அளியர் - அருளுடையோர்.]

இன்னும் சிலர், 'இத்தகைய சிறப்புமிக்க செல்வனைப் பெற அவன் தாய் எத்தகைய தவம் செய்தாளோ, நாமும் அத்தகைய தவத்தை மேற்கொள்வோம்' என்பார். அமுதூறும் அழகிய முலை உடைய மகளிர் சிலர், உளம் நெகிழ அவனை உற்று நோக்கி, தாமடைந்த துயர்மிக்க காமநோயைத் தம் தோழிக்குச் சொல்லி நிற்பர். 'பகை வென்று வருகின்ற வீரனே நின் புகழ்மாலை அணிந்த மார்பை நாளை எம்கனவில் வந்து காட்டுக' என்பார் சிலர். மேகலை ஒளி நிறைந்த அல்குலுடைய மகளிர் சிலர், மதிமயங்கி யாரும் ஒன்றும் கேட்காமலே நின்றிருந்த படியே தாம் விரும்பியதைக் கூறி நிற்பார்கள். 'விண்ணுலகத்தில் இருப்பார்களோ வெற்றி வேலேந்திய இவ்வீர இளைஞனைப் போன்ற ஆண் மக்கள்? ஆண் யானை போன்ற இவனை ஒப்பார் இம்மண்ணுலகத்தில் இல்லை' என்று வீணைப் பண்போலும் இனிய மொழி பேசும் மங்கையர் சிலர் அவன் நல்லழகைப் பருக விரும்பி இம்மேலோனைத் தவமிருந்து பெற்ற அருள் மங்கை யாரோ என்பர்!

**வட்டுடைப் பொலிந்த தானை வள்ளலைக் கண்ட போழ்தே**
**பட்டுடை சூழ்ந்த காசு பஞ்சிமெல் லடியைச் சூழ**
**அட்டரக் கனைய செவ்வா யணிநலங் கருதிக் காமக்**
**கட்டழ லெறிப்ப நின்றார் கைவளை கழல நின்றார் 468**

[வட்டுடை - முழந்தாள் அளவு கட்டிய உடை; தானை-சேனை; வள்ளலென்றது, மறவரைக் கொல்லாது விடுத்தமையால்; காசு-மேகலை; பஞ்சி-செம்பஞ்சு; அட்ட அரக்கு-உருக்கிய சிவந்த அரக்கு.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வார்செலச் செல்ல விம்மும் வனமுலை மகளிர் நோக்கி
ஏர்செலச் செல்ல வேத்தித் தொழுதுதோள் தூக்க விப்பாற்
பார்செலச் செல்லச் சிந்திப் பைந்தொடி சொரிந்த நம்பன்
தேர்செலச் செல்லும் வீதி பீர்செலச் செல்லு மன்றே 469

[வார்-கச்சு; செலச்செல-இறுக இறுக; ஏர் செலச் செல-அழகு மெலிய மெலிய; தூக்கி-தொங்க விட்டு; தொடி-தோளிலணியும் அணி; பீர்-பசப்பு.]

வாண்முகத் தலர்ந்த போலு மழைமலர்த் தடங்கண் கோட்டித்
தோள்முதல் பசலை தீரத் தோன்றலைப் பருகு வார்போல்
நாண்முதற் பாசந் தட்ப நடுங்கினார் நிற்ப நில்லான்
கோண்முகப் புலியொ டொப்பான் கொழுநிதிப் புரிசை புக்கான் 470

[வாள்-ஒளி; கோட்டி-வளைத்து; தோள்முதற்பசலை-தோளினிடத்திலுள்ள பசலை; நாண்முதற் பாசம்-மகளிர்க்குரிய குணங்கள் நான்கனுள்ளே நாணம் முதலாவது; கோள் - கொல்லுதல்; புரிசை-மதில்; தட்ப-தடுக்க.]

முழந்தாளளவு கட்டிய வட்டுடையாகிய போருடையோடு சீவகனைக் கண்டவுடன், பட்டாடையைச் சுற்றி அணிந்த மேகலை கழன்று காலிணையைச் சேரவும், உருக்கிக் காய்ச்சிய அரக்கைப்போல் சிவந்த வாய் அழகிழந்து வாடவும், காமப் பெருநெருப்பு சூழ்ந்து வருத்த மகளிர் கைவளை சோர நின்றார். இறுக்கிக் கட்டக்கட்ட விம்மிப்புடைக்கின்ற அழகிய முலை உடைய பெண்கள் சீவகனை நோக்கித் தங்கள் அழகு மெலிய மெலியக் கைகூப்பித் தொழுது பின் தோள் தளர, தோளில் அணிந்திருந்த அணிகள் சிறிது சிறிதாக நழுவிப் பூமியில் விழ, சீவகனுடைய தேர் சென்றுகொண்டிருக்கும் வீதியில் உள்ள பெண்களின் உடலில் எல்லாம் பசலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



பரவிக் கொண்டிருக்கும். ஒளி நிறைந்த முகத்திலே மலர்ந்து குளிர் மலர் போன்ற பெரியகண்களை வளைத்துத் தோளிலே படர்ந்த பசலை அகலச் சீவகனை அள்ளிப் பருகுவார் போல் ஆசையோடு பார்க்க அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கில் முதலாவதாக நாணம் தடையாக வருந்தி நிற்க, தான் நில்லாது, கொல் புலியைப்போன்ற வலிவுடைய சீவகன் வளமிகு செல்வ முடைய தன் மாளிகை மதிலுள் புகுந்தான்.

**பொன்னுகம் புரவி பூட்டு விட்டுடன் பந்தி புக்க**
**மன்னுக வென்றி யென்று மணிவள்ள நிறைய வாக்கி**
**இன்மதுப் பலியும் பூவுஞ் சாந்தமும் விளக்கு மேந்தி**
**மின்னுகு செம்பொற் கொட்டில் விளங்குதேர்**
**புக்க தன்றே 471**

*[நுகம்-நுகத்தடி; பூட்டுவிட்டு-அவிழ்த்துவிட்டு; பந்தி-குதிரை கட்டும் சாலை; வாக்கி-வார்த்து; மின் உகும்-ஒளிவிடும்; மன்னுக-பொருந்துக.]*

**இட்டவுத் தரிய மெல்லென் றிடைசுவல் வருத்த வொல்கி**
**அட்டமங் கலமு மேந்தி ஆயிரத் தெண்ம ரீண்டிப்**
**பட்டமுங் குழையு மின்னப் பல்கல னொலிப்பச் சூழ்ந்து**
**மட்டவிழ் கோதை மாதர் மைந்தனைக் கொண்டு புக்கார்**

*[உத்தரியம்-மேலாடை; சுவல்_பிடர்; பட்டம்-நெற்றிப்பட்டம்; மட்டு-மணம்; அட்டமங்கலம்-எட்டு வகை மங்கலம்; ஒல்கி-நடந்து.]*

**தாயுயர் மிக்க தந்தை வந்தெதிர் கொண்டு புக்குக்**
**காய்கதிர் மணிசெய் வெள்வேற் காளையைக் காவ லோம்பி**
**ஆய்கதி ருமிழும் பைம்பூ ணாயிரச் செங்க ணான்றன்**
**சேயுய ருலக மெய்தி அன்னதோர் செல்வ முற்றார் 473**

*[தாய் உயர் மிக்க-தாயைக் காட்டிலும் உயர்ச்சி மிக்க; காளை-சீவகன்; ஆயிரச் செங்கணான்-இந்திரன்; சேய் உயர் உலகம்-மிக உயர்ந்த தேவருலகம்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


பொன் நுகத்தடியின் தளை அவிழ்த்துக் குதிரைகளை அதன் லாயத்திலே புகவிட்டபின், வெற்றிகள் வளர்க என்று பொன்மணிக் கிண்ணம் நிறைய இனிய மதுவை விட்டு, அம்மதுவாகிய பலியும் பூவும் சந்தனமும் விளக்கும் ஏந்த ஒளிவிடும் தேர் செம்பொற் கொட்டிலிலே புகுந்தது. மேலே அணிந்த ஆடையும், பிடரிக் கூந்தலும் மெல்லிய இடையை வருத்த நடந்து சென்று எட்டுவித மங்கலப் பொருள்களையும் ஏந்திய, தேன் ஒழுகும் மலர்மாலை அணிந்த ஆயிரத்தெட்டுப் பெண்கள் ஒன்றுகூடி நெற்றிப் பட்டமும் காதுக்குழையும் ஒளிவிட, வீரக்கழல் ஒலிக்கச் சீவகனை எதிர்கொண்டழைத்துச் சென்றனர். தாயும், உயர்வு மிகு தந்தையும் வந்தெதிர் கொள்ள, ஒளி வீசித் திகழும் மணிகள் அணிந்த சீவகனை ஆலத்தி எடுத்துப் பரிகரித்து, மிக்கொளி வீசும் புத்தணி புனைந்த சிவந்த ஆயிரம் கண்ணுடைய இந்திரனது வானுலகச் செல்வத்தை அடைந்த மனநிறைவு கொண்டனர்.

**தகைமதி யெழிலை வாட்டுந் தாமரைப் பூவி னங்கண்**
**புகைநுதி யழல வாள்கண் பொன்னனாள் புல்ல நீண்ட**
**வகைமலி வரைசெய் மார்பின் வள்ளலைக் கண்டு வண்டார்த்**
**தொகைமலி தொறுவை யாளுந் தோன்றன்மற் றின்ன கூறும் 474**

[தகை மதி-பெருமையையுடைய சந்திரன்; பொன் னனாள்-திருமகள்; வரைசெய் மார்பு-மலையைப் போன்ற மார்பு; தொகை-கூட்டம்; தொறு-ஆநிரை.]

**கேட்டிது மறக்க நம்பி கேள்முதற் கேடு சூழ்ந்த**
**நாட்டிறை விசயை யென்னு நாறுபூங் கொம்ப னாளை**
**வேட்டிறைப் பார மெல்லாங் கட்டியங் காரன் தன்னைப்**
**பூட்டிமற் றவன்ற னாலே பொறிமுத லடர்க்கப் பட்டான்**

[நம்பி, விளி; கேள்முதற் கேடு சூழ்ந்த-தன் சுற்றத் தாரிடத்திலே அழிவை ஆராய்ந்த; இறை-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



சச்சந்தன்; வேட்டு-விரும்பி; இறைப்பாரம்-அரச பாரம்; பொறி-இருவினை.]

**கோலிழுக் குற்ற ஞான்றே கொடுமுடி வரையொன் றேறிக்**
**காலிழுக் குற்று வீழ்ந்தே கருந்தலை களைய லுற்றேன்**
**மால்வழி யுளதன் றாயின் வாழ்வினை முடிப்ப லென்றே**
**ஆலம்வித் தனைய தெண்ணி யழிவினு ளகன்று நின்றேன்**

[கொடுமுடி - சிகரம்; மால்வழி - சச்சந்தனுடைய சந்ததி; ஆலம் வித்து-ஆலம்விதை.]

சிறந்த ஒளி உடைய நிலவை வருத்துகின்ற தாமரைப் பூவில் இருக்கும் கூரிய நுனி உடைய தழல்போலும் ஒளி சிந்தும் வாள்போன்ற கண்ணுடைய திருமகள் அருள் சுரக்குமாறு, நலம் பல நிறைந்த அழகிய மலையனைய மார்புடைய சீவகனைக் கண்டு, வளமிக்க மலர்மாலை அணிந்த, ஆநிரை நிறையப் பெற்ற நந்தகோன் சொல்லு வான்: ''இளைஞனே, இதனைக் கேட்டு மறப்பாயாக! சுற்றம் மூலமாக அழிவை எண்ணிய சச்சந்தன் விசையை என்னும் மணமலர்க் கொம்பு போன்ற மங்கை நல்லாளை மணந்து, அரச பாரத்தையெல்லாம் கட்டியங்காரன் மேல் சுமத்திவிட்டுப் பின் அவனாலேயே உயிர் கொள்ளப் பட்டான். இவ்விதமாக அரசன் கொலை செய்யப்பட்ட அன்றே நீண்டுயர்ந்த மலைமுகட்டில் ஏறிக் கால் இடறி வீழ்வதுபோல், மண்டை பிளக்கக் கீழே விழுந்து இறக்க முயன்றேன். ஆனால் இறந்த அரசனுக்கு வழித்தோன் றல்கள் யாரும் இல்லையென்றறிந்த பின்னே இறப்பதே நல்லதென்று எண்ணும், ஆலம் விதை போன்ற துளி நம்பிக்கையை மனதில் கொண்டு சாகின்ற எண்ணத்தை விட்டு வாழ்ந்து வருகின்றேன்.

**குலத்தொடு முடிந்த கோன்றன் குடிவழி வாரா நின்றேன்**
**நலத்தகு தொறுவின் உள்ளேன் நாமங்கோ விந்த**
**னென்பேன்**
**இலக்கண மமைந்த கோதா வரியென விசையிற் போந்த**
**நலத்தகு மனைவி பெற்ற நங்கைகோ விந்தை யென்பாள்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[கோன்-சச்சந்தன்; நலத்தகுதொறு-விரும்பத்தக்க ஆநிரை; இசையிற் போந்த - புகழால் எங்கும் பரவிய; நலத்தகு மனைவி - விரும்பத்தக்க மனைவி.]

வம்புடை முலையி னாளென் மடமகள் மதர்வை நோக்கம்
அம்படி யிருத்தி நெஞ்சத் தழுத்தியிட் டனைய தொப்பக்
கொம்படு நுசுப்பி னாளைக் குறையிரந் துழந்து நின்ற
நம்படை தம்மு ளெல்லா நகைமுக மழிந்து நின்றேன் 478

[வம்பு-கச்சு; மதர்வை நோக்கம்-மயக்கத்தைக் கொடுக்கும் பார்வை; கொம்பு அடு-பூங்கொம்பை வருத்துகின்ற; நம்படை என்றது ஆயர்களை. நகைமுகம்-இன்முகம்.]

பாடகஞ் சுமந்த செம்பொற் சீறடிப் பரவை யல்குற்
சூடக மணிந்த முன்கைச் சுடர்மணிப் பூணி னாளை
ஆடகச் செம்பொற் பாவை யேழுடன் தருவல் ஐய
வாடலில் வதுவை கூடி மணமக னாக வென்றான் 479

[பாடகம்-ஒருவகைக் காலணி; சீறடி-சிறிய அடி; சூடகம்-கைவளை; ஆடகப்பொன் - நால்வகைப் பொன்னுள் ஒன்று.]

''குலத்தொடு மடிந்த அரசனின் குடிவழி வந்தவன் நான்; பயன் தரும் ஆநிரைகள் நிறைய உடையேன்; என் பெயர் கோவிந்தன் என்பதாகும். குல மகளிர் இலக்கணம் குறைவறப் பெற்ற கோதாவரி என்னும் புகழ்ப் பெயரும் பெற்ற என் மனைவி பெற்ற பிள்ளை கோவிந்தை என்பவள் ஆவாள். அத்தகைய, கச்சிறுக்கிய முலையும், பூங்கொம்பைப் பழிக்கும் இடையும் உடைய என் மகளின் மயலூட்டும் பார்வையால், அம்பு தோளிலே பாய்ந்து நெஞ்சிலே சென்று தைத்ததைப்போல் வருந்திய ஆடவர் பலர் அவளைப் பெறவேண்டி வருந்தி நிற்க, நான் யாருக்கும் இன்முகம் காட்டி மறுமொழி கூறாது நின்றேன். பாடகம் அணிந்த சிவந்த பொன் போன்ற சிற்றடியும், பரந்த அல்குலும், வளையணிந்த முன்கை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



யினையும் உடைய ஒளிசிந்தும் அணிமணி பூண்ட கோவிந்தையை ஆடகப்பொன்னால் ஆன பதுமைகள் ஏழுடன் தருவேன்; ஐயனே நீ என் மகளைக் குறைவற மணந்து கொண்டு மணமகன் ஆவாயாக'' என்று வேண்டினான்.

## வேறு

வெண்ணெய்போன்று ஊறினியள் மேம்பால்போற் றீஞ்சொல்லள்
உண்ண வுருக்கிய வாநெய்போன் மேனியள்
வண்ண வனமுலை மாதர் மடநோக்கி
கண்ணுங் கருவிளம் போதிரண்டே கண்டாய் 480

*[ஊறு-ஸ்பரிசம்; மேம்பால்-மேவும்பால்; நோக்கி-நோக்கத்தையுடையாள்; கருவிளம் - கருவிள மலர்; உண்ண-வற்ற.]*

சேதா நறுநெய்யுந் தீம்பால் சுமைத்தயிரும்
பாதால மெல்லா நிறைத்திடுவல் பைந்தாரோய்
போதார் புனைகோதை சூட்டுன் அடித்தியை
யாதாவ தெல்லாம் அறிந்தருளி யென்றான் 481

*[சேதா-சிவப்புப் பசு; பாதாலம்-பாதாளம்; சுமைத்தயிர்-ஆடைத்தயிர்; அடித்தி-அடியாள்.]*

குலநினையல் நம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலனுகர்ந்தா னன்றே நறுந்தார் முருகன்
நிலமகட்குக் கேள்வனு நீணிரைநப் பின்னை
இலவலர்வா யின்னமிர்தம் மெய்தினா னன்றே 482

*[குலம் நினையல்-அரசர்க்குத் தாழ்ந்த இடையர்குலமென்று நினையாதே; நறுந்தார்-மணமுள்ள மாலை; நிலமகட்குக் கேள்வன் - திருமால்; நப்பின்னை - நப்பின்னைப் பிராட்டியார்; இலவலர்-இலவமலர்.]*

''தொட்டுச் சுவைக்க வெண்ணெய் போல் மென்மை உடையவள்; கேட்டு மகிழ விரும்பி உண்ணும் பால்போல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இனிய மொழி பேசுபவள்; பார்த்து மகிழ, வற்ற உருக்கிக் காய்ச்சிய பசுநெய் போன்ற பொன்மேனி உடையவள்; எழிலும் அழகும் உடைய முலையினையும் காதல் போதையூட்டும் பார்வையும் உடைய என் மகளின் இருபெரிய கண்களும் கருவிள மலர்களே அறிவாய். அல்லாமலும் சிவப்புநிறப் பசுவின் மணமூட்டும் நறுநெய்யும் இனிய பாலும் ஆடைத்தயிரும் பாதாள உலகம் மட்டும் நிறையச் செய்வேன்; புதிய மலர்மாலை அணிந்தவனே, மலரால் தொடுத்த மணமாலை சூட்டிக் கோவிந்தையை உன் அடியாளாக ஏற்றுக்கொள்ள வழி யாதோ அதை அறிந்தருள்க'' என்றவன் மேலும் சொல்வான்: ''நம்பியே, குல வேற்றுமையை நினைக்க வேண்டாம். வேடர்குலப் பெண்ணாகிய பெரிய மீன்போன்ற கண்ணுடைய வள்ளியைக் கடம்பமலர்மாலை அணிந்த முருகன் அன்றே மணக்கவில்லையா? நிலமகள் கணவரான திருமாலும் ஆநிரை நிறைய உடைய நப்பின்னையின் இலவமலர் போன்ற வாயின் இன்னமுதச் சுவையை உண்ணவில்லையா'' என்றான்.

## வேறு

கன்னியர் குலத்தின் மிக்கார் கதிர்முலைக் கன்னி மார்பம்
முன்னினர் முயங்கி னல்லான் முறிமிடை படலை மாலைப்
பொன்னிழை மகளிரொவ்வா தவரைமுன் புணர்தல் செல்லார்
இன்னதான் முறைமை மாந்தர்க் கெனமனத் தெண்ணி னானே 483

[முறி-தளிர்; படலைமாலை-ஒருவகை மாலை.]

கோட்டிளங் களிறு போல்வா னந்தகோன் முகத்தை நோக்கி
மோட்டிள முலையி னாணின் மடமக ளெனக்கு மாமான்
சூட்டொடு கண்ணி யன்றே யென்செய்வா னிவைகள் சொல்லி
நீட்டித்தல் குணமோ வென்று நெஞ்சகங் குளிர்ப்பச் சொன்னான் 484

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[மாமான்-விளி, அம்மானே என்பது பொருள்; சூட்டு புலாலுக்கும் கண்ணி பூவிற்கும் வழங்கும்.]

**தேன்சொரி முல்லைக் கண்ணிச் செந்துவ ராடை யாயர்**
**கோன்பெரி துவந்து போகிக் குடைதயிர் குழுமப் புக்கு**
**மான்கறி கற்ற கூழை மௌவல்சூழ் மயிலைப் பந்தர்க்**
**கான்சொரி முல்லைத் தாரான் கடிவினை முடிக**
**வென்றான் 485**

[குழும-முழங்க; மௌவல்-செம்முல்லை; மயிலை-இருவாட்சி; மான் கறி கற்ற-மான் கடித்துப் பழகிய.]

குலத்தில் சிறந்த கன்னியரின் அழகுமுலை நிமிர்ந்த என்றும் அழியாத இளைய மார்பை ஆராய்ந்து தழுவுவ தல்லாமல்; தளிரும் மலருமாகத் தொடுத்த வகை மாலையினையும் பொன்னணியினையும் அணிந்த மகளிரில் தம் குலத்துக் கொவ்வாதவரைக் கூடமாட்டார்கள்; இது தான் வாழும் மாந்தர்க்கு உரிய ஒழுக்க நெறி என்று சீவகன் மனத்துள் எண்ணினானாக, தந்தக் கோட்டினை உடைய இளங்களிறு போன்ற சீவகன் நந்தகோனுடைய முகத்தைப் பார்த்து, ''மாமா, உயர்ந்த அழகிய இளமுலை உடைய நின் அழகுமகள் எனக்குச் சூட்டும் கண்ணியும் அணியும் மாலையும் ஆவாள் அல்லவோ? எனவே இவற்றையெல்லாம் சொல்லிப் பொழுதைக் கழிப்பதில் யாது பயன்'' என்று நந்தகோன் உள்ளங் குளிர இனிய மொழி கூறினான். தேன் சிந்தும் முல்லை மலர்க் கண்ணியும் காவி உடையும் அணிந்த இடையர் தலைவன் மணங்கமழும் முல்லை மலர்மாலை அணிந்தவனாகிய நந்தகோன் பெரிதும் மகிழ்ந்து போய், கடையும் தயிர் முழங்கப் புகுந்து, மான்கள் கடித்துப் பழகியதால் குறைவுற்ற முல்லையும் இருவாட்சியும் சூழ்ந்த பந்தலிலே மணவிழா நடைபெறுவதாக என்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கனிவளர் கிளவி காமர் சிறுநுதல் புருவங் காமன்
குனிவளர் சிலையைக் கொன்ற குவளைக்கண் கயலைக் கொன்ற
இனியுளர் அல்லர் ஆயர் எனச்சிலம் பரற்றத் தந்து
பனிவளர் கோதை மாதர் பாவையைப் பரவி வைத்தார் 486

*[கிளவி-கோவிந்தை; நுதலும் புருவமும். குனிவளர்-குனிதல் வளர்கின்ற; பரவி-வாழ்த்தி; அரற்ற-புலம்ப.]*

நாழியு ளிழுது நாகான் கன்றுதின் றொழிந்த புல்தோய்த்து
ஊழிதொ றாவுந் தோழும் போன்றுடன் மூக்க வென்று
தாழிருங் குழலி னாளை நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொ ளாய்த்திய ராட்டி னாரே

*[நாழி-உழக்கு; இழுது-நெய்; நாகு ஆன்கன்று-இளமையையுடைய பசுவின் கன்று; புல்-அறுகம் புல்; மூக்க-மூத்திடுக; மூழை-அகப்பை; மொய்-நெருக்கம்; தோழ்-தொழு.]*

நெய்விலைப் பசும்பொற் றோடு நிழல்மணிக் குழையு நீவி
மைவிரி குழலி னாளை மங்கலக் கடிப்புச் சேர்த்திப்
பெய்தனர் பிணையன் மாலை ஒரிலைச் சாந்து பூசிச்
செய்தனர் சிறுபுன் கோலந் தொறுத்தியர் திகைத்து நின்றார் 488

*[நிழல் - ஒளி; நீவி-நீக்கி; கடிப்பு-கடிப்பிணை; ஒரு வகைக் காதணி. தொறுத்தியர்-இடைச்சியர்.]*

கனிபோல் இனிக்கின்ற மொழி உடையாளின், அழகிய சிறுநெற்றியும் புருவமும், காமனின் வளர்ந்து வளைந்த வில்லினைப் பழித்தன. குவளை மலர்போன்ற கண்கள் புரளும் மீனைப் பழித்தன. எனவே ஆயர்கள் இவளைக் கண்டால் இனி உயிருடன் இருக்கமாட்டார்கள் எனப் பாதச் சிலம்பு வாய்விட்டுப் புலம்ப, குளிர்ச்சி மிகும் மாலையணிந்த மங்கையர்கள் பொற்பாவை அன்ன கோவிந்தையை அழைத்து வந்து வாழ்த்துக்கள் கூறி அப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பந்தலிலே அமரச்செய்து நாழி உழக்கில் இருந்த நெய்யினைப் பசுவின் இளங்கன்றுகள் மேய்ந்து தின்று கழித்த அருகம் புல்லிலே தோய்த்தெடுத்து, 'ஊழூழிக் காலமும் பசுவும் தொழுவமும் போல மூத்திடுக' என்று வாழ்த்திக் கோவிந்தையின் நீண்டு வளர்ந்த கரிய கூந்தலிலே தடவி, அகப்பையிலே நீர் அள்ளிச் சொரிந்து, சூழ்ந்திருந்த ஆய்ச்சியர்கள் நீராட்டினர். நெய்விலையால் உண்டான புதிய பொன் தோட்டையும் ஒளிவிடும் மணிக் குழையையும் நீக்கிவிட்டு மங்கலத்துக்குரிய கடிப்பிணையை அணிவித்து, பிணையலாகிய மாலையைச் சூட்டி, ஓர் இலையிலே எடுத்து வந்த சந்தனத்தைப் பூசிச் செய்த கோவிந்தையின் அழகிய கோலம் கண்டு ஆய்ச்சியர்கள் திகைத்து நின்றனர்.

**ஏறங்கோள் முழங்க ஆய ரெடுத்துக்கொண் டேகி மூதூர்ச்**
**சாறெங்கு மயரப் புக்கு நந்தகோன் றன்கை யேந்தி**
**வீறுயர் கலச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்**
**பாறுகொள் பருதி வைவேற் பதுமுக குமரற் கென்றே 489**

[ஏறங்கோள்-ஏறுகளைத் தழுவிக் கொள்ளுதற் பொருட்டு அடிக்கும் வாத்தியம்; முல்லை நிலத்திற்குரிய பறை. மூதூர்-இராசமாபுரம்; சாறு-விழா; அயர-கொண்டாட; பாறு-பருந்து.]

**நலத்தகை யவட்கு நாகா னாயிரத் திரட்டி நன்பொன்**
**இலக்கணப் பாவை யேழுங் கொடுத்தனன் போக விப்பால்**
**அலைத்தது காமன் சேனை யருநுனை யம்பு மூழ்க**
**முலைக்குவட் டிடைப்பட் டாற்றான் முத்துக முயங்கி னானே 490**

[அலைத்தது-வருத்தியது; குவடு-உச்சி.]

## வேறு

**கள்வாய் விரிந்த கழுநீர்பிணைந் தன்ன வாகி**
**வெள்வேன் மிளிர்ந்த நெடுங்கண்விரை நாறு கோதை**
**முள்வா யெயிற்றூ றமுதம்முனி யாது மாந்திக்**
**கொள்ளாத வின்பக் கடற்பட்டனன் கோதை வேலான் 491**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[பிணைதல்-சேர்தல்; கோதை-கோவிந்தை; முள் வாய்-கூரிய; முனியாது-தெவிட்டாமல்; மாந்தி-உண்டு.]

தீம்பாற் கடலைத் திரைபொங்கக் கடைந்து தேவர்
தாம்பாற் படுத்த வமிர்தோதட மாலை வேய்த்தோள்
ஆம்பாற் குடவர் மகளோவென் றரிவை நைய
ஓம்பா வொழுக்கத் துணர்வொன்றில னாயி னானே 492

[தீம்பால்-இனிய பால்; குடவர்-இடையர்; உணர்வு-அறிவு; நைய-வருந்த; ஆம்-பயன் ஆம்.]

ஏறுகோட் பறைமுழங்க இடையர்கள் அவளை அழைத்துக் கொண்டு இராசமாபுரம் எங்கும் விழாக் கொண்டாடச் சென்று பின் கந்துக்கடன் வீட்டினுள் புகுந்ததும் நந்தகோன் தன் கையாலே, அழகிய உயர்ந்த கலசத்தை ஏந்தி நீரைச் சொரிய, சீவகனும் அந்நீரை, பருந்துகள் சூழும் ஞாயிறுபோன்ற ஒளி உடைய கூர் வேலேந்திய பதுமுகனுக்கு என்று கூறி ஏற்றுக்கொண் டான். நலமிக்க அழகுடைய அவளுக்கு இளம்பசுக்கள் இரண்டாயிரமும், பசும்பொன்னால் அழகுறச் செய்த பொற்பாவைகள் ஏழும் கொண்டு போகக் கொடுக்க, இப்புறத்தே பதுமுகனைக் காமனின் கூர் அம்புப்படை வருத்தத் துயர் ஆற்றாதவனாகி கோவிந்தையின் முலை முகட்டிடை வீழ்ந்து முத்துக்கள் சிந்திச் சிதறுமாறு அவளைத் தழுவினான். வாய்விரித்துத் தேன் சிதறும் செழுங் கழுநீர்ப்பூக்கள் பிணைந்ததுபோல் அணைந்து; வெள்ளிய வேல் போன்ற ஒளி உமிழும் நீண்ட கண்களும், மணமிகு மலர் மாலையும் உடையவளாகிய கோதை—கோவிந்தையின், வாலெயிறு சுரக்கும் வாயமுதம் வெறுக் காது நாளும் அள்ளிப்பருகிக் கரைகொள்ளாத இன்பக் கடலிலே மாலையணிந்த வேலையுடைய பதுமுகன் மகிழ்ந்து திளைத்தான். இனிய பாற்கடலை அலைபொங் கக் கடைந்த தேவர்கள் பெற்ற அமுதமோ இல்லை பெரிய மாலைகள் அணிந்த, மூங்கில் போன்ற தோளும் பயனாகும் பாலையும் உடைய இடையர் மகள்தானோ என்று மயங்கி, கோவிந்தை வருந்தத் தடைசெய்ய முடியாத இன்ப முயக்கத்தால் தானும் உணர்வற்றவனானான்.

கோவிந்தையார் இலம்பகம் முடிவுற்றது.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# 3. காந்தருவதத்தையார் இலம்பகம்

இங்கிவர்க ளிவ்வா றிருந்தினிது வாழச்
சங்குதரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்
பொங்குதிரை மீதுபொரு மால்களிறு போன்றோர்
வங்கமொடு போகிநிதி வந்துதர லுற்றான் 493

[இவர்கள் - சீவகன் முதலியவர்கள்; சங்கு - ஒரு பேரெண்; சால உடை-மிகவும் கெட்ட; நாய்கன்-சீதத்தன்; திரை-கடல். கப்பலுக்குக் களிறு உவமை.]

மின்னொழுகு சாயன்மிகு பூண்பதுமை கேள்வன்
கொன்னொழுகு வேலியவ தத்தன்குளிர் தூங்கும்
தன்வழிய காளைசீ தத்தனவன் தன்போல்
பொன்னொழுகு குன்றிலுறை போர்ப்புலியொ
டொப்பான் 494

[பதுமை கேள்வன்-சீதத்தன். இவன் இராசமாபுரத்துள்ள ஒரு வணிகன்; சீவகனுடைய தோழன். யவதத்தன் - சீதத்தனுடைய முன்னோன்; குளிர்தல்-தங்குதல்.]

இங்கிவர்கள் இவ்விதமாக இராசமாபுரத்திலே இன்புற்று வாழ்ந்திருக்கையில் எண்ணமுடியாத மிகப் பெருஞ் செல்வத்தை இழந்த சீதத்தன் என்னும் வணிகன், பொங்கியெழும் அலைகடல் மேல் போராடப் புகுந்த ஆண் யானையைப் போன்ற ஒரு கப்பலிலே புறப்பட்டுப் போய்ப் பொருள் தேடிவரத் தொடங்கினான். ஒளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மின்னும் எழிலுடைய, பொன்னணிகள் நிறையப் பூண்ட பதுமையின் கணவனும் அச்சந்தரும் வேலேந்திய, குளிர் நிறைந்த மலையிலே தங்கியிருக்கின்ற யவதத்தன் மரபிலே தோன்றிய காளைபோன்றவனும் ஆகிய சீதத்தன், தன் தந்தையைப் போலவே பொன் பரவிய குன்றிலிருக்கும் போர்ப்புலி போன்ற வலிமை மிக்கவன்.

**இம்மியன நுண்பொருள்க ளீட்டிநிதி யாக்கிக்**
**கம்மியரு மூர்வர்களி றோடைநுதல் சூட்டி**
**அம்மிமிதந் தாழ்ந்துசுரை வீழ்ந்தறஞ் சால்கென்று**
**உம்மைவினை நொந்துபுலந் தூடலுணர் வன்றே. 495**

*[இம்மி-அரிசி மிகவும் சிறியது; நிதி-பெரிய பொருட் டிரள்; கம்மியர்-கர்மியர்; பிறர் தொழில் செய் வோர். உம்மைவினை - பழவினை; ஊடல்- கோபித்தல்.]*

**உள்ளமுடை யான்முயற்சி செய்யவொரு நாளே**
**வெள்ளநிதி வீழும்விளை யாததனி னில்லை**
**தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லின்மடி கிற்பின்**
**எள்ளுநர்கட் கேக்கழுத்தம் போலவினி தன்றே 496**

*[செய்ய-செய்தால்; வீழும்-உண்டாகும்; அதனின்- அம்முயற்சியால்; தொள்ளையுணர்வு - குற்றம் உடைய அறிவு; மடி-சோம்பல்; எள்ளுநர்-இகழ் பவர்; ஏக்கழுத்தம்-தலை நிமிர்தல்.]*

**செய்கபொருள் யாருஞ்செறு வாரைச்செறு கிற்கும்**
**எஃகுபிறி தில்லையிருந் தேஉயிரும் உண்ணும்**
**ஐயமிலை யின்பம்அற னோடவையு மாக்கும்**
**பொய்யில்பொரு ளேபொருள்மற் றல்லபிற பொருளே**

*[பொருள் செய்க-பொருளைத் தேடுக; செறுவார்- பகைவர்; செறுதல் - கொல்லுதல்; எஃகு- ஆயுதம்.]*

**தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன**
**ஓங்குகுல நையஅத னுட்பிறந்த வீரர்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**தாங்கல்கட னாகுந்தலை சாய்க்கவரு தீச்சொல்
நீங்கன்மட வார்கள்கட னென்றெழுந்து போந்தான்**

[தூங்கு சிறை வாவல்-தொங்குகின்ற, சிறகையுடைய வெளவால்; தொன்மரம்-ஆலமரம்; நீங்கல்-தம் குலத்தைத் தாங்காது போதல்; மடவார்கள்-அறிவில்லாதவர்.]

''இம்மி அளவாக நுண்ணிய பொருள்களைச் சேர்த்துச் செல்வத்தைப் பெருக்கிய தொழில் புரிவோர்களும் நெற்றியிலே முகபடாம் அணிந்த யானை ஏறிச்செல்லவும் நீரிலே அம்மி மிதக்கவும் சுரைக்குடுக்கை ஆழ்வதும் போல் நல்லறங் கெட்டு உயர்ந்தவர் தாழவும் தாழ்ந்தவர் உயரவு மான நிலை பழவினையால் பிறந்தது. இதையெண்ணி அமைதி பெறாமல், தன்நிலை எண்ணி வருந்திப் பிணங் குவது அறிவுடைமை ஆகாது. மேலும், முயலும் மனம் உடையவன் அடுத்தடுத்து முயன்றால், ஒரே நாளில் வெள்ளம்போல் பெருஞ்செல்வம் வந்து சேரும்; எனவே முயன்றால் முடியாதது ஒன்றும் இல்லை. இதைவிட்டு அறிவற்றவர்கள் சொல்லை நம்பிச் சோம்பியிருப்பின் அது நம்மை இகழ்பவர்கள் தலை நிமிர ஊக்கம் உண்டாக்கியது போல் அமையும். எனவே எல்லோரும் பொருள் தேடுக. பகைவரையும் துன்பத் தையும் தொலைக்கின்ற கூரிய வேல் போன்ற படை பொருளைப் போல் வேறு இல்லை. அது இருந்த இடத் திலிருந்தே பகைவர் உயிரைக் கொல்லும்; சந்தேகமே வேண்டாம். இன்பம் முதல் நல்லறம் ஈறாக எல்லாவற் றையும் உண்டாக்கித் தரும். பொருளும் தன்முயற்சியால் கிடைக்கவேண்டும்; அதுவே உண்மைப் பொருளாகும். வேறு வழிகளில் கிடைப்பவை உண்மைப் பொருள்கள் ஆகா. மேலும் தொங்குகின்ற, சிறகினை உடைய வெளவால்கள் வாழ்கின்ற ஆலமரங்கள் போலப் புகழ்மிக்க குலப்பெருமை தாழும்போது அக்குடிப் பிறந்தோர் தாம் தலைகுனியக் காரணமாக வரும் பழிச்சொற்கள் வராது தாங்குவது கடனாகும். அப்படி வருகின்ற பழிச்சொற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

களைத் தடுத்துக் குடிப் பிறப்பைத் தாங்காது போவது அறிவற்றோர் செயலாகும்'' என்று பல கூறிச் சீதத்தன் பொருள் தேடப் புறப்பட்டான்.

**மோதுபடு பண்டமுனி யாதுபெரி தேற்றி**
**மாதுபடு நோக்கினவர் வாட்கண்வடு வுற்ற**
**தாதுபடு தார்கெழிய தங்குவரை மார்பன்**
**கோதுபட லில்லகுறிக் கொண்டெழுந்து போந்தான் 499**

[மோதுபடு-மோதுதல் படுகின்ற; மாது-பெருமை; நோக்கினவர்-மகளிர்; வடு-மாவடு; வாளையும் வடுவையும் போன்ற கண்; கண் தங்குவதும் தார் கெழியதும் வரை போன்றது மாகிய மார்பு. கெழிய-பொருந்திய; கோது-குற்றம்; குறிக் கொண்டு-கைக்கொண்டு.]

**வானமுற நீண்ட புகழ் மாரிமழை வள்ளல்**
**தானமென வேண்டுநர்கள் வேண்டுவன நல்கி**
**நானமிக நாறுகமழ் குஞ்சியவ னேறி**
**ஊனமெனு மின்றியினி தோடுகஇ துஎன்றான் 500**

[மாரி-மழைக்காலம்; என-என்று; நானம்-கஸ்தூரி, நாறுவதும் கமழ்வதுமாகிய குஞ்சி. ஊனம்-தீங்கு; எனும்-என்னும், சிறிதும். இது-இக்கப்பல்.]

**ஆடுகொடி யுச்சியணி கூம்பினுயர் பாய்மூன்று**
**ஈடுபடச் செய்திளையே ரேத்தவிமிழ் முந்நீர்க்**
**கோடுபறை யார்ப்பக்கொழுந் தாட்பவழங் கொல்லா**
**ஓடுகளி றொப்பவினி தோடியதை யன்றே 501**

[கூம்பு-பாய்மரம்; ஈடுபட-குழையும்படி; இளையர்-கம்மியர்; கோடு-சங்கு; கொல்லா-கொன்று; பறை-முரசு; ஆர்ப்ப-முழங்க.]

மோதுகின்ற பெரும்பொருள்களை வெறுப்பின்றிக் கலத்தில் நிறைய ஏற்றி, காதல் சுவையூட்டப் பார்க்கும் மங்கையரின் வாளையும் மாவடுவையும் போன்ற கண்கள் தங்கும் மாலையணிந்த மலைபோன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மார்புடைய சீதத்தன், குற்றமற்ற நல்ல காலநிலை அறிந்து கடற்கரைக்கு வந்தான். வான்முகட்டைத் தொடுகின்ற புகழும் மாரிக்கால மழைபோன்ற விரிந்து வளர்ந்த கொடைத்திறமும் கொண்டவனும் நிறையப் புனுகும் சந்தனமும் பூசிய தலைமுடி உடையவனுமாகிய சீதத்தன், 'தானம்' என்று வருவோர் விரும்பிக் கேட்கின்ற பொருளையெல்லாம் விரும்பியபடி அளித்துக் கலத்தில் ஏறி,'ஒரு குறையும் இல்லாமல் இக்கலம் இனிமையுறச் செல்வதாக' என்று வாழ்த்தினான். ஆடி அலைக்கும் கொடிகளை உச்சியிலே உடைய பாய்மரத்தில், பெரிய பாய்கள் மூன்றைக் காற்று முகக்கக் குழையக் கட்டி மற்றவர்கள் வாழ்த்த, ஒலிக்கும் கடலில் பிறந்த சங்கும், பறையும் முழங்க, வளமுடைய பவளக் கொடிகள் அறுபட, ஓடுகின்ற யானையைப்போல் கலம் கடலிலே மிதந்து சென்றது.

**திரைகடல்தருஞ் சங்குகலங் தாக்கித்திரண் முத்தம்**
**கரைகடலுட் காலக்கணை பின்னொழிய முந்நீர்**
**வரைகிடந்து கீண்டதெனக் கீறிவளர் தீவின்**
**நிரையிடறிப் பாய்ந்திரிய ஏகியது மாதோ** 502

*[தாக்கி-தாக்குதலால்; கரைதல்-ஒலித்தல்; காலஈன; நிரை-ஒழுங்கு, வரிசை. இடறி-கெடுத்து; கணை-அம்பு, துடுப்பு; கீண்டு-கிழித்து.]*

**மின்னுமிளிர் பூங்கொடியு மென்மலரு மொப்பார்**
**அன்னமொடுங் தோகைநடை சாயலமிர் தன்னார்**
**துன்னியினி தாகவுறை துப்புரவின் மிக்க**
**நன்மையுடை நன்பொன்விளை தீவமடைந் தஃதே** 503

*[துன்னி-பொருந்தி; தீவம்-தீவு; அடைந்தஃது-அடைந்தது; துப்பரவு-நுகர்பொருள்.]*

## வேறு

**தீவினுள் இழிந்து தேந்தார்ச் செம்மலுந் திருமுத் தாரம்**
**கோவினைக் குறிப்பிற் கண்டு கொடுத்தருள் சுமந்து செம்பொற்**
**பூவினுள் ளவளை யன்ன பொங்கிள முலையி னார்தம்**
**நாவினு ளமிர்தங் கேட்டு நாடக நயந்து சின்னாள்** 504

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[கோவினை-அத்தீவுக்கு அரசனை; பூவினுள்ளவள்-இலக்குமி; நாவினுள் அமிர்தம்-பாட்டு.]

புணர்ந்தவர் பிரித லாற்றாப் போகமீன் றளிக்குஞ் சாயல்
அணங்கினுக் கணங்க னாரோ டறுமதி கழிந்த பின்றைக்
கொணர்ந்தன பண்டம் விற்ற கொழுநிதிக் குப்பை யெல்லாம்
உணர்ந்துதன் மதலை யேற்றி யொருப்படுத் தூர்க்கு மீள்வான் 505

[போகம்-இன்பம்: அணங்கு-தெய்வம்; அறுமதி-ஆறு மாதங்கள்; நிதிக்குப்பை-நிதியின் தொகுதி; மதலை-கப்பல்; ஒருப்படுத்து-ஒரு வழிப்படுத்தி.]

அலைகள் ஏந்திவரும் சங்குகள் கலத்தில் மோதித் தாக்குற அச்சங்குகள் தங்களிடமிருந்த திரண்ட முத்துக்களைக் கடலுள் சொரியவிட, கடலை ஒரு மலை நில்லாமல் கிழித்துக் கொண்டு சென்றது எனும்படிக்கு ஆழ அமிழ்ந்து சென்ற அக்கலம் வரிசையுற நிறைந்து நின்ற தீவுகளை இடறி மோதி, மேலிருந்து வலிக்கும் அம்பு போன்ற துடுப்புகள் பின்னோக்கிப் போகத் தான் முன்னேறிச் சென்றது. மின்னொளியையும், அசையும் பூங்கொடியையும், மென்மலரையும் ஒத்தவர்களும், அன்னம்போல் நடையும், மயில்போலும் சாயலும் உடைய அமுதொத்த மகளிர் நெருங்கி இனிமையுற வாழும், அழகு மிக்க—நலந்தரும் பொன் விளையும் அத்தீவை அக்கலம் சென்றடைந்தது. தீவை அடைந்ததும் தேன் ஒழுகும் மலர்மாலை அணிந்த சீதத்தனும் அத் தீவின் தலைவனை அவன் குறிப்பறிந்து கண்டு, அவனுக்கு அழகிய முத்துச்சரங்களைப் பரிசாகத் தந்து அவன் அருளைப் பெற்றுச் சிவந்த பொற்றாமரை மலரில் இருக்கும் திருமகளைப் போன்ற பூரித்த இளமுலையும் பொங்கியெழும் எழில் நலமும் உடைய அழகு மகளிரின் வாய்மிழற்றும் அமுதொத்த இசையைக் கேட்டும்; நாடகம் விரும்பிப் பார்த்தும் சில நாட்கள் கழித்தான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தீவின் அரசனைக் கண்டு விடைபெற்று, மிக நெருங்கிப் பழகியவர்களைப் பிரிந்து நன்னாளாகிய இரேவதி நட்சத்திரத்தில் குரு ராசியில் தனுர்லக்கினத்தில் மரக்கலம் ஏறி, அலைகடல் பரப்பிலே நீந்திக் காற்றினும் கடிது சென்று; ஐந்நூறு காதம் என்று கூறப்படுகின்ற தொலைவைக் கடந்து, அடைய வேண்டிய கரை ஒரு ஓசனை தூரம் இருக்கும்படி நெருங்கக் கப்பலில் இருந்தவர்கள் களிப்பிலே தம்மை மறந்து இருக்கும்போது, காற்றிலே, நீர்முகந்து செல்லும் மழை மேகங்கள் நிறைந்து பரவ, பேரிருள் கலந்து மயங்க, வாழ்வைக் கெடுப்பதுபோல் மின்னி, வெடிபோல இடியிடித்து எமனும் பயந்து நடுங்கி ஒழியுமாறு முழங்கிப் பேரிடியாக இடிக்க, எட்டுத் திசையின் காற்றும் ஒன்று சேர்ந்து ஒன்றோடொன்று எதிர் எதிராகக் கலந்து, கடல் குமுறி மேல் எழுந்து பொங்கியதைப் போல் நிற்க, முகில் குமுறி முழங்கக் குளிர் நீர்த்துளிகள் (மழைத்தூறல்கள்) பளிங்குக் கோல்போல் விண்ணிலிருந்து தாரை தாரையாகச் சொரியக் கண்ட சீதத்தன் ''இது தெய்வம் கொண்ட கோபம் போலும் எனவே நீங்கள் இதற்கு வருந்த வேண்டாம்'' என்று கூறினான்.

**இடுக்கண்வந் துற்ற காலை எரிகின்ற விளக்குப் போல**
**நடுக்கமொன் றானு மின்றி நகுகதா நக்க போழ்தவ்**
**விடுக்கணை யரியு மெஃகா மிருந்தழு தியாவ ருய்ந்தார்**
**வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்க ளன்றே**

[எஃகுஆம் - ஆயுதமாகும்; வடுப்படுத்து - குற்றப் படுத்தி.]

**ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கற் றெண்ணீர்**
**கூடகங் கொண்ட வாழ்நாள் உலந்ததேற் கொல்லும் பவ்வத்**
**தூடகம் புக்கு முந்நீர் அழுந்தினு முய்வர் நல்லார்**
**வாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தி னென்றான்**

[கூடு-உடம்பு; உலந்ததேல்-முடிந்ததாயின்; முந்நீர் அழுந்தினும்-கடலினுள் அழுந்தினாலும்; நல்லார்_

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கூடினால் பிரிந்து போக மனம் வராத இன்பம் அளித்துச் சுகந்தரும் மென்மை உடைய, பெண் தெய்வங்கட்குத் தெய்வம் போன்ற அழகு மகளிருடன் ஆறு திங்கள் கழித்தபின், கலம் ஏற்றிக் கொண்டு வந்திருந்த பொருள் களையெல்லாம் விற்று, அதற்கு ஈடாகப் பெற்ற வளமிகு பெருஞ்செல்வத்தைத் தன் கப்பலிலே ஏற்றி ஒருவழிப் படுத்திக் கொண்டு சீதத்தன் தன் ஊர் திரும்பு வானானான்.

**அரசனைக் கண்டு கண்ணுற் றவர்களை விடுத்து நன்னாள்**
**இரைவதி வியாழ வோரை இருஞ்சிலை முளைப்ப வேறிக்**
**கரைகட லழுவ நீந்திக் காற்றினுங் கடுகி யைஞ்ஞூறு**
**உரையுடைக் காத மோடி யோசனை யெல்லை சார்ந்தே**

[கண்ணுற்றவர்களை-தான் பழகியவர்களை; ஓரை-முகூர்த்தம்; சிலை-தனுர்லக்கினம்; ஏறி-கப்பலில் ஏற; கரைகடல்-ஒலிக்கின்ற கடல்; அழுவம்-பரப்பு.]

**களித்தலை மயங்கி யிப்பால் இருத்தலுங் கலந்தோர் காற்றில்**
**துளித்தலை முகில்க ளீண்டித் தூங்கிருண் மயங்கி மான்று**
**விளிப்பது போல மின்னி வெடிபட முழங்கிக் கூற்றும்**
**ஒளித்துலைந் தொழிய வெம்பி உரறிநின் றிடிப்ப நாய்கன்**

[கலந்து-பரந்து; ஈண்டி-நெருங்கி; உலைந்து-தொலைந்து; உரறி-முழங்கி.]

**எண்டிசை வளியு மீண்டி எதிரெதிர் கலாவிப் பவ்வம்**
**கொண்டுமே லெழுவ தொப்பக் குளிறிநின் றதிர்ந்து மேகம்**
**தண்டுளி பளிக்குக் கோல்போல் தாரையாய்ச் சொரிந்து தெய்வம்**
**கொண்டதோர் செற்றம் போலுங் குலுங்கன்மி னென்று கூறும்** 508

[வளி-காற்று; கலாவி-கலந்து; பவ்வம்-கடல்; குளிறி-முழங்கி; கோல்-அம்பு; செற்றம்-கோபம்; குலுங் கன்மின்-அசையாதீர்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தீவின் அரசனைக் கண்டு விடைபெற்று, மிக நெருங்கிப் பழகியவர்களைப் பிரிந்து நன்னாளாகிய இரேவதி நட்சத்திரத்தில் குரு ராசியில் தனுர்லக்கினத்தில் மரக்கலம் ஏறி, அலைகடல் பரப்பிலே நீந்திக் காற்றினும் கடிது சென்று; ஐந்நூறு காதம் என்று கூறப்படுகின்ற தொலைவைக் கடந்து, அடைய வேண்டிய கரை ஒரு ஓசனை தூரம் இருக்கும்படி நெருங்கக் கப்பலில் இருந்தவர்கள் களிப்பிலே தம்மை மறந்து இருக்கும்போது, காற்றிலே, நீர்முகந்து செல்லும் மழை மேகங்கள் நிறைந்து பரவ, பேரிருள் கலந்து மயங்க, வாழ்வைக் கெடுப்பதுபோல் மின்னி, வெடிபோல இடியிடித்து எமனும் பயந்து நடுங்கி ஒழியுமாறு முழங்கிப் பேரிடியாக இடிக்க, எட்டுத் திசையின் காற்றும் ஒன்று சேர்ந்து ஒன்றோடொன்று எதிர் எதிராகக் கலந்து, கடல் குமுறி மேல் எழுந்து பொங்கியதைப் போல் நிற்க, முகில் குமுறி முழங்கக் குளிர் நீர்த்துளிகள் (மழைத்தூறல்கள்) பளிங்குக் கோல்போல் விண்ணிலிருந்து தாரை தாரையாகச் சொரியக் கண்ட சீதத்தன் ''இது தெய்வம் கொண்ட கோபம் போலும் எனவே நீங்கள் இதற்கு வருந்த வேண்டாம்'' என்று கூறினான்.

**இடுக்கண்வந் துற்ற காலை எரிகின்ற விளக்குப் போல**
**நடுக்கமொன் றானு மின்றி நகுகதா நக்க போழ்தவ்**
**விடுக்கணை யரியு மெஃகா மிருந்தழு தியாவ ருய்ந்தார்**
**வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்க ளென்றே**

[எஃகுஆம் - ஆயுதமாகும்; வடுப்படுத்து - குற்றப் படுத்தி.]

**ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கற் றெண்ணீர்**
**கூடகங் கொண்ட வாழ்நாள் உலந்ததேற் கொல்லும் பவ்வத்**
**தூடகம் புக்கு முந்நீர் அழுந்தினு முய்வர் நல்லார்**
**வாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தி னென்றான்**

[கூடு-உடம்பு; உலந்ததேல்-முடிந்ததாயின்; முந்நீர் அழுந்தினும்-கடலினுள் அழுந்தினாலும்; நல்லார்-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மகளிர்; பாடகம்-காலில் அணியும் ஒருவகை அணி.]

**வினையது விளைவின் வந்த வீவருந் துன்ப முன்னீர்க்**
**கனைகட லழுவ நீந்திக் கண்கனிந் திரங்கல் வேண்டா**
**நனைமலர்ப் பிண்டி நாத னலங்கிளர் பாத மூலம்**
**நினையுமி னீவி ரெல்லா நீங்குமி னச்ச மென்றான் 511**

[வீவருந்துன்பம்-அழிவில்லாத துன்பம்; கனைகடல்-ஒலிக்கின்ற கடல்; கனிந்து-குழைந்து; நனை-தேன்; பிண்டிநாதன்-அருகதேவன்; அழுவம்-பரப்பு.]

''துன்பம் வந்துற்றபோது, எரிகின்ற விளக்குக் காற்றில் அலைப்புறுதல் போல் உள்ளத்தில் நடுக்கம் ஒரு சிறிதும் இல்லாமல் சிரித்தபடியிருக்க, அச்சிரிப்பே துன்பத்தைத் துடைக்கும் படைபோலாகும். மேலும் துன்பத்தைக் கண்டு அழுது வருந்தியவர் எவர் அத்துன்பத்திலிருந்து தப்பினார்? எனவே அழுது வீரத்துக்கு இழுக்குத் தேடுவதால் என்ன பயன்? வருவது வந்தே தீரும்'' என்றவன் இன்னும் சொல்வான்: ''ஆடகப் பைம்பொற் கிண்ணத்திலே வைத்த கலங்கல் இல்லாத தெளிந்த நீரும், உடற்கூடு போத்திய உயிரின் வாழ்நாள் முடிந்ததேல் கொன்றுவிடும். அப்படியில்லாமல் கடலின் அடியில் செல்ல அத்தண்ணீர் அழுத்தினாலும் நல்லவர்கள் பிழைத்துக் கொள்வார்கள், மகளிர் பாடகம் போல் காலைச் சூழ்ந்துவரும் முன்வினைப் பயன் இருக்குமானால்'' என்றான். ''முன்செய்த தீவினைப் பயனால் வந்த துன்பம் மிகும் அலைகடல் பரப்பை நீங்கக் கண்கலங்கி அழவேண்டாம். குளிர்மலர் நிறைந்த அசோக மரநீழல் அமர்ந்திருக்கும் அருகப்பெருமானின் புது மலர் போன்ற திருவடித் துணையை நீங்கள் எல்லாம் நினையுங்கள், அச்சம் நீக்குங்கள்'' என்று கூறினான்.

**பருமித்த களிற னானும் பையெனக் கவிழ்ந்து நிற்பக்**
**குருமித்து மதலை பொங்கிக் கூம்பிறப் பாய்ந்து வல்லே**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நிருமித்த வகையி னோடி நீர்நிறைந் தாழ்ந்த போதில்
உருமிடித் திட்ட தொப்ப வுள்ளவ ரொருங்கு மாய்ந்தார்

*[பருமித்த-பலதிறப்பட அலங்கரித்த; குருமித்து-முழங்கி; கூம்பு-பாய்மரம்; நிருமித்த-நினைத்த.]*

## வேறு

ஓம்பிப் படைத்த பொருளும்முறு காத லாரும்
வேம்புற்ற முந்நீர் விழுங்கவ்விரை யாது நின்றான்
கூம்பிற்ற துண்டந் தழுவிக்கிடந் தான்கொ ழித்துத்
தேம்பெற்ற பைந்தா ரவனைத்திரை யுய்த்த தன்றே 513

*[விரையாது-கலங்காமல்.]*

நாவா யிழந்து நடுவொருமிலி யாமம் நீந்திப்
போவாய் தமியே பொருளைப்பொரு ளென்று
கொண்டாய்
வீவா யெனமுன் படையாய்படைத் தாய்வி னையென்
பாவா யெனப்போய்ப் படுவெண்மணற் றிட்டை
சேர்ந்தான் 514

*[தமியே-தனியே; வீவாய்-அழிவாய்; என்பாவாய்-நீ எதைச் செய்யமாட்டாய்; படுதல்-கொழித்தல்.]*

அணி செய்து அலங்கரிக்கப்பட்ட ஆண்யானையை ஒத்த சீதத்தன் தான் தலைகுனிந்து அருகப்பெருமானை வணங்கி நிற்க, அப்போது மரக்கலம் குமுறி எழுந்து பாய்மரம் முறியும்படி தன்போக்கில் தறிகெட்டு ஓடி நீரில் மூழ்கி இடி முழக்கம் போல் ஒலியெழ அமிழ்ந்த போதில் அதில் இருந்த அனைவரும் இறந்தனர். நல்லறவழியிலே நீதியை ஓம்பிச் சேர்த்த பெருஞ் செல்வத்தையும் உற்றநல் அன்புடையவரையும், உவர்க்கின்ற கடல்நீர் உண்ணக் கண்டும் கலங்காது நின்ற சீதத்தன், ஒடிந்து விழுந்த பாய்மரத்தின் துண்டு ஒன்றைப் பற்றிக் கொண்டு கிடந்தான். அப்படிக் கிடந்த தேன் நிறைந்த மாலை யுடையவனாகிய சீதத்தனைக் கடலலைகள் ஒதுக்கி வந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கரையில் சேர்த்தன. ''மரக்கலத்தையும் இழந்து யாருமற்ற நள்ளிரவிலே கடலை நீந்தித் தனியே போவாய், என்று விட்டனையே! பொருள் தேடுவதையே பொருளாகக் கொண்டு திரிந்த என்னை இறந்துபோ என்று முன்னமேயே படையாமல் விட்டுவிட்டாயே, வினைப்பயன் என்னும் புனைப்பாவையே'' — என்று மனஞ்சோர்ந்து பிதற்றியவாறே சென்ற சீதத்தன் ஒரு வெண்மணல் திட்டை அடைந்தான்.

## வேறு

**பொரியரை ஞாழலும் புன்னையும் பூத்து**
**வரிதரு வண்டொடு தேனின மார்க்கும்**
**திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்தாங்**
**கருவரை மார்ப னவலித் திருந்தான் 515**

[பொரியரைஞாழல்-பொரிந்த அரையை உடைய புலிநகக் கொன்றை; வரி-பாட்டு; தேன்-ஒருவகை வண்டு; திரு-அழகு; செவ்வனம்-நேரே; அவலித்து-வருந்தி.]

**ஓடுந் திரைக ளுதைப்ப வுருண்டுருண்டு**
**ஆடு மலவனை யன்ன மருள்செய**
**நீடிய நெய்தலங் கான நெடுந்தகை**
**வாடி யிருந்தான் வருங்கல நோக்கா 516**

[உதைப்ப-செலுத்த; அலவன்-நண்டு; நெடுந்தகை-சீதத்தன்.]

**ஆளிய மொய்ம்ப னிருந்தவப் பூம்பொழிற்**
**றாள்வலி யானொர் மகனைத் தலைப்பட்டுக்**
**கேளி ரெனக்குற்ற கேண்மின் நீரெனத்**
**தோள்வலி மிக்கான் றொடர்ந்துரைக் கின்றான் 517**

[ஆளிய மொய்ம்பன்-சீதத்தன்; தாள் வலி-முயற்சி வன்மை; ஓர் மகன்-தரன் என்பவன்; தொடர்ந்து-இடைவிடாது.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பொரிந்த அடி உடைய புலிநகக் கொன்றை மரமும் புன்னைமரமும் பூத்துக் குலுங்க, வண்டினமும் தேனினமும் தேனுண்டு பாடிக் களிக்கின்ற அழகு மலரும் அப்பூம்பொழிலை நேரே சென்றடைந்து, வலிய மலையனைய மார்புடைய சீதத்தன் வருத்தத்தோடு இருந்தான். ஓடி வரும் கடலலைகள் எத்தித்தள்ள கரை நோக்கி உருண்டு உருண்டு வரும் நண்டினை அன்னப் பறவை ஆதரிக்கக் கண்டு அது போலவே கடல் ஒதுக்கித் தள்ளிய தன்னை ஆதரித்துக் காக்க அன்னப் பறவைபோல ஏதேனும் கலம் வருமா என்று எண்ணி; நீண்டு கிடக்கும் நெய்தல் நிலக் கடற்கரையில், மன வருத்தத்துடன் கலம் வரும்வழிபார்த்துக் கடல் நோக்கியிருந்தான். ஆண்சிங்கம் போன்ற தோள் வலிமைமிக்க சீதத்தன் இருந்த அப்பூம்பொழிலிலே தன் முயற்சியால் தரன் என்பவனைக் கண்டு "நண்பனே, எனக்குற்ற துன்பங்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக" என்று மேலும் சொல்லத் தொடங்குவான்.

**கருங்கடற் போயிற்றுங் காற்றிற் கவிழ்ந்து**
**திருந்திய தன்பொருள் தீதுற்ற வாறும்**
**அரும்புணை சார்வா அவணுய்ந்த வாறும்**
**இருந்தவற் கெல்லா மெடுத்து மொழிந்தான் 518**

[போயிற்றும்-சென்ற தன்மையும்; கவிழ்ந்து-கவிழ்தலால்; திருந்திய-குற்றமில்லாத; அவற்கு-தரனுக்கு; எடுத்து-உயர்த்தி; சார்வா-ஆதரவாக.]

**மானு மரனு மிரங்க மதவலி**
**தானுற்ற துன்பந் தரனுக் குரைத்தபின்**
**தேனு மமிழ்துந் திளைத்தாங் கினியன**
**ஊனமில் கட்டுரைக் குள்ளங் குளிர்ந்தான் 519**

[மதவலி - மிக்க வலியையுடையவன்; மானும்-விலங்கும்; மரனும்-மரமும்; ஊனம்-குறைபாடு.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



**விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றோழரொடு**
**எஞ்சிய வான்பொரு ளெல்லா மிமைப்பினுள்**
**வஞ்சமொன் றின்றி மறித்தே தருகுவன்**
**நெஞ்சிற் குழைந்து நினையன்மி னென்றான் 520**

[விஞ்சைகள்-வித்தைகள்; எஞ்சிய-நீங்கிய; வான் பொருள்-சிறந்த பொருள்; மறித்து - மீட்டு; குழைந்து-வருந்தி.]

கருங்கடல் மேலே பொருள்தேடப் போனதும், பின்னர்ப் புயல்காற்றிலே கலம் கவிழ்ந்து தேடியபொருள் அனைத்தும் இழந்ததும், முறிந்து விழுந்த பாய்மரத் துண்டைத் தெப்பமாகக் கொண்டு தான் அத்தீவை அடைந்ததும் ஆகிய எல்லாவற்றையும் அவனுக்கு விளக்கிக் கூறினான். விலங்கும் மரமும் வருந்தி அவன்பால் இரக்கமுறுமாறு தரனுக்குத் தான் உற்ற சோகக் கதையை எடுத்துச் சொல்ல; தேனும் அமுதும் கலந்து பெற்றதனைப் போலத் தரன் கூறிய இனிய ஆறுதல் மொழிகேட்டுச் சீதத்தன் உள்ளம் மகிழ்ந்தான். ''நான் வித்தைகள் பலவற்றில் தேர்ந்தவன். எனவே இறந்துபட்ட உன் தோழருடன் இழந்து விட்ட பல பொருள்களையும், குறை வின்றி ஒரு நொடியில் மீட்டுத் தருவேன். நீவீர் உள்ளம் வருந்த ஒன்றையும் எண்ணவேண்டாம்'' என்று தரன் சீதத்தனுக்கு மேலும் உறுதி கூறினான்.

**உரையகங் கொள்ள வுணர்த்தின னாகி**
**வரையக மேற வலிமின மென்னா**
**விரைசெலல் வெம்பரி மேழக மேற்றிக்**
**குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான் 521**

[வரையகம்-மலைமேல்; வலிமின்-துணிவு கொள் வீராக; பரி-குதிரை; மேழகம்-ஆட்டுக்கிடாய்.]

**விசும்பிவர் மேகம் விரைவினர் போழ்ந்து**
**பசும்புயற் றண்துளி பக்க நனைப்ப**
**நயந்தனர் போகி நறுமலர்ச் சோலை**
**அசும்பிவர் சார லருவரை சார்ந்தார் 522**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[போழ்ந்து-பிளந்து; புயல்-மேகம்; அசும்பு-ஊற்று; வரை-மலை.]

**கண்டா லினியன காண்டற் கரியன**
**தண்டா மரையவள் தாழுந் தகையன**
**கொண்டான் கொழுங்கனி கோட்டிடைத் தூங்குவ**
**உண்டா னமிழ்தொத் துடம்பு குளிர்ந்தான்** 523

[தாமரையவள்-இலக்குமி; தாழும்-விரும்பும்; கோட்டிடை-மரக்கொம்புகளிடை; தூங்குவ-தொங்குவனவாகிய.]

இவ்விதம் சீதத்தனுக்கு நல்லுரை கூறித் தெளிவூட்டிய தரன் இம்மலைமீது ஏற முயலுக என்ன; விரைந்து செல்கின்ற சிறந்த குதிரை போன்ற ஆட்டுக்கடாவின் மேல் சீதத்தனை ஏற்றி ஒலியெழுப்பும் கழலணிந்த அவனோடு விண்வழியே சென்றான். வானூறும் மேகத்துள் நுழைந்து, கருமுகிலின் குளிர் நீர்த்துளிகள் தம்பக்கத்தை நனைக்க, விரும்பிச் சென்று, வாசமலர் நிறைந்த சோலையும், நீர் ஊற்றுக்கள் பெய்கின்ற சாரலையும் உடைய மலையை அடைந்தனர். அடைந்த அம்மலர்ச்சோலையுள் உள்ள கண்டால் இனிமையும், காணுதற்கு அரியவளுமான குளிர் தாமரைப்பூவில் வாழும் திருமகளும் விரும்பும் பெருமை உடைய மரக் கிளைகளிலே தொங்குகின்ற சிறந்த கனியினைச் சீதத்தன் பறித்துத்தின்று அமுதம் உண்டதுபோல் அகமகிழ்ந்தான்.

**மழைதவழ் சோலை மலைமிசை நீண்ட**
**குழைதவழ் குங்குமங் கோழரை நாகம்**
**தழைதவழ் சந்தனச் சோலையி னோக்கி**
**இழைதவழ் மார்பன் இனிதின் உவந்தான்** 524

[மழை-மேகம்; கோழரை நாகம்-கொழுவிய அரையையுடைய சுரபுன்னை; சோலையின்-சோலையொடு; இழை-ஆபரணம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கோதை யருவிக் குளிர்வரை மேனின்று**
**காதங் கடந்தபின் கன்னிக் கொடிமதில்**
**நாத னுறைவதொர் நன்னக ருண்டங்குப்**
**போது மெழுகெனப் போயினர் சார்ந்தார்** 525

[கோதை-மாலை; போதும்-போவோம்; எழுகென-எழுகவென்று தரன்கூற; கன்னி-அழிவற்ற.]

## வேறு

**மேகமே மிடைந்து தாழ இருள்கொண்ட வெள்ளிக் குன்றம்**
**மாகத்து விளங்கித் தோன்றும் வனப்புநாம் வகுக்க லுற்றால்**
**நாகந்தான் கரிய தொன்று கீழ்நின்று நடுங்கக் கவ்விப்**
**பாகமே விழுங்கப் பட்ட பான்மதி போன்ற தன்றே** 526

[மிடைந்து-நெருங்கி; மாகம்-ஆகாயம்; வனப்பு-அழகு; கவ்வி-முழுதும் கவ்வி; பாகம்-பாதி.]

மழைமேகங்கள் தவழ்ந்து செல்லும் அம்மலையில், நீண்ட தளிர் நிறைந்த குங்கும மரங்களையும், பருத்த அடிப்பாகத்தை உடைய சுரபுன்னை மரங்களையும், இலைகள் நிறைந்த சந்தன மரக்காட்டையும் பார்த்து, அணிகள் தவழும் மார்புடைய சீதத்தன் இன்பம் உற்றான். கோத்துத் தொடுத்த மலர்மாலை போல் நீர்த்தாரை ஊற்றெடுத்தோடும் அருவிகளால் குளிர்ந்த மலைமேல் இருந்து தரன் 'காத தூரத்திற்கப்பால், தலைவன் வாழும் அழிவற்ற கொடி மதில்கள் சூழ்ந்த நகர் ஒன்றிருக்கிறது. அங்கே போவோம் எழுந்து வருக' எனச் சீதத்தனை அழைக்க, இருவரும் அந்நகரைச் சென்று சேர்ந்தனர். அடிப்புறத்தை யெல்லாம் கருமுகில்கள் நெருங்கி மறைக்கக் கீழ்வரை இருண்ட, அவர்களிருவரும் இருந்த அவ்வெள்ளி மலையின் மேல்பகுதி விண்வரை உயர்ந்து எழிலுற விளங்கும் அழகை நாம் விளக்கப் போனால், கரிய நிறமுடைய (இராகு என்னும்) பாம்பு அடிப்பாதியை மட்டும் வருந்தக் கவ்வி மீதி மேல் பாதிப் பகுதியை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விழுங்காது விட்ட வெண்ணிலவைப் போன்றிருந்தது என்று கூறலாம்.

துளங்குபொன் னகரின் தன்மை சொல்லலாஞ் சிறிதோர் தேவன்
விளங்குபொன் னுலகத் துள்ள துப்புர விடங்க ளெல்லாம்
அளந்துகொண் டின்பம் பூரித் தணிநக ராக்கி மேலால்
இளங்கதிர்ப் பருதி சூட்டி யியற்றிய தென்ன லாமே 527

[துளங்கும்-ஒளிவிடும்; சிறிது சொல்லலாம்; துப்பரவு-நுகரும் பொருள்; அளந்து-ஆராய்ந்து; பூரித்து-நிறைத்து; மேலால்-மலையின் மேலிடத்தில்.]

## வேறு

பொங்கி யாயிரந் தாமரை பூத்தபோற்
செங்க ணாயிரஞ் சேர்ந்தவன் பொன்னகர்
கொங்கு தோய்குழ லாரொடுங் குன்றின்மேல்
தங்கு கின்றது போற்றகை சான்றதே 528

[பொன்னகர் - அமராவதி; கொங்கு - வாசனை; குழலார்-தெய்வ மகளிர்; தகை-அழகு.]

கிடங்கு சூழ்மதிற் கேழ்கிளர் பூங்கொடி
மடங்க னோக்கியர் வாண்முகம் போலுமென்று
உடங்கு வெண்மதி யுள்குளி ரத்தம
குடங்கை யாற்கொம்மை கொட்டுவ போன்றவே 529

[கிடங்கு-அகழி; கேழ்-நிறம்; மடங்கல் நோக்கு-முன்னும் பின்னும் பார்க்கும் சிங்கத்தின் பார்வை; அரிமா நோக்கம் என்றும் கூறப்படும். உடங்கு-சேர; தம-தம்முடைய; குடங்கை-உள்ளங்கை; கொம்மை-புறம்.]

மலையின் தன்மை இவ்விதமாக, ஒளி விளங்கும் பொன்னகரின் சிறப்பினைப் பற்றிச் சிறிது சொல்லுவோம். விண்ணுறையும் தேவன் ஒருவன், ஒளி விளங்கும் பொன்னுலகில் உள்ள இன்பம் நுகர்பொருள் நிறைந்த



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடங்களை எல்லாம் அளந்தறிந்து கொண்டு வந்து, இன்பத்தைக் கொட்டி நிறைத்து அழகிய நகருண்டாக்கி, அம்மலையின் மேலே இளங்கதிருடைய சூரியனை மதிலாக அமைத்து உண்டாக்கியது என்று கூறலாம். இதழ்விரித்து ஆயிரம் தாமரை மலர்கள் மலர்ந்தது போல் உள்ள ஆயிரம் கண்களுடைய இந்திரனுடைய அமராவதி நகர், தேனொழுகும் மலர்க் கூந்தலுடைய அரம்பையரோடும் அவ்வெள்ளிக் குன்றின்மேல் வந்து தங்கியிருந்தது போன்ற அழகுடையதாகும். அகழ் சூழ்ந்த மதிலில் இருக்கும் நிறம் விளங்கும் அழகிய கொடிகள், நிலவை அரிமா நோக்குடைய மகளிர் முகம் என்று கருதி உள்ளம் முழுதும் மகிழ்ந்து தம் உள்ளங்கையால் அந்நிலவின் மேல் புறத்தைத் தட்டுவது போல் ஆடி அலைக்கும்.

**திருவ மேகலை தெள்ளரிக் கிண்கிணி**
**பரவை யாழ்குழல் பண்ணமை மென்முழா**
**உருவம் யாருடை யாரென்று ஒளிர்நகர்**
**அரவம் வாய்திறந் தார்ப்பது போன்றதே 530**

*[தெள்ளரி-தெள்ளிய பரலாகிய மணிகளையுடைய; பரவையாழ்-பேரியாழ்; பண்-இராகம்; அரவம்-மேகலை.]*

**செம்பொன் மாடங்கள் சென்னி யழுத்திய**
**அம்பொன் திண்ணிலை யாய்மணித் தூவிகள்**
**வெம்பு நீள்சுடர் வீழ்ந்து சுடுதலிற்**
**பைம்பொற் கொப்புள் பரந்தன போன்றவே 531**

*[தூவி-ஸ்தூபி; மாடங்களின் உச்சியில் அமைப்பது. வெம்பும் சுடர்-சுடுகின்ற சூரியன்; கொப்புள்-கொப்புளம்.]*

**உருளி மாமதி யோட்டொழித் தோங்கிய**
**வெருளி மாடங்கண் மேற்றுயி லெய்தலின்**
**மருளி மான்பிணை நோக்கினல் லார்முகத்து**
**அருளி னாலழ லாற்றுவ போன்றவே 532**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[உருள்மதி-உருளுதலையுடைய மதி; ஓட்டொழித்து-ஓடுதலைத் தடைசெய்து; மருளி-மருண்டு; அழல்-வெம்மை; ஆற்றுவ-தணித்துக்கொள்ளுவ.]

பெண்களின் அழகிய மேகலை, இனிய ஓசை தரும் பரல்களை உடைய கிண்கிணி, பேரியாழ் வேய்ங்குழல் முழவு ஆகிய இவற்றின் ஒலியோடு, அந்நகரின் ஒலி சேர்ந்து, 'என்னைப்போல் அழகுடையார் யார்' என்று கேட்பதுபோல் முழங்கியபடியிருக்கும். செம்பொன் பதித்த மாடங்களின் உச்சியிலே அழுந்தப் பதித்த, அழகிய பொன்னாலான திரண்ட, உறுதி அறிந்தமைக்கப்பட்ட மணித் தூண்களை, கொதிக்கும் சூரியனின் ஒளிக் கீற்றுகள் தாக்கிப் பொசுக்க அத்தூண்களின் பொன் உருகி வழிந்து, கொப்புளங்கள் போல் தூணைச் சுற்றிப் பரவி நிற்கும். சூரியனின் தேரில் பூட்டிய குதிரைகள், திங்களின் போக்கைத் தடுத்து உயர்ந்து வளர்ந்த அஞ்சத்தக்க மாடங்களில் தூங்குவதனால், அவை பெண்மான் போன்ற மருண்ட பார்வை உடைய மங்கையரின் முகத்தின் அருளால் தம் வெம்மையைக் களைப்பைத் தணித்துக் கொள்வது போல் தோன்றும்.

**அசும்பு பொன்வரை ஆய்மணிப் பூண்களும்**
**பசும்பொன் மாலையும் பட்டுழிப் பட்டவை**
**நயந்து கொள்பவ ரின்மையி னன்னகர்**
**விசும்பு பூத்தது போன்றன வீதியே** **533**

[பட்டுழி-விழுந்த இடம்; நயந்து-விரும்பி; பூத்தது-நட்சத்திரத்தைப் பூத்தது; பொன் அசும்பு-பொன் ஒழுகும்.]

**தேக்க ணின்னகில் தேனொடு கூட்டமைத்**
**தாக்கப் பட்ட வளவில் கொழும்புகை**
**வீக்கி மாடந் திறந்திட மெல்லவே**
**ஊக்கி வாய்விட் டுயிர்ப்பன போன்றவே** **534**

[தேன்கண் இன்னகில்-நெய்யைத் தன்னிடத்தே யுடைய இனிய மணமுடைய அகில்; வீக்கி-

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நிறைத்து; ஊக்கி-வலிய முயன்று; உயிர்ப்பன-சொரிவன.]

**தப்பில் வாய்மொழித் தானவர் வைகிய**
**ஒப்பின் மாநக ரொண்மைமற் றியாதெனிற்**
**கப்பத் திந்திரன் காமுறு மாமணிச்**
**செப்பு வாய்திறந் தன்னதொர் செம்மற்றே** 535

[தானவர்-வித்தியாதரர்; ஒண்மை-விளக்கம்; செம்மற்று-தலைமையையுடையது; கப்பம்-கற்பகம்.]

ஊற்றுப்போல் பொன் வளரும் மலையில் உள்ள அழகிய மணியால் செய்த அணிகலன்களும், புதிய பொன் மாலையும், விழுந்துகிடக்க; அப்படி விழுந்து கிடப்ப வற்றை விரும்பி எடுப்பவர் இல்லாமையால், அப் பொன்னகரின் தெருக்கள் விண்மீன் பூத்துக் கிடக்கின்ற விரிந்த வானை ஒத்திருந்தன. தேன் மணம் நிறையக் கொண்ட அகிலையும், மற்ற மணந்தரும் கூட்டுப்பொருள் களையும் தேனோடு கலந்து உண்டாக்கிய நறும்புகை நிறைந்து சாளரங்களை அடைத்துக் கொள்வதால், அவற் றைத் திறக்க (அப்புகை வெளியே போக) அப்பொழுது வெளியேறும் புகை, அம்மாடங்கள் புகை தாளமாட்டாது தங்களின் பெரிய வாய்திறந்து அவற்றை உமிழ்வன போல் தோன்றும். குற்றமற்ற வாய்மொழி உடைய வித்தியா தரர் வாழ்கின்ற ஒப்புயர்வற்ற அப்பெருநகரின் தன்மை இன்னும் எப்படி இருந்தது எனின், தேவர் தலைவனாகிய இந்திரன் விரும்புகின்ற பூண்தங்கும் மாமணிச் செப்பு வாய்திறந்தது போன்ற தன்மை உடையதாயிருந்தது எனலாம்.

## வேறு

**நன்னகர் நோக்கி நாய்க னாகங்கொல் புகுந்த தென்னப்**
**பொன்னகர் பொலியப் புக்குப் பொங்குமா மழைக டங்கும்**
**மின்னவிர் செம்பொன் மாடத் திருவரு மிழிந்து புக்குப்**
**பின்னவன் விருந்து பேணிப் பேசினன் பிறங்கு தாரான்** 536

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[நாகம்-நாகலோகம்; மழைகள்-மேகங்கள்; மின் அவிர்-மின்னலைப்போல ஒளிவிட்டு விளங்குகின்ற; இழிந்து-இறங்கி; பிறங்கும்-விளங்கும்.]

மாடியந் தானை மன்னர் மாமணி நாக மாகக்
கேடில்சீர்க் கலுழ னாய கலுழவே கற்குத் தேவி
தோடலர் கோதைத் தொல்சீர்த் தாரணி சுரும்புண் கண்ணி
ஆடவ ரறிவு போழு மணிமுலை யணங்கி னன்னாள் 537

[மாடியம்-உடற்கவசம்; கலுழன்-கருடன்; தோடு அலர்-இதழ்கள் அலர்ந்த; அறிவு போழும்-அறிவைப் பிளக்கும்.]

விண்ணகம் வணங்க வெண்கோட்டு இளம்பிறை முளைத்த தேபோற்
பண்ணகத் தினிய சொல்லாள் பாவையைப் பயந்த ஞான்றே
எண்ணிட மின்றி மன்னர் இம்மலை யிறைகொண் டீண்டி
அண்ணலங் களிற்றி னுச்சி யருங்கல வெறுக்கை யீந்தார்

[பயந்த ஞான்றே-பெற்ற அன்றைக்கே; எண் இட மின்றி-எள்ளுப்போட இடம் இல்லாமல்; இறை கொண்டு - தங்குதல் கொண்டு; அண்ணல்-தலைமை; அருங்கல வெறுக்கை-அரிய ஆபரணங் களாகிய செல்வங்கள்.]

இத்தகைய வனப்புமிக்க பெருமை உடைய அந்த அழகிய நகரைப் பார்த்த சீதத்தன், நாம் வந்து சேர்ந் திருக்கிற இது நாகலோகமோ என்று கருதி, அப் பொன்னகர் உள்ளே நுழைந்து, மழைமுகில் தங்க மின் ஒளி வீசித் திகழும், தரனுடைய செம்பொன் மாடத்தில் இறங்கிப் புகுந்த பின்னர், மணம் விளங்கும் மாலை உடைய தரன் சீதத்தனுக்கு விருந்தளித்து உபசரித்துப் பின்னர் சொல்லத் தொடங்குவான்.

''உடற் கவசங்கள் அணிந்த படையுடைய அரசர்கள் பெருமணியை உடைய நாகங்களாகவும், தான் அழிவற்ற புகழ்மிக்க கருடனாகவும் விளங்கும் கலுழ வேகனின்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மனைவி, இதழ் விரித்த பூநிறைந்த மாலையை உடைய புகழ்ப்பெருமை மிக்க தாரணி ஆவாள். அவள் தேனுண்ண வண்டுகள் மொய்க்கின்ற கண்ணியையும், ஆடவர் மதிமயங்கி நிலை தடுமாறச் செய்யும் அழகிய மார்பையும் உடைய அழகுத் தெய்வம் போன்ற, வானுலகம் வணங்கித் தொழ வெண் தந்தக் கொம்பு போன்ற பிறைநிலவு வந்து தோன்றியதை ஒத்த, வீணைப் பண்ணிலே இணைந்து வரும் இன்னிசை போலும் இனிய சொல்லுடைய பொற்பாவை அனைய ஒரு பெண்ணைப் பெற்றாள். அன்றைக்கே, எள் இடவும் இடமின்றி மன்னரெல்லாம் இம்மலையில் வந்துகூடி (அவளைத்தாம் மணங்கொள்ள வேண்டி) பெரிய யானை மீது அமர்ந்தபடி பெருஞ்செல்வத்தையும்,பொன்பொருள், அணிமணிகளையும் வேண்டுவோர்க்குத் தருவாராயினர்.

**மந்திரத் தரசன் வல்லே நிமித்திகன் வருக வென்றாற்கு**
**அந்தரத் தோடு கோளிற் சாதக மவனுஞ் செய்தான்**
**இந்திர திருவி லேய்ப்பக் குலவிய புருவத் தாட்கு**
**வந்தடை பான்மை மண்மே லிராசமா புரத்த தென்றான்**

[மந்திரத்தரசன்-வித்தியாதர உலகத்து அரசன்; வல்லே - விரைய; நிமித்திகன் - சோதிடன்; அந்தரத்து - ஆகாயத்தில்; கோளின் - கிரகங்களால்; குலவிய-வளைந்த; பான்மை-ஊழ்வினை.]

**அவனுரை தெளிந்து வேந்த னாசையு ளரசர் நிற்பக்**
**கவனங்கொள் புரவிக் கொட்பிற் காதலுங் கரந்து வைத்தான்**
**அவனதே கருதிற் றாங்கொ லன்றுகொ லறிய லாகாது**
**இவணது மறிது மென்று கோயிலுக் கேகி னானே** **540**

[கவனம்-முன்னில் இரண்டடிகளை ஒக்க வைத்துப் பாயும் பாய்ச்சல்; இவணதும்-இப்பொழுது அவன் நினைத்ததையும்; அறிதும்-அறிவோம் கோயில்-கலுழவேகனுடைய அரண்மனை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பால்பரந் தன்ன பட்டார் பூவணை பசும்பொற் கட்டிற்
கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கி
வேல்பரந் தனைய கண்ணார் வெண்மதிக் கதிர்பெய் கற்றை
போலிவர் கவரி வீச மன்னவ னிருந்த போழ்தின் 541

[பட்டு-வெண்பட்டு; பூ அணை-பூக்கள் சேர்ந்த; கட்டில்-கட்டிலில்; கால்-அடி; கற்றை-தொகுதி; வீக்கி-இறுக்கி.]

"வித்தியாதர உலகின் வேந்தனாகிய கலுழவேகன், நாளும் கோளும் கணிக்கின்ற நிமித்திகனை உடனே கொண்டு வருக என்னவும், வந்த நிமித்திகனும் வானில் ஓடும் கோள்களின் துணைகொண்டு சாதகம் எழுதி வான வில்போல் வளைந்த புருவமும் பேரழகும் உடைய இப் பெண்ணுக்கு, வந்தடைய வேண்டிய நல்வினைப் பயன் மண்ணுலகில் இராசமாபுரத்தின் கண்ணே உள்ளதென்று கூறவும், கலுழவேகன் நிமித்திகன் சொன்னதன் பொருள் உணர்ந்து, மற்ற அரசர்கள் தமக்குக் கன்னியை மண முடித்துத் தருவான் என்று ஆசையோடு நிற்க, வலமும் இடமும் பாயும் கதி உணர்ந்த குதிரையின் மனச் சுழற்சியைப் போல் தன் உள்ளத்துணர்வை வெளிக் காட்டாது மறைத்து வைத்தான். அரசன் முடிவு, சாதகம் கணித்துச் சொன்ன நிமித்திகன் கூறியதுதானோ, அல்லது அதையல்லாமல் வேறுதானோ என்று அறிய முடியாதிருந்தது. எனவே அதை நாம் இப்போது அறிவோம்" என்று சீதத்தனையும் அழைத்துக் கொண்டு, தரன் கலுழவேகன் அரண்மனைக்குச் சென்றான். அங்கே அவ்வரண்மனையில் பாலாவி அன்ன பட்டுத் துகில் விரித்துப் பூமலர் இதழ் பரப்பிய பசும்பொன் கட்டிலிலே, அடிபரந்து நுனிகுவிந்த அழகூட்டும் ஒளிமார்பைக் கச்சினால் இறுகக் கட்டிய, வேல்போல் விரிந்த ஆளைக் கொல்லுகின்ற கண்ணுடைய பெண்கள் வெண்ணிலவு பொழிகின்ற ஒளிக்கதிர்போல் கவரிவீச, கலுழவேகன் வீற்றிருந்தபோது,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**என்வர விசைக்க வென்ன வாயிலோ னிசைப்ப வேகி**
**மன்னர்த முடிகள் வேய்ந்த வயிரம்போழ்ந் துழுது சேந்த**
**பொன்னவிர் கழல்கொள் பாதம் பொழிமழைத்**
**தடக்கை கூப்ப**
**இன்னுரை முகமன் கூறித் தானத்தி லிருக்க வென்றான் 542**

[இசைக்க-சொல்லுக; வேய்ந்த வயிரம்-சூடிய வயிர மணி; உழுது-உழ; சேந்த--சிவந்த; கூப்ப-குவித்து வணங்க; இன்னுரை முகமன்-இனிய வார்த்தைகளோடு கூடிய உபசாரம்; தானத்தில்-உரிய இடத்தில்.]

**முதிர்பெயன் மூரி வான முழங்கிவாய் விட்ட தொப்ப**
**அதிர்குரன் முரச நாண வமிர்துபெய் மாரி யேய்ப்பக்**
**கதிர்விரி பூணி னாற்குத் தந்தைதாய் தாரங் காதல்**
**மதுரமா மக்கள் சுற்றம் வினவிமற் றிதுவுஞ் சொன்னான்**

[முதிர்பெயல்-மிக்க பெய்தலையுடைய; மூரிவானம்-வன்மையையுடைய மேகம்; அமிர்து-நீர்; ஏய்ப்ப-ஒப்ப; தாரம்-மனைவி.]

**இன்றைய தன்று கேண்மை யெமர்நும ரெழுவர் காறும்**
**நின்றது கிழமை நீங்கா வச்சிர யாப்பி னூழால்**
**அன்றியு மறனு மொன்றே யரசன்யான் வணிக னீயே**
**என்றிரண் டில்லை கண்டா யிதுநின தில்ல மென்றான் 544**

[கேண்மை-நட்பு; எழுவர் காறும் நின்றதென்றது ஏழு தலைமுறையாக உள்ளது என்றபடி; ஊழ்-விதி.]

'என் வரவினை அரசனிடம் சென்று கூறுக' என்ற தரனிடம் வாயிலோன் வேந்தனுடைய உத்திரவு பெற்று வந்து சொல்ல, தரன் சீதத்தனுடன் உள்ளே சென்று, சிற்றரசர்களின் மணிமுடிகளிலே உள்ள வயிரங்கள் (அவர்கள் மணிமுடிதாழ விழுந்து வணங்குவதால்) பட்டு அழுந்தச் சிவந்த, பொன் ஒளிவீசித் திகழும் வீரக்கழல் அணிந்த பாதங்களில் விழுந்து, பெய்யும் முகிலனைய கொடைத் திறமுடைய பெரிய கைகளைக் குவித்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வணங்க, மன்னவனும் இன்மொழி கூறி இருவரையும் ஏற்ற ஆசனத்தில் இருக்க என்றான். நிறைய மழையைப் பெய்கின்ற கருமுகில்கள் அதிர்ந்து வாய்திறந்ததைப் போலவும், இடிபோல் முழங்கும் முரசம் வெட்கவும், வான் அமுதைப் பொழிகின்ற மேகம் போலவும் வேகமும் வலிமையும் இனிமையும் உள்ள தன் குரலால் கலுழவேகன், ஒளிசிந்தும் அணிபூண்ட சீதத்தனின் தந்தை, தாய், மனைவி, அன்புடைய இனிய மக்கள், சுற்றம் ஆகிய உறவு நலன்களைக் கேட்டறிந்து பின்னும் சொல்வான்: ''இன்றைக்குத் தோன்றியதல்ல நம் நட்பு; நம்மிருவர் உறவு முறை ஏழேழு தலைமுறைக்கும் வச்சிரத்தை இட்ட முத்தி வைத்த எழுத்தைப்போல் நல்வினைப் பயனால் நீங்காது நின்றது; அல்லாமலும் நம்மிருவர் கொள்கையும் ஒன்றே; அரசன் நான், வணிகன் நீ என்று இரண்டில்லை; இதுவும் உன்வீடே அறிவாய்'' என்றான்.

**மந்திர மன்னன் சொன்னீர் மாரியால் வற்றி நின்ற**
**சந்தனந் தளிர்த்த தேபோற் சீதத்தன் றளிர்த்து நோக்கி**
**எந்தைக்குத் தந்தை சொன்னா னின்னண மென்று கேட்ப**
**முந்தைத்தான் கேட்ட வாறே முழுதெடுத் தியம்பு கின்றான்**

[இன்னணம்-இன்ன வண்ணம்; கேட்ப-கலுழவேகன் கேட்கும்படி; முந்தை-முன்பு.]

**வெள்ளிவே தண்டத் தங்கண் வீவிறென் சேடிப் பாலிற்**
**கள்ளவிழ் கைதை வேலிக் காசில்காந் தார நாட்டுப்**
**புள்ளணி கிடங்கின் விச்சா லோகமா நகரிற் போகா**
**வெள்ளிவேற் கலுழ வேகன் வேதண்ட வேந்தர் வேந்தன்**

[வெள்ளி வேதண்டம்-வித்தியாதரர் வாழும் வெள்ளி மலை; வீவில்-அழிவில்லாத; தென் சேடிப் பாலில்-தட்சிண சிரேணியின் பக்கத்தில்; வேலி-தாழையாகிய வேலியையுடைய; காசு இல்-குற்றமில்லாத; போகா-நீங்காத.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**சங்குடைந் தனைய வெண்டா மரைமலர்த் தடங்கள் போலும்**
**நங்குடித் தெய்வங் கண்டீர் நமரங்கா ளறிமி னென்னக்**
**கொங்குடை முல்லைப் பைம்போ திருவடங் கிடந்த மார்ப**
**இங்கடி பிழைப்ப தன்றால் எங்குல மென்று சொன்னான் 547**

[உடைந்தனைய-உடைந்தாற் போன்ற; வெண் தாமரைமலர் கூறியது குலத்தூய்மைக்கு; கொங்கு-தேன்; இருவடம்-இரண்டு மாலை; நமரங்காள்-சுற்றத்தவர்களே.]

வித்தியாதர மன்னனின் இத்தகைய அன்பு மொழிகளால், காய்ந்து கருகிநின்ற சந்தனமரம் மழையால் தளிர்த்ததே போல் சீதத்தன் மனம் குளிர்ந்து தழைத்து மன்னவனை நோக்கி, "என் தந்தைக்குத் தந்தையாகிய பாட்டன் இவ்விதம்தான் சொன்னான்" என்று தான் முன் தன் பாட்டனிடம் கேட்டவையெல்லாம், அரசன் கேட்கும்படி எடுத்துச் சொன்னான். "வெள்ளிமலையில் உள்ள அழகிய இடத்தின் கேடில்லாத தென்கோடியில், தேன் சொரியும் தாழை மரங்கள் வேலியாக அமைந்த குற்றமற்ற வளமுடைய காந்தார நாட்டில்; பறவைகள் தங்கி வாழும் அகழிகள் உடைய வித்தியாதர உலகமாகிய நகரில் நீங்காது தங்கி வாழும் வெள்ளி வேலேந்திய கலுழவேகன் மலைநாட்டரசர்க்கெல்லாம் அரசன் ஆவான். அவன், சங்கு விரிந்ததைப் போல் இதழ் மலர்ந்த வெண்தாமரை மலர்கள் நிறைந்த குளங்கள் போன்ற நம் குடிக்குத் தெய்வம் போன்றவன்; சுற்றத்தார்களே அறிமின்? என்று கூறியிருக்கிறபடியால், தேன் வழியும் முல்லைப் புதுமலரால் ஆன இரு மாலைகள் அணிந்த மார்பனே இங்கே உன் திருவடித் தொண்டுக்கு என் குலம் தவறு செய்யாது" என்று கூற,

**பெருந்தகைக் குருசி றோழன் பெருவிலைக் கடக முன்கை**
**திருந்துபு வணங்கப் பற்றிச் சென்றுதன் னுரிமை காட்டப்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பொருந்துபு பொற்ப வோம்பிப் பொன்னிழை சுடர நின்ற
கருங்கண்ணி திறத்து வேறாக் கட்டுரை பயிற்று கின்றான்

[குருசில்-கழலுவேகன்; உரிமை-மனைவியை;
பொருந்துபு-மனம் பொருந்தி; கருங்கண்ணி-
காந்தருவதத்தை.]

எரிமணிப் பளிக்கு மாடத் தெழுந்ததோர் காம வல்லி
அருமணிக் கொடிகொன் மின்கொ லமரர்கோ னெழுதி
வைத்த
ஒருமணி குயின்ற பாவை யொன்றுகொ லென்று நாய்கன்
திருமணிக் கொடியை யோரான் றெருமர மன்னன்
சொன்னான் 549

[அமரர்கோன்-வானவர் தலைவன்; மணி குயின்ற-
மணியாற் செய்யப்பட்ட; ஓரான்-இன்னதென்று
தெரியாதவனாகி; தெருமர-மனம் சுழல; கொல்-
அசை.]

தூசுலாய்க் கிடந்த வல்குற் றுப்புறழ் தொண்டைச்
செவ்வாய்
வாசவான் குழலின் மின்போல் வருமுலைச் சாந்து நக்கி
ஊசல்பாய்ந் தாடிக் காதிற் குண்டல மிலங்க நின்றாள்
காசில்யாழ்க் கணங்கொ டெய்வக் காந்தர்வ தத்தை
யென்பாள் 550

[தூசு-ஆடை; துப்பு-பவளம்; குழலின் மின்-கூந்த
லாகிய மேகத்தை உடைய மின்னல்; நக்கி-தடவி;
ஊசல்-அசைதல்.]

பெருமைக்குரிய அம்மன்னனும், தோழமை மிக்
குடைய சீதத்தனின் விலை மதிப்பற்ற கடகம் அணிந்த
முன் கையை அன்போடு பற்றி அழைத்துச் சென்று, தன்
மனைவியான தாரணிக்குக் காட்ட அவளும் அவனை
அன்போடு உபசரித்தாள். அவ்விடத்திலேயே பொன் அணி
ஒளிர நின்ற கரிய கண்களுடைய தன்மகள் காந்தருவ
தத்தையின் சார்பாக மன்னன் வேறோர் உறுதிமொழியும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


கூறத் தொடங்கினான். ''ஒளி விடும் மணிகள் இழைத்த பளிங்கு மாடத்தில் தோன்றிய காமவல்லிக் கொடி போன்ற இவள் அரிய மாணிக்கக் கொடியோ, ஒளி மின்னலோ, வானவர் தலைவன் தன் உள்ளத்திலே எழுதி வைத்த ஒப்பில்லா மணியால் அமைத்த பொற் பாவையோ'' என்று அழகிய மணிக்கொடி போன்ற தத்தையை யாரென்று அறிய முடியாது கலங்கிய சீதத்தனிடம் அரசன் சொல்லத் தொடங்குவான். ''ஆடை சூழ்ந்து கிடக்கும் அல்குலும், பவளத்தையும் கொவ்வைக் கனியையும் போன்ற வாயும் உடைய வளாய், மணம் நிறைந்த மலர்க் கூந்தல் உடைய மின்னல் கொடிபோல்; அழகிய முலையில் பூசிய சாந்தில் தோயும் படி அசைந்தாடும் நீண்ட குண்டலம் காதில் அணிந்து நிற்பவளாகிய இவள் குற்றமற்ற பண்ணுடைய யாழ் தொகுதிகளைக் கொண்ட தெய்வமாகிய மாதங்கியைப் போன்ற காந்தருவதத்தை எனப்படுபவள்'' என்றான்.

**விளங்கினா ளுலக மெல்லாம் வீணையின் வனப்பி னாலே**
**அளந்துணர் வரிய நங்கைக் கருமணி முகிழ்த்த வேபோல்**
**இளங்கதிர் முலையு மாகத் திடங்கொண்டு பரந்த மின்னிற்**
**துளங்குநுண் ணுசுப்புந் தோன்றா துருவரு வென்ன**
**வுண்டே 551**

*[வனப்பு-திரண்ட அழகு; முகிழ்த்த - அரும்பின; ஆகத்து இடம் கொண்டு-மார்பின் இடத்தைத் தம்முடையனவாகக் கொண்டு; துளங்கு நுண் நுசுப்பும்-அசைகின்ற நுண்ணிய இடையும்.]*

**நின்மக ளிவளை நீயே நின்பதிக் கொண்டு போகி**
**இன்னிசை பொருது வெல்வான் யாவனே யானு மாக**
**அன்னவற் குரிய ளென்ன வடிப்பணி செய்வ லென்றான்**
**தன்னமர் தேவி கேட்டுத் தத்தைக்கே தக்க தென்றாள் 552**

*[பதி-இராசமாபுரம்; இன்னிசை பொருது-இனிய இசையால் வாதம் செய்து; தன்னமர் தேவி-*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தன்னை விரும்பிய தேவி என்றது தாரணியை.-
தத்தை-காந்தருவதத்தை.]

முனிவரும் போக பூமிப் போகமுட் டாதுபெற்றும்
தனியவ ராகி வாழ்தல் சாதுய ரதனி னில்லை
கனிபடு கிளவி யார்தங் காதலர் கவானிற் றுஞ்சிற்
பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று
சொன்னான் 553

[முனிவு-வெறுத்தல்; முட்டாது-குறையாமல்; கனிபடு
கிளவியார் - பழத்தின் சுவை உண்டாகின்ற
சொற்களையுடைய மகளிர்; கவான்-தொடை.]

"வீணை வாசிக்கும் திறமையிலும் அழகிலும் இவள்
உலகமெல்லாம் போற்றுகின்ற புகழ்பெற்றாள். அளந்
தறிய முடியாத நற்குணங்கள் அமைந்த இப்பெண்ணுக்கு
முன்னர் இரு கண்மணிபோன்று அரும்பிய முலைகள்
இப்போது பெருத்து மார்பை இடமாகக் கொண்டு பரவ,
முன்னர் (சிறுவயதில்) மின்னல் கொடிபோல் அசைந்
தாடிக் கொண்டிருந்த இடையும் இப்போது இருக்கிறதோ
இல்லையோ என்று ஐயுறுமாறு உள்ள இவள் உன்
மகளாவாள். இவளை உன் நகருக்கு அழைத்துச் சென்று
இன்னிசைத் திறமையால் இவளை வாதில் வெல்லத்
தக்கவன் எவனே ஆனாலும் அவனுக்கு இவள் உரியவள்;
எனவே அத்தகையவனுக்கே இவளை மணமுடித்துக்
கொடுப்பாயாக" என்று கலுழவேகன் கூற; நின் திருவுளப்
படியே செய்வேன் என்று சீதத்தன் மறுமொழி கூற;
கலுழவேகனின் அன்புக்குரிய மனைவியாகிய தாரணி
தத்தைக்கோ இது தக்கது என்று வருந்த; "வெறுப்பின்றி
இன்ப உலகிலே இன்பத்தைத் தடையின்றிப் பெற்றிருந்
தாலும் துணையின்றித் தனிமையில் வாழ்வதைப்
போன்ற, சாவினும் கொடிய துன்பம் வேறில்லை. கனி
போலும் இனியமொழி பேசும் மகளிர் தம் கணவர்
மடியிலே துயிலப்பெறுவது, குளிர்ந்து பரந்த விண்ணுலகின்
வானவர் இன்பம் பெற்ற சிறப்புடையது" என்று
கூறினான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**நூற்படு புலவன் சொன்ன நுண்பொரு ளுழைந்தி யானும்**
**வேற்கடற் றானை வேந்தர் வீழ்ந்திரந் தாலு நேரேன்**
**சேற்கடை மதர்வை நோக்கிற் சில்லரித் தடங்க ணங்கை**
**பாற்படு காலம் வந்தாற் பான்மையார் விலக்கு கிற்பார்**

[நூற்படு புலவன்-சோதிடன்; நூல்-சோதிட நூல்; நுழைந்து-கூர்ந்து சென்று; வீழ்ந்து-விரும்பி; நேரேன்-உடன்படேன்; மதர்வை நோக்கின்-மயக்கத்தைத் தரும் பார்வையையுடைய; பான்மை-ஊழ் வினை.]

**படைப்பருங் கற்பி னாடன் பாவையைப் பரிவு நீக்கிக்**
**கொடைக் குரிப்பால வெல்லாங் கொடுத்தபின் கூற்று முட்கும்**
**விடைப்பருந் தானை வேந்தன் வேண்டுவ வெறுப்ப நல்கித்**
**தொடுத்தலர் கோதை வீணா பதிக்கிது சொல்லி னானே**

[படைப்பருங்கற்பு - பிறரால் உண்டாக்குதற்கரிய கற்பு; பரிவு-துன்பம்; கொடைக்கு உரிப்பால்-கொடுத்தற்குரிய பொருள்கள்; உட்கும்-அஞ்சும்; வெறுப்ப-மிக; கோதை-மாலை; விடைப்பரும்-வேறுபடுத்தற்கரிய.]

**உடம்பினொ டுயிரிற் பின்னி யொருவயி னீங்கல் செல்லா**
**நெடுங்கணுந் தோளும் போலு நேரிழை யரிவை நீநின்**
**தடங்கணி தனிமை நீங்கத் தந்தையுந் தாயு மாகி**
**அடங்கல ரட்ட வேலா னாணையி ராமி னென்றான் 556**

[உயிரின் பின்னி-உயிரைப் போலச் சேர்ந்து; தோள்-கை; அடங்கலர் அட்ட-பகைவரைக் கொன்ற.]

"பல நூற்களைக் கற்றறிந்து அவற்றின் பொருள் உணர்ந்த நிமித்திகன் கூறிய நுண்பொருள் உண்மையை நானும் நுணிகி ஆராய்ந்ததினால், வேலேந்திய கடல் போன்ற படை வலிமை உடைய வேந்தர் பலர் விரும்பிக் கேட்டபோதும் நான் அவர்களுக்குத் தத்தையை மணம் முடித்துத்தரச் சம்மதிக்காதிருந்தேன். மீனின் வால்போல்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சிலிர்த்த கடைவிழி நோக்கும் செவ்வரி படர்ந்த கண்களும் உடைய இவளுக்கு, ஒருவனைச் சென்றடையும் காலம் வந்துவிட்டது என்றால் பின் அதனை யார்தான் தடுக்க முடியும்?'' என்று கேட்டான். பெறற்கரிய பெருங் கற்புடையவளாகிய தாரணி, தன் மகளின் வருத்தத்தைப் போக்கி, அவளுக்குக் கொடுத்தற் குரியவெல்லாம் கொடுத்தபின்னர், கூற்றுவனும் அஞ்சும் கடுஞ்சினம் மிக்க படையுடைய வேந்தன் தானும் அவளுக்கு வேண்டுவன எல்லாம் நிறையக் கொடுத்து, விரிந்த மலர்தொடுத்த மாலையுடைய வீணாபதியை நோக்கிச் சொல்வான்: ''உடம்பும் உயிரும்போல நெருங்கி, ஒரு பொழுதும் பிரியாது, நீண்ட கண்ணும் நெடுந்தோளும் போலத் தத்தை யும் நீயும் வாழ்வாயாக. அழகிய ஆபரணங்கள் அணிந்த பெண்ணே, நீ உன்னுடைய தத்தையின் தனிமை மறக்க அவளுக்குத் தந்தையும் தாயுமாக இருந்து, பகைவரை வென்ற வேலேந்திய சீதத்தன் ஆணைப்படி நீங்களிருவரும் நடப்பீராக'' என்றான்.

அருமணி வயிரம் வேய்ந்த வருங்கலப் பேழை யைஞ்ஞூறு
எரிமணி செம்பொ னார்ந்த விராயிரம் யவனப் பேழை
திருமணிப் பூணி னாற்குச் சினந்தலை மழுங்க லின்றிக்
குருமணி முடியிற் றேய்த்த தரன்றமர் கொள்க வென்றான்

[அருங்கலப்பேழை-அரிய ஆபரணங்களை வைத்தற் குரிய பெட்டி; ஆர்ந்த-நிறைந்த; மழுங்கல்-கெடுதல்; குரு-நிறம்; தமர்-சுற்றத்தார்.]

பல்வினைப் பவளப் பாய்காற் பசுமணி யிழிகை வம்பார்
நல்லகில் விம்மு கட்டிற் றவிசொடு நிலைக்கண் ணாடி
மெல்லிய தூப முட்டி மேதகு நானச் செப்போ
டல்லவுங் கொள்க வென்றா னணங்குடை நிணங்கொள் வேலான் 558

[இழிகை-கைக்கத்தி; தவிசு-ஆதனம்; நானச் செப்பு-புழுகு வைக்கும் செப்பு; அணங்கு-கொற்றவை; தூபமுட்டி-தூபக்கால்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**விளக்கழ லுறுத்த போலும் விசியுறு போர்வைத் தீந்தேன்**
**துளக்கற வொழுகி யன்ன துய்யறத் திரண்ட திண்கோல்**
**கொளத்தகு திவவுத் திங்கட் கோணிரைத் தனைய வாணி**
**அளப்பருஞ் சுவைகொ ணல்யா ழாயிர மமைக வென்றான்**

[விசியுறு-கட்டுதலுற்ற; துய்யற-சிக்கலின்றி; திவவு-வார்க்கட்டு.]

**அரக்கெறி குவளை வாட்க ணவ்வளைத் தோளி னாளைப்**
**பரப்பமை காதற் றாயர் பற்பல்காற் புல்லிக் கொண்டு**
**திருப்புறக் கொடுத்த செம்பொற் றாமரை போன்று கோயில்**
**புரிக்குழன் மடந்தை போகப் புலம்பொடு மடிந்த தன்றே** 560

[பரப்பமை காதல்-பரவுதல் அமைந்த அன்புடைய; தாயர்-நற்றாய் முதலிய அறுவகைத் தாயர்; புல்லி-தழுவி; திரு புறக்கொடுத்த-இலக்குமியை போகவிட்ட; போக - போதலால்; புலம்பு-வருத்தம்.]

அருமையான மணிகளும் வயிரமும் வைத்திழைத்த சிறந்த அணிகலப் பெட்டிகள் ஐந்நூறும், ஒளிவிடும் ரத்தினக் கற்களும் செம்பொன்னும் நிறைந்த யவன நாட்டுப் பெட்டிகள் இரண்டாயிரமும் கொடுத்து, அழகிய மணிப்பூண் அணிந்த கலுழவேகன் ஆற்றாது பகைவர் மேல் கொள்ளும் சினத்தால் அவன் காலடியில் தன்முடி தோய வணங்கிய தரனுடைய சுற்றத்தையும் கொள்க என்று கொடுத்தான். பல வேலைப்பாடுகள் உடைய பவளத்தாற் செய்தமைத்த கால்களையும், புதிய மணியிழைத்த வாளுறையும் உடைய நல்ல மணமுடைய அகிற்புகை பரவும் கட்டிலும், இருக்கையும், நிலைக் கண்ணாடியும் மென்மையான தூபக்கால்களும், புனுகுச் செப்பும் பிறவும், துன்பந்தரும் ஊன் பாய்ந்து தங்கிய வேலை உடைய மன்னவன் கொள்க என்று கொடுத்தான். மேலும், விளக்கின் சுடரைச் சேர்த்துச் சுடர் ஒளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குன்றாமல் போர்த்திய ஆலி நிறப்போர்வை போன்ற உறையும், இனிய தேன் அசைவின்றி ஒழுகியது போன்ற நார் இன்றித் திரண்ட நரம்பும் சேர்த்துக் கட்டிய வார்க் கட்டும் உடைய, கோள்களை நிறைத்ததைப் போன்றும் பாதி மதிபோலும், ஆணிகள் உடைய, கேட்கத் தெவிட்டாத புகழுதற்கரிய நல்ல இன்னிசை வீணைகள் ஆயிரமும் கொண்டு வருக என்றான். பிரிவை எண்ணி வருந்தி அழ, அரக்கைப் போல் சிவந்த குவளைமலர் போல் ஒளிவிடும் கண்களையும், அழகிய வளையணிந்த தோளையும் உடைய தத்தையை, அன்பு மீதூற அவள் தாயர் பலமுறை தழுவிக்கொள்ள (பிரியா விடை பெற்றுச் செல்ல), திருமகளைப் புறம்போகவிட்டு உளம் வாடிச் சிவந்த பொற்றாமரை மலர்போல, மாலை சூடிய கூந்தலுடைய மடந்தை தத்தையைப் பிரிந்து தனிமையில் அவ்வரண்மனையும் வருத்தத்தில் ஆழ்ந்து கிடந்தது.

காம்புபொன் செய்த பிச்சங் கதிர்மணிக் குடையொ டேந்தித்
தாம்பலர் கவரி வீசக் கிண்கிணி ததும்ப நாகப்
பாம்புபைத் தனைய வல்குற் பல்கலை மிழற்ற வேகி
ஆம்பன்னா றமுதச் செவ்வா யரசனைத் தொழுது நின்றாள்

[காம்பு பொன் செய்த பிச்சம்-பொன்னாற் செய்த காம்பையுடைய பிச்சம்; பலர்-மகளிர் பலரும்; பைத்தனைய-படம் விரித்தாற்போன்ற; கலை-மேகலை; மிழற்ற-ஒலிக்க.]

அடிக்கல மரற்ற வேகி யரும்பெறற் றாதை பாதம்
முடிக்கலஞ் சொரியச் சென்னி யிறைஞ்சலு முரிந்து மின்னுக்
கொடிப்பல நுடங்கி யாங்குத் தோழியர் குழாத்து ணிற்ப
அடுத்தனன் புல்லி வேந்த னாற்றுகி லாது சொன்னான்

[அடிக்கலம்-பாதத்தில் அணிந்த ஆபரணங்கள்; முடிக்கலம்-தலையிலணிந்த ஆபரணங்கள்; நுடங்கியாங்கு-அசைந்தாற்போல.]



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**வலம்புரி யீன்ற முத்த மண்மிசை யவர்கட் கல்லால்**
**வலம்புரி பயத்தை யெய்தா தனையரே மகளி ரென்ன**
**நலம்புரிந் தனைய காதற் றேவிதன் னவையை நீங்கக்**
**குலம்புரிந் தனைய குன்றிற் கதிபதி கூறி னானே 563**

[பயத்தை-பயனை; தேவி-தாரணி; நவை-வருத்தம்; அதிபதி-கலுழவேகன்.]

**இன்சுவை யாழொ டன்னம் இளங்கிளி மழலை மஞ்ஞை**
**பொன்புனை யூக மந்தி பொறிமயிர்ப் புறவம் பொன்னார்**
**மென்புன மருளின் னோக்கின் மானின மாதி யாகத்**
**தன்புறஞ் சூழப் போகித் தளிரியல் விமானஞ் சேர்ந்தாள்**

[பொன்-பொன்னாலாகிய ஆபரணம்; ஊகம்-கருங் குரங்கு; மந்தி-பெண் குரங்கு; பொறி-புள்ளி; புறவம்-புறா; போக-செல்ல; தளிரியம்-தளிரைப் போன்ற மென்மைத் தன்மை வாய்ந்த.]

பொன்னால் செய்தமைத்த காம்பினை உடைய பீலிக் குடையையும் ஒளிவீசும் மணிகள் பதித்த குடையையும் ஏந்தியபடி பலமகளிர் கவரி வீச, கிண்கிணி நாதம் எழ, நாகப் பாம்பு படம் விரித்ததைப் போன்ற அல்குலின் மேலணிந்த மேகலையின் பலமணிகள் எழுப்பும் ஒலியோடு சென்று, ஆம்பல் போல் சிவந்த அமுதளிக்கும் செவ்வாய் உடைய தத்தை கலுழவேகனை வணங்கி நின்றாள். அடியில் பூட்டிய பாதச் சிலம்பு வருந்தி வாடச் சென்று பெறற்கரிய தந்தையின் பாதமலர்களில், தலையில் சூட்டிய அணிகள் சிந்தத் தலை குனிந்து வணங்கி, மின்னல் கொடிகள் பல அசைவது போல் அங்கு நின்ற தோழியர்களிடையே நிற்க, கலுழவேகன் அவளை வாரியெடுத்து மார்போடணைத்துப் பிரிவாற்றாது சொல்லுவான். "வலம்புரிச் சங்கில் பிறந்த முத்துக்கள் மண்ணக மாந்தர்க்குப் பயன்படுமே அல்லாது அம்முத்துக்களின் பயனை அவ் வலம்புரிச்சங்குகள் அடைய மாட்டா; அதுபோலத்தான் பெண்களும் அவர்கள் பெற்றோர்களுக்கு," என்று கூறி நன்மையே உருவாய்க்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கொண்ட தன் அன்பு மனைவியின் வருத்தத்தைப் போக்கி, நற்குலச் சிறப்புகளே வடிவுகொண்டது போன்ற வெள்ளி மலையின் வேந்தன் மேலும் கூறுவான்: இன்னிசை மீட்டும் யாழுடன், அன்னமும் இளமை தவழும் இனிய மழலைமொழி பேசும் கிளியும் மயிலும் பொன்னால் செய்த கருங்குரங்கும் பெண் குரங்கும் புள்ளிகள் படிந்த இறகுடைய புறாவும் மென்மை மிகுந்த மருண்ட நோக்குடை மான்கள் போல் பொன்னால் செய்தவையும் ஆக—இவை எல்லாம் சூழக்கொண்டு தளிரிலையிலும் மிக்க மென்மை உடையதத்தை விமானத்தை அடைந்தாள்.

## வேறு

**வெற்றிவேன் மணிமுடிக், கொற்றவன் னொருமகள்**
**அற்றமில் பெரும்படைச், சுற்றமோ டியங்கினாள் 565**

*[கொற்றவன்-கலுழவேகன்; அற்றமில் படை-இடைவிடாத சேனை; இயங்கினாள்-போயினாள்.]*

**கண்ணயற் களிப்பன, அண்ணல்யானை யாயிரம்**
**விண்ணகத் தியங்குதேர், எண்ணவற் றிரட்டியே 566**

*[விண்ணகத்து-ஆகாயத்தில்; எண்-எண்ணிக்கை.]*

**விற்படை விலக்குவ, பொற்படைப் புரவியும்**
**முற்படக் கிளந்தவற்றின், நற்புடைய நாற்றியே 567**

*[நாற்றி-நான்கு மடங்கு; புடை-பக்கம்; கிளந்த-சொன்ன.]*

**பாறுடைப் பருதிவேல், வீறுடை யிளையரும்**
**ஆறிரட்டி யாயிரர், கூறுதற் கரியரே 568**

*[பாறு-பருந்து; ஆறிரட்டி-பனிரெண்டு.]*

**மாகநீள் விசும்பிடை, மேகநின் றிடித்தலின்**
**நாகநின் றதிர்ந்தவர்க், கேகலாவ தில்லையே 569**

*[மாகவிசும்பு-திக்குகளையுடைய ஆகாயம்; நாகம்-யானை; அதிர்ந்து - அதிர்தலால்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**வெஞ்சின வெகுளியிற், குஞ்சர முழங்கலின்**
**மஞ்சுதம் வயிறழிந், தஞ்சிநீ ருகுத்தவே** 570

[குஞ்சரம்-யானை; மஞ்சு-மேகம்; அழிந்து-கலங்கி.]

**வேழமும் மதத்தொடு, தாழ்புயல் கலந்துடன்**
**ஆழ்கட லகம்புறம், வீழ்தர விரைந்ததே** 571

[கலந்து-கலத்தலால்; கடலகம்-கடலின் நடு இடம்; விரைந்தது-படையானது விரைந்து சென்றது.]

வெற்றிதரும் வேலையும் விளங்கும் மணிமுடியையும் உடைய வேந்தனின் ஒரே மகள், நீங்கிப் பிரியாத பெரும் படையாகிய சுற்றத்துடன் சென்றாள். கண்ணருகே மத முடைய யானைகள் ஆயிரமும், வானில் செல்லும் தேர் களின் எண்ணிக்கை இரண்டாயிரமும், அம்பைத் தம் விரைவினால் விலக்கிச் செல்கின்ற பொற்கலன்கள் பூட்டிய குதிரைகளில் முன்னர்க் கூறிய யானைகளைப்போல் நான்கு பங்கும், பருந்துகள் சூழ்ந்து வட்டம் இடும்படி ஊன் தோய்ந்து கிடக்கும் ஒளி மிகுந்த வேலேந்தியபடி சொல்லுதற்கரிய திறம் உடைய வீர இளைஞர் பன்னீரா யிரவரும் உடன்கொண்டு செல்ல எட்டுத்திசையும் பரவி நீண்ட வானிலே, மழைமேகம் முழக்கும் இடியோசையைத் தம் கூட்டத்தின் பிளிறல் என்று நினைத்து மற்ற யானைகள் தாமும் பிளிற, அவ்வீர இளைஞர் படை வழி கொண்டு செல்லமுடியாது போகும். இப்படி யானைகள் பெருங்கோபம் கொண்டு சினத்தோடு முழங்க மழை மேகங்கள் அச்சமுற்று நடுங்கித் தம் வயிறு கலங்க நீரைச் (மழையை) சொரிந்திட, ஆழ்கடல் கரை புரண்டு வந்தது போல், வழியும் யானைகளின் மதத்தோடு பொழியும் மழை நீரும் சேர்ந்து கலந்ததால் தடையின்றி நாற்படை யும் சென்றது.

**மல்லன்மாக் கடலிடைக், கல்லெனக் கலங்கவிழ்த்**
**தல்லலுற் றழுங்கிய, செல்வனுற்ற செப்புவாம்** 572

[மல்லல்-வளப்பம்; கலம்-கப்பல்; அழுங்கிய-வருத்த முற்றுக்கெட்ட.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vijay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

பானிறப் பனிவரை, மேனிற மிகுத்தன
நீனிற நிழன்மணி, தானிரைத் தகமெலாம் 573

[பானிற-பால்நிற; நீனிற-நீலநிற; நிழல்-ஒளி.]

வஞ்சமின் மனத்தினான், நெஞ்சகம் புகன்றுக
விஞ்சையம் பெருமகன், வஞ்சமென் றுணர்த்தினான் 574

[வஞ்சமென்று-தன்னுடைய சூழ்ச்சியென்று.]

நங்கைதன் னலத்தினான், மங்குல்வெள்ளி மால்வரை
எங்குமன்ன ரீண்டினார், சங்குவிம்மு தானையார் 575

[மங்குல்-மேகம்; ஈண்டினார்-நிறைந்தார்.]

ஈரலங்க லேந்துவேல், ஆரலங்கன் மார்பினான்
கார்கலந்த கைக்கணி, சீர்கலந்து செப்பினான் 576

[அலங்கல்-மாலை; கணி-சோதிடன்.]

மாதர்வாழ்வு மண்ணதே, ஆதலா லலங்கலந்
தாதவிழ்ந்த மார்பநின், காதலன் கடலுளான் 577

[மண்ணது-பூமியின்கண் ணுள்ளது; அலங்கல்-பூமாலை; காதலன்-தோழன்.]

என்றுகூற வென்னையே, துன்றுகாதற் றோழனைச்
சென்றுநீ கொணர்கென, அன்றுவந்த வண்ணமே 578

[என்றுகூற-என்று சோதிடன் சொல்ல; கொணர்க-கொண்டு வருக; துன்றுகாதல்-நெருங்கிய அன்பு.]

துன்பமுற் றவர்க்கலால், இன்பமில்லை யாதலின்
அன்பமற்றி யானினைத், துன்பத்தாற் றொடக்கினேன் 579

[தொடக்கினேன்-பிணித்தேன்.]

பீழைசெய்து பெற்றனன், வாழியென்று மாக்கடல்
ஆழ்வித்திட்ட வம்பியைத், தோழர்ச்சுட்டிக் காட்டினான்

[பெற்றனன்-உன் அன்பைப் பெற்றேன்; அம்பி-கப்பல்; ஒருவகை ஓடமுமாம். அம்பியையும் தோழரையும். பீழை-துன்பம்.]

இனி வளமிகும் நீள்கடலில் 'கல்' என்றொலியெழக் கப்பல் கவிழ்ந்துபோகத் துன்புற்று வருந்திய சீதத்தனுக்கு நேர்ந்ததைச் சொல்லுவோம். பால்போல் வெள்ளை நிறமுடைய பனிமலையின் மேல் நிறமிக்க மணிகளையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


நீலநிற ஒளி உடைய கற்களையும் கப்பல் முழுதும் நிறைத்துக் கள்ளமற்ற உள்ளம் உடைய சீதத்தன் மனம் மகிழச் செய்த வித்தியாதரப் பெருமகனாகிய தரன் (இவையாவும்) மாயை என்பதை உணர்த்தினான். தத்தையின் பேரழகை எண்ணி, முகில் தவழும் வெள்ளிமலை முழுதும் சங்கு முழங்கும் போர்ப்படையை உடைய மன்னர்கள் நிறைந்து கூடிட, மாலை அணிந்த பகைவர் மார்பைப் பிளக்கின்ற வேலேந்திய மலர்மாலை அணிந்த அரசனுக்கு, முகில் போலும் வழங்குகின்ற கையுடைய நிமித்திகன், தத்தையின் சிறப்பை எடுத்துச் சொல்லுவான். ''பூந்தா துதிர்க்கும் பூமாலை அணிந்த மார்பனே, தத்தையின் வாழ்வுநலம் மண்ணிலேதான் சிறக்கவேண்டும்; ஆனால் நின் நண்பனோ கடலிடைச் செல்கின்றான். எனவே நீ சென்று அவனைக் கொண்டு வருக என்று கூறவும் நான் அன்றுவந்து உன்னைக் கண்டேன். துன்பம் அடைந்தவர்களுக் கல்லாது மற்றவர்களுக்கு இன்பத்தின் அருமை தெரியாது. ஆகவே அன்பனே நான் உன்னைத் துன்பத்தில் ஆழ்த்தினேன்; உனக்கு வருத்தம் உண்டாக்கிப் பின் உன் தோழமையைப் பெற்றேன்; இனி நீ துன்பம் இன்றி வாழ்வாயாக'' என்றுரைத்துப் பெருங்கடலில் மூழ்கிய கலத்தையும் அவன் தோழர்களையும் சிதத்தன் அறியக் காட்டினான்.

## வேறு

**தேன்தரு மாரி போன்று திவ்விய கிளவி தம்மால்**
**ஊன்றரு குருதி வேலா னுள்ளகங் குளிர்ந்து விஞ்சைக்**
**கோன்றரு துன்ப மற்றென் குலத்தொடு முடிக வென்றான்**
**கான்றுவில் வயிரம் வீசுங் கனமணிக் குழையி னானே 581**

[திவ்வியம்-இனிமை; கிளவிதம்மால்-சொற்களால்; ஊன் - தசை; விஞ்சைக்கோன் - கலுழவேகன்; முடிக-நடப்பதாக; வில்-ஒளி; கனமணிக்குழை- கனத்த மணியையுடைய குண்டலம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**தோடலர் தெரிய லான்றன் றோழரைக் கண்டு காதல்**
**ஊடலர்ந் தெழுந்து பொங்க வுருவத்தார் குழையப் புல்லிப்**
**பாடிரும் பௌவ முந்நீர்ப் பட்டது பகர்த லோடும்**
**நாடக நாங்க ளுற்ற தென்றுகை யெறிந்து நக்கார் 582**

[ஊடு-மனத்தினுள்ளே; உருவத்தார்-அழகிய மாலை; இரும்பௌவம்-பெரிய கடல்; பாடு-ஒலித்தல்; பட்டது-தான் உற்றது.]

**கட்டழற் கதிய புண்ணிற் கருவரை யருவி யாரம்**
**பட்டது போன்று நாய்கன் பரிவுதீர்ந் தினியர் சூழ**
**மட்டவிழ் கோதை யோடு மண்கணை முழவ மூதூர்க்**
**கட்டவிழ் தாரி னான்றன் கடிமனை மகிழ்ந்து புக்கான்**

[ஆரம்-சந்தனச்சாந்து; பரிவு-துன்பம்; மட்டு-தேன்; கோதை - காந்தருவதத்தை; கட்டு - அரும்பின் முறுக்கு.]

தேன்பொழியும் மழைபோன்று பெய்த இவ்வினிய மொழிகேட்டு ஊன் குருதி தோய்ந்த வேலுடையவனாகிய சீதத்தன் மனம் மகிழ்ந்தான். மேலும் வித்தியாதர வேந்தனாகிய தரன் தந்த இத்துன்பம் என்குடி உள்ளளவும் நடப்பதாக என்றான், பேரொளி வீசும் வைரமணிக் குழையணிந்த சீதத்தன். பூவிதழ் விரித்த புதுமலர்மாலை அணிந்த சீதத்தன் தன் தோழர்களைக் கண்டு, உள்ளத்தில் அன்பு ஊறிப் பெருக, தன் மார்பில் அணிந்த மாலை குழையத் தழுவிக் கொண்டு ஒலியோசை பெருக்கும் பெருங்கடலில் பட்ட துன்பத்தைச் சொல்லவும் அவர்கள் இது கேட்டுக் கைகொட்டிச் சிரித்து நல்ல நாடகம் நாங்களிது கண்டோம் என்றனர். பெருந்தீச் சுட்ட புண்ணில், பொதியமலை நீர் அருவிச் சந்தனத்தைப் பூசியது போல் துன்பம் நீங்கி, நண்பர்கள் சூழத் தேன் பிலிற்றும் மாலையணிந்த தத்தையுடன், மேளமும் முழவும் முழங்குகின்ற பெருமைமிக்க இராசமாபுரத்தைப் பூமலர் சேர்த்துக்கட்டித் தொய்ந்த மாலை உடைய வணிகனாகிய சீதத்தன், தன் காவல் மனை சென்றடைந்தான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**பெருமனை குறுக லோடும் பிறையென விலங்கித் தோன்றும்
திருநுதன் மனைவி செம்பொற் கொடியென இறைஞ்சி நிற்ப
வருமுலை பொதிர்ப்ப வாங்கி வண்டின மிரியப் புல்லிக்
கதிர்நகை முறுவன் மாதர் கண்ணுறு கவலை தீர்த்தான் 584**

*[மனைவி-பதுமை என்பவள்; இறைஞ்சி-வணங்கி; பொதிர்ப்ப-வீங்கும்படி; வாங்கி-தழுவி; புல்லி-அணைத்து; இரிய-ஓட.]*

**சந்திர காந்த மென்னுந் தண்மணி நிலத்தி னங்கண்
வெந்தெரி பசும்பொன் வெள்ளி பளிங்கொடு பவளம் பாய்த்திக்
கந்தெரி மணியிற் செய்த கன்னியா மாட மெய்திப்
பைந்தொடிப் பாவை யொன்றும் பரிவிலள் வைகி னாளே**

*[பாய்த்தி-பரப்பி; கந்து-தூண்; ஒன்றும்-சிறிதும்; பாய்த்து-பாய்ச்சி; தூசு-ஆடை.]*

**பாசிழை பரவை யல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்கக்
காசுகண் பரிய வைகிக் கடன்றலைக் கழிந்த பின்னாத்
தூசணி பரவை யல்குற் றுளங்குநுண் ணுசுப்பிற் பாவை
ஆசறு வரவுந் தந்தை வலித்தது மறியச் சொன்னான்**

*[வீங்க-இறுகுதலால்; காசு-மணி; பரிய-அற்றுவிழ; கடன்-நிகழ்த்தும் முறைமை; பின்னா-பின்னாக; துளங்கு-அசைகின்ற; பாவை-காந்தருவதத்தை; வலித்தது-துணிந்தது.]*

தன்னுடைய பெரிய வீட்டை அடைந்தவுடன், பிறை நிலவுபோல் தோன்றுகின்ற அழகிய நெற்றியை உடைய தன் மனைவி செம்பொற் கொடிபோன்று வணங்கி வந்து முன் நிற்க, அவள் கூந்தலிலே மொய்த்திருக்கும் வண்டினங்கள் விலகி ஓட, பூமார்பு குழைந்து அழுந்தச் சேர்த்துத் தழுவி ஒளி உமிழும் முல்லைப் பற்களை உடைய பதுமையின் (கணவனைக் காணாது) கண்கள் அடைந்திருந்த கவலையைப் போக்கினான். சந்திர காந்தம் என்னும் குளிர்மணிக் கற்கள் பதித்த நிலத்திடை, உருக்கி ஊற்றிய பொன்னால் சுவர் அமைத்து, வெள்ளி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யும், பளிங்கும், பவளமும் கொண்டு விட்டமும் கூரையும் தாழும் அமைத்து, ஒளி விளங்கும் மணியாற் செய்த தூணமைத்த கன்னிமாடத்தை அடைந்து புது வளையல்கள் அணிந்த தத்தை ஒரு துன்பமும் இன்றி இருந்து வரலாயினள். பொன் அணிபூட்டிய பதுமையின் விரிந்த அல்குலில் அணிந்த மேகலை அற்றுவிழ, அதன் மணிகள் சிதறி ஓடக் கூடி இன்பம் நுகர்ந்து, அவளிடம் இன்பம் அடையும் விதம் எல்லாம் அங்கே அடைந்த பின்னர்; ஆடை அணிந்த விரிந்த அல்குலும், அசையும் நுண் இடையும் உடைய தத்தை, தன்னைப் பற்றுக்கோடாகக் கொண்டு வந்ததையும், அவள் தந்தை அவள் மணவினை பற்றிச் சொல்லிய முடிவையும் தெளிவுற எடுத்துக் கூறினான்.

வண்டுண மலர்ந்த கோதை வாயொருப் பட்டு நேரத்
தெண்கட லமிர்தம் பெய்த செப்பெனச் செறிந்து வீங்கிப்
பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையி னாளைக்
கண்டவர் மருள நாளைக் கடிவினை முடித்து மென்றான்

[கோதை-பதுமை; ஒருப்பட்டு-துணிந்து; நேர-உடன்படுதலால்; பேதுறும்-மயக்கமுறும்; முடித்தும்-முடிப்போம்.]

மால்வரை வயிறு போழ்ந்து வல்லவர் மதியிற் றந்த
பால்வரை மணியும் பொன்னும் பற்பல கொண்டு புக்குக்
கால்பொரு கழலி னானுங் காவலற் கண்டு சொன்னான்
வேல்பொரு தானை யானும் வேண்டுவ விதியி
னேர்ந்தான் 588

[மதியின்-அறிவால்; பால் வரை மணி - பாலால் நன்மையை ஆராய்ந்து கொள்ளப்பட்ட நீலமணி; நீலமணியின் தன்மையைப் பாலால் ஆராய்ந்து கொள்ளுதல்.]

## வேறு

மையல்மத யானைநிரை மன்னன்மகிழ்ந் தானாப்
பொய்யில்புகழ் நாய்கன்மத வொளியினொடு போகி
நொய்தின்மனை யெய்தியிது செய்கென நொடித்தான்
மொய்கொண்முலை பாயமுகை விண்டலர்ந்த தாரான் 589

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[மத ஒளி-மிக்க ஒளி; நொய்தின்-விரைவாக; நொடித்தான்-சொன்னான்; பாய-பாய்தலால்.]

வண்டுகள் தேனுண்ண மொய்க்கின்ற மாலை அணிந்தவளாகிய பதுமையும் அம்முடிவினுக் குடன்பட்டுத் தன் விருப்பம் தெரிவித்தவுடன், தெளிந்த கடலின் அமுதத்தை அள்ளி நிறைத்து வைத்த செப்பினைப் போல், சேர்ந்து பருத்த, (அதனை அடைய) பெண்களும் ஆண்மையினை விரும்பி மயங்கும் அழகுடையதான பூமார்புடையத்தைக்குக் கண்டவர் மயங்க நாளைத் திருமணம் நடத்துவோம் என்றான். பெரிய மலைப் பாறைகளைக் குடைந்து நூலறிவு மிக்கோர் தம் திறமையால் கண்டு கொடுத்த பொன்னும் மணியுமாகப் பலவற்றைக் கொண்டு சென்று வீரக்கழல் அணிந்த சீதத்தனும் கட்டியங்காரனைக் கண்டு தன் எண்ணத்தைச் சொல்ல, வேலேந்திப் போராடும் படைவலிவுடைய அவனும், சீதத்தன் விரும்பியபடி செய்ய ஒப்புக்கொண்டான். செருக்குடைய மதம் பொருந்திய யானைப் படைகள் உடைய மன்னன் இது கேட்டு மகிழ்ந்ததனால், நிறைந்த மெய்யான புகழ்வணிகன்-நெருங்கிய முலைகள் பதிந்து அழுந்தியதால் மொக்குகள் விரிந்த மலர்கள் நிறை மாலை உடையவனாகிய சீதத்தன், மிக்க மகிழ்வோடு விரைந்து சென்று தன் வீட்டை அடைந்து, மற்ற ஏற்பாடுகளைச் செய்க என்று சொன்னான்.

**நானக்கிடங் காடைநகர் நாகத்திடை நன்பொன்**
**வானக்கிடு மாட்சியதொர் மண்டபஞ்செய் கென்ன**
**மீனத்திடை நாள்கிழமை வெள்ளிசயை பக்கம்**
**கானத்திடை வேங்கையெழக் கண்ணினர்க ளன்றே 590**

[நாகம்-சுவர்க்கலோகம்; நகுதல்-சிரித்தல்; சயை-திருதியை, அஷ்டமி, திரயோதசியென்னும் திதிகள்; கண்ணினர்-கணித்தார்கள்.]

**நட்புப்பகை யுட்கினொடு நன்பொன்விளை கழனி**
**பட்டினொடு பஞ்சுதுகில் பைம்பொனொடு காணம்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அட்டசுவை வல்சியினொ டியாதுமொழி யாமல்
ஒட்டிப்பதி னாயிரவ ருற்றுமுயல் கின்றார் 591

[உட்கினொடும்-அச்சத்தோடும்; அட்ட-சமைத்த; யாதும்-எதுவும்; ஒட்டி-முடிவுசெய்து; காணம்-பொற்காசு; வல்சி-பகற்சோறு.]

வண்டுபடு தேறனற வாய்விடொடு பருகிக்
கண்டதொழிற் கணிச்சிகளிற் கயம்படநன் கிடித்தாங்
கெண்டிசையு மேற்பப்படுத் தேற்றியதன் மேலாற்
கண்டுருகு பொன்னினிலங் காமுறுவ புனைந்தார் 592

[வண்டுபடுதேறல்-வண்டுகளால் ஓரிடத்துச் சேமித்து வைக்கப்பட்ட தேன்; நறவு-பூவாலாக்கின தேன்; வாய்விடொடு-வாய்விடுதலோடு; கயம்-ஆழம்; இடித்து-வெட்டி; ஏற்றி-உயர்த்தி; கண்டு-அறிந்து; பொன்னின்-பொன்னால்; காமுறுவ-விரும்பத்தக்கன.]

பொன்செய்குடங் கோத்தனைய வெருத்திற்பொலி பொற்றூண்
மின்செய்பசும் பொன்னிலத்து வீறுபெற நாட்டி
மன்பவள மேனவின்று பளிக்கலகு பரப்பி
நன்செய்வெளி வேய்ந்துசுவர் தமனியத்தி னமைத்தார் 593

[எருத்து-கழுத்து; வீறு-பெருமை; வெளி-வெள்ளியால்; தமனியம்-பொன்; மன்-பெருமை.]

புனுகுக் கிடங்கை ஆடையாக உடைய சொர்க்கத்தின் நடுவில் பசும்பொன் வானை வெட்கச் செய்யும் அழகுடையதான ஒரு மண்டபத்தை அமைத்திடுக என்று கூற, வெள்ளிக்கிழமையும் திருதியையும் கூடிய, உத்திரட்டாதி நாளில் சிம்மராசியில் உதயப் பொழுதில் அத்தகைய மண்டபம் அமைக்கக் கால்நடுக என்று நிமித்திகர்கள் கூற, நண்பாய் ஒன்றுகூடியும் பின் பிரிந்து வேறுபட்டும், நல் பொன்விளையும் கழனியும், பட்டுத் துகிலும் பஞ்சாடையும், பைம்பொன்னும், பொற்காசும்,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


சுவைமிக்க பகலுணவும் என்னும் இவை யாவற்றையும் முடிவு செய்து கொண்டு பதினாயிரம் பேர் அம்மண்டபம் சமைக்கும் பணியில் ஈடுபட்டனர். வண்டுகள் மொய்க்கும் மலர்த் தேனையும் மதுவினையும் நிறையப் பருகி, ஆழம் உண்டாக்குவதற்கென்று அமைந்த குந்தாலிகளால் நிலத்தை நன்றாகத் தோண்டி, எட்டுத் திசைக்கும் பொருந்தி வர அதன் அடிமட்டத்தை உயர்த்தி அதன் மேல் வேண்டும் அளவுக்கு யாரும் விரும்பி அடைய எண்ணும் பொன்னை உருக்கி ஊற்றி நிலத்தை அழகு படுத்தினர். பொன்னால் செய்தமைத்த குடங்களைக் கோத்துக் கழுத்தில் வைத்ததைப்போல் விளங்குகின்ற பொற்றூண்களை ஒளிவிளங்கும் அப்பசும்பொன் நிலத்திலே அழகுற அமைத்து அவற்றின்மேல் பவளக் கைமரம் பரப்பி நல்ல வெள்ளித் தகட்டாலே கூரை வேய்ந்து சுற்றுச் சுவர்களைப் பொன்னால் எழுப்பினர்.

**பாவையவ ளிருக்குமிடம் பளிக்குச்சுவ ரியற்றிக்**
**கோவைகுளிர் முத்தினியல் கோதையொடு கொழும்பொன்**
**மாலையொடு மாலைதலை மணந்துவர நாற்றி**
**ஆலையமி தோவியர்கட் கென்னவணி யமைத்தார் 594**

*[கோவை-பூமாலை; மாலை-மாணிக்கமாலை; தலை மணந்து - கலந்து; நாற்றி - தொங்கவிட்டு; ஆலையம் - இருப்பிடம்; ஓவியர் - சித்திரகாரர்; அணி-சித்திரம்.]*

**ஆயிதழ பொன்னலங்கல் காலசைப்ப ஒல்கி**
**வாயருகு வந்தொசிந்து மறியமழை மின்போற்**
**சேயவர்க்குந் தோன்றியதொர் திலகமெனுந் தகைத்தாய்ப்**
**பாயதிரை முத்தமணல் பரந்துபயின் றுளதே 595**

*[ஆய்-அழகு; கால்-காற்று; அசைப்ப-அசைத்தலால்; ஒல்கி-ஒதுங்கி; வாய்-விளிம்பு; ஒசிந்து-சாய்ந்து; மறிய-மீளுதலால்; சேயவர்க்கும்-சேய்மைக்கண் உள்ளவர்களுக்கும்; பாய-பரவிய.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

காமர்களி றும்பிடியுங் கன்றுங்கலை மானும்
தாமரைய வாவிகளும் புள்ளுந்தகை நலத்தின்
ஏமுறுவ பாவையினொ டியக்கிநிலை யெழுதி
ஆமொரையங் காண்பவர்க்கி தகம் புறமி தெனவே 596

[காமர்களிறு-விருப்பம் மருவின ஆண் யானை; பிடி-பெண் யானை; ஏமுறல்-மயக்கமுறுதல்; இயக்கி-யக்ஷி; எழுதி-எழுத; களிறு முதலியவற்றைச் சித்திரத்தில் எழுதுதல்.]

பொற்பாவை அன்ன தத்தை அவள் இருக்கும் இடத்திற்குப் பளிங்கினால் சுவர் அமைத்து, குளிர்ச்சிமிக்க முத்தினால் செய்த மாலையோடு பூவாலும், சிறந்த பொன்னாலும், மாணிக்கக் கற்களாலும் ஆன மாலைகளை இயற்றி அமைத்து அவ்விடம் ஓவியர்களுக்கு ஆலயம் என்றெண்ணும்படிக்கு அழகு ஓவியங்கள் தீட்டினர். அழகிய இதழ்கள் நிறைந்த பொன்னால் செய்த மாலைகள் காற்றிலே அசைந்து ஒதுங்கி வாயிலின் பக்கம் வந்து புரளுவது முகிலிடைத் தெரியும் மின்னல்போல் தூரத்தே உள்ளவர்களுக்குத் தெரிய [illegible]. மண்டபங்களுக்குள் எல்லாம் சிறந்த [illegible] கடல் முத்துக்களாகிய மணல் பரவி [illegible]. அழகிய களிறும், பெண்யானையும், அதன் [illegible], மானும் அதன் துணையும் தாமரை [illegible] பறவைகளுமாக மிக்க அழகுடன்; [illegible] பொற்பாவைகளையும், அவற்றின் [illegible] மாகிய இயக்கியின் நிலைகளையும் [illegible] எழுதியமைக்க அச்சித்திரங்கள் [illegible] உட்புறம் எது வெளிப்புறம் என்று [illegible] குழப்பத்தை உண்டாக்கும்.

உழுந்தவை [illegible]
[illegible]
[illegible] 597
[illegible]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[உழந்தவர்-பழகியவர்; இங்கே சித்திரகாரர். இல்லை-தனக்கு ஒப்பு இல்லை; மொய்-வலி; இது-இத்தன்மைத்து; அடையா-நெருங்கா.]

ஓடுமுகில் கீறியொளிர் திங்கள்சிகை வைத்தே
மாடமது வார்சடைய வள்ளலையு மொக்கும்
நாடிமுக நான்குதனி னான்முகனை யொக்கும்
நேடிநிமிர் தன்மையினி னேமியையு மொக்கும் 598

[சிகை-தலை; வைத்து-வைத்தலால்; நாடி-நாடுதலால்; நேடி-தேடி; நேமி-திருமால்.]

கண்டவர்கள் காமுறலிற் காமனையு மொக்கும்
கொண்டுலக மேத்தலினக் கொற்றவனை யொக்கும்
வண்டெரிய லாரமுலை மாதர்மகி ழமுதம்
உண்டவர்க ளெவ்வகைய ரவ்வகைய தொன்றே 599

[காமுறலின்-விரும்புதலால்; கொற்றவன் - இங்கே சச்சந்தன்; தெரியல்-பூமாலை; அவ்வகையது-அத்தன்மையது.]

## வேறு

முகிற்றலை மதிய மன்ன முழுமணி மாடத் திட்ட
அகிற்புகை தவழ்ந்து வானத் தருவிசும் பறுத்து நீண்டு
பகற்கதிர்ப் பரப்பிற் றாகிப் பஞ்சவர் விமான முட்டிப்
புகற்கரு மமரர் கற்பம் புக்கயா வுயிர்த்த தன்றே 600

[முகிற்றலைமாடம் - மதியமன்ன முழுமணி மாடம் என்க; வானம்-ஆகாயம்; விசும்பு-மேகம்; அறுத்து-ஊடுருவிச் சென்று; பரப்பி-பரவி; பஞ்சவர்-சந்திரன் முதலாய கோள்கள்; அயாவுயிர்த்த-இளைப்பாறின.]

பலகாலம் ஓவியக்கலையில் உழன்று அழுந்தியவரும் கண்டு வியந்து மகிழும் வண்ணம் சிறந்து விளங்கும்; அவ்வோவியத்தில் தீட்டப்பட்ட பறவைகளும் விலங்குகளும், தம்மை விழுங்கிக் கொன்று விடும் என்று பயந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உண்மையான பறவைகளும் விலங்குகளும்கூட அவற்றை நெருங்கா. எனவே முழங்கி அலையெறிக்கும் கடலை எல்லையாக உடைய இவ்வுலகில் தனக்குவமை இல்லை என்னும் படிக்குக் கொடிகள் நிமிர்ந்தாட அழகுடன் விளங்கும் அம்மண்டபம், மேக மண்டலத்தைத் தாண்டிச் சென்று நுனியில் பிறைநிலவு தோய நிற்பதால் சடை உடைய சிவபெருமானையும், நான்கு மாடங்கள் நிறைந்து தோன்றலால் நான் முகனாகிய பிரமனையும், மேல் எல்லை தேடிப் போனதுபோல் நீண்டு உயர்ந்திருப்பதால் திருமாலையும் ஒக்கும். மேலும் அம்மண்டபம் பார்த்தவர்கள் விரும்புவதால் காமனையும், உலகம் போற்றிப் புகழ்வதால் சச்சந்த மன்னனையும் ஒக்கும். இன்னும் அழகிய மலர்மாலையும் முத்துமாலையும் அணிந்த முலை மாதர் தரும் சுவையமுதும் உண்டவர்கள் எப்படி விட்டுப் பிரிய மாட்டார்களோ அப்படியே அம்மண்டபத்தை அடைந்தவர் அதனை விட்டுப் போக நினையாத அழகுடையதும் ஆகும். இத்தகைய முகில் மேலே தவழ்கின்ற, நிலவைப் போன்ற அழகுடைய மணிகள் பதித்த அம்மாடத்திலே, இட்ட அகிலின் புகை விண் வரை பரவி முகிலை ஊடுருவிச் சென்று விரிந்து பகலைச் செய்யும் கதிர்வீசும் சூரிய மண்டலம் வரையும் சென்று சோதிட்கரது விமானத்திலும் மோதி, செல்லுதற்கரிய வானவர் லோகத்திலும் சென்று இளைப்பாறியது.

### வேறு

**அரைசன தருளினொடு அகன்மனை யவனெய்தி**
**உரைசெலல் வகையினொ டுலகமு மறிவுற**
**முரைசதிர் இமிழிசை முதுநக ரறைகென**
**விரைசெல லிளையரை வியவரின் விடவே 601**

[அரைசன்-அரசன்; முரைசு-முரசு; அதிர்-அதிர்தலால்; வியவர்-ஏவல் செய்வார்; (வியம்-ஏவல்;) இமிழ்-முரசின்கண்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**விடுகணை விசையொடு வெருவரு தகையவர்**
**படுபணை யவருறை பதியது குறுகி**
**நெடுமதி யகடுற நிழல்தவழ் கொடியுயர்**
**கடிநக ரிடிமுர சறைமின மெனவே** 602

[வெருவரு-அஞ்சத்தக்க; தகையவர்-ஏவலாளர்; படுபணையவர்-ஒலித்தலையுடைய முரசறைபவர்; அகடுஉற-நடுஇடத்தைப் பொருந்த; நிழல்-ஒளி; அறைமினம்-அறையுங்கள்.]

**மங்கல வணியினர் மலர்கதிர் மதியன**
**புங்கவன் அறநெறி பொலிவொடு மலிகென**
**அங்கதிர் மணிநகை யலமரு முலைவளர்**
**கொங்கணி குழலவள் கோடணை யறைவாம்** 603

[மங்கல அணியினர்-வெள்ளணி யணிந்தவர்; புங்கவன்-அருகன்; பொலிவு-வளர்ச்சி; மலிக-மிகுக; அலமரும்-அசையும்; கோடணை-முழக்கம்.]

அரசனது விருப்பத்தைப் பெற்றுச் சீதத்தன் தன் வீட்டை அடைந்து, உலகமெல்லாம் அறிய இம் மணவிழாவினைச் செய்யும் ஆசையினால், நடுப்பகுதி நடுங்க அடிப்பதால் இசை ஒலி எழுப்பும் முரசினை இப்புகழ் நகரில் எங்கும் அறைக என்று சொல்லி, விரைந்து செல்லும் ஏவலிளையவரை, முரசடிப்போரிடம் போக விட; நெஞ்சில் அச்சத்தை உண்டாக்கும் தோற்றமுடைய அவரும்; வில்லில் இருந்து விடுபட்ட அம்புபோல் விரைந்து சென்று முரசடிப்போர் வாழும் பகுதியை அடைந்து, நெடுவானில் ஒளிவிடும் நிலவின் நடு இடத்தைத் தொட்டு ஒளிவீசிப்பிரகாசிக்கும் உயர்ந்து நீண்ட கொடிகள் உடைய அழகு நகரில் இடிபோல் முரசறைந்து முழக்குங்கள் என்று கூற; மங்கல அணி புனைந்தோராகிய முரசறைவோர், மலரும் ஞாயிறும் திங்களும் போன்ற அருகப் பெருமானின் அறநெறி தழைத்துப் பெருகுவதாக என்று முதற்கண் வாழ்த்துக் கூறிப் பின் அழகிய ஒளி வீசும், முத்தும் மணியும் தவழ்கின்ற மென்முலையையும், மலர்க் கூந்தலையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உடைய தத்தையின் சுயம்வரத்தை அறிவித்து முழக்கி யதைச் சொல்லுவோம்.

## வேறு

வான்றரு வளத்த தாகி வையகம் பிணியிற் றீர்க
தேன்றரு கிளவி யாருங் கற்பினில் திரித லின்றி
ஊன்றுக வூழி தோறு முலகினுண் மாந்த ரெல்லாம்
ஈன்றவர் வயத்த ராகி யில்லறம் புணர்க நாளும் 604

[வான் தரு வளம்-மழை தருகின்ற வளப்பம்; தேன் தருகிளவி-தேனைப் போன்ற இனிய சொல்; திரிதலின்றி-மாறு படாமல்; ஊன்றுக-நிலை பெறுக; வயத்தராகி-அடங்கினவர்களாகி.]

தவம்புரிந் தடக்கி நோற்குந் தத்துவர்த் தலைப்பட் டோம்பிப்
பவம்பரிக எமக்கு மென்று பணிந்தவ ருவப்ப ஈயின்
அவம்புரிந் துடம்பு நீங்கா தருந்தவ முயன்மின் யாரும்
சிவம்புரி நெறியைச் சேரச் செப்புமிப் பொருளுங் கேண்மின் 605

[அடக்கி-ஐம்புலன்களையும் அடக்கி; தத்துவர்-உண்மை யறிவுடையவர்; தலைப்பட்டு-எதிர்ப் பட்டு; பவம்-பிறவி; பரிக-கெடுக; அவம்-வீணான தொழில்; சிவம்-நன்மை; ஈயின்-கொடுங்கள்.]

அம்மல ரனிச்சத்து அம்போது அல்லியோடு அணியி னொந்து
விம்முறு நுசுப்பு நைய வீற்றிருந் திணங்கு சேர்ந்து
வெம்முலைப் பரவை யல்குல் மிடைமணிக் கலாபம் வேய்ந்தோட்
செம்மலர்த் திருவின் சாயல் தேமொழி தத்தை யென்பாள் 606

[அம்-அழகிய; அணி-மற்றைய ஆபரணங்கள்; நைய-வருந்தும்படி.]



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


''வானம் பொழிய பூமி விளைந்து வளம் நிறைய உலகம் எல்லாம் பிணித்துயர் நீங்குக; தேன்போல் இனிக்கும் மொழிபேசும் மங்கையரும் கற்புநலம் கெடாது வாழ்க; ஊழிதோறும் உலகத்து மாந்தர் எல்லாம் பெற்றோர் சொல்கேட்பவராய் நாளும் இல்லறம் நடத்துக; தவம் செய்யப் புகுந்து ஐம்புலன்களையும் அடக்கி மெய்யறிவு பெற நோன்பிருக்கும் மேலோரைச் சென்றடைந்து வழிபட்டு, எம்பிறவித் துயர் போக்குக என்று பணிந்து, அவர் மகிழ வேண்டியவற்றைக் கொடுமின்! யாரும் பயனற்ற வழியில் சென்று உடலை விடாமல், நன்மை விளையும் மார்க்கத்திலே நிலைக்க அவ்வுடம்பைக் கொண்டே அருந்தவம் மேற்கொள்ள முயற்சி செய்யுமின். மேலும் கூறும் இப்பொருளையும் கேண்மின்: மெல்லிய அனிச்ச மலரைக் காம்பு களையாது அப்படியே அணியினும், நொந்து வாடும் இடை மேலும் வருந்த அழகுத் தெய்வம் குடி கொண்டிருக்கும் இன்பூட்டும் முலையினையும், பரந்த அல்குலையும், மணிகள் பதித்த மேகலையையும், மூங்கில் போன்ற தோளினையும், செந்தாமரைப் பூவில் வாழும் திருமகளையும் போன்ற அழகினையும், உடைய தேன்போல் இனிய மொழிபேசும் தத்தை என்னும் பெயரினாள்.

மற்றவ டந்தை நாய்கன் வண்கைச்சீ தத்த னென்பான்
கொற்றவன் குலத்தின் வந்தான் கூறிய பொருளி தாகும்
முற்றவ முடைய ளாகி மூரிநூற் கலைக ளெல்லாம்
கற்றவள் கணங்கொ ணல்யா ழனங்கனைக் கனிக்கு
நீராள் 607

[நூற்கலைகள்-இசை நூலிற் கூறப்பட்ட கலைகள்: கணம்-இசைத் தொகுதி; யாழ்-வீணையால்; கனிக்கும் - உருக்கும்; அனங்கன் - இசையறிவிற் சிறந்தவன்; மூரி-பெருமை.]

தீந்தொடை மகர வீணைத் தெள்விளி யெடுப்பித் தேற்றிப்
பூந்தொடி யரிவை தன்னிற் புலமிகுத் துடைய நம்பிக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**ஈந்திடு மிறைவ ராதி மூவகைக் குலத்து ளார்க்கும்**
**வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை தாதை யென்றான்**

[தொடை-நரம்பு; தேற்றி-எல்லார்க்கும் தெளிவித்து; அரிவை தன்னின்-காந்தருவதத்தையைக் காட்டிலும்; புலம்-அறிவு; நம்பிக்கு-சிறந்த ஒருவனுக்கு.]

**மண்ணக மடந்தை யாக மார்புற முயங்கி நின்ற**
**அண்ணலை யாதி யாக வருங்கடி நகரை வாழ்த்தி**
**விண்ணக முழக்கி னேய்ப்ப வீதிதொ றெருக்கி யெங்கும்**
**கண்ணொளிர் கடிப்பி னோச்சிக் கடிமுர சறைந்த**
**காலை 609**

[அண்ணல் - கட்டியங்காரன்; விண்ணக முழக்கு-மேகத்தின் முழக்கம்: எருக்கி-தாக்கி; கடிப்பு-குறுந்தடி; கண்-முரசின் கண் (கருப்பு வட்டமுள்ள நடு இடம்) ஓச்சி-வீசி.]

அவளுடைய தந்தை வணிகனாகிய வள்ளல் சீதத்தன் என்பான், அரசனாகிய கலுழவேகன் குலத்துடன் வந்த அவன் கூறிய மொழி இதுவாகும்: முற்பிறப்பில் செய்த நல்வினைகள் நிறைந்தவளாகிய அவள், பெருமைமிகு இசை நூற்களில் கரை கண்டு தேர்ந்தவள்; இன்னிசைப் பண் எழுப்பும் யாழினால் காமனையும் கனிவிக்கும் இயல்பினாள். இன்னிசை மிழற்றும் நரம்புகள் இணைத்த மகரயாழினை மீட்டி, நல்லிசை எழுப்புவதில், பொன் பூவளையல் அணிந்த தத்தையைக் காட்டிலும் அறிவிற் சிறந்த அறிவுடைய ஒருவனுக்கு, அவன் அரசன் முதல் மூவகைக் குலம் வரை உடைய எவ்வகுப்பைச் சேர்ந்தவனாயினும் சரி மணம் முடித்துத் தருவான்; பகையரசரை வருத்தும் ஊன் ஒழுகும் வேல் போன்று கண்டவரை வருத்தும் கண்ணும் அழகு அணி மணிகள் அணிந்தவளுமாகிய தத்தையுடைய தந்தையின் ஆணை இது'' என்று முரசறைந்தான். மண்மகளின் மார்பை, மார்புறத் தழுவி நின்ற புகழ் உடைய மன்னன் கட்டியங்காரனை முதலாகச் சொல்லிப் பின் அழகு நகரை வாழ்த்தி,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


விண்முகிலின் இடிமுழக்கம் போல் தெருத்தோறும் ஒலியெழுப்பி, எங்கும் கேட்க, முரசின் கண் வருந்தக் குறுந்தடி வீசி அடித்து மணமுரசின் மங்கல ஓசை எழுப்பிய போது,

**வணக்கருந் தானை மன்னர் மத்தகம் பிளந்து வாய்த்த**
**நிணக்கொழுங் குருதி வாட்கை நிலம்புடை பெயருக்கு மாற்றல்**
**அணைப்பருங் களிகொள் வேழத் தத்தின புரத்து வேந்தன்**
**கணைக்கவி னழித்த வுண்கட் கன்னியைக் கருதி வந்தான்**

[மத்தகம்-யானையின் நெற்றி; வாய்த்த-தப்பாத அணைப்பரும் களி - தடுத்தற்கரிய மதம்; வேழத்து-யானையையுடைய.]

**சிதைப்பருஞ் சீற்றத் துப்பிற் செய்கழ னரல வீக்கி**
**மதக்களி றடர்த்துக் குன்ற மணிவட்டி னுருட்டு மாற்றற்**
**கதக்களி யொளிறு வைவேற் காம்பிலிக் காவன் மன்னன்**
**பதைப்பரும் பரும யானைப் பாலமா குமரன் வந்தான் 611**

[சீற்றத்துப்பின் - கோபத்தையுடைய வன்மையால்; செய்கழல்-தொழிலழகு பெற்ற வீரக்கழல்; நரல-ஒலிக்கும்படி; வட்டு - விளையாட்டிற்குரிய ஒரு வகை உருண்டை; கதம்-கோபம்.]

**இலைபொர வெழுதி யன்ன வெரிமணிக் கடக முன்கைச்**
**சிலைபொரத் திரண்ட திண்டோட் சில்லரிச் சிலம்பி னார்தம்**
**முலைபொர வுடைந்த தண்டார் மொய்ம்மதுத் துளிப்ப வந்தான்**
**மலைபொர வரிய மார்பின் வாரண வாசி மன்னன் 612**

[சிலை பொர-வில் பொருதலால்; சில்லரிச் சிலம்பு-சிலவாகிய பரல்களையுடைய சிலம்பு; உடைந்த-அலர்ந்த.]

தாள் பணிந்து வணங்காத பகையரசருடைய போர் யானையின் மத்தகத்தைப் பிளந்து எடுத்த குருதியும் சதையும் சேர்ந்து ஒழுகும் வாளேந்திய கையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


மண்ணுலகை மேல் கீழாகப் பெயர்த்தெறியும் ஆற்றலும், தடுத்து நிறுத்துதற்கரிய மதமுடைய யானைப் படையும் உடைய அத்தினபுரியின் மன்னன், அம்பினைப் பழிக்கும் மைதீட்டிய அழகுமிக்க கண்ணுடைய தத்தையை மணக்க எண்ணி வந்தான். பகைவரால் அழித்தொழிக்க முடியாத, வீரக்கழல் ஒலியெழக் கட்டிய, மத யானையை அடக்கும் ஆற்றலும் பெருங்குன்றையும் மணிவட்டிலைப் போல் உருட்டித் தள்ளும் வலிவும் உடைய, சினம் உமிழும் கூரிய வேலேந்திய, போருக்கு அஞ்சிப் பயந்தோடாத பெரிய யானைகளை உடைய, காம்பிலி நாட்டை ஆளும் மன்னனாகிய பாலகுமரன் வந்தான். மேலும், தளிரிலைகள் நிறைத்து எழுதியதைப் போன்று ஒளிவீசும் மணிக் கடகம் அணிந்த முன் கையும் வில்லேந்தித் தழும் படைந்த திரண்டு உருண்ட திண்ணிய தோளும் உடைய வாரணவாசி அரசன், உருள்கின்ற பரல்கள் உடைய சிலம்பணிந்த மங்கையர்களின் முலைகள் மோதுற மலர்ந்து விரிந்த பூமாலைகளில் இருந்து, தேன் மிகுந்து வழிய வந்தான்.

**கதிர்முடி மன்னர் சூழ்ந்து கைதொழு திறைஞ்சி மாலைத்**
**திருமுடி வயிர வில்லாற் சேவடி திளைப்ப வேத்தி**
**அருமுடி யணிந்த கொற்றத் தவந்தியன் முரச மார்ப்ப**
**ஒருபிடி நுசுப்பி னாளை யுள்ளுபு வந்து விட்டான்** 613

[வயிர வில்லால்-வயிரத்தினது ஒளியால்; சேவடி-அவந்தியனுடைய பாதம்; கொற்றம்-வெற்றி; ஒருபிடி அவந்தியன்-அவந்தி நாட்டு மன்னன்; ஒருபிடி நுசுப்பினாள்-ஒருபிடியில் அடங்கும் இடையை யுடையவள்; உள்ளுபு-நினைந்து.]

**வெள்ளணி யணிந்த ஞான்றே வேந்தர்தம் முடியிற் கொண்ட**
**கள்ளணி மாலை மோந்து கனைகழ லிலங்கு நோன்றாட்**
**புள்ளணி கொடியி னானிற் போர்பல தொலைத்த வாற்றல்**
**அள்ளிலை யணிந்த வைவே லயோத்திய ரிறையும் வந்தான்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[பிறந்தநாளில் வெள்ளணி அணிதல் மரபு. கள்-தேன்; கனைகழல்-ஒலிக்கின்ற கழல்; புள்-கருடன்; அள்-செறிவு.]

**நீணிதி வணிக ரீறா நிலமிசை யவர்க ளெல்லாம்**
**வீணையிற் பொருது வெல்வான் விரைவினர் துவன்றி மூதூர்க்**
**கோணமு மறுகு மெல்லாங் குச்சென நிரைத்தம் மாந்தர்**
**மாண்மது நசையின் மொய்த்த மதுகர மீட்ட மொத்தார்**

[வெல்வான்-வெல்ல வேண்டி; துவன்றி-நெருங்கி; கோணம்-குறுந்தெரு; மறுகு-நெடுந்தெரு; குச்சு-பாவாற்றி; நெய்வோர்க்குரிய ஒரு கருவி என்பர்; நசையின் - விருப்பத்தால்; மதுரகம்-தேனீக்கள்; மாண்-சிறந்த.]

ஒளிவீசித் திகழும் மணிமுடி அணிந்த வேந்தர்கள் சுற்றி நின்று கைகூப்பித் தொழுது வணங்கி, மாலையணிந்த தம் தலையில் சூடிய மணிமுடியின் உள்ள வைரக் கற்களின் ஒளி அவன் திருவடிகளில் நீங்காது இருக்கும்படி அவனை இடையறாது வணங்கி வாழ்த்தும், அரிய மணிமுடி புனைந்த வெற்றிமிகு வேந்தர் வேந்தன் அவந்தி நாட்டரசன், முரசொலி முழங்கப் பிடிக்குள் அகப்படும் துடியிடையை உடைய தத்தையை நினைத்து வந்தான். அடுத்து பிறந்த நாளில் வெள்ளை அணி அணிந்த போதிருந்தே அரசர்கள் தங்கள் முடியில் சூடிய தேன் வழியும் மாலையை முகர்ந்து, ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த கால்களையும், கருடக் கொடியுடைய திருமாலைப்போல், பல போரினை வென்ற திறமையையும், கூரிய இலைவடிவுடைய கூர்வேலையும் உடைய அயோத்தி நாட்டு மன்னனும் வந்தான். இப்படி அரசர் முதலாக மிகப் பெருஞ் செல்வம் உடைய வணிகர் ஈறாக மண்ணில் உள்ளவர்கள் எல்லாம், தத்தையை யாழிசைப் போட்டியிலே வெல்வதற்கு விரைந்து வந்து, அப்பெருநகரின் தெருக்களில் குறுக்கிலும் நெடுக்கிலும் ஆக உள்ள எல்லா

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


இடங்களிலும் நெய்யும் நூலிடைப் பாவென நிரைந்து, மிக்க சுவை உடைய தேனை விரும்பி உண்ண மொய்க்கின்ற வண்டினைப் போல் கூடி இருந்தனர்.

**உருக்கமைந் தெரியுஞ் செம்பொ னோரைவில் லகல மாகத்**
**திருக்குழன் மடந்தை செல்லத் திருநிலந் திருத்திப் பின்னர்**
**விரைத்தகு நான நீரால் வெண்ணிறப் பொடியை மாற்றிப்**
**பரப்பினர் படுவண் டார்ப்பப் பன்மலர் பக்க மெல்லாம் 616**

[ஓர் ஐவில் அகலம்-ஓர் ஐந்து விற்கிடை அகலம்: விரைத்தகு-நறுமணத்திற்குத் தக்க.]

**விலைவரம் பறித லில்லா வெண்டுகி லடுத்து வீதி**
**அலர்தலை யனிச்சத் தம்போ தைம்முழ வகல மாகப்**
**பலபடப் பரப்பிப் பாவை மெல்லடிப் பரிவு தீர**
**நிலவரைத் தன்ன னாரை நிதியினால் வறுமை செய்தான்**

[அடுத்து-சேர்த்து; ஐம்முழ அகலம்-ஐந்துமுழ அளவு அகலம்; நிலவரை-நிலத்தின் எல்லையில்; தன் அனார்-தன்னை ஒப்பவர்.]

**மண்டல நிறைந்த மாசின் மதிப்புடை வியாழம் போன்றோர்**
**குண்டல மிலங்க நின்ற கொடியினைக் குறுகித் தோழி**
**விண்டலர் கோதை விம்மும் விரைகுழல் தொழுது நீவிப்**
**பண்டியல் மணங்க ளெல்லாம் பரிவறப் பணிந்து**
**சொன்னாள் 618**

[மண்டலம்-வட்டம்; கோதை-மாலையின் மணம்; விரைகுழல் - இயற்கை மணத்தையுடைய கூந்தலை; பரிவு-துன்பம்.]

**எரிமணி நெற்றி வேய்ந்த விளம்பிறை யிதுகொ லென்னப்**
**புரிமணி சுமந்த பொற்பூண் பொறுக்கலா நுசுப்பிற் பாவை**
**திருமணி வீணைக் குன்றத் திழிந்ததீம் பாலை நீத்தத்து**
**அருமுடி யரச ராழ்வ ரம்மனை யறிவ லென்றாள் 619**

[நுசுப்பு-இடை; பாலை-பாலைப்பண் நீத்தத்து-வெள்ளத்தில்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


உருக்கி ஊற்றிய செம்பொன்னால் ஐந்து விற்கிடை அகலத்திற்கு, அழகிய மலர்க்கூந்தல் உடைய தத்தை செல்வதற்கேற்ப நிலத்தை அழகு படுத்திப் பின்னர் மணமிகு புனுகும் பன்னீரும் தெளித்து, வெண்ணிற வாசனைப் பொடிகள் தூவி, இன்னிசை முழங்கும் வண்டுகள் மொய்க்கும் பலமலர்களைப் பக்கமெல்லாம் பரப்பி வைத்து, விலை மதிக்க முடியாத வெண்பட்டுத் துகில் விரித்து, பரந்த அவ்விடத்தில் பூத்து மலர்ந்த புத்தம் புது அனிச்ச மலரை ஐந்து முழ அகலத்திற்குப் பரப்பி, பொற்பாவை அன்ன தத்தையின் பூமலர்ப் பாதம் வருந்தாது வழி நடந்துவரச் சீதத்தன் செய்த இத்தகைய ஏற்பாடுகளால் அவன் இவ்வுலகில் உள்ள தன்னையொத்த செல்வரை எல்லாம் வறியவர் ஆக்கினான். (இத்தகைய சிறப்புடன் மற்றவர் செய்ய இயலாது என்பதனால் அவரை வறியவர் ஆக்கினான் என்றார்.) மருவற்ற வட்ட வடிவமான முழுநிலவின் அருகே உள்ள வியாழக் கோளினைப் போல், அழகு முகத்தருகே ஒப்பில்லாத ஒரு குண்டலம் ஒளி வீச நின்ற கொடி போன்ற தத்தையை நெருங்கி வந்து வணங்கி நின்று, விரிந்து மலர்ந்த மலர் மாலை அணிந்த கூந்தலைக் கோதி நீவிப் பண்டைக் காலந் தொட்டு நடந்துவரும் மணமுறைகளைப் (பண்டைய மண முறைகளாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என எட்டுவகையின) பற்றித் துயர் நீங்க எடுத்துக் கூறிய தோழியாகிய வீணாபதி, "ஒளிவிடும் மணிகளை இரு புறமும் அமைத்த பிறைநிலவோ என்று வியப்புறும், இருபுறமும் மணிநிறைந்த முத்துவடங்களின் பொற்பூணைச் சுமக்க முடியாது வருந்தும் மெல்லிடை உடைய பாவையே, அழகிய மணிகள் பதித்த மகரயாழாகிய குன்றின் மேலிருந்து சொரியும் இனிய பாலைப் பண்ணாகிய இசை வெள்ளத்திலே நின்னை விரும்பி இங்கே வந்திருக்கின்ற மணிமுடி மன்னர்கள் எல்லாம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அமிழ்ந்து போவார்கள் என்பதையும் நானறிவேன்'' என்றாள்.

மண்ணிட மலிர வெங்கு மாந்தரும் வந்து தொக்கார்
ஒண்ணிற வுரோணி யூர்ந்த வொளிமதி யொண்பொ
னாட்சித்
தெண்ணிற விசும்பி னின்ற தெளிமதி முகத்து நங்கை
கண்ணிய வீணை வாட்போர்க் கலாமின்று
காண்டு மென்றே 620

[மலிர-நிறைய; தொக்கார்-கூடினார்; உரோணி-உரோகிணி என்பதன் சிதைவு; பொன் ஆட்சி-வியாழக்கிழமை; ஆட்சி-கிழமை; கலாம்-கலகம்.]

பசுங்கதிர்க் கடவுள் யோகம் பழிப்பற நுனித்து வல்லான்
விசும்பிவர் கடவு ளொப்பான் விரிச்சிக னறிந்து கூற
அசும்புதே னைங்க லைம்பா லரிவையொ டாய்ந்து நாய்கன்
விசும்புபோன் மாந்த ரார விழுநிதி சிதறி னானே 621

[பசுங்கதிர்க் கடவுள் - சந்திரன்; யோகம் - நூல்; விசும்பிவர் கடவுள் - வியாழபகவான்; ஆர-நிறையக் கொள்ளும்படி; விழுநிதி - சிறந்த செல்வத்தை; விசும்பு-மேகம்.]

வாசநெய் வண்டு மூச மாந்தளிர் விரல்கள் சேப்பப்
பூசிவெள் ளிலோத்தி ரத்தின் பூம்பொருக் கரைத்த
சாந்தின்
காசறு துவலைக் காம ரகிற்றும் பயில மட்டித்து
ஆசறத் திமிர்ந்து மாத ரணிகலந் திகழ்வித் தாரே 622

[வாச நெய்-வாசனையுள்ள நெய்; மூச-மொய்ப்ப; வெள்ளி லோத்திரம்-மணமுள்ள ஒருவகை மலர்; மட்டித்து-பூசி; திமிர்ந்து-பூசி.]

மண்ணகம் எங்கும் நிறைய மக்கள் எல்லாம் வந்து கூடிட, ஒளியும் அழகும் உடைய உரோகிணி நட்சத்திரம் கூடிய திங்கள்பிறையாயின் தெளிந்த திருவுடைய விண்ணில்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



உலவும் வெண்ணிலவு போன்ற அழகு முகமுடைய தத்தையின் யாழிசைப் போட்டியின் முடிவை இன்று நாம் காண்போம் என்று சந்திராபரணம் என்னும் சோதிட நூலைக் கற்றறிந்து தேர்ந்த, விண்ணவர் உலகின் தேவ குருவாகிய வியாழனைப் போன்ற நிமித்திகன் நேரம் அறிந்து சொல்ல, தேன் ஒழுகும் மாலை அணிந்த கூந்தலுடைய பதுமையுடன் சீதத்தன் ஆராய்ந்து, மழை போல் பொழிந்து மக்கள் மனம்நிறையக் கொள்ளும்படி பெருநிதி வழங்கினான். மணமுள்ள நெய்யினை வண்டு வந்து மொய்க்க மாந்தளிர் விரல்கள் சிவக்கப் பூசி, வெள்ளிலோத்திரம் என்னும் மணமலரின் பூந்தாதினை அரைத்த குழம்பினால், குற்றமற்ற குவளை மலரின் அழகிய அகஇதழ் தடிப்பைப்போலக் குறைவறப் பூசி மங்கையர்கள் தத்தையின் அழகுக்கு அழகு செய்தனர்.

**கங்கையின் களிற்றி னுச்சிக் கதிர்மணிக் குடத்தில் தந்த**
**மங்கல வாச நன்னீர் மணிநிறங் கழீஇய தொப்ப**
**நங்கையை நயப்ப வெல்லாம் விரையொடு துவருஞ் சேர்த்தி**
**அங்கர வல்கு லாளை யாட்டினா ரரம்பை யன்னார்** 623

[கழீஇயதொப்ப-சாணை பிடித்ததை ஒப்ப.]

**வெண்ணிற மழையின் மின்போல் வெண்டுகிற் கலாபம் வீக்கிக்**
**கண்ணிற முலையுந் தோளுஞ் சந்தனத் தேய்வை கொட்டித்**
**தொண்ணிறச் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாதஞ் சேர்த்திப்**
**பண்ணிறச் சுரும்பு சூழும் பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்**

[மழை-மேகம்; சந்தனத்தேய்வை-சந்தனக்குழம்பு; கொட்டி-பூசி; பண்நிறச் சுரும்பு-இசையும் நிறமும் கொண்ட வண்டு.]

**எரிமணிச் சுண்ண மின்னு மிருஞ்சிலை முத்தஞ் சேர்த்தித்**
**திருமணி முலையி னெற்றிச் சிறுபுறஞ் செறியத் தீட்டிப்**
**புரிமணி யாகத்து ஐதா விரனுதி கொண்டு பூசி**
**விரிமணி வியப்ப மேனி யொளிவிட்டு வியங்கிற் றன்றே**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[சிலை-இந்திரவில்; நெற்றி-உச்சி; சிறுபுறம்-முதுகு; புரி-முத்தவடம்; ஆகம்-மார்பு; ஐதா-மெல்லி தாக; நுதி-நுனி; மணி-மாணிக்கம்.]

கங்கை நதியில் இருந்து யானைத் தலைமேல் ஏற்றிப் பொற்குடத்தில் கொண்டுவந்த, மங்கலம் பொருந்திய மண நீரைக்கொண்டு, ஒளிபெற வைரத்தைச் சாணை தீட்டுவதுபோல, நலம் ஊட்டுவனவாகிய ஏலம், இலவங்கம், நன்னாரி, சாதிக்காய், சண்பகம், அதிமதுரம், சுரபுன்னை ஆகியவற்றுடன் அகில், சந்தனம், கற்பூரம், கஸ்தூரி, குங்குமம், நாவல், திரிபலை ஆகிய வாசனைக் கலவைகளையும் சேர்த்து, பாம்பின் படம் போன்ற அல்குலுடைய தத்தையை நீராட்டினர். வெண் முகிலில் நெளிகின்ற மின்னலைப்போல் வெண்ணிற ஆடையாலே கூந்தலை இறுக்கிக் கட்டி, கருவட்டம் உடைய அழகு முலையிலும் தோளிலும் சந்தனக் குழம்பைப் பூசித் தெளிந்த நிறமுடைய சிலம்பும், பொன்மணி செய் கிண்கிணியும் பாதத்தில் அணிவித்து இன்னிசைப் பண் மீட்டும் பொன் வண்ண நிறமுடைய வண்டுகள் மொய்க்கும் முல்லைமலர்க் கொண்டையினைத் தலையிலே சூட்டினர். பின்னர் ஒளிவிடும் மணிச் சுண்ணத்தையும், எழில் சிந்தும் பெரிய வானவில் போன்ற முத்து வடத்தையும், அழகு மணி அணிந்த முலைமீதும் முதுகின் மேலுமாக அணிவித்து, அப்பொன்மணிச் சுண்ணத்தையே முத்துச்சரமும் மணிவடமும் அணிந்த மார்பிலும் மெல்லி தாக விரல் நுனியால் பூச, பரவி ஒளிவீசும் மாணிக்க மணியும் வியப்புற மேனி ஒளி சிந்திப் பிரகாசித்தது.

**அருங்கயம் விசும்பிற் பார்க்கு மணிச்சிறு சிரலை யஞ்சி**
**இருங்கயந் துறந்து திங்க ளிடங்கொண்டு கிடந்த நீல**
**நெருங்கிய மணிவிற் காப்ப நீண்டுலாய்ப் பிறழ்வ**
**செங்கேழ்க்**
**கருங்கய லல்ல கண்ணே யெனக்கரி போக்கி னாரே 626**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



[கயம்-குளம்; வில்-இந்திரவில்; உலாய்ப் பிறழ்வ-உலாவிப் பிறழ்கின்றனவாகிய இவை; என-என்று கூறும்படி; கரி-மை; போக்கினார்-எழுதினார்; சிரல்-மீன் கொத்திப் பறவை.]

**பொருந்துபொற் றூண்க ணான்கிற் பொலிந்துநூற் புலவர் செந்நா**
**வருந்தியும் புகழ்த லாகா மரகத மணிசெய் கூடத்**
**திருந்திளை யார்கள் கோல மிந்திர னிருமித் தாற்போற்**
**றிருந்தச்செய் ததற்பி னங்கை திருவிற்கோர் திலக மொத்தாள் 627**

[நான்கின்-நான்கால்; வருந்தியும் - மிகமுயன்றும்; ஆகா-இயலாத; இளையார்கள்-மகளிர்; கோலம்-அலங்காரம்; செய்ததற்பின்-செய்த பின்பு.]

**மண்கனை முழவம் விம்ம வரிவளை துவைப்ப வள்வார்க்**
**கண்களைந் திடியின் வெம்பிக் கடலென முரச மார்ப்ப**
**விண்கனிந் துருகு நீர்மை வெள்வளைத் தோளி போந்தாள்**
**பண்கனிந் துருகு நல்யாழ்ப் படைபொரு துடைக்க லுற்றே**

[வளை-சங்கம்; வள்வார்-சிறியவார்; பொருதுடைக்க-போரிட்டுப் புறங்காண; மண்கனைமுழவம்-முழவு இனிது ஒலிக்க அதன்மேல் பூசிய சாந்து.]

அரிய குளத்தில் விண்ணில் இருந்து தம்மைப் பார்க்கும் அழகிய சிறிய மீன்கொத்திப் பறவைக்குப் பயந்து அப்பெரிய குளத்தை விட்டுப் போய்த் திங்கள் போன்ற முகத்தை இடமாகக் கொண்டுள்ள, நீலமணிப் புருவவில் காக்கக் கிடக்கின்ற, கரிய மீன்கள் அல்ல இவை; கண்களே என்று மற்றவர்கள் கருதும்படி அக்கண்களுக்கு மையெழுதினர். பொருந்த அமைந்த பொற்றூண்கள் நான்கும் பொலிந்திருக்க, நூலறிவிற் சிறந்த புலவர்கள் வருந்தி முயன்றும், புகழமுடியாத மரகத மணியால் செய்த ஒப்பனைக் கூடத்திலே, ஒப்பனைக் கலைவல்ல மகளிர் இருந்து, இந்திரன் அமைத்ததுபோல் ஒப்பனை அலங்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

காரங்கள் அழகுறச் செய்து முடித்தபின் தத்தை அழகுக்கோர் அழகு செய்தது போல் விளங்கினாள். இனிது ஒலிக்க நடுவில் கரிய சாந்து பூசிய முரசு ஒலிக்கவும், சங்குகள் முழங்கவும், சிறிய வார் கொண்ட முரசின் கண் ஒலியெழுப்பி இடிபோல் முழங்கிக் கடல்போல் ஆரவாரிக்கவும், வானவரும் கண்டால் மனமுருகி ஏங்கும் தன்மை உடைய வெண்முத்துவளை யணிந்த தத்தை, பண் நிறைந்து வழியக் கேட்டோர் நெஞ்சுருகி நெகிழத் தக்க வீணைப் படையோடு போரிட்டு வெல்ல வந்தாள்.

**பரந்தொளி யுமிழும் பைம்பொற் கண்ணடி பதாகை தோட்டி**
**விரிந்திருண் மேயுஞ் செம்பொன் விளக்குவெண் முரசு கும்பம்**
**சுரந்தவெண் மதியைச் சூன்று கதிர்கொண்டு தொகுத்த போலும்**
**பொருந்துபொற் கதிர்பெய் கற்றை புணர்கயல் போந்த வன்றே 629**

[பதாகை-பெருங்கொடி; மேயும்-கெடுக்கும்; சூன்று-தோண்டி; கற்றை-தொகுதி; என்றது கவரியை. தோட்டி-அங்குசம்.]

**வென்றவ னகலம் பூட்ட விளங்கொளி மணிசெய் செப்பின்**
**நின்றெரி பசும்பொன் மாலை போந்தது நெறியிற் பின்னர்**
**ஒன்றிய மணிசெய் நல்யாழ் போந்தன வுருவ மாலை**
**தின்றுதே னிசைகள் பாடத் திருநகர்ச் சுடர வன்றே 630**

[அகலம்-மார்பு; உருவம்-யாழின்வடிவை; மாலை-பூமாலை; தேன்-ஒருவகை வண்டு; சுடர்-விளக்கமுற; தின்று-உள்ளடக்கி.]

வந்த அவளோடு, பரந்து ஒளிவீசும் பசும்பொன் கண்ணாடியும் கொடியும் அங்குசமும், ஒளி வீசி இருளைப் போக்கும் செம்பொன் விளக்கும், வெண்முரசும், பூர்ண கும்பமும், அமுதைப் பொழியும் வெண்ணிலவை அகழ்ந்து தோண்டியெடுத்த கதிர்களைக் கொண்டு தொகுத்தது

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போல், பொன்னொளி வீசிப் பொலியும் கவரியும், சேர்ந்த இரு கயல்போன்ற விழிகளும் உடன் வந்தன. இவற்றோடு ஒளி யாழிசையிலே வென்றவன் மார்பில் அணிய, ஒளி விளங்கும் மாணிக்கச் செப்பிலே வைத்த எழில்சிந்தும் பசும்பொன் மாலை முறையோடு வந்தது. பின்னர் பொறுக்கி எடுத்த மாணிக்கக் கற்கள் பதித்த இன்னிசை யாழ் தம் உருவை மாலைகள் மறைக்க, அம்மாலைகளில் உள்ள வண்டுகள் இன்னிசை பாட, அழகு நகர் மேலும் எழில் பெற வந்தன.

## வேறு

ஆரம் துயல்வர அந்துகில் சோர்தர
வீரம் படக்கையை மெய்வழி வீசித்
தேரை நடப்பன போற்குறள் சிந்தினொடு
ஒரு நடந்தன வொண்டொடி முன்னே 631

[துயல்வர-அசைய; இரண்டடி உயரமுள்ளவனைக் குறளன் என்றும், மூன்றடி உயரமுள்ளவனைச் சிந்தன் என்றும் கூறுவது மரபு.]

வட்டச் சூரையர் வார்முலைக் கச்சினர்
பட்டு வீக்கிய வல்குலர் பல்கணை
விட்ட தூணியர் வில்லினர் வாளினர்
ஒட்டி யாயிரத் தோரெண்மர் முன்னினார் 632

[பட்டு-வெண்பட்டு; தூணி-அம்பறாத் தூணி; ஒட்டி-துணிந்து; முன்னினார்-முன் சென்றார்கள்.]

வம்பு வீக்கி வருமுலை யுட்கரந்
தம்பி னொய்யவ ராணுடைத் தானையர்
பைம்பொற் கேடகம் வாளொடு பற்றுபு
செம்பொற் பாவையைச் சேவித்து முன்னினார் 633

[வம்பு-கச்சு; அம்பின் நொய்யவர்-அம்பைக் காட்டிலும் விரைவாகச் செல்லுபவர்; நொய்ம்மை-விரைவு; பற்றுபு-பற்றி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஆணை யாணை யகலுமி னீரென
வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின்
ஆணை யின்றெம தேயென் றணிநகர்
காணுங் காதலிற் கண்ணெருக் குற்றவே 634

[வேணுக்கோலின்-மூங்கிற் கோலினால்; மிடைந்தவர்-நெருங்கினவர்களை; ஒற்றல்-அடித்தல்; தள்ளுதலுமாம். நெருக்குற்ற-நெருங்கின.]

கண்ணி னோடு பிறந்தது காரிகை
வண்ணங் காண்டற்கன் றோவென்று வைதவர்
விண்ணு மண்ணும் விருந்துசெய் தாலொப்ப
எண்ணி னெண்ணிட மின்றி நெருங்கினார் 635

[விண்-விச்சாதர லோகத்தவர்; எண்ணின்-ஆராய்ந்தால்; எண்இடமின்றி - எள்ளுப் போட இடம் இல்லாமல்; வண்ணம்-அழகு.]-

மாலை அசைய மேலாடை சரிய; வீரம் விளங்கக் கையை மெய்வரை வீசித் தேரை நடப்பதுபோல் இரண்டடி உள்ள குறளரும் மூன்றடி உடைய சிந்தரும் முன்னே நடக்க, வட்டத் தலைமுடி உடைய பரத்தையரும், வாரால் வரிந்து கட்டிய முலைக்கச்சினை உடையவரும், வெண்பட்டுத் துகில் அணிந்த அல்குல் உடையவரும், பலவகை அம்புகள் நிறைந்த அம்பறாத் தூணியும், வில்லும் வாளும் உடையவருமாகிய ஆயிரத்தெட்டு மகளிர் வஞ்சினம் கூறித் தத்தையின் முன்னே சென்றனர். கச்சினால் இறுக்கி வளரும் முலையினை உள்ளே மறைத்த, அம்பிலும் விரைந்து செல்லும் ஆண் உடை அணிந்த படையினரும், புதிய பொன்னால் செய்த கேடயத்தையும் வாளையும் கையிலேந்தி, செம்பொன்னால் செய்தமைத்த பொற்பாவை அன்ன தத்தையை வணங்கி முன்னே சென்றனர். அவர்கள் செல்லவும், ஆணை! இது அரசர் ஆணை! விலகி வழி விடுங்கள் என்று மூங்கில் கழியினால் நெருக்கியடித்து வருவோரைக் காவலர் தள்ள, ஆணை இன்றைக்கு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

எங்களுடையதே என்று அவ்வழகிய நகரைக் காண வரும் ஆசையினால் கண்கள் (காண்போர்) நெருங்கி நிறைந்தன. நாம் கண்ணோடு பிறந்தது இக்கட்டழகு மங்கையின் பேரழகைக் காண்பதற்காகவே அல்லவா என்று எண்ணி விண்ணும், மண்ணும் விருந்து கொள்ள ஓரிடத்தில் கூடியதுபோல் எல்லாரும் நோக்கும் இடமெல்லாம் எள் இடவும் இடமின்றி நெருங்கி நிறைந்திருந்தனர்.

## வேறு

**இனஞ்சே ராவாகி யிளையா ருயிரின்மே லெண்ணங் கொள்வான்**
**புனஞ்சேர் கொடிமுல்லை பூம்பவளத் துள்புக்குப் பூத்த போலும்**
**வனஞ்சேர் துவர்ச்செவ்வாய் வாளெயிறுங் கண்மலரும் வனைய லாகாக்**
**கனஞ்சேர் கதிர்முலையுங் கண்டார்கள் வீட்டுலகங் காணார் போலும் 636**

[கொள்வான் - கொள்ளவேண்டி; வனம் - அழகு; வாளெயிறு - ஒளியையுடைய பற்கள்; வனையலாகா-செய்யமுடியாத.]

**மீன்சேர் குழாமனைய மேகலையும் வெம்முலையுங் கூற்றங் கூற்றம்**
**ஊன்சே ருயிருய்யக் கொண்டோடிப் போமின்க ளுரைத்தே மென்று**
**கான்சேர் கமழ்கோதை காறொடர்ந்து கைவிடா தரற்று கின்ற**
**தேன்சேர் திருவடிமேற் கிண்கிணிபொன் ஆவதற்கே தக்க தென்பார் 637**

[மீன் சேர் குழாம் அனைய மேகலை-நட்சத்திரங்களின் கூட்டத்தை ஒத்த மணிகள் கட்டிய மேகலாபரணம்; கூற்றம்-யமன்; ஊன்-தசை; உய்யக்கொண்டு-பிழைக்கப்பெற்று, போமின்கள்-போங்கள்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கள்வாய்ப் பெயப்பட்ட மாலைக் கருங்குழல்கள்
கண்டார் நைய
உள்வாய்ப் பெயப்பட்ட வெம்மதுச்செப் போரிணைமெல்
லாக மீன்ற
புள்வாய் மணிமழலைப் பொற்சிலம்பி இக்கொடியை
யீன்றாள் போலும்
கொள்வா னுலகுக்கோர் கூற்றீன்றாள் அம்மவோ கொடிய
வாறே 638

*[கள்-தேன்; வெம்மை-விருப்பம்; நைய-வருந்த; புள்-அன்னம்.]*

தம் இனத்துடன் சேராமல் இளைஞர் உயிர்மேல் ஆசைகொள்ள எண்ணிக் காட்டிலிருக்கும் கொடிமுல்லைப் பூக்கள் அழகிய பவளத்துக்குள் புகுந்து பூத்ததுபோல், அழகுடைய பவளச் செவ்வாயையும்,ஒளிமிகு முல்லைப்பூப் போன்ற பற்களையும், கண் மலர்களையும் கையால் வளைய முடியாத பருத்த எழில் சிந்தும் அழகிய மார்பை யும் கண்டவர்கள் வீட்டுலகம் காண விரும்பார் போலும்! (வீட்டுலகை வெறுத்து இத்தகைய அழகு நலமுடைய மங்கையருடன் கூடி வாழும் இல்லறத்தையே இவ் வுலகையே விரும்புவர் என்பது கருத்து) விண்மீன் கூட்டமென நிறைந்த மணிகள் ஒளிசெய்யும் மேகலையும் விருப்பூட்டும் மேகலையும் எமன்! எமனேயாகும்!! எனவே உடல் சுமந்த உயிர் பிழைக்க ஓடிப் போய்விடுங்கள், இப்போதே சொல்லி விட்டோம் என்று கூறி, மணம் நிறைந்து வீசுகின்ற மலர்மாலை போன்றவளின் காலைப் பற்றி நீங்காது முழங்குகின்ற, வண்டுகள் மலர் என்று கருதி மொய்க்கின்ற அழகிய கால்களில் அணிந்த கிண்கிணி பொன்னாவதற்கே தக்கது என்பர். (இவள் கர்லில் அணியாக இருத்தல் பொருந்தாது என்பதனால்) தேன் பெய்யும் மலர்மாலை அணிந்த கருங் கூந்தலும், கண்டவர் வருந்தி வாட உள்ளே இன்பூட்டும் மதுபெய்து நிறைந்த, ஒத்த இரு செப்புகள் போல் மெல்லிய மார்பிடைத்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தோன்றிய முலைகளும் பெற்று, அன்னப் பறவையின் வாய் போன்ற அழகிய வாயின் மணிநாவால், மழலைபோல் இனிய மொழி பேசும், பொற்சிலம்பணிந்த கொடி போன்ற இவளைப் பெற்றவள், உலகினை உயிரோடழிப் பதற்கு ஒரு எமனைப் பெற்றாள் போலும்! அம்மாவோ! இதுமிகக் கொடியதே என்றும் சொல்வர்!!

## வேறு

செய்ய தாமரை மேற்றிரு வேகொலோ
வெய்ய நோக்கின்விச் சாதரி யேகொலோ
மையில் வானவர் தம்மக ளேகொலென்
றைய முற்றலர் தார்மன்னர் கூறினார் 639

[திரு-இலக்குமி; விச்சாதரி-வித்தியாதர உலகத்துப் பெண்; மைஇல்-குற்றம் இல்லாத.]

வீணை வென்றிவள் வெம்முலைப் பூந்தடம்
ஆணை தோய்வதல் லாற்பிறன் வெளவுமேற்
கோணைப் போரிற் குளிக்குவ மன்றெனின்
மாண நற்றவஞ் செய்குவ மென்மரும் 640

[வீணைவென்று-யாழ் வாசித்தலில் வென்று; வெளவு மேல்-கொள்ளக் கருதினால்; கோணைப்போர்-மாறுபாட்டையுடைய போர்.]

குலிகச் செப்பன கொம்மை வரிமுலை
நலியு மெம்மையென் பார்நல்ல கண்களால்
வலிய வாங்கியெய் தாளெம்மை வாழ்கலேம்
மெலிய வாவி விடுக்குமற் றென்மரும் 641

[கொம்மை-பெருமை; வலிய வாங்கி-நிரம்ப வலித்து; மெலிய-மெல்லிய, தேய்ந்த; விடுக்கும்-போம்.]

ஊட்டி யன்ன உருக்கரக்கு ஆரடி
நீட்டி மென்மலர் மேல்வந்து நின்னலம்
காட்டி யெம்மைக்கொன் றாயெனக் கைதொழுது
ஓட்டை நெஞ்சின ராயுழல் வார்களும் 642

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


[மலர்மேல் வந்து-நிலத்தின்மீது பரப்பப்பட்ட அனிச்ச மலரின்மீது நடந்து வந்து; நலம்-அழகு; கொன்றாய்-வருத்தினாய்.]

"சிவந்த தாமரை மலர்மேல் வாழும் திருமகளோ? இல்லை இவள் கொடிய பார்வை உடைய வித்தியாதர நாட்டுப் பெண்ணோ! குற்றமற்ற வானுலக மங்கையோ!"—என்று பலவாறு ஐயம் உற்று மலர் மாலை அணிந்த மன்னர்கள் (தமக்குள்) கூறிக்கொள்வர். "யாழிலே இவளை வென்று, இவளுடைய இன்பூட்டும் பூமார்பின்மேல் நாம் தோய்வது அல்லாமல், வேறு எவனும் கைக்கொள்ள நேரின், இது ஆணை, நாம் அவனுடன் மாறுபட்டுப் போரிலே குதிப்போம். அதுவும் இல்லாவிட்டால் இவளை அடைய வேண்டிப் பெருந் தவம் செய்ய முயலுவோம்"—என்பவர்களும்; "சிவந்த செப்புப் போன்ற பெருத்த கச்சு வரிந்து கட்டிய முலைகள் எம்மை வருத்துகின்றனவே" என்பாரும், "நல்ல கண்களாகிய கணைகளை எய்து எம்மைத் துன்புறுத்தினாள்; இனி வாழ மாட்டோம். எனவே உடல் மெலிந்து உயிர் விடுகிறோம்" என்பாரும்; "உருக்கிய அரக்கினை ஊட்டியது போன்ற சிவந்த நிறமுடைய அடிகளை எடுத்து வைத்து அனிச்ச மென்மலர்கள் மேல் நடந்து வந்து, நின் அழகினைக் காட்டி எம்உயிர் வருந்தச் செய்தாய்" என்று கைதொழுது அறிவு மயங்கிய நெஞ்சினராய் உழல்பவர்களும்,

## வேறு

**திங்கண் மதிமுகத்த சேலும் பவளமுஞ் சிலையு முத்தும்**
**கொங்குண் குழலாண்மெல் லாகத்த கோங்கரும்புங் கொழிப்பில் பொன்னும்**
**அங்கை குழியா வரக்கீத்த செந்தளிர்நெய் தோய்த்த போலும்**
**மங்கை மலரடியுந் தாமரையே யாழியே மணங்கே யென்பார் 643**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

*[திங்கள்-இங்கே பிறை; பவளம்-வாய்; சிலை-வில்; அங்கை-உள்ளங்கை; குழியா-குழியாதனவாய்; அரக்கு ஈத்த-செந்நிறம் ஊட்டப்பட்ட.]*

**பொன்மகரம் வாய்போழ்ந்த முத்தநூல் தோள்யாப்பிற் பொலிந்த வாறும்**
**மின்மகரங் கூத்தாடி வில்லிட்டு இருங்குழைக் கீழிலங்கு மாறும்**
**மன்மகர வெல்கொடியான் மால்கொள்ளக் கால்கொண்ட முலையி னாளை**
**என்னரம்பை யென்னாவா றென்பார் இமைக்குங்கண் இவையோ வென்பார் 644**

*[மகரம்-சுறா மீன் வடிவாகச் செய்யப்பட்ட ஆபரணம்; போழ்ந்த-பிளந்த; வில்லிட்டு-ஒளியை வீசி; மகரவெல் கொடியான்-காமன்; மால்-மயக்கம்; கால்கொண்ட-இடங்கொண்ட.]*

**கோள்வயிர நீளருவிக் குன்றிவர்ந்த செஞ்சுடர்போற் கொலைவேன் மன்னர்**
**நீள்வயிர வெண்மருப்பி னீலக் களிற்றின்மே னிரைத்தார் பொங்கத்**
**தோள்வயிரந் தோன்றத் தொழுவார் அழுதுனைவார் தொக்கோர் கோடி**
**வாள்வயிரம் விற்கு மடநோக்கி யார்கொலோ பெறுவா ரென்பார் 645**

*[கோள்-கொள்கை; குன்று-உதயகிரி; செஞ்சுடர்-சூரியன்.]*

வெண்ணிலவு போன்ற முகத்தில் உள்ள கண்ணும், வாயும், புருவமும், பற்களும், கெண்டைமீனையும், பவளத் துண்டையும், வளைந்த வில்லையும், சேர்ந்த முத்துக் களையும் ஒக்கும். தேன் மணம் கமழும் கூந்த லுடைய இவளின் மெல்லுடலில் உள்ள முலையும் அதில் படர்ந்த தேமலும், கோங்கின் அரும்புகளையும், பொன் னையும் ஒக்கும். உள்ளங்கைகள் குழிவற்றுச் செந்நிறம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பெய்த, நெய்தோய்ந்த தளிரை ஒக்கும். மங்கை இவளின் மலரடிகளோ தாமரைப் பூவேயாகும். எனவே இவற்றில் எம்மை வருத்துவது எதுவென்று தெரியவில்லையே என்ப வரும்; மகரமீன் வாய் உமிழ்ந்த முத்துவடங்கள் பொன் போன்ற தோளில் பொலிய, மின் போன்ற மகரக்குழை அசைந்தாடி ஒளி வீசிக் காதணியின் கீழ் விளங்கும் படியும், பெருமை தரும் மகரமீன் கொடியுடை யோனாகிய காமனும் கண்டு ஆசை கொள்ளத்தக்க அழகிய முலை உடையவளும் ஆகிய இவளை வானுலக மங்கை அரம்பை என்று கூறாதது என்னே! (தேவ மகளிர்க்கு கண்ணிமைக்காது—இவளுக்குக் கண்ணிமைப்ப தால் தேவருலக மங்கை அரம்பை என்று சொல்லவில்லை என்பவர்களுக்கு) இமைக்கும் கண்கள் இவைகளோ என்பாரும், வயிர மணிக்கூட்டம் நீள அருவி போல் பெருக் கெடுக்கும் குன்றின் உச்சியில் தோன்றிய செழுஞாயிறு போல், கொல்லும் வேலேந்திய மன்னர்கள், நீண்ட வயிரப் பூணிட்ட வெள்ளைத் தந்தத்தை உடைய கரிய யானை யின்மேல், வாச மலர்மாலை பொங்கவும், தோளில் அணிந்த வயிரம் ஒளிவீசி விளங்கவும், தத்தையை அழுது தொழுது வணங்குவாரும் ஆக அங்குக்கூடியிருந்த ஒருகோடி மன்னரில், வாளின் ஒளியை வெட்கச் செய்யும் கண்ணோக் குடைய இவளை அடையும் தவப்பயன் யார் பெற்றார் களோ என்பாரும்,

**பைம்பொ னிமிர்கொடி பாவை வனப்பென்னுந் தளிரை**
**யீன்று**
**செம்பொன் மலர்ந்திளையார் கண்ணெனன்னுஞ் சீர்மணிவண்**
**டுழலச் சில்லென்று**
**அம்பொற் சிலம்பரற்ற வன்னம்போல் மெல்லவே**
**யொதுங்கி யம்பூஞ்**
**செம்பொற் புரிசை யடைந்தாள்செங் தாமரைமேற் றிருவொ**
**டொப்பாள் 646**

[வனப்பு-பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகு; மணிவண்டு-நீலமணியைப் போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வண்டு; ஒதுங்கி-நடந்து; புரிசை-மண்டபத்தின் மதில்.]

பட்டியன்ற கண்டத் திரைவளைத்துப் பன்மலர்நன் மாலை
நாற்றி
விட்டகலாச் சாந்தி னிலமெழுகி மென்மலர்கள் சிதறித்
தூமம்
இட்டிளைய ரேத்த விமையார் மடமகள்போ லிருந்து நல்யாழ்
தொட்டெழீஇப் பண்ணெறிந்தாள் கின்னரரு மெய்ம்மறந்து
சோர்ந்தா ரன்றே 647

[பட்டு இயன்ற-பட்டினாற் செய்யப்பட்ட: கண்டத் திரை-பல நிறத்தால் கூறுபட்ட திரை; நாற்றி-தொங்கவிட்டு; எழீஇ-எழுப்பி; பண்-பண்ணை யுடைய நரம்பு; கின்னரர்-தேவகணத்துள் ஒரு வகையினர்; இசையறிவிற் சிறந்தோர்.]

புதிய பொன்னால் செய்தமைத்த கொடிபோல வளர்ந்து, அழகாகிய தளிர்கள் துளிர்த்துப் பொன்பூவாக எழில் விரிந்து மலர, அதை இளைஞர் கண்கள் என்னும் அழகிய கருவண்டுகள் சுற்றிச் சுழல அழகிய மணிப்பரல்கள் இட்ட சிலம்பு ஒலி எழுப்ப, அன்னம் போல் மென்நடை பழகி அழகு மிகுந்து விளங்கும் பொன் மதிலின் வாயிலை அடைந்த பாவை அவள், செந்தாமரை மலரில் வாழுகின்ற திருமகளைப் போன்றிருந்தாள். பட்டினால் செய்யப் பட்ட பலநிறத் திரைகள் இட்டு, பலவண்ண மலர்களால் ஆகிய மாலைகளைத் தூக்கி நிறுத்தி, மணம்விட்டு நீங்காத சாந்தினால் நிலத்தை மெழுகி மெல்லிய மலர்களைத் தூவி, அகிற்புகையின் வாசனையிட்டு, இளமங்கையர்கள் புகழ, கண்ணிமைக்காத வானுலக இளமங்கை போலமர்ந்து, நல்லிசை பொழியும் யாழினை எடுத்து மீட்டி இன்னிசை பொழிய, அதுகேட்ட கின்னரரும் கிம்புருடரும் தம்மை மறந்து மெய் சோர்ந்தனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண்டு
அன்புகொண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை
என்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத்
தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில் 648

[புறம்புதைய-முதுகை மறைத்தலால்; அலமந்து-மனம் சுழன்று; என்பு உருகு குரல்-என்பும் உருகுதற்குக் காரணமான குரலால்; அழைஇ-அழைத்து; உகுத்து-காஞ்சித் தாதை உதிர்த்து; குயில்-ஆண்குயில்.]

தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்ததனைக்
கண்டுஆனா மடப்பெடை கிளியெனப்போய்க் கையகல
நுண்டூவி யிளஞ்சேவ னோக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில் 649

[தாதுஆடி-தாதை அளைந்து; தன்நிறம்-கரிய நிறம்; கரத்தனை-மறைந்த சேவலை; ஆனா-அன்பு அமையாத; நோக்கு-பார்வை; விளி-அழைத்தல்; தூவி-இறகு.]

குறுத்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி
வெறுத்தாங்கே மடப்பெடை விழைவகன்று நடப்பதனை
மறுத்தாங்கே சிறகுளர்ந்து மகிழ்வானாக் கொளத்தேற்றி
உறுப்பினா லடிபணியத் தலைவந்த திளவேனில் 650

[குறுத்தாள்-வலித்தல் விகாரம்; விழைவு அகன்று-அன்பு நீங்கி; ஆனாக்கொள - அமையாமல் கொள்ளும்படி; தேற்றி-தான் ஆண் குயிலென்பதைத் தெளியச் செய்து; உளர்ந்து-கோதி.]

சிறிய காஞ்சி மலர்களின் பூந்தாது தன் முதுகில் படிய, அதனைக் கண்டு தன்னைக் கிளியென்று நினைத்து, காதல் கொண்ட தன் குயில் பெடை அங்கிருந்து மனம் மருகிச் செல்ல, அப்படிச் செல்கின்ற அதை என்புருகும் தன் இனிய

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

குரலாலே அழைத்து, ஆண்குயில் தன் கரிய சிறகை விரித்து அசைத்து அதன்மேல் படிந்த பூந்தாதினை உதிர்த்து விட்டுப்பின் அதனைத் தழுவிக் கொள்ளும் இளவேனிற் பருவம் மெல்ல வந்தது. குளிர் தரும் காஞ்சி மலர்களின் பூந்தாது சிந்தத் தன் கரிய நிறம் மறைந்ததைக் கண்டு புரிந்து கொள்ள முடியாத குயில்பெடை அதைக் கிளி யென்று நினைத்து அதைவிட்டுப் போக, மெல்லிய சிறகுடைய குயில்சேவல் காதல் நோக்குணர்த்த தன் இனிய குரலால் பலமுறை அழைத்து, தன்சிறகால் தன் துணையினைத் தழுவிக் கொள்ளும் இளவேனிற் பருவம் தலைவந்தது. இன்னும் குறுங்கால்களை உடைய ஆண் குயில், நிறைந்த காஞ்சி மலர்ப் பூந்தாதிலே தன்னுடல் மறைத்ததால் அதைக் கிளியென்று எண்ணி, அங்கு வந்த குயிற்பேடை வெறுத்தொதுக்கிச் செல்ல அப்படிச் செல்கின்ற தன் பிணையைத் தான் கிளியல்ல குயிலே என்று தெளிவிக்க, தன் சிறகின் மேல் படிந்த பூந்தாதினை உதிர்த்து, மகிழ்ச்சி கொள்ளத்தேற்றித் தன் காதலுக்குத் தலைவணங்கச் செய்யும் இளவேனில் மெல்ல வந்தது.

## வேறு

**தளையவிழ் கோதை பாடித் தானமர்ந் திருப்பத் தோழி**
**விளைமதுக் கண்ணி வீணா பதியெனும் பேடி வேற்கண்**
**இளையவள் பாட வீர ரெழால்வகை தொடங்க லன்றேல்**
**வளையவ ளெழாலின் மைந்தர் பாடுக வல்லை யென்றாள்**

*[பாட - மிடற்றுப்பாடலைப் பாட; எழால்வகை- யாழின் கூறுபாட்டை; எழாலின்-யாழ்வாசித் தலைப் போல.]*

## வேறு

**வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம்**
**வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி**
**நோயே முலை சுமப்ப தென்றார்க் கருகிருந்தார்**
**ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்** 652
**எரிமணிப்பூண் மேகலையாள் பேடியோ வென்றார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[வேய்-மூங்கில்; கொடும்புருவம்-வளைந்த புருவம்; மாமேனி-மாமை நிறத்தையுடைய மேனி; நோய்-வருத்தம்; ஏ ஏ-இசை நிறை; எரி-ஒளிரும்.]

**பலிகொண்டு பேராத பாச மிவள்கண்**
**ஒலிகொண் டுயிருண்ணுங் கூற்றமென்று எல்லே**
**கலிகொண்டு தேவர் முலைகரந்து வைத்தார்**
**இலைகொண்ட பூணினீ ரென்றெழினி சேர்ந்தாள்**
**இலங்குபொற் கிண்கிணியா ணக்கெழினி சேர்ந்தாள் 653**

[பேராத-நீங்காத; எல்லே-வெளியே, இரக்கக் குறிப்பு இடைச் சொல்லுமாம். இலைகொண்ட-இலையின் வடிவத்தைக் கொண்ட; கிண்கிணியாள்-காந்தருவதத்தை; நக்கு-சிரித்து; எழினி-திரை; கலி-ஆரவாரம்.]

முறுக்கவிழ்ந்த பூமாலை அணிந்த தத்தை அவை வணக்கம் பாடி மண்டபத்தின் கண்ணே வீற்றிருக்க, அவள் தோழியாகிய தேன்வழியும் மலர்க்கண்ணி யணிந்த வீணாபதியென்னும் பேடி, வேற்கண் உடைய தத்தை பாட அதற்கேற்றபடி வீரர்கள் யாழிசை மீட்டத் தொடங்குக. அது முடியாவிட்டால் தத்தையினைப்போல் விரைந்தாவது பாடுக என்றாள். வீணாபதி இவ்விதம் கூறவும், அங்கிருந்த மன்னர்கள், ''மூங்கிலோ இவளது திரண்டு மெலிந்த தோள்கள்! வளைந்த வில்லோ கொல்லும் புருவம்! வாயென்ன வளமிக்க பவளத்துண்டோ! பட்டு மாந்தளிரோ மெல்லுடலம்! இவட்கு முலை சுமத்தல் நோயோ என்று வினவவும், அருகிருந்தோரும் முலை காணாமையால் இவள் என்ன பேடியோ என்று ஐயம் உற்றார். இன்னும் சிலர் ஒளிமணிப்பூண் இழை அணிந்து வந்த தத்தையுடன் வந்தாள் ஒரு பேடி என்றனர் அவள் இவள் தானோ என்றனர்! உயிரைக் கொல்லுகின்ற தன்மை நீங்காத காலபாசம் இவள் கண்கள்! இன்னும் தழைத்துப் பெருகி உயிரைக் கொள்ளை கொள்ளும் கூற்றம் என்று கலங்கியல்லவா பிரமன் என்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மார்பைக் கண்ணுக்குத் தோன்றாதபடி மறைத்து வைத்தான், இலை வடிவுடைய மணி இழைகள் அணிந்த வரே'' என்று கூறி வீணாபதி திரையைச் சேர்ந்தாள். அழகிய பொற் கிண்கிணி அணிந்த தத்தையும் அக்கனி கேட்டு நக்குத்திரை மறைவை அடைந்தாள்.

## வேறு

**நுண்டுகில் அகலல்குல் நொசித்த வெம்முலை**
**உண்டிவ ணுசுப்பென வுரைப்பி னல்லது**
**கண்டறி கிலாவிடைக் காம வல்லியாழ்**
**கொண்டவர் குழாத்திடைக் கொடியி னொல்கினாள் 654**

[நுண் துகில்-நுண்ணிய இழையாலான ஆடை; நுசுப்பு-இடை: நொசித்த-வருந்திய.]

**பளிக்கொளி மணிச்சுவ ரெழினி பையவே**
**கிளிச்சொலி னினியவர் நீக்கக் கிண்கிணி**
**ஒளிக்குமின் றாடவ ருயிர்க ளென்னநொந்**
**தளித்தவை யிரங்கச்சென் றணையி லேறினாள் 655**

[சுவரெழினி-சுவரை மறைத்த திரை: பை-மெல்ல; இரங்க-ஒலிப்ப, வருந்த என்று வேறொரு பொருளும் பொருந்தும்.]

**உறைகழித் திலங்குவா ளுடற்றுங் கண்ணினாள்**
**மறையொளி மணிச்சுவ ரிடையிட் டித்தலை**
**இறைவளை யாழ்தழீஇ யிருப்ப வத்தலைக்**
**கறைகெழு வேலினார் கண்ணி தீந்தவே 656**

[வாள் உடற்றும்-வாளோடு மாறுபடும்; மறை-மறைகின்ற: இறை-கை: வளையாழ்தழீஇ-வளைந்த கோட்டையுடைய யாழைத் தழுவி; கறை-இரத்தம்; தீந்த-கரிந்தன.]

**சிலைத்தொழிற் சிறுநுத றெய்வப் பாவைபோற்**
**கலைத்தொழில் படவெழீஇப் பாடி னாள்கனிந்து**
**இலைப்பொழில் குரங்கின வீன்ற தூண்தளிர்**
**நிலத்திடைப் பறவைமெய்ம் மறந்து வீழ்ந்தவே 657**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[சிலைத் தொழில்-வில்லின் தொழிலையுடைய; எழீஇ-யாழை வாசித்து; குரங்கின-வளைந்தன; பறவை-கின்னரப் பறவை: இஃது இசையறிவிற் சிறந்தது.]

மெல்லிய பட்டுத்துகில் அணிந்த விரிந்த அல்குலும், துன்பத்தைத் (பிறருக்கு) தரும் மார்புகளும், இடை உள்ளது என்று சொன்னதைத் தவிரக் கண்ணால் கண்டறியாத மென்மை வாய்ந்த இடை உடைய காமவல்லிக் கொடி போன்ற தத்தை யாழொடு தோழியர்களிடைப் புகுந்து சென்றாள். பளிங்குபோல் ஒளிவீசும் மணியிழைத்த சுவரை மறைத்திருந்த திரையைக் கிளிமொழி பேசும் தோழிமார்கள் மெல்ல நீக்க, கிண்கிணிச் சிலம்புகள் இன்று ஆடவர் உயிர்போகும் என்று வருந்தி ஒலிக்க, அவை அப்படிப் போகாமல் இருக்க அருளுவதுபோல் தத்தை இருக்கையில் சென்று அமர்ந்தாள். உறையிலிருந்து எடுத்த வாளினைப்போல் ஒளி விளங்கும் கண்ணுடைய தத்தை தன்னை மறைக்க அமைத்த பளிங்குச் சுவர் நடுவிலே இருக்க, இப்பால் உட்புறம் வளைந்த யாழினைக் கையிலேந்தி அமர்ந்திருக்க, அப்பால் குழுமியிருந்த பகைவரை உயிரை வருத்திய இரத்தக்கறை தோய்ந்த வேலேந்திய மன்னர்களின் முடித்தலைச் சூடிய கண்ணிகள் காமநோயால் கருகிவாடின. வில் வளைத்தது போன்ற மெல்லிய புருவநெற்றி உடைய கொல்லிப் பாவையினைப் போன்ற தத்தை இசைநலம் பொருந்த யாழினை மீட்டிப் பாடவும் இலைமலர்ப் பொழில்கள் உருகிக் குழைந்தன; தூண்கள் தளிர்த்தன; கின்னர மிதுனம் என்னும் பறவைகள் தம்மை மறந்து நிலத்திலே வீழ்ந்தன.

## வேறு

**கருங்கொடிப் புருவ மேறா கயனெடுங் கண்ணும் ஆடா**
**அருங்கடி மிடறும் விம்மா தணிமணி யெயிறுந் தோன்றா**
**இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ**
**நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[கொடி-ஒழுங்கு; விம்மாது-வீங்காது; கடி-விளக்க முடைய; நவின்றதோ-படியதோ.]

## வேறு

இசைத்திறத் தனங்கனே யனைய நீரினார்
வசைத்திற மிலாதவர் வான்பொன் யாழெழீஇ
விசைத்தவர் பாடலின் வெருவிப் புள்ளெலாம்
அசிப்பபோன் றிருவிசும் படைந்த வென்பவே 659

[அனங்கன்-மன்மதன்; இவன் இசையறிவிற் சிறந்தவன். வசைத்திறம் - பழிப்பின் கூறுபாடு; வெருவி-அஞ்சி; புள்-கின்னரப்பறவை; நீரினார்-தன்மையர்; அசிப்பன-சிரிப்பன.]

மாதர்யாழ் தடவர வந்த மைந்தர்கைக்
கீதத்தான் மீண்டன கேள்விக் கின்னரம்
போதரப் பாடினாள் புகுந்த போயின
தாதலர் தாரினார் தாங்கள் பாடவே 660

[போதர-மண்டபத்தின் உள்ளேவர; தடவர-மீட்ட.]

சுரும்பெழுந் திருந்துணுந் தொங்கல் வார்குழல்
அரும்பெற லவட்கிசை யரசர் தோற்றபின்
நரம்புறு தெள்விளி நவின்ற நான்மறை
வரம்பெறு நெறியவர் மலைதன் மேயினார் 661

[தொங்கல் வார்குழல்-மாலையையணிந்த நீண்ட கூந்தலையுடைய; நரம்புறு தெள்விளி-வீணையில் பொருந்திய தெளிந்த பாட்டு; வரம்பெறு-மேன்மையைப் பெற்ற; நெறியவர்-அந்தணர்.]

கரிய நீண்ட புருவங்கள் நெற்றியில் சுளிக்காது, மீன் போன்ற பெரிய கண்கள் துள்ளி அசையாது, எழிலுடன் விளங்கும் தொண்டை விம்மாது, அழகிய முத்துப்போன்ற பற்களும் வெளியே தோன்றாது, இவள் பெருங்கடலில் பிறந்த பவளம் போன்ற தன் பனிமலர் வாய் திறந்து தான் பாடினாளோ அல்லது இன்னிசை எழுப்பும் நரம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பொடு கூடிய யாழ்தான் இனிய நாவொன்றும் பெற்றுப் பாடியதோ என்று மயங்கி வருந்தினர். இசைத் திறமையில் காமனை வெல்லும் புலமை உடைய, பழி சேராப் பண்புடையவர்களாகிய மன்னர்களும், உயர்ந்த பொன் யாழினை மீட்டித் தாமும் விசையுடன் பாட, முன்பு தத்தையின் இசைகேட்டு மனம்மயங்கி வீழ்ந்த பறவைகள் எல்லாம், இப்போது இவர் எழுப்பும் ஒலிகேட்டுப் பயந்து எழுந்து, இவரை எள்ளி நகைப்பனபோல் வானிடைப் பறந்து சென்றன. தத்தை யாழ் மீட்டிப்பாடும் இன்னிசை கேட்டு வந்த கின்னரம், மன்னர்கள் யாழ் ஒலி கேட்டுத் திரும்பிப் போயின. அப்படி வெட்கிச் சென்ற அவை மீண்டும் வெளிவரத் தத்தை கண்டத்தால் பாடத் திரும்பி வந்தன. திரும்பிவந்த அவையும், மன்னர்கள் மீண்டும் கண்டத்தால் பாடுதல் கேட்டுத் திரும்பிப் போயின (தத்தைக்கு இணையாகப் பாட மீண்டும் மீண்டும் முயன்ற மன்னர்களும், அவர்கள் யாழிசையும் அவளின் புலமை முன்னே தோற்றதனைக் குறித்தது.) வண்டுகள் மொய்த்துண்ணும் தேன் நிறைந்த மலர்மாலை அணிந்த நீண்ட கூந்தலுடைய பொற்கரும் பேறு பெற்ற தத்தையிடம் அரசர்கள் இசையில் இவ்விதம் தோற்றபின் நரம்பொடு இயைந்த இன்னிசையில் தேர்ந்த அந்தணர்கள், அடுத்து இசைப் போட்டியில் ஈடுபட்டனர்.

## வேறு

திருமலர்க் கமலத் தங்கண் தேனின முரல்வ தொப்ப
விரிமலர்க் கோதை பாட வெழால்வகை வீரர் தோற்றார்
எரிமலர்ப் பவளச் செவ்வா யின்னரம் புளர மைந்தர்
புரிநரம் பிசைகொள் பாட லுடைந்தனர் பொன்ன னாட்கே.

[எழால்வகை-யாழின் கூறுபாடு; எரிமலர்-செம் முருக்கம்பூ; நரம்பு உளர-யாழின் நரம்பைத் தடவ; நரம்பிசை கொள்பாடல் - நரம்பின் இசையைக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

கொண்ட கண்டப்பாடலை; உடைந்தனர்-
தோற்றனர்.]

**வாலரக் கெறிந்த காந்தண் மணியரும் பனைய வாகிக்**
**கோல்பொரச் சிவந்த கோலக் குவிவிரன் மடந்தை வீணை**
**நூல்பொரப் புகுந்த நுண்ணூல் வணிகருந் தொலைந்து மாதோ**
**கால்பொரக் கரிந்த காமர் பங்கயப் பழன மொத்தார் 663**

*[கோல்-யாழ் நாம்பு; கோலக் குவி விரல்-அழகை யுடைய குவிந்த விரல்; வீணை நூல் பொர-வீணையை இசை நூல்வழியே வாசிக்க; கால் பொரக் கரிந்த-வாடைக்காற்றுப் பொருதலாலே கருகிப்போன; பங்கயம்-தாமரை; பழனம்-பொய்கை.]*

**தேனுயர் மகர வீணைத் தீஞ்சுவை யிவளை வெல்வான்**
**வானுயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காம னாகும்**
**ஊனுயர் நுதிகொள் வேலீ ரொழிகவீங் கில்லை யென்றான்**
**கானுய ரலங்கன் மாலைக் கட்டியங் கார னன்றே 664**

*[தேன் உயர்-வண்டுகள் மிக்க; வான்-வானிலுள்ள தேவர்; மதுகை-இங்கே அறிவு; ஊன்-தசை; கான்-வாசனை.]*

அழகிய தாமரை மலரில் வண்டுகள் பாடுவதைப் போல மலர்ந்த பூமலர் மாலையணிந்த தத்தை பாட, யாழ் வாசித்தலில் அந்தணரும் தோற்றனர். ஒளிமிக்க மலரையும், செம்பவளத்தையும் போன்ற சிவந்த வாயுடைய தத்தை இன்னிசை கூட்டும் யாழினை மீட்டி, யாழிசை போன்ற தன் மென்குரலால் பாட, வாய்ப் பாட்டிலும் அந்தணர்கள் அழகி அவளிடம் தோற்றனர். செக்கச் சிவந்த அரக்கின் நிறத்தை அப்பிய, செங்காந்தள் மலரின் அழகிய அரும்பைப் போன்ற யாழ்நரம்பு தொட்டு மீட்டிச் சிவந்த, அழகிய குவிந்த விரல்கள் உடைய தத்தையின் யாழிசையோடு போட்டியிட வந்த, இசை நூல் கற்றுணர்ந்த, புரிநூலணிந்த மார்புடைய வணிகரும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


தோற்று, புயல் காற்றுப் புகுந்தலைத்த தாமரைப் பொய்கை போல் நிலைகுலைந்து சென்றனர். ''தேனென இனிக்கும் இன்னிசை பொழியும் மகரவீணையில் இவளை வெல்லக் கூடியவன், வானவரின் இசை அறிவையும் வெல்லுகின்ற நீண்ட வில்லுடைய மன்மதனே அல்லாமல் இங்குள்ள யாரும் இல்லை; எனவே ஊன்குருதி தோய்ந்த வேலுடைய வீரர்களே இவளோடு போட்டியிடுவதை விட்டு விட்டுப் போவீர்'' என்றான், மணமிகுந்த மலர் மாலை அணிந்தவனாகிய கட்டியங்காரன்.

**மறுமுயற் கிவர்ந்த வேக மாசுண மடையப் பட்ட**
**நிறைமதி போன்று மன்ன ரொளிகுறைந் துருகி நைய**
**அறுபகல் கழிந்த பின்றை யந்நகர்க் காதி நாய்கன்**
**சிறுவனோர் சிங்க வேற்றை சீவக சாமி யென்பான் 665**

[முயற்கு-முயலைக் காத்தற்பொருட்டு, நிறைமதி-பூரண சந்திரன், மாசுணவேகம் போன்று-பாம்பினது விடவேகத்தாலே ஒளி குறைதல் போன்று, மாசுணம்-இராகுவென்னும் பாம்பு.]

**தம்பியுந் தோழன் மாருந் தானுமற் றெண்ணிச் சூழ்ந்து**
**வெம்பிய வீணைப் போருட் செல்குவம் யாமு முன்னே**
**தும்பறப் புத்தி சேன சொல்லிது குரவற் கென்னக்**
**கந்துகற் கவனுஞ் சொன்னா னவனிது விளம்பி னானே 666**

[சூழ்ந்து வெம்பிய-அரசர் முதலியோர் ஆராய்ந்து மனம் வெதும்பிய; தும்பற-சிக்கற.]

**ஐயனுக் கமைந்த நீரா ரறுபத்து நால்வ ரம்பொன்**
**வையகத் தமிர்த மன்னார் வாக்கமை பாவை யொப்பார்**
**எய்திய விளமை மிக்கா ரியைந்தன ரென்று பின்னும்**
**கையமை சிலையி னாற்குக் கந்துக னிதுவுங் கூறும் 667**

[வாக்கமை பாவை-திருத்தமுறச் செய்யப்பட்ட பொற்பாவை; சிலையினாற்கு இதுவும்-சீவகனுக் குள்ள சிறிது தாழ்வும்.]

முயலைக் காத்தற்பொருட்டு முயல்போன்ற மறு உடைய, இராகு என்னும் பாம்பின் விஷவேகத்தினால்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஒளி குன்றிய வெண்ணிலவைப் போல, அரசர்கள் தோல்வியுற்று உளம்வருந்திவாட, சிலநாள் சென்ற பிறகு, அந்நகரிலேயே முதன்மை உடைய வணிகனாகிய கந்துக்கடன் மகன் ஒப்பற்ற ஆண்சிங்கம் போன்ற வலிமை உடையவனாகிய சீவகன் என்பவன், தானும் தன் தம்பியரும் தோழர்களுமாக இருந்து, யோசித்து வேந்தர்கள் கூடிப் போட்டியிட்ட யாழிசைப் போட்டியில் ஈடுபட முடிவு செய்து அந்த முடிவைத் தன் விருப்பத்தைத் தத்தையின் மேல் கொண்ட ஆசையால் கூறவில்லை, கேள்விநலம் பெருகுவதற்காகவே சொல்கின்றேன் என்று, புத்திசேனனே நீ அவள் தந்தையிடம் சென்று விளங்கச் சொல்க என்ன, அவனும் சென்று கந்துக்கடனிடம் கூற, கந்துக்கடன் மறுமொழி சொல்வான். சீவகனுக்குத் துணையாய் அமைந்த தோழர்கள் அறுபத்து நான்கு கலைகள் ஆகும். அந்த அறுபத்தி நான்கு பேரும் பொன்னுலகின் அமுதம் போன்றவர்கள். திருத்தமுறச் செய்தமைத்த கொல்லிப்பாவை போன்றவர்கள்; என்றும் நீங்காத இளமை எழில் உடையவர்கள். எனவே சீவகன் இந்த யாழிசைப் போட்டியில் ஈடுபடுவது பொருத்தமுடையதே என்று கூறிய கந்துகன், வில்லேந்திய கையுடைய சீவகனைப் பற்றி மேலும் கூறத் தொடங்கி புத்திசேனனிடம் சொல்லுவான்.

**மறைவல்லாற் குரைக்கும் போழ்திற் கோயிலு ணின்று மாலைப்**
**பிறைவெல்லு நுதலி னாளோர் பெண்கொடி வந்து கூந்தல்**
**உறைசெல நீக்கிப் பைந்தா ளொண்மணிக் குவளை நீட்ட**
**நறைவெல்லு நாக மாலை நோக்கொடு பூக்கொண் டானே**

[மறை வல்லான் - புத்திசேனன்; நீட்ட - நீட்டிக் கொடுக்க; நறை-தேன்; நாகமாலை, இவள் சச்சந்தனுடைய அகப்பரிவார மகளிருள் ஒருத்தி; நோக்கொடு-குறிப்பாலே; பூ - நாகமாலை கொடுத்தனுப்பிய குவளைப்பூவை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

நல்லவ ணோக்க நாய்கன் றேர்ந்துபூங் குவளைப் போதின்
அல்லியுட் கிடந்த வோலை தாளது சலாகை யாதல்
சொல்லுமென் றாய்ந்துகொண்டு துகிலிகைக் கணக்கு நோக்கி
வல்லிதிற் சலாகை சுற்றி யோலையை வாசிக் கின்றான்

[நல்லவள் நோக்கம்-நாகமாலையின் குறிப்பு; அல்லி-அகவிதழ்; சலாகை-இரும்புக் கம்பி; துகிலிகை-எழுதுகோல்; சலாகை-தாளாகிய சலாகை.]

நம்பனை நகரி னீக்கிச் சேமத்தால் வைக்க தீயுட்
செம்பொன்போற் பெரிதுஞ் சேந்து செகுத்திட லுற்று நின்றான்
வெம்பினான் காரி யுண்டிக் கடவுளிற் கனன்று வேந்தன்
இம்பரின் றெனக்குச் சொன்னா னிதுபட்ட தடிக ளென்றாள்

[நம்பனை - சீவகனை; சேமத்தால் - பாதுகாப்புள்ள இடத்தில்; சேந்து-சிவந்து; காரி-விடம்; இம்பர்-இப்பொழுது; பட்டது-நிகழ்ந்தது.]

(இவ்விதம் கந்துகன், மறைநூல் வல்ல புத்திசேனனிடம்) மாலைப் பிறையை வெல்லும் அழகிய நெற்றியை உடைய கொடிபோன்ற பெண்ணொருத்தி, அரண்மனையை விட்டு வெளியே வந்து கூந்தலாகிய உறையினை நீக்கிப் பசுமையான இதழ்கள் உடைய ஒளி சிந்தும் மணி போன்ற குவளை மலரினை நீட்ட, அதனை அவள் தலையில் சூடிய பூவென்று இகழாது இனிமை மிக்க நாகமாலையின் குறிப்புணர்ந்து அதனைக் கையில் வாங்கிக் கொண்டான். பூவை வாங்கிய வணிகன் நாகமாலை காட்டிய குறிப்பின் பொருள் உணர்ந்து, அழகிய குவளை மலரின் பசுந்தாளே தன் அக இதழுள் கிடந்த ஓலையைச் சுற்றிப் படிக்கச் சலாகையாகக் கூறுகிறதென்று உணர்ந்து, எழுதுகோல் கொண்டு எழுதிய எழுத்தைப் பார்த்துப்பின் தாளாகிய சலாகையாலேயே சுற்றிப் படிக்கத் தொடங்கினான். ''சீவகனை நகரினின்றும் நீக்கி ஒரு பாதுகாப்



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations
பான இடத்திலே வைக்க. தீயுள்பட்டுச் சிவந்த செம்பொன்போல அரசன் பெரிதும் சினமுற்றுச் சீவகனை அழித்துவிட எண்ணி நஞ்சுண்ட கண்டனாகிய ருத்திர மூர்த்தியை, சிவனைப் போல் கொதித்தெழுந்து நிற்கிறான்; இப்போது எனக்கு அதைக் கூறவும் செய்தான். இது இப்போது நடந்ததேயாகும்! அடிகளே இதனை அறிக'' என்பதை அறிந்தான்.

ஓலையை யவட்கு நீட்டி யொண்மணிக் குழையு முத்தும்
மாலையும் படுசொ லொற்றி வம்மென மறைய நல்கி
வேலைநெய் பெய்த திங்கள் விரவிய பெயரி னாற்கு
மேலைநாட் பட்ட தொன்று விளம்புவல் கேளி
தென்றான் 671

[அவட்கு-நாகமாலையால் அனுப்பப்பட்ட பெண்ணிடம்; வம்மென-வருகஎன; வேலை-கடல்.]

கடியரங் கணிந்து மூதூர்க் கடல்கிளர்ந் தனைய தொப்ப
நடையறி புலவ ரீண்டி நாடக நயந்து காண்பான்
குடையுடை யவனொடு எண்ணிச் சீவகற் கொணர்மி
னென்னத்
தொடையல்சூழ் வேலி னானுந் தோழருங் காணச் சென்றார்

[அரங்கு-நாடக அரங்கு; மூதூர்-இராசமாபுரம்; கிளர்தல்-பொங்குதல்; நடையறி புலவர்-இயல் இசை நாடகங்களின் முறைமை தெரிந்த புலவர்கள்; காண்பான்-காணவேண்டி; என்ன-என்று.]

நிலமறிந் தணிக வையன் சீவக னெறியி னென்ன
நலநுதற் பட்டங் கட்டி நகைமுடிக் கோதை சூட்டி
அலர்முலைக் குருதிச் சாந்து மாரமும் பூணுஞ் சேர்த்திக்
குலவிய குருதிப் பட்டிற் கலைநலங் கொளுத்தி
யிட்டான் 673

[நெறியின்-நூல் முறைப்படி; அணிக என்ன-அரங்கில் ஆடுதற்கு வந்த கூத்திக்கு அலங்காரம் செய்க என்று சொல்ல; நுதல்-நெற்றி; குருதிப்பட்டு-செம்பட்டு; கொளுத்தி-பொருத்தி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஓலையை அவளிடத்தில் கொடுத்துப் பின்னர் சிறந்த மணிகள் பதித்த குழையையும் முத்துக்களையும் மறைவாகக் கொடுத்து இனி மாலையில் கிடைக்கும் சேதிகளையும் ஒற்றறிந்து வந்து சொல்க என்று கூறிக் கடல்போல் நிறைய நெய்பெய்து வேள்விகள் செய்த மதி உடையவனாகிய புத்திசேனனுக்கு முன்னாளில் நேர்ந்த ஒன்றினைக் கூறுகின்றேன் அதனையும் கேட்பாயாக என்றான். அழகிய அரங்கமைத்து, அப்புகழ் மிக்க பேரூராகிய இராசமாபுரத்திலே, கடல் பொங்கி எழுந்து வந்து நிறைந்ததைப்போல் நாடக நூல்முறை நன்குணர்ந்த புலவர்கள் கூடி, நல்லதோர் நாடகம் காண வேண்டி, அரசனுடன் கலந்தாலோசித்துச் சீவகனைக் கொண்டு வருக என்னவும், மாலை சூழ்ந்த வேலுடைய சீவகனும் தோழர்களும் அங்கே சென்றனர். அங்ஙனம் அவ்விடம் சென்ற மேலோனாகிய சீவகனை அரங்கின் தன்மை அறிந்து. நூல் நெறிப்படி வேடம் அணிவிக்க, என்று அங்கே கூடியிருந்த கூத்துமுறை தெரிந்த புலவர்கள் கூற, அவனும் அவ்வாறே நெற்றியிலே அழகிய பட்டத்தைக் கட்டி ஒளிவிடும் தலைமுடி மீது பூமாலையைச் சூட்டி, வளரும் முலைகளின் மீது இரத்தம்போல் சிவந்த செஞ்சாந்தையும், முத்துவடங்களையும் பொற்பூணையும் அணிவித்து, ஒளிவிளங்கும் சிவந்த பட்டினையும் சேர்த்துக் கட்டி அழகுவண்ணம் சிறக்கச் செய்தான் என்று ஓலை கொண்டு வந்தவன் புத்திசேனனுக்குச் சொல்லி மேலும் அங்கு நடந்ததை அவனுக்கு விளக்கலானான்.

**திருவிலே சொரிந்து மின்னுங் குண்டலஞ் செம்பொ**
**னோலை**
**உருவுகொண் மதிய மன்ன வொளிமுகஞ் சுடர வாக்கிப்**
**பரியகஞ் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாதஞ் சேர்த்தி**
**அரிவையை யரம்பை நாண வணிந்தன னனங்க னன்னான்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[திருவில்-இந்திரவில்; சுடர்-விளங்கும்படி; ஆக்கி-அணிந்து; பரியகம்-காற்சரியென்னும் ஆபரணம்; அரிவை-கூத்தி; அனங்கன் அன்னான்-சீவகன்.]

தோற்பொலி முழவும் யாழுந் துளைபயில் குழலு மேங்கக்
காற்கொசி கொம்பு போலப் போந்துகைத் தலங்கள் காட்டி
மேற்பட வெருவி நோக்கித் தானையை விட்டிட் டொல்கித்
தோற்றினாண் முகஞ்செய் கோலந் துளக்கினாண் மனத்தை யெல்லாம் 675

[ஏங்க-ஒலிப்ப; காற்கு ஒசி கொம்புபோல-காற்று வீசுதலால் அசைந்து சாய்கின்ற பூங்கொடியைப் போல; கைத்தலம் காட்டல்-அரங்கிலேறிய நாடக மகளிர் முதன்முறை கையைக் காட்டல்; வெருவி நோக்கி-அஞ்சிப் பார்த்து; தானை என்றது இங்கே திரைச் சீலையை; கோலம்-அலங்காரத் தோற்றத்துடன்; துளக்கினாள்-வருத்தினாள்.]

தெண்மட்டுத் துவலை மாலை தேனொடு துளிப்பத் திங்கள்
உண்ணட்ட குவளை போலு முருவக்கண் வெருவி யாட
விண்விட்டுக் கடவுள் வீழ நுடங்கின புருவ நெஞ்சம்
பண்விட்ட திருந்து காணும் பன்மணிக் கழலி னார்க்கே

[தெள் மட்டுத்துவலை-தெளிவுள்ள தேனின் துளியை; திங்களுள் நட்ட-சந்திரனிடத்தே நடப்பட்ட; உருவம்-அழகு; வெருவி-பிறழ்ந்து; வீழ-கீழே விழும்படி; நுடங்கின-வளைந்தன; பண்விட்டது-நிலை குலைந்தது.]

செங்கதிர்ச் சிலம்பு செம்பொற் கிண்கிணி சிலம்பக் கோதை
பொங்கப்பொன் னோலை வட்டம் பொழிந்துமின் னுகுப்பப் போர்த்த
குங்குமச் சாந்து வேய்ந்து குண்டலந் திருவில் வீச
அங்கதி ரார மின்ன வரிவைகூத் தாடு கின்றாள் 677

[சிலம்ப-ஒலிக்க; மின்-ஒளி; உகுப்ப-சிந்த; வேய்ந்து-அணிந்து.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வானவில்போல் ஒளிவீசி மின்னுகின்ற குண்டலமும் பொன்னோலையும் அணிந்து, எழில்மிகுந்த முழுநிலவைப் போல அழகுடைய முகத்தை மேலும் அழகுடையதாக்கி, காற்சிலம்பும் கிண்கிணியும் அணிந்து, அரம்பையும் வெட்கு மாறு அவ்வழகிய சீவகன் அணிசெய்தான். தோலால் வரிந்து கட்டிய முழவும், நரம்புக் கருவியான யாழும், துளையிட்ட குழலும் ஒலிக்க, காற்றிலே அசைந்தாடும் மெல்லிய பூங்கொடி போல் அசைந்து வந்து, கையைக் குவித்துக் காட்டி, மேலே அச்சக்குறிப்புத் தோன்றப் பார்த்து, திரைச் சீலையை விலக்கி வந்து, அழகு முகத்தை ஆடலரங்கிலே தோன்றச் செய்தாள். அதன் மூலம் அங்கிருந்தவர் உள்ளத்தையெல்லாம் வருத்தினாள். அவர் வருந்த இப்படித்தோன்றிய அவள் மேடையில் ஆடும் விரை வால், தேன் துளிகளை மாலைகள் வண்டுகளுடன் தெறிக்க, நிலவோடு குலவும் குவளைப் பூப்போல், எழில் முகத்தோடு தங்கும் குவளைமலர் போன்ற இரு கண்கள் புரண்டு மருள, வானுலகத் தெய்வங்கள் வான்விட்டுக் கீழிறங்கி வீழ, விற்புருவங்கள் அசைந்து நிமிர, அதைக் கண்ட அங்கிருந்தவர்கள் நெஞ்சமும் நிலைகுலைந்து நின்றது. செவ்வொளி வீசும் செம்பொற் சிலம்பும் கிண்கிணியும் ஒலிக்க, மாலை புரள, பொன் ஓலை மின்னைப்போல் வட்டமாக ஒளிவீச, காதுக்குண்டலம் தோளிலே தடவிய சந்தனத்தைத் தொட்டு வானவில் போல் அழகிய ஒளியை வீச அழகிய முத்துச்சரங்கள் பொன்னொளி வீசி மின்ன அழகி அவள் ஆடினாள்.

**மருங்குலு மொன்று தாய்க்கு மொருமக ளாத லோர்ந்தும்**
**இரும்பினா லியன்ற நெஞ்சத் திவர்களோ விருந்து காண்க**
**அரங்கின்மே லிவளைத் தந்த தாய்கொலோ கயத்தி யன்றேற்**
**சுரும்புசூழ் கண்ணி சூட்டி யவர்கொலோ கயவர் சொல்லீர்**

[மருங்குலும்-இடையும்; ஓர்ந்தும் - இதையறிந்தும்;
இவளை - நாட்டியமாடும் அனங்கமாலையை;

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

*கயத்தி-கொடியவள்; கண்ணி-பூமாலை; கயவர்-கொடியவர்.]*

## வேறு

**அகிலார் புகையலாற் சாந்தணியாள் பூச்சாரச்**
**செல்லாள் செல்லிற்**
**பகலே பகைவளர்த்த பாவை சிறுநுசுப்பொன்**
**றுண்டே பாவம்**
**இகலேந் திளமுலைமேற் சாந்தெழுதி முத்தணிந்து**
**பூவுஞ் சூட்ட**
**முகிலேந்து மின்மருங்குன் மொய்குழற்றா யிதுகண்டு**
**முளளே பாவம் 679**

*[பூச்சாரச் செல்லாள்-பூவின் பக்கத்தும் செல்லாள்; பகை பகலே வளர்த்த நுசுப்பு-பகையாகிய முலையை வெளிப்படும்படி வளர்த்த இடை; இகல்-மாறுபாடு.]*

## வேறு

**தேந்தாமஞ் செம்பவளத் தாமஞ் செம்பொன் எரிதாம**
**மின்னுத் திரடா மங்கள்**
**தாந்தா மெனத்தாழ்ந்த பொன்மே கலைத்தாம**
**வரங்கின்மேற் றாதார் முல்லைப்**
**பூந்தாமக் கொம்பாடக் கண்டாரெல்லாம் புனமயிலே**
**யன்னமே பொன்னங் கொம்பே**
**ஆந்தா மரைமகளே யல்லளாயி னமரர்மக ளென்பாரு**
**மாயி னாரே 680**

*[தேந்தாமம்-தேனையுடைய பூமாலை; பொன் எரி தாமம்-பொன் விளங்குகின்ற மாலை; மின்னுத் திரள் தாமங்கள் - நட்சத்திரக் கூட்டங்கள் போன்ற மணிகளாலாய மாலை; தாம்தாம்: ஒலிக்குறிப்பு. தாழ்தல்-தங்குதல்; பொன்னங் கொம்பு - பொற்கொம்பு; அமரர்மகள் - தேவ கன்னிகை.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

"இடையும் இவளுக்கு ஒன்றே ஒன்றுதான்; (இப்படி ஆட அது முறிந்தால் வேறில்லை என்பதனை ஒன்றுதான் என்றார்) தாய்க்கும் இவள் ஒரேமகள்தான் என்பதை அறிந்தும், இவள் ஆட்டத்தை இருந்து காணும் இவர்கள் என்ன இரும்பிதயம் கொண்டவர்களோ? இல்லை, இப்படி இவர்கள் எல்லாம் காணக் கூத்தரங்கிலே (உடல் வருந்த) இவளை ஆடவிட்ட தாய்தான் கொடியவளோ? அதுவும் அன்றேல் வண்டுகள் மொய்க்கும் மலர்க் கண்ணியைக் குழலில் சூட்டியவர்கள்தான் கொடியவர் களோ? இவரில் எவர் கொடியரோ சொல்லுங்கள். அகிற்புகையை மணத்திற்காக மேலே படியவிடுவதன்றிச் சந்தனம் பூசாள்; பூக்களின் பக்கத்திலும் செல்லாள். ஒருகால் செல்வாளாயின், சந்தனத்தையும், பூவினையும் தாங்கிக்கொள்ள, ஏற்கனவே முலைப்பாரமாகப் பளுவை வெளிப்படையாகவே சுமந்து கொண்டிருக்கின்ற சிறிய இடை இவளுக்கு இருக்கிறதோ? ஐயோ பாவம்! இவை ஒன்றும் அறியாது, அழகிய இருமுலைகளின் மீதும் சந்தனத்தைப் பூசி முத்தாரங்கள் அணிவித்து, மலர்களை யும் சூட்ட, மின்போன்ற மெல்லிய இடையின் மேல் கொண்ட கார்முகில் போலும் கருங்கூந்தல் உடைய இவளின் தாய் இக்கொடுமைகளை எல்லாம் கண்டும், உயிருடன் இருக்கின்றனளே இது மிகவும் கொடியதே அன்றோ! மேலும் தேன் பிலிற்றும் பூமாலையோ, செம் பவள மாலையோ, சிவந்த பொன்மாலையோ, முத்து மணிமாலையோ என்று கண்டோர் வியக்கும்படி, பொன் மேகலை அணிந்த பூமாலை போன்ற தோரிய மங்கையர் சூழ்ந்த அரங்கின் மேல், பூந்தா துதிர்க்கும் முல்லை மலர் மாலை அணிந்த மலர்க்கொம்பு போன்ற இவள் ஆடு வதைக் கண்டவர்கள் எல்லாரும், இவள் என்ன சோலை மயிலோ, அன்னமோ, இல்லை பொற்கொம்போ, திரு மகளோ அதுவும் இல்லையென்றால் வானவர் மகளோ" என்று கூறுவாராயினர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கொடியார் குளிர்முத்தஞ் சூட்டிவைத்தார் கொல்வானே
குங்குமச்சே றாட்டி னார்கள்
அடிசார்ந்து வாழ்வாரை யம்முலைகடாமே யழித்திடுமேற்
றாமே யழித்தி டுகவென்று
ஒடியாத மாத்திரையா லுண்டே நுசுப்பிருந்து காண்பாரு
முளரே செங்கண்
நெடியான் மகன்சிலையு மம்பும்வைத்த நிழன்மதியோ
வாண்முகமோ நோக்கிக் காணீர் 681**

*[கொடியார்-கொடியவர்; நிழல்-ஒளி; குங்குமச்சேறு-குங்குமக் குழம்பு.]*

**நெய்பருகி நீண்டவிருட் கற்றைபோலுங் குழற்கற்றை
கண்டு நிறைக லங்குவார்
மைபருகி நீண்டு மதர்த்தவுண்கண் வாளேறு
பெற்றுநைவார் மாநா கத்தின்
பைபருகு மல்குலி லயம்பற்றிப் பதனமைத்த பாவை
நிருத்த நோக்கி
மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக்காம
வெயில்வெண்ணெய்ப் பாவைபோன் மெலிகின் றாரே**

*[கற்றை - தொகுதி; மதர்த்த - மயக்கங்கொண்ட; வாளேறு-வாள்வெட்டு; இலயம்-தாளவறுதிகள்; பதனமைத்த நிருத்தம்-காலமைத்த கூத்து.]*

## வேறு

**ஆடவர் மனங்க ளென்னு மரங்கின்மே லனங்க மாலை
ஆடினாண் முறுவ லென்னுந் தோழியை யையன் காண
ஓடரி நெடுங்க ணென்னு மோலையை யெழுதி விட்டாள்
வாடிய வாறு நோயு முரைத்துவார் கொடிய னாளே 683**

*[முறுவல்-புன்சிரிப்பு; ஐயன் காண-சீவகன் காணும் படி; நோய்-காமநோய்; ஓடரி-செவ்வரி படர்ந்த.]*

'ஐயோ, கொடியவர்கள், நம்மைக் கொல்வதற் கென்றே குளிர்ந்த முத்துக்களை இவளுக்குச் சூட்டியிருக்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



கின்றனர். குங்குமக் குழம்பை அள்ளிப் பூசியிருக்கின்றனர். தம்கீழ் இருந்து வாழ்வாரைத் தாமே அழித்தொழிப்பது கூடுமாயின், இவள் முலைகளும் தன்னை அழிக்கும் என்று எண்ணி இற்றுவிழாது மெல்லிய இடை இருக்க, இப்பாவத்தைக் கண்ணால் காண்பவரும் இருக்கின்றார்களே என்ன கொடுமை' என்பவரும், 'சிவந்த கண்ணுடைய திருமாலின் மகனாகிய காமன் பொருத்தி வைத்த வில்லும் அம்பும்போன்ற புருவமும் விழிகளும் உடைய ஒளிவிடும் இவள் முகம் என்ன முழுநிலவோ, இல்லை முகந்தானோ சற்றே கூர்ந்து நோக்குக' என்று கூறினர். நெய் தடவப் பெற்று நீண்டு வளர்ந்த இருள் கொத்துப் போலும் குழல் கற்றை கண்டு மனந் தளர்வார். மைதீட்டப்பட்டு நீண்ட மயலூட்டும் கண்களாகிய வாளால் தாக்குற்று வருந்துவார். பெரும் பாம்பின் படம்போன்ற அல்குலுடைய பாவை இவளின் தாள கதிக்கேற்பப் பாதம் பற்றி ஆடும் கூத்தின் நேர்த்தியைப் பார்த்து உடலும் உள்ளமும், உயிரும் உருகிக் காமமாகிய வெயிலிலே வைத்த வெண்ணெயால் செய்த பாவைபோன்று உருகி நின்றனர். இப்படியாக ஆடவர் உள்ளங்களையெல்லாம் ஆடும் மேடையாகக் கொண்டு அதில் அனங்கமாலை ஆடினாள். அப்படி ஆடிய நீண்ட மலர்க்கொடி போன்ற அவள், தான் வாடிய விதத்தையும் அதற்குக் காரணமான நோயையும் உரைத்து நீண்ட செவ்வரி நெடுங் கண்ணாகிய ஓலையை எழுதி அதை மென்முறுவல் என்னும் தோழி மூலம் சீவகன் காண அனுப்பினாள். (அனங்கமாலை சீவகனைக் கண்ணால் பார்த்து வாயிதழ் அசைவால் வருக எனும் குறிப்புக் காட்டினாள் என்பதைக் கண்ணாகிய ஓலையை எழுதி முறுவலாகிய தோழியை அனுப்பினாள் என்று கூறினார் கவி.)

**வளமல ரணியப் பெற்றேன் வாள்வளை திருத்தப் பெற்றேன்**
**களனெனக் கரையு மல்குல் கையினாற் றீண்டப் பெற்றேன்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இளமுலை சுமந்து பெற்ற வருத்தமு மின்று தீர்ந்தேன்
உளமெலி மகளி ரெய்து மின்பமு மின்று பெற்றேன். 684

[வளமலர்-வளப்பம் பொருந்திய மலர்; வாள் வளை-வெள்ளிய வளைகளை; திருத்தல்-தக்கவாறு அழகுபட அமைத்தல்; களனென-ஒலிக்குறிப்பு; கரையும்-ஒலிக்கும்; உளம் மெலிமகளிர்-ஊடலால் மனம் மெலிந்த மகளிர்; இன்பம்-ஊடல் தீர்ந்த இன்பம்.]

என்றவ ளரசன் றன்னை நோக்கல ளிவன்க ணார்வம்
சென்றமை குறிப்பிற் றேறிக் கூத்தெலா மிறந்த பின்றை
நின்றது மனத்திற் செற்ற நீங்கித்தன் கோயில் புக்கான்
மன்றல மடந்தை தன்னை வலிதிற்கொண் டொலிகொள்
தாரான் 685

[என்றவள்-என்று இவ்வாறு எண்ணிய அனங்க மாலை; ஆர்வம் சென்றமை-அனங்கமாலைக்கு ஆசை நிகழ்ந்தமையை; செற்றம்-சீவகனைக் கொல்ல வேண்டுமென்னும் கோபம்; வலிதின்-வன்மையால்; இறந்தபின்-முடிந்தபின்.]

தேனுடைந் தொழுகுஞ் செவ்வித் தாமரைப் போது புல்லி
ஊனுடை யுருவக் காக்கை யிதழுகக் குடைந்திட் டாங்குக்
கானுடை மாலை தன்னைக் கட்டியங் காரன் சூழ்ந்து
தானுடை முல்லை யெல்லாந் தாதுகப் பறித்திட் டானே

[உடைந்து-இதழ்விரிந்து; செவ்வி-அழகு; ஊனுடை யுருவம்-பிணம்; இதழுக-தாமரைப்பூவின் இதழ் உதிரும்படி; கான்-வாசனை.]

அழகிய வாசமலர்கள் அணிவிக்கப் பெற்றேன்; வெள்ளிய கைவளை திருத்தப் பெற்றேன்; கலீர் என்று மேகலை ஒலியெழுப்பும் அல்குலை அவன் கையால் தீண்டவும் பெற்றேன். சந்தனச் சாந்தும் குங்குமக் குழம்பும் பூசிக் கச்சிறுக்கிக் கட்டியபோது தொட்ட இன்பத்தால் முலைகளைச்சுமந்து திரிந்த வருத்தமும் தவிர்ந்தேன்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஊடலால் உள்ளம் வருந்தும் மகளிர் பெறும் இன்பமும் நான் இன்று பெற்றேன்; (கண்ணால் விளித்து வாயிதழ் விரியச் சிரித்துச் சீவகனை அழைக்கும் குறிப்புக் காட்டியும் அவன் வராதது கொண்டு ஊடலால் பெறும் இன்பமும் பெற்றேன் என்றாள். இன்னும் கூத்துத் தொடங்கு முன்னே சீவகன் அவளுக்கு வேடம் புனைவிக்க, கண்ணி சூட்டி, கைவளை திருத்தி, கச்சிறுக்கி, மேகலை புனைந்ததை யெல்லாம் அவள் இன்பநிலைக் குறிப்புத் தோன்ற வேறுபொருள் உணர்த்தி வெளியிடுகிறாள்.) என்று இவ்விதமாக எல்லாம் தன் நெஞ்சொடு புலம்பிய அவள் வேந்தனாகிய கட்டியங்காரன் அங்கிருந்ததை எண்ணாதவளாக இருக்க, தேன் உண்டு வண்டு ஒலி செய்யும் மாலையணிந்தவனாகிய கட்டியங்காரனோ இவள் மனம் சீவகன் மேல் சென்றடைந்ததைக் குறிப்பால் உணர்ந்து, கூத்தெல்லாம் முடிந்த பின்னர், சீவகனைக் கொன்று விடவேண்டும் என்ற கோபம் நிலைத்திருக்க, மணத்திற்குரிய அனங்கமாலையை அவள் விருப்பமின்றி வலிந்து பற்றியிழுத்துக் கொண்டு கூத்தரங்கை விட்டு அரண்மனை சென்றடைந்தான். அரும்பவிழ்ந்து தேன் பிலிற்றும் அழகிய தாமரை மலரைத் தழுவி அதன் இதழ்கள் உதிருமாறு ஊன் வற்றி மெலிந்த உருவுடைய காக்கை ஒன்று குடைந்ததைப் போல, எழில்மிகும் அனங்க மாலையைக் கட்டியங்காரன் நெருங்கி, அவள் அணிந் திருந்த முல்லை மலர்க்கண்ணியின் பூந்தாதுகள் சிந்தப் பற்றி யிழுத்தான்.

**கலையினிற் கன்னி நீக்கித் தாமரைக் கண்கள் தம்மால்**
**முலையினி லெழுதிச் செவ்வாய் பயந்ததேன் பருகி முள்கும்**
**சிலைவலாய் புல்லு நம்பி சீவக சாமி யோவென்று**
**அலைகடற் புலம்பி னோவா தரற்றுமா லணங்கி னன்னாள்**

[கலை - மேகலை; கன்னி - அழிவின்மை; முள்கல்-- முயங்குதல்; ஓவாது-இடைவிடாமல்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பிறனல மரற்றக் கேட்டும் பீடினாற் கனிந்த காம
நறுமல ரணிந்த மாலை நாற்றக்கோர் நான்கு காதம்
உறநடந் தறித லில்லா னொண்டொடிக் குருகிப் பின்னும்
திறனல தமர்க்குச் செப்புந் தீயுமிழ்ந் திலங்கும் வேலான்

[அரற்ற-அனங்கமாலை கூற; பீடு-பெருமை; அணிந்த மாலை-அலங்கரிக்கப்பட்ட அனங்கமாலையினது; நாற்றக்கு - மணத்திற்கு; திறனல - நீதியல்லாத மொழிகளை.]

## வேறு

விலங்க லன்ன வேக வேழ நான்கு வெல்லு மாற்றலன்
கலங்க லந்தி லங்கு மார்பிற் கந்து கன்ம கன்னென
நலங்க லந்து ரைக்கு மாலிங் நன்ன கர்க்கு மன்னனோ
உலங்க லந்த தோளி னீரு ரைமி னீவி ரென்னவே 689

[விலங்கல்-மலை; கலம்-ஆபரணம்; உலம்-உருண்டைக் கல்.]

'மேகலை அழகை நீக்கி, தாமரை மலர்போன்ற கண் கொள முலையினைத் தழுவி, பவளச் செவ்வாய் தந்த தேனினைப் பருகி, வலிய சிலைவல்லோனே சீவகசாமியே, அழகிய நம்பியே வந்து தழுவிக்கொள்' என்றுரைத்து அலை எறிக்கும் கடல் ஒலிபோல் ஓயாது புலம்பலுற்றாள், தெய்வமகள் போன்ற அனங்கமாலை. வேறு ஒருவன் எழில் நலம் விரும்பிப் புலம்பும் அவள் அழுகுரல் கேட்டும், பெருஞ்சிறப்புகளால் பூத்து மலர்ந்த காமமாகிய நறுமலர் கொண்டு புனைந்த மாலையின் மணத்திற்கு, ஒரு நான்கு காததூரம் கூட நடந்தறியாதவனாகிய கட்டியங்காரன், இன்னும் அழகிய அனங்கமாலையை நினைந்துருகி, சொல்லத்தகாத மொழிகளையும், தன் அமைச்சர்களிடம், தீக்குளித்து மின்னுகின்ற கூர்வேலேந்திய அவன் சொல்ல லானான். 'மலைபோன்ற கரிய பெரிய, விரைந்து செல்லக் கூடிய திசைக்களிறுகள் நான்கையும் வெல்லும் வலி வுடையவனும் பூண் அணிந்து விளங்கும் மார்புடையவனு

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மாகிய சீவகன், கந்துகன் மகன் என்று உலகம் அவன் பெருமையினைக் கூறும். அவன் இந்த அழகிய நகருக்கு அரசனோ நீங்கள் சொல்லுங்கள்' என்று வினவ,

மட்ட விழ்ந்த தாரி னானிம் மாந கர்க்கு ளாயிரர்
தொட்டெ டுக்க லாவு லம்மொர் தோளி னேந்தி யாடினான்
ஒட்டி நாக மோரி ரண்டெ டுக்க லாத கல்லினை
விட்ட லர்ந்த போது போல வேந்த லேந்தி நீக்கினான் 690

[மட்டு-தேன்; தாரினான்-சீவகன்; எடுக்கலா-எடுக்க முடியாத; ஒட்டி-வஞ்சினம் கூறி; நாகம்-யானை; விட்டு-விண்டு; போதுபோல-பூக்களைப்போல.]

வெஞ்சி லையின் வேடர் வெள்ள மப்பு மாரி தூவலின்
எஞ்ச லின்றி நம்ப டையி ரும்மு றையு டைந்தபின்
மஞ்சு சூழ்க ணைம்மழை பொழிந்து மாநி ரைபெயர்த்
தஞ்சி லோதி யார்பு னைந்த செஞ்சொன் மாலை சூடினான்

[சிலையின் - வில்லால்; அப்புமாரி - அம்புமழையை; எஞ்சலின்றி - இடையறாமல்; மஞ்சு - மேகம்; மாநிரை-பெரிய பசுக்கூட்டம்; புனைந்த-புகழ்ந்து கூறிய.]

தீம்ப யறினி யன்ற சோறு செப்பி னாயி ரம்மிடா
நீங்க லாந றுநெய் வெள்ளங் கன்ன லாயி ரங்குடம்
ஏந்து வித்து நாமி சைய வந்து தந்து நீக்கினான்
ஆங்கு நாம்ப சித்த சைந்த காலை யன்ற வண்ணலே 692

[தீம்பயறு இயன்ற சோறு-இனிய பருப்போடு கலந்த சோறு; செப்பின்-கூறினால்; மிடா-பானை; மிசைய-உண்ணும்படி; நீக்கினான்-பசியை அகற்றினான்; அசைந்த காலை-இளைப்படைந்த போது.]

இன்ன னென்ன வின்பு றானி ழந்த னன்ன ரசென
என்னை வெளவும் வாயில்தா னென்னுஞ் சூழ்ச்சி
தன்னுளான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அன்ன தால்அ ரில்த பவ றிந்து கூத்தி கூறினாள்
இன்ன தாற்ப டையமைத் தெழுமி னென்றி யம்பினான் 693

[வெளவும் வாயில்தான் என்னை என்னும்-சீவகனைக் கொல்லும் வழிதான் எவ்விதம் என்கின்ற; அரில் தப-குற்றம் நீங்க; கூத்தி-நாகமாலை.]

''தேன் சொரியும் மலர்மாலை அணிந்த இவன், இப் பெரிய நகரிலே ஆயிரக்கணக்கான பேர் சேர்ந்து எடுக்க முடியாத கல்லுருண்டையை ஒரு கையால் எடுந்தெறிந்து ஆடினான்; இரண்டு யானைகள் சேர்ந்து அப்புறப்படுத்த முடியாத கல்லை வஞ்சினம் கூறி மலர்க்கொம்பினை எடுத்தெறிவதுபோல் எடுத்தெறிந்தான்; இன்னும் கொடிய வில்லிலிருந்து வேடர்கள் வெள்ளம் போல் அம்பு மழை இடைவிடாது பொழிய, நம் படைவீரர்கள் இரு முறை தோற்றபின்னும், முகில் சூழ்ந்து பெய்யும் பெரு மழைபோல் அம்புகளைப் பொழிந்து அவ்வேடர் கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்டுத் தந்து, அழகிய மலர்க் கூந்தலுடைய மங்கையர்களாகிய ஆய்ச்சியர்கள் சூட்டிய புகழ்மாலையும் கொண்டான். அல்லாமலும், இனிய பருப்புச் சோறு ஆயிரம் மிடாவும், நீங்காத மணமுடைய நறுநெய் வெள்ளமும், கருப்பஞ்சாறு ஆயிரங் குடமும், சுமந்து வரச் செய்து நாம் அன்று பசியால் வாடியபோது, நாம் உண்ணக் கொடுத்து நம் பசித்துயரைப் போக்கி யவனும் இவனேயாகும்'' என்றெல்லாம் கூறிச் சீவகன் இத்தகு சிறப்புடையவன் என்று அமைச்சரெல்லாம் கூறக் கேட்டும் மகிழாதவனாய், இனி ''நான் அரசிழந்தேன்'' என்று தனக்குள்ளாகக் கூறிக் கொண்டு, சீவகனை வெல்லும் வழிதான் என்ன என்கின்ற சூழ்ச்சியிலே அவன் இருக்கின்றான் என்பதனை, குறைவறத் தெரிந்து வந்து நாகமாலை கூறினாள்; எனவே நீங்கள் படை திரட்டிக் கட்டியங்காரனுடன் போரிடக் கிளம்புங்கள் என்று கந்துகன் கூறினான். (670-வது பாடலில் தொடங்கிய ஓலைக்குறிப்பும் அடுத்த பாடலில் வந்த நாகமாலையை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

ஒற்றறிந்து வரச் சொன்னதும், இங்கே அவள் சொன்ன குறிப்போடு முடிவுற்றது)

## வேறு

தாதைதா னுரைத்த வெல்லாந் தன்னுயிர்த் தோழன் கூறக்
கோதைமுத் தணிந்த மார்பன் கூரெயி றிலங்க நக்காங்
கேதமொன் றில்லை சேறு மென்றனு மிலங்கு வாட்கைப்
போதுலாங் கண்ணி மைந்தர் போர்ப்புலிக் குழாத்திற்
சூழ்ந்தார் 694

[தாதை- கந்துக்கடன்; தோழன்- புத்திசேனன்; கோதைமுத்து - பூமாலையையும் முத்துமாலை யையும்; ஏதம்-தீங்கு; சேறும் - செல்வோம்; மைந்தர்-தோழர்; புலிக் குழாத்தின்-புலிக்கூட் டத்தைப்போல.]

கண்ணுதற் கடவுள் சீறக் கனலெரி குளித்த காமன்
மண்மிசைந் தோன்றி யன்ன வகைநல முடைய காளை
தெண்மணி யார மார்பன் றிருநுதன் மகளிர் நெஞ்சத்
துண்ணிறை பருகும் வண்டா ருருவமை திருவின் மிக்கான்

[கண்ணுதற் கடவுள்-சிவபெருமான்; சீற-கோபித்த லால்; வகை நலம்-அவயவ அழகு; தெண்மணி யாரம்-தெள்ளிய முத்துமாலை; தார்-பூமாலை.]

கருநெறி பயின்ற குஞ்சிக் காழகில் கமழ வூட்டி
வரிநிற வண்ண மாலை வலம்பட மிலைச்சி வாளார்
திருநிற முகத்திற் கேற்பச் செம்பொனோ ரோலை சேர்த்தி
எரிநிறக் குழையோர் காதிற் கிருளறச் சுடர வைத்தான்

[வரி-பாட்டு; நிறம்-பாட்டின் ஒரு வகைக் கூறுபாடு; வலம்-இடம்; வாள்ஆர்-ஒளி பொருந்திய; ஓலை-தோடு; குழை-குண்டலம்.]

தன் தந்தையாகிய கந்துக்கடன் கூறியதை எல்லாம் தன் உயிர் நண்பன் வந்து கூற, பூமாலையும், முத்துமாலை களும் அணிந்து விளங்கும் மார்புடைய சீவகன் தன்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

னுடைய கூரிய முல்லைப் பற்கள் தோன்றச் சிரித்து, தந்தை சொன்னபடி செய்வதிலே தீதொன்றும் இல்லை; அப்படியே செல்வோம் என்று கூறவும், ஒளி விளங்கும் வாளேந்திய கையினரான மலர்க் கண்ணி சூடிய வீரர்கள் வலிமை மிக்க புலிக்கூட்டம் போல் போரிடப் புறப் பட்டனர். நெற்றிக் கண்ணுடைய சிவன் சீறப் பற்றி யெரிந்த காமன் மீண்டும் உயிர் பெற்று மண்ணிலே தோன்றியிருக்கின்றானோ என்று தோன்றும் அழகு மிக்குடைய காளை போன்ற சீவகன், அழகிய மணி ஆரம் பூண்ட மார்புடையவன்; அழகிய பிறை நுதலுடைய மங்கையர் உயிர் அள்ளிப் பருகும், அழகிய மலர்மாலை அணிந்த எழில் மிகுந்த செல்வம் உடையவன். அவன், கருத்து வாசநெய் பெய்து பழகிய தன் கூந்தலிலே அகில் புகையின் நறுமணத்தை ஊட்டி, பண்ணிசைக்கும் பொன் வண்டு நிறமொத்த பூமலர் மாலைகளை அதிலே பொருந்தச் சூடி, ஒளி வீசித் திகழும் எழில் முகத்துக் கேற்றபடி செம்பொன்னால் செய்த ஓலையை ஒரு காதில் அணிந்து மற்று இன்னொரு காதிலே செந்தீ நிறம் உமிழும் அழகிய மகரக் குழையும் ஒளிவீச அணிந்தான்.

**தென்வரைப் பொதியிற் றந்த சந்தனத் தேய்வை தேங்கொண்**
**மன்வரை யகலத் தப்பி வலம்புரி யாரந் தாங்கி**
**மின்விரித் தனைய தொத்து விலைவரம் பறிய லாகா**
**இன்னுரைக் கலிங்க மேற்ப மருங்குலுக் கெழுதி வைத்தான்**

[பொதியில்-பொதியமலை; தேம் கொள்-கண்ணிற்கு இனிமை கொண்ட; நுரைக் கலிங்கம்-நுரை போன்ற வெண்மையையுடைய ஆடையை.]

**இரும்பறக் கழுவி யெஃகி னிருளற வடிக்கப் பட்ட**
**அரும்பெறற் சுரிகை யம்பூங் கச்சிடைக் கோத்து வாங்கிப்**
**பெருந்தகைக் குருசில் கொண்டு பெருவலஞ் சுடர வீக்கித்**
**திருந்திழை மகளிர் வெஃகுந் தேவிளங் குமர னொத்தான்**

[கழுவி-உருக்கி; எஃகின்-இரும்பால்; வடிக்கப்பட்ட-பண்ணப்பட்ட; சுரிகை-உடைவாள்; தே-தெய்வம்; இளங்குமரன்-முருகன்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வரைவிழித் திமைப்ப தொக்கும் வாளொளி யார மார்பின்
விரைவழித் திளைய ரெல்லாம் விழுமணிக் கலங்க டாங்கி
நுரைகிழித் தனைய நொய்ம்மை நுண்டுகின் மருங்குல் சேர்த்தி
உரைகிழித் துணரு மொப்பி னோவியப் பாவை யொத்தார் 699

[வரை-மலை; விரை-சந்தனம் முதலிய வாசனைப் பொருள்கள்; வழித்து-பூசி; நொய்மை-மென்மை ஒப்பின்-ஒத்த.]

மேலும் அதோடு, தெற்குப் பொதியமலையில் விளைந்து வந்த சந்தனத்தின் குழம்பை அள்ளி, காண்கின்ற கண்களுக்குத் தேன்போல் இனிக்கின்ற சிறந்த மலை போலும் விரிந்த மார்பிலே பூசி அதன்மேல் வலம்புரிச் சங்கு தந்த முத்துமாலைகள் அணிந்து, மின்னலை அகல விரித்து வைத்தது போன்ற விலை மதிக்கமுடியாத இனிய பால்நுரை போன்ற அழகிய பட்டாடையையும் இடைக் கேற்றபடி அதன்மேல் எழுதி வைத்தது போல் அழகுற உடுத்திக் கொண்டான். இரும்பினை (தூசு நீக்கிக் கழுவி) உருக்கி ஊற்றி எஃகினால் (வலிய இரும்பி னால்) வடித்துச் செய்யப்பட்ட உடைவாளினை, கையால் எடுத்துப் பெருந்தகையாகிய பெரியோன் சீவகன், பெரிய வெற்றிகள் தோன்ற அதனை இடுப்புக் கச்சையோடு இறுக்கிக் கட்டி, அழகிய மணி அணி புனைந்த பெண்கள் விரும்பும் இளங்குமரனாகிய முருகனைப் போல் காணப்பட்டான். மலை தன் கண் களை விழித்து இமைப்பதுபோல், முத்து மாலைகள் மார்பிலே மின்னி ஒளிவிட, மணமிகு வாசனைக் கலவை களைப் பூசி, இளைஞரெல்லாம் சிறந்த மணிப் பூண்கள் அணிந்து, நுரையை ஆடையாக்கிக் கிழித்தது போன்ற மெல்லிய, அழகிய ஆடையை இடையிலே அணிந்து, சொல்லில் விளக்க முடியாத, உள்ளத்தால் மட்டுமே உணரக்கூடிய ஓவியப் பாவை போன்று தோன்றினர்.



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

அரக்குநீ ரெறியப் பட்ட வஞ்சனக் குன்ற மன்ன
திருக்கிள ரோடை சூழ்ந்த செம்புகர் நெற்றித் தாகி
உருக்கியூ னுண்ணும் வேகத் துறுபுலி யனைய நாகம்
அருக்கனோர் குன்றஞ் சேர்ந்தாங் கண்ணறா னேறி
னானே 700

*[அரக்கு நீர்-இங்குலிகம் கரைத்தநீர்; திரு கிளர்-அழகு விளங்குகின்ற; ஓடை-நெற்றிப்பட்டம்; செம்புகர்-சிவந்த புள்ளி; நெற்றித்தாகி-நெற்றியையுடையதாகி; அருக்கன்-சூரியன்.]*

விடுகணை விசையின் வெய்ய விளங்கொளி யிவுளித் திண்டேர்
கடுநடைக் கவரி நெற்றிக் காலியற் புரவி காய்ந்து
வடிநுனை யொளிறு மாலை வாட்படை மறவர் சூழ
அடுதிரைச் சங்க மார்ப்ப வணிநகர் முன்னி னானே 701

*[விசையின் - வேகத்தால்; வெய்ய - விரும்பத்தக்க; இவுளி - குதிரை; காலியற்புரவி - காற்றைப் போன்ற செலவுடைய குதிரை.]*

தோற்றனண் மடந்தை நல்யாழ் தோன்றலுக் கென்று நிற்பார்
நோற்றனள் நங்கை மைந்த னிளநல னுகர்தற் கென்பார்
கோற்றொடி மகளிர் செம்பொற் கோதையுங் குழையு மின்ன
ஏற்றன சொல்லி நிற்பா ரெங்கணு மாயி னாரே 702

*[நோற்றனள்-தவம் செய்தாள்; இளநலம்-இளமையின்பத்தை; கோற்றொடி-திரண்ட வளையல் களையுடைய.]*

சிவந்த அரக்குப்போன்ற நீரைச் சொரியும் கருமலை போன்ற, அழகு விளங்கும் முகபடாம் அணிந்த, சிவந்த நீர்ப்புள்ளிகள் தெறித்த நெற்றியும் உடைய யானையின் மேல், ஊன்சதை கொன்று தின்னும் பாய்புலி போன்ற வலிவுடைய சீவகன், செஞ்ஞாயிறு கருமலை உச்சியை அடைந்ததுபோல் ஏறியமர்ந்தான். வில்லில் இருந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

விடுபட்ட அம்பினைப்போல் விரைந்து செல்லக் கூடிய நல்ல அழகிய குதிரைகள் பூட்டிய தேரும், மிகுந்த வேகமும் கவரியணிந்த நெற்றியும் காற்றைப்போல் பறக்கின்ற இயல்பும் உடைய குதிரையும் நெருப்பில் காய்ச்சி வடிக்கக் கூர்அடைந்து ஒளி உமிழும் வாட்படை ஏந்திய வீரரும் சூழ்ந்துவர, கரை மோதித் தாக்கும் அலைகடல் தந்த சங்குகள் முழங்க, சீவகன் அவ்வழகிய நகரின் யாழ் மண்டபத்தை அடைந்தான். இவ்விதம் அவன் யாழ்மண்டபத்தை அடைந்ததும், சீவகனிடம் தத்தை யாழிசையிலே தோற்றுவிட்டாள் என்று சொல்லி நிற்பவரும், சீவகனின் எழில்வடியும் இளமை இன்பம் அள்ளிப் பருகத் தத்தை கொடுத்து வைத்திருக்கின்றாள் என்பவருமாக, திரண்ட வளையணிந்த பெண்கள், பொன் மாலையும் மகரக் குழையும் மின்னி மிளிர, இன்னும் இவைபோலப் பொருத்தமுடைய பலவற்றைக் கூறுவாராக எங்கும் நிறைந்தனர்.

## வேறு

**சுறாநி றக்கொ டுங்குழை சுழன்றெ ருத்த லைத்தர**
**அறாம லர்த்தெ ரியலா னழன்று நோக்கி யையெனப்**
**பொறாம னப்பொ லிவெனு மணிக்கை மத்தி கையினால்**
**அறாவி வந்து தோன்றினான் அனங்க னன்ன அண்ணலே**

*[சுறா-மகரமீன்; சுறாக்குழை-மகரகுண்டலம்; எருத்து அலைத்தர-கழுத்தில் விழும்படி; அறா-கோபம் நீங்காத; அழன்று-கோபித்து; மத்திகை-குதிரைச் சவுக்கு; அறாவி-அடித்து.]*

**குனிகொள் பாக வெண்மதிக் கூரி ரும்பு தானுறீஇப்**
**பனிகொண் மால்வ ரையெனப் படும தக்க ளிறிரீஇ**
**இனிதி ழிந்தி ளைய ரேத்த வின்னகிற் கொழும்புகை**
**முனிய வுண்ட குஞ்சியான் முரண்கொண் மாட**
**முன்னினான் 704**

*[குனிகொள்-வளைவுகொண்ட; கூரிரும்பு-அங்குசம் உறீஇ-அழுத்தி; பனிவரை-இமயமலை; களிறு இரீஇ-யானையை இருத்தி; இழிந்து-இறங்கி.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

புதிதி னிட்ட பூந்தவிசி னுச்சி மேன டந்தவட்
புதிதி னிட்ட மெல்லணைப் பொலிந்த வண்ணம் போகுயர்
மதிய தேறி வெஞ்சுடர் வெம்மை நீங்க மன்னிய
உதய மென்னு மால்வரை யுவந்தி ருந்த தொத்ததே 705

[புதிதின்-புதிதாக; போகுயர்-மிகஉயர்ந்த.]

முருகு விம்மு கோதையார் மொய்ய லங்கல் வண்டுபோற்
பருகு வானி வள்நலம் பாரித் திட்ட விந்நகர்
உருகு மைங்க ணையொழித் துருவி னைய காமனார்
கருதி வந்த தென்றுதங் கண்கள் கொண்டு நோக்கினார்

[முருகு-வாசனை; அலங்கல் வண்டு போல்-பூமாலையிலுள்ள தேனை வண்டு உண்ணுவதுபோல; பாரித்திட்ட-பரந்த; ஐய-வியப்புடைய.]

மகரமீன் வடிவான அழகிய காதுக் குழை அசைந்து பிடரியிலே மோத, மணம் நீங்காத மலர்மாலைகள் அணிந்தவனான கட்டியங்காரன், சினத்தோடு பார்த்து வியப்புற, அவனுடைய பொறாமை கொண்ட உள்ளத்தைத் தன் எழிலுருவென்னும் மாணிக்கப் பிடி உடைய குதிரைச் சவுக்கால் அடித்து (அது மேலும் பொறாமை கொள்ளச் செய்து) காமனைப்போன்ற காளை சீவகன் அங்கே வந்து தோன்றினான். வளைந்த பிறை நிலவின் நுனிப்போன்ற கூரிய அங்குசத்தை அழுத்தி, நீர் சொரியும் பெருமலை போன்று மதம் பெருகும் யானையை இழுத்து நிறுத்தி, இளைஞர்கள் கூடிவாழ்த்த அதைவிட்டு இறங்கி, இனிய மணந்தரும் அகிற்புகை நிறையப் பெய்த சிகை உடையவனாகிய சீவகன், யாழிசைப் போட்டி நடைபெறும் மண்டபத்தை அடைந்து, புதிதாக இட்டு நிறைத்த பூமலர் விரிப்பின் மேலே நடந்து சென்று, அங்குப் புதிதாகப் போடப் பட்டிருந்த மெல்லணைமேல் ஏறிப் பொலிவுடன் வீற்றிருந்த விதம்; மிக உயர்ந்த மதியின்மேல் ஏறி, தன் வெம்மை குறையப் பொருந்திய இளஞாயிறு, உதயம்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

என்னும் பெரு மலைமீது வீற்றிருந்ததை ஒத்தது. இன்னும், மணம் விரியும் அழகிய மாலையணிந்த மங்கையர், நெருங்கப் பின்னிய மாலைகள் மேல் மொய்த்துத் தேனினைப் பருகும் வண்டுபோல் தத்தையின் இன்பநலம் பருக, இவள் பேரழகு பரவிய இவ்வூரிலே, உள்ளத்தை உருக்கி நெஞ்சிலே காதல் உவப் பேற்றும் தன் மலர்க்கணைகள் ஐந்தையும் (தாமரை, மா, அசோகம், முல்லை, நீலோற்பலம் ஆகிய ஐந்து மலரா லாகிய கணைகள் மன்மத பாணங்கள் என்பர்) மறைத்து வைத்து இன்பூட்டும் உருவுடைய காமன் வந்திருக் கின்றானோ என்று சீவகனைத் தம் கண்களால் வியப் போடு பார்த்தனர்.

**முனைத்தி றத்து மிக்கசீர் முனைவர் தம்மு னைவனார்**
**வனப்பு மிக்க வர்களின் வனப்பு மிக்கி னியனா**
**நினைத்தி ருந்தி யற்றிய நிருமி தம்ம கனிவன்**
**கனைத்து வண்டு ளர்ந்ததார்க் காளை சீவ கன்னரோ 707**

[முனைத்திறத்து மிக்க சீர் முனைவர்-தவம் செய்த திறத்தால் மிக்க சிறப்பையுடைய முனிவர்கள்; இனியனா நினைத்திருந்து-கண்ணிற்கு இனிய னாக ஒருவனைப் படைக்க வேண்டுமென்று நினைத்திருந்து; நிருமிதம்-சங்கற்பம்.]

**பொன்னை விட்ட சாயலாள் புணர்மு லைத்த டத்தினால்**
**மின்னை விட்டி லங்குபூண் விரைசெய் மார்ப மோலையா**
**என்னை பட்ட வாறரோ வெழுதி நங்கை யாட்கொள்வான்**
**மன்னும் வந்து பட்டனன் மணிசெய் வீணை வாரியே 708**

[பொன்-இலக்குமி; மின்-ஒளி; பட்டவாறு என்னை-இந்நல்வினை உண்டாகிய விதம் எங்ஙனம்! ஆச்சரியக்குறிப்பு.]

**இனைய கூறி மற்றவ டோழி மாரு மின்புற**
**வனைய லாம்ப டித்நலா வடிவிற் கெல்லை யாகிய**
**கனைவண் டோதி கைதொழுங் கடவுள் கண்ணிற் கண்டவர்**
**எனைய தெனைய தெய்தினார் அனைய தனைய தாயினார் 709**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[வனைதல்-எழுதுதல்; கனைவண்டு ஓதி-ஒலிக்கின்ற வண்டுகள் பொருந்திய கூந்தலையுடையவள்; எனையது-எவ்வளவு; அனையது-அவ்வளவு.]

தவத்திறம் மிக்க சிறப்புடைய முனிவர்களுக்கு மேலான சிறப்புடைய பிரமன், அழகு மிக்கவர்களில் எல்லாம் மேலான அழகுடையவனாகப் படைக்க எண்ணிப் படைத்த அழகு மகன், வண்டுகள் மொய்த்துப் பாடும் மலர்மாலை அணிந்தவனாகிய காளை போன்ற சிவகன் ஆவான். திருமகளை வென்ற சாயலுடையவளாகிய தத்தை, தன் இரு முலைகளினால்; ஒளி வீசித்திகழும் பூண்களுடைய, வாசனைச் சாந்துகள் பூசிய இவன் மார்பையே ஓலையாகக் கொண்டு, எழுத அவளை ஆட்கொள்ளத் தப்பாமல் வந்து பட்டான், மணிகள் பதித்த யாழிசை வாரியிலே. இது என்ன நல்வினைப் பயனோ என்று கூறி அவள் தோழிகள் மகிழ்ந்திருக்க; கைபுனைந்தியற்ற முடியாத அழகுக்கோர் எல்லை காட்டும் வண்டுகள் மொய்க்கும் மலர்க் கூந்தலுடையவளாகிய தத்தை, கைகூப்பித் தொழும் கடவுளைக் கண்ணினால் கண்டவர் எவ்வளவு எவ்வளவு இன்பம் அடைந்தனரோ அவ்வளவு அவ்வளவு இன்பம் தோழியர் அடைந்தனர்.

## வேறு

குட்டநீர்க் குவளை யெல்லாங் கூடிமுன் நிற்க லாற்றாக்
கட்டழ கமைந்த கண்ணா ணிறையெனுஞ் சிறையைக்
கைபோய்
இட்டநாண் வேலி யுந்திக் கடலென வெழுந்த வேட்கை
விட்டெரி கொளுவ நின்றா ளெரியுறு மெழுகி னின்றாள்

[குட்டம்- ஆழம்; நிறையெனும் சிறையைக் கைபோய்-நிறையென்கிற தடையை நீங்கி; நிறை-நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல்; நாண்வேலி உந்தி-நாணாகிற வேலியைப் பாய்ந்து.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**நலத்தைமத் தாக நாட்டி நல்வலி யிளமை வாராக்**
**குலப்பிறப் பென்னுங் கையாற் கோலப்பா சங்கொ ளூத்திக்**
**கலக்கியின் காமம் பொங்கக் கடைந்திடு கின்ற காளை**
**இலைப்பொலி யலங்கன் மார்ப மியைவதென் றாகுங்**
**கொல்லோ 711**

[நலம்-வடிவழகு; வலி இளமை வாரா-வன்மை யையும், இளமையையும் மத்தின் இரு பக்கத்தும் பூட்டும் கயிறாகக் கொண்டு; கோலப்பாசம்-புனைந்த கோலமாகிய கயிறு.]

**தீங்கரும் பெருத்தில் தூங்கி ஈஇன்றி யிருந்த தீந்தேன்**
**நாங்கணாற் பருகி யிட்டு நலனுணப் பட்ட நம்பி**
**பூஞ்குழன் மகளிர் முன்னர்ப் புலம்பனீ நெஞ்சே யென்றாள்**
**வீங்கிய காமம் வென்றார் விளைத்தவின் பத்தோ**
**டொப்பாள் 712**

[எருத்து-கழுத்து; ஈ-தேனீ, கரும்பிலுள்ள தேனடை; பருகியிட்டு-பருகி; வீங்கிய-மிக்க; காமம் வென்றார்-மெய்யுறு புணர்ச்சியை வென்ற தேவர்கள்.]

ஆழமான நீர் நிலைகளிலே உள்ள அழகிய குவளை மலர்கள் எல்லாம் ஒன்று கூடி வந்தாலும் முன் நிற்க முடியாத பேரழகுடைய கண்ணினை உடையவளாகிய தத்தை, மனநிறை என்னும் காவல் கடந்து, பெண்மைக்குரிய நாணாகிய வேலியை நீக்கி, கடல்போல் எழுந்த காமவேட்கையாகிய பெரு நெருப்புப் பற்றிக் கொழுந்து விட்டு எரிய அப்பெரு நெருப்பில் உருகும் மெழுகுபோல் தனித்து நின்றாள். தன் எழில் வடிவை மத்தாக நிறுத்தி, வலிமையும் இளமையும் அம்மத்தின் இருபுறமும் கயிறாக அமைத்து, குடிப்பிறப்பென்னும் கையால்; அணிமணிகள், மலர்ச் சாந்துகள் அணிந்து கொண்ட தன் செயற்கை அழகெனும் இடைக்கயிற்றிலே மத்தினை இணைத்து, இனிய காமம் என்னும் கடல் பொங்கக் கலக்கிக் கடைகின்ற, காளை இவனுடைய, இலைமலர்களால் பொலிகின்ற மாலையணிந்த மார்பை,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

சேர்ந்தனையும் பெரும்பேறு என்று கிட்டுமோ நெஞ்சமே, இனிக்கும் கரும்பின் கணுவிலே தங்கிய வண்டு மொய்க்காத சுவைத்தேனாவான், நாம் கண்ணால் அள்ளிப் பருகி அனுபவித்த அழகுடைய இந்நம்பி. எனவே பூமுடித்த குழலுடைய மகளிர் முன்னே (அவர் சிரிக்க) நீவருந்தாதே என்றாள், மிகுந்த காமத்தை வென்ற மேலோர்கள் கண்ட வானுலக இன்பத்துக்கு ஒப்பான வளாகிய தத்தை.

**கண்ணெனும் வலையி னுள்ளான் கையகப் பட்டி ருந்தான்**
**பெண்ணெனு முழலை பாயும் பெருவனப் புடைய நம்பி**
**எண்ணின்மற் றியாவ னாங்கொ லென்னிதற் படுத்த வேந்தல்**
**ஒண்ணிற வுருவச் செந்தீ யுருவுகொண் டனைய வேலான்**

[கையகப்பட்டு-என்னால் முற்றும் உணரப்பட்டு; உழலை-தடைமரம்; என்னிதற் படுத்த-என்னை இவ்வருத்தத்தில் அகப்படுத்திய.]

**யாவனே யானு மாக வருநிறைக் கதவ நீக்கிக்**
**காவலென் னெஞ்ச மென்னுங் கன்னிமா டம்பு குந்து**
**நோவவென் னுள்ளம் யாத்தாய் நின்னையு மாலை யாலே**
**தேவரிற் செறிய யாப்பன் சிறிதிடைப் படுக வென்றாள்**

[நிறைக்கதவம்-நிறையாகிய கதவு; நோவ-வருந்த; செறிய-நெருங்க; யாப்பன்-பிணிப்பேன்.]

**கழித்தவே லேறு பெற்ற கடந்திடைப் பிணையின் மாழ்கி**
**விழித்துவெய் துயிர்த்து மெல்ல நடுங்கித்தன் றோழி கூந்தல்**
**இழுக்கிவண் டிரியச் சேர்ந்தோர் கொடிப்புல்லுங் கொடியிற் புல்லி**
**எழிற்றகை மார்பற் கின்யா ழிதுவுய்த்துக் கொடுமோ வென்றாள்** 715

[கழித்த-உறையினின்றும் எடுத்த; வேலேறு பெற்ற பிணையின்-வேல் ஏறுதலைப்பெற்ற பெண்

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மானைப்போல்; கடம்-காடு; மாழ்கி-மயங்கி; வெய்துயிர்த்து-பெருமூச்செறிந்து; இழுக்கி இரிய-தப்பிக் கெடும்படி.]

## வேறு

தடங்க ணாள்ப ணியினாற் றானவ் வீணை யொன்றினை
நெடுங்க ணாளெ ழினியை நீக்கி யுய்த்து நீட்டினாள்
மடங்க லன்ன மொய்ம்பினான் வருக வென்று கொண்டுதன்
கிடந்த ஞானத் தெல்லையைக் கிளக்க லுற்று நோக்கினான்

[தடங்கணாள்-காந்தருவதத்தை; நெடுங்கணாள்-வீணாபதி; எழினியவ்வீணை ஒன்றினை நீக்கி-உறையி லிடப்பட்ட உயர்ந்ததாகிய அவ்வீணை யொன்றை மட்டிலும் நீக்கிவைத்து.]

'நான் கண்ணால் பருக அவன் என் கண்ணென்னும் வலையில் அகப்பட்டான், எனவே என் கைக்குள்ளும் இருந்தான். பெண்மை என்னும் தடையையும் மீறும் பேரழகுடையவனாகிய நம்பி என்னை இத்துன்பத்துக்கு ஆளாக்கிய தலைவன்-சிறந்த நிறமும், அழகிய உருவமும் உடைய செந்தீக் கொழுந்து போன்ற வேலுடைய இவன்; எண்ணிப் பார்க்கிறபோது யாராக இருக்க முடியும்? தேவனோ இல்லை மானிடன் தானோ என்று ஐயுற்றுப் பின்னர் தேவனானாலும் அல்லது மானிடனானாலும் இரண்டு மற்று வேறு யாரானாலும் சரியே, நீ என் மனநிறை என்னும் அருங்கதவம் திறந்து வந்து காவல் மிக்குடைய (அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் காவல்கள்) என் உள்ளமாகிய கன்னிமாடத்தை அடைந்து, என் உயிர் வருந்த உன் அழகால் பிணித்தாய்; நின்னையும் நான் என் மணமாலையால், இமையாத வானவரைப்போல் என்னை இமைப்பின்றி இடையறாது நாடி இருக்கும்படி இறுகப் பிணிக்கின்றேன் சிறிது பொழுது கழியட்டும்' என்றாள். உறையிலிருந்த வேலேறித் தாக்குண்ட, காட்டிலே உள்ள பெண்மானைப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போல வருந்தித் திகைத்துப் பெருமூச்சுவிட்டு, உடல் மெலிந்து நடுங்கித் தன் தோழியாகிய வீணாபதியின் கூந்தலில் மொய்க்கின்ற வண்டுகள் அஞ்சியோட நெருங்கிப் பற்றி, ஒருகொடிமேல் படரும் இன்னொரு கொடி போல் அவளைத் தழுவி, 'அழகு மிகுந்து விளங்கும் மார்புடைய பெருந்தகையிடம் இன்னிசை யாழ் இதனை அவன் திறன் அறிந்து கொடுப்பாயாக' என்றாள். அகன்ற கண்களையுடைய காந்தருவதத்தையின் ஆணைப்படி, நெடுங்கண்களுடைய தோழியாகிய வீணாபதி அங்கிருந்த உயர்ந்த உறையிட்டு மூடிய ஒரு வீணையை ஒளித்து வைத்து வேறுபல வீணைகளைக் கொண்டு வந்து கொடுக்க, சிங்க ஏறனைய சீவகனும் அவற்றை வாங்கித் தன் அறிவின் எல்லைகொண்டு ஆராய்ந்து சொல்லுவான்.

## வேறு

சூரந்து வானஞ் சூன்முதிர்ந்து மெய்ந்நொந் தீன்ற
துளியேபோற்
பரந்த கேள்வித் துறைபோய பைந்தார் மார்பன்
பசும்பொன்யாழ்
நரம்பு தேனார்த் தெனத்தீண்டி நல்லாள் வீணை
பொல்லாமை
இருந்த முலையா ணின்றாளை நோக்கி யிசையி
னிதுசொன்னான் 717

[வானம்-மேகம்; சூல்முதிர்ந்து-கருப்பமுற்றி; துளி-பெருமழை; வீணை பொல்லாமை-வீணைகளின் குற்றத்தை; இருந்த முலை-உள்ளடங்கிய முலை; நின்றாளை-வீணாபதியை.]

நீர்நின் றிளகிற் றிதுவேண்டா நீரின் வந்த திதுபோக
வார்நின் றிளகு முலையினாய் வாட்புண் ணுற்ற திதுநடக்க
ஒரு முருமே றிதுவுண்ட தொழிக வொண்பொ
னுகுகொடியே
சீர்சால் கணிகை சிறுவன்போற் சிறப்பின் றம்ம
விதுவென்றான் 718

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[இளகிற்று-மெலிவடைந்தது; இது-இவ்வீணை; வார்-கச்சு; இது வாட்புண்ணுற்றது-இவ்வீணையின் மரம் வாளால் வெட்டுப்பட்டது; கணிகை-வேசை.]

**கல்சேர் பூண்கொள் கதிர்முலையாய் காமத் தீயால்**
**வெந்தவர்போற்**
**கொல்லை யுழவர் சுடப்பட்டுக் குரங்கி வெந்த திதுகளிறு**
**புல்ல முரிந்த தெனப்போக்கித் தூம மார்ந்த துகிலுறையுள்**
**நல்யாழ் நீட்ட வதுகொண்டு நங்கை நலத்த**
**திதுவென்றான் 719**

[கொல்லை-முல்லை நிலம்; குரங்கல்-தாழ்தல்; புல்ல-தழுவ; போக்கி-போக்குதலால்; தூமம்-அகிற் புகை; நீட்ட-வீணாபதி கொடுக்க.]

கார்முகில் சூல் முதிர்ந்து மெய்வருந்திச் சுரக்கின்ற மழைத்துளிகள் எங்கும் பெய்து பயன் தருதல் போல் பரந்து விரிந்த கல்வி கேள்விகளில், எல்லாத் துறைகளிலும் குறைவறக் கற்றுத் தேர்ந்த புதுமலர் மாலையணிந்த மார்புடைய சீவகன், பசும்பொன்னாலான யாழ் நரம்பை, வண்டு முரல்வதுபோல் ஒலியெழச் சுண்டிவிட்டுப் பார்த்து, நல்லவளாகிய தத்தை தந்த அவ்வீணையிலே இருந்த குறைபாட்டை அறிந்து, அங்கிருந்த உள்ளடங்கிய முலை உடைய தோழியாகிய வீணாபதியிடம் நரம்பிசையில் குறை உடையது இவ்வீணை என்றான். அடுத்து, 'இந்த வீணை நீர் இருந்து மெலிந்தது எனவே வேண்டாம்; மற்றது நீரிலே இருந்து அழுகிய மரத்தால் செய்தது எனவே இதுவும் வேண்டாம். வரிந்து கட்டிய மார்புக்கச்சை தளரும்படிப் பருத்த முலையுடையவளே (இகழ்ச்சிக் குறிப்பு) இவ்வீணை வாள் வெட்டுப்பட்ட மரத்தால் ஆனது எனவே இதுவும் கிடக்கட்டும். அடுத்த இது இடியினால் தாக்குண்ட மரம் கொண்டு செய்தது எனவே இதுவும் ஒழியட்டும்; அழகிய பொன்னொளி வீசும் பொற்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கொடி போன்றவளே, இவ்வீணையோ புகழ்மிக்க பரத்தை வயிற்று மகன்போல் சிறப்பிழந்து நிற்பது எனவே இதுவும் வேண்டாம் எடுத்துப்போ என்று அங்கிருந்த வீணைகள் ஒவ்வொன்றினையும் உய்த்தறிந்து சொன்னவன் மேலும் சொல்வான்; கல்போன்ற, மணிப்பூண் அணிந்த முலை உடைய பெண்ணே, காமத் தீயால் வெந்தவர் போல் முல்லைப் பழனத்தில் உழவர்கள் சுட்டுத் தீய்த்த வளைந்து தீய்ந்த மரத்தாலானது இவ்வீணை; அடுத்து இவ் வீணையோ, யானை மோத முறிந்து விழுந்த மரத்தாலானது என்று அதையும் ஒதுக்கிவிட்டு, பின்னர், அகிற் புகை ஊட்டப்பெற்று, அழகிய உறையினால் மூடி வைக்கப்பட்டிருந்த நல்யாழ் ஒன்றினை வீணாபதி கொண்டுவந்து கொடுக்க அதை வாங்கிய சீவகன், உன் தலைவியாகிய தத்தையைப் போலவே, குலநலச் சிறப் புடையது இவ்வீணை என்று சொன்னவன் மேலும்,

## வேறு

**இருநில மடந்தை யீன்ற திருவிசும் பென்னுங் கைத்தாய்**
**திருநல மின்னுப் பொன்ஞாண் முகின்முலை மாரித் தீம்பால்**
**ஒருநலங் கவினி யூட்ட வுண்டுநோய் நான்கு நீங்கி**
**அருநலங் கவினி வாள்வா யரிந்திது வந்த தென்றான் 720**

[ஈன்றது - பெறப்பட்டதாகிய இம்மரம்; விசும் பென்னும் கைத்தாய்-ஆகாயமாகிய செவிலித் தாயினுடைய; நலம் கவினி-வளர்ந்து; அரிந்து-வெட்டப்பட்டு.]

**தீந்தொடை நரம்பின் றீமை சிறிதலாப் பொழுது மோதிப்**
**பூந்தொடை யரிவை காணப் புரிநெகிழ்த் துரோமங் காட்டத்**
**தேங்கம ழோதி தோற்றாள் செல்வனுக் கென்ன மைந்தன்**
**வாங்குபு நபுலன் கையுள் வார்புரி நரம்பு கொண்டான் 721**

[சிறிதலாப் பொழுது-நீண்ட நேரம்; ஓதி-ஆராய்ந்து கூறி; புரி-நரம்பின் முறுக்கு; வாங்குபு கொண் டான்-வாங்கிக் கொண்டான்; நபுலன்-சீவக னுடைய தம்பி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பணிவரும் பைம்பொற் பத்தர் பல்வினைப் பவள வாணி
மணிகடை மருப்பின் வாளார் மாடக வயிரத் தீந்தேன்
அணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்
கணிபுகழ் காளை கொண்டு கடலகம் வளைக்க லுற்றான்

[பத்தர்-யாழின் ஓர் உறுப்பு; பவளத்தாலாகிய ஆணி; வாளார்-ஒளி பொருந்திய; மாடகம்-வீக்குங் கருவி; கணிபுகழ்-இசை நூல் அறிவில் தேர்ந்த.]

குரல்குர லாகப் பண்ணிக் கோதைதாழ் குஞ்சி யான்றன்
விரல்கவர்ந் தெடுத்த கீத மிடறெனத் தெரிதல் தேற்றார்
சுரரொடு மக்கள் வீழ்ந்தார் சோர்ந்தன புள்ளு மாவும்
உருகின மரமுங் கல்லு மோர்த்தெழீஇப் பாடு கின்றான்

[புள்ளும் மாவும் சோர்ந்தன-கின்னரப்பறவையும் அசுணமாவும் சோர்ந்தன; கின்னரமும் அசுண மாவும் இசையறிவிற் சிறந்தன. ஓர்த்து-யாழ் வாசித்த நிலையை ஓர்ந்து; எழீஇ-ஆலாபனம் செய்து.]

'இந்த யாழானது மண்மகள் பெற்று நீள்வான் என்னும் செவிலித்தாய் அழகுநலம் பொங்கும் மின்ன லெனும் பொன் நாணினை உடைய மேகமாகிய முலையைக் கொண்டு, மழையாகிய இனிய தீம்பாலை ஒப்பற்ற அன்போடு விரும்பி ஊட்ட, அப்பாலினைப் பருகி வெயில், காற்று, பெருமழை, மிகுநிழல் ஆகிய இளம் பயிர் களைப் பற்றிக் கொள்ளக்கூடிய நான்குவித நோய்களும் இன்றி அழகுநலம் விளங்க வளர்ந்து, பின் வாள்கொண்டு அரிந்து வரப்பட்ட மரம் கொண்டு செய்யப் பெற்றது' என்று கூறினான். பின் இன்னிசை எழுப்பும் நரம்பின் குறைகளை நீண்ட நேரம் ஆராய்ந்து, பூமலர்மாலை அணிந்த தத்தை காண, நரம்பின் முறுக்கைத் தளர்த்தி அவளுக்கு அதிற்கிடந்த மயிரைக் காட்ட, அதைக் கண்ணுற்ற அவையில் உள்ளோர் தேன் மணக்கும் மலர்க் கூந்தலுடைய தத்தை செல்வனாகிய சீவகனிடம் தோற்று

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

 Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations 

விட்டாள் என்றுகூற, சீவகன் தன் தோழனாகிய நபுலன் கையில் இருந்த நரம்பொன்றை வாங்கி யாழிலே பொருத்தி, யாழ் வாசிப்புக்கேற்ற புதிய பொன்னாலான பத்தரையும், பல வேலைப்பாடுடைய பவளத்தாலாகிய ஆணியையும் முத்துடைய யானைத் தந்தத்தால் கடையப் பெற்ற ஒளிமிகு வைர மாடகத்தையும், இனிய தேன்போல் வடியும், அமுதினை வென்ற இசைபொழியும் நரம்பினையும் உடைய அவ்வழகிய யாழை, கலைநூல் வல்லவர் புகழும் காளையாகிய சீவகன் கையில் ஏந்திக் கடல் சூழ்ந்த உலகைத் தன் இன்னிசையால் வசப்படுத்துவதுபோல் பாடத் தொடங்கினான் இன்குரல் போன்ற செம்பாலைத் திரிவிலே இசையைப் பண்ணி, பூமாலை தாங்கிய சிகை உடைய சீவகன் தன் விரல் இன்னிசை யாழ்நரம்பினைத் தடவி எழுப்பிய கீதம் யாழிசை என்று தேறாது, சீவகன் பாடிய வாய்ப்பாட்டு என்று எண்ணி வானவரும், மானிடரும் நிலத்தில் மயங்கி வீழ்ந்தனர்; கின்னரப் பறவைகளும் அசுண விலங்குகளும் சோர்வுற்றுச் சாய்ந்தன. மரமும் கல்லும் உருகி ஓடின. இவ்விதமாக வெல்லாம் யாழிசையோடு ஒன்றி அவனும் பாடலுற்றான்.

## வேறு

**கன்னி நாகங் கலங்க மலங்கி**
**மின்னு மிரங்கு மழையென் கோயான்**
**மின்னு மழையின் மெலியு மரிவை**
**பொன்னாண் பொருத முலையென் கோயான்** 724

[நாகம்-பாம்பு; மலங்கி-கெட்டு; இரங்கும்-ஒலிக்கும்; மின்னும் மழையின்-மின்னுகின்ற மழையால்.]

**கருவி வானங் கான்ற புயலின்**
**அருவி யரற்று மலையென் கோயான்**
**அருவி யரற்று மலைகண் டழுங்கும்**
**மருவார் சாயன் மனமென் கோயான்** 725

[கருவிவானம் - மின்முதலிய தொகுதியையுடைய மேகம்; கான்ற-சொரிந்த; புயல்-நீர்; அழுங்கும்-வருந்தும்; சாயல்-சாயலையுடையவள்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வான மீனி னரும்பி மலர்ந்து
கானம் பூத்த காரென் கோயான்
கானம் பூத்த கார்கண் டழுங்கும்
தேனார் கோதை பரிந்தென் கோயான் 726

[வானமீனின்-ஆகாயத்தில் உண்டாகிய நட்சத்திரங்களைப் போல; கானம்-காடு; கார்-கார்காலத்தால்; அழுங்குதல்-அழிதல்; பரிந்து-வருந்தி.]

'கன்னியாகிய இந்நாகம் (தத்தை) நிலைகுன்றிக் கலங்க முகில் மின்னி இடிக்கும் என்று நான் கூறுவேனோ? அப்படி மின்னி இடித்துப் பெய்கின்ற மழையில் பொன் நாண் பூட்டிய முலை உடைய இவள் மெலிவாள் என்பேனோ? மின் மேகம் இடி சூழப் பெய்த மழை நீரால் மலை அருவிகள் அஞ்ச ஒலியெழுப்பும் என்பேனோ? அப்படி அருவி எழுப்பும் ஒலிகேட்டு, மலைகண்டு, மருவக் களிக்கின்ற உள்ளம் உடைய இவள் வருந்துவாளே என்பேனோ? வானத்து விண்மீன்கள் பூத்து மலர்ந்தது போல் காடு பூத்து மலரக் கார்காலம் வந்துவிட்டது என்பேனோ? இல்லை காடு பூக்க வந்த கார்காலம் கண்டு தேன்பொருந்திய மாலையணிந்த மங்கையிவள் வருந்தி அழுவாளே என்பேனோ? நான் எதைச் சொல்லி விளக்குவேன்,' என்று தலைவியின் நிலையெண்ணித் தோழி வருந்தினாள்.

### வேறு

அண்ணலியாழ் நரம்பை யாய்ந்து மணிவிர றவழ்ந்த வாறும்
பண்ணிய விலயம் பற்றிப் பாடிய வனப்பு நோக்கி
விண்ணவர் வீணை வீழ்த்தார் விஞ்சையர் கனிந்து சோர்ந்தார்
மண்ணவர் மருளின் மாய்ந்தார் சித்தரு மனத்துள் வைத்தார் 727

[விரல் தவழ்ந்த வாறும்-விரலால் வாசித்த படியும்; இலயம்-பண்ணின் செலவு; தாள அறுதி என்பர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வீணைவீழ்த்தார் - வீணையைக் கைவிட்டார்; கனிந்து-மனமுறுகி; மருளின் மாய்ந்தார்-மயக்கத்தால் அறிவழிந்தனர்; சித்தர்-முனிவர்.]

**வீழ்மணி வண்டு பாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலை**
**சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி**
**ஊழ்மணி மிடறு மொன்றாய்ப் பணிசெய்த வாறு நோக்கித்**
**தாழ்மணித் தாம மார்பிற் கின்னரர் சாம்பி னாரே 728**

[வீழ்தல்-விரும்புதல்; கோடு-வீணையின் மருப்பு; சுகிர்புரிநரம்பு-சீவி முறுக்கிய நரம்பு; மிடறு-கழுத்து.]

**விண்ணவர் வியப்ப விஞ்சை வீரர்கள் விரும்பி யேத்த**
**மண்ணவர் மகிழ வான்கட் பறவைமெய்ம் மறந்து சோர**
**அண்ணறா னனங்க னாணப் பாடினா னரச ரெல்லாம்**
**பண்ணமைத் தெழுதப் பட்ட பாவைபோ லாயி னாரே 729**

[விண்ணவர்-கின்னரர்; பறவை-கின்னர மிதுனங்கள்; பண்ணமைத்து-பண்ணுதற்கு அமைத்து.]

சீவகன், யாழ் நரம்பினைத் தடவிப் பார்த்து, அழகிய விரல்களால் வீணையை மீட்டிய விதத்தையும், தாள லயத்தோடு சேரப் பண்ணிய வீணையின் நாதத்தோடு தன் இன்குரல் சேரப்பாடிய அழகையும் கண்டு, விண்ணுலகக் கின்னரர் வீணையை விட்டெறிந்தனர்; வித்தியாதரர்கள் நெஞ்சுருகி மெய் சோர்ந்தனர். மக்களோ தாம் இதற்குமுன் கேட்டறியாத இவ்வின்னிசை கேட்டு மதி மயங்கி மயக்கமுற்றனர். பற்றற்ற சித்தர்களோ இதுவும் ஒரு பேரின்பம் என்று உட்கொண்டு மகிழ்ந்தனர். தேன் உண்ண விரைந்து பாயும் கருவண்டின் கால்பட்டு, முகை விரித்து மலர்ந்த மலர் மாலையினையும் மணிகள் சூழ்ந்த கோட்டினையும் உடைய யாழின் சீவி முறுக்கேற்றிய நரம்பும், நம்பியின் அழகிய கழுத்திடைப் பிறந்த இன்குரலும் ஒன்று சேர்ந்து எழுப்பிய இன்னிசை கேட்டு, நீண்ட மாணிக்க மாலையணிந்த கின்னரர்கள் மெய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations
மறந்தனர். வானவர்கள் வியப்படைய, வித்தியாதர வீரர்கள் மகிழ்ந்து பாராட்ட, மண்ணுலக மக்களின் மனமெல்லாம் களிக்க, வானுறையும் பறவையெல்லாம் வசமிழந்து சோர; சீவகன் இசையில் வல்ல காமனும் வெட்கப் பாடினான். வந்திருந்த அரசர்கள் எல்லாம் இவன் பாடல் கேட்டு உரு பண்ணுதற்கு எழுதி வைத்த ஓவியப் பாவைபோல் ஆயினர்.

## வேறு

**பருந்து நிழலும்போற் பாட்டு மெழாலும்**
**திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தனவென் றெண்ணி**
**விருந்தாக யாழ்பண்ணி வீணைதான் றோற்பான்**
**இருந்தா ளிளமயில்போ லேந்திலைவேற் கண்ணாள் 730**

[பருந்தும் அதனுடைய நிழலும்; பாட்டு-கண்டப் பாடல்; எழால்-வீணைப்பாடல்.]

**கோதை புறந்தாழக் குண்டலமும் பொற்றோடும்**
**காதி னொளிர்ந்திலங்கக் காமர் நுதல்வியர்ப்ப**
**மாத ரெருத்த மிடங்கோட்டி மாமதுர**
**கீதங் கிடையிலாள் பாடத் தொடங்கினாள் 731**

[கோதை-கூந்தல்; புறந்தாழ-முதுகினிடத்தே தங்க; காமர்-அழகிய; எருத்தம்-கழுத்தை; கோட்டி-வளைத்து; கிடை-ஒப்பு.]

பருந்தும் அதன் நிழலும்போல், பாட்டும் அதற்கேற்ப அமைந்த யாழ் வாசிப்பும், அழகிய மலர்மாலை அணிந்த சீவகனுக்கே சிறப்புற அமைந்துள்ளன. வீணையில் தான் அவனிடம் தோற்பதற்காகவே, என்றெண்ணி, இலை போலும் முகமுடைய வேலைப்போன்ற கண்ணுடையவளாகிய தத்தை, இளமயில் போலமர்ந்து இதுவரை பாடாத புதுமுறையில் இன்னிசை பாடத் தொடங்கினாள். கூந்தல் கலைந்து முதுகிலே தவழக் குழையும் காதிலே அணிந்த பொன்தோடும் ஒளிவீசித் திகழ, அழகிய



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வீணைவீழ்த்தார் - வீணையைக் கைவிட்டார்; கனிந்து-மனமுறுகி; மருளின் மாய்ந்தார்-மயக்கத்தால் அறிவழிந்தனர்; சித்தர்-முனிவர்.]

**வீழ்மணி வண்டு பாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலை**
**சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி**
**ஊழ்மணி மிடறு மொன்றாய்ப் பணிசெய்த வாறு நோக்கித்**
**தாழ்மணித் தாம மார்பிற் கின்னரர் சாம்பி னாரே 728**

[வீழ்தல்-விரும்புதல்; கோடு-வீணையின் மருப்பு; சுகிர்புரிநரம்பு-சீவி முறுக்கிய நரம்பு; மிடறு-கழுத்து.]

**விண்ணவர் வியப்ப விஞ்சை வீரர்கள் விரும்பி யேத்த**
**மண்ணவர் மகிழ வான்கட் பறவைமெய்ம் மறந்து சோர**
**அண்ண றா னனங்க னாணப் பாடினா னரச ரெல்லாம்**
**பண்ணமைத் தெழுதப் பட்ட பாவைபோ லாயி னாரே 729**

[விண்ணவர்-கின்னரர்; பறவை-கின்னர மிதுனங்கள்; பண்ணமைத்து-பண்ணுதற்கு அமைத்து.]

சீவகன், யாழ் நரம்பினைத் தடவிப் பார்த்து, அழகிய விரல்களால் வீணையை மீட்டிய விதத்தையும், தாளலயத்தோடு சேரப் பண்ணிய வீணையின் நாதத்தோடு தன் இன்குரல் சேரப்பாடிய அழகையும் கண்டு, விண்ணுலகக் கின்னரர் வீணையை விட்டெறிந்தனர்; வித்தியாதரர்கள் நெஞ்சுருகி மெய் சோர்ந்தனர். மக்களோ தாம் இதற்குமுன் கேட்டறியாத இவ்வின்னிசை கேட்டு மதி மயங்கி மயக்கமுற்றனர். பற்றற்ற சித்தர்களோ இதுவும் ஒரு பேரின்பம் என்று உட்கொண்டு மகிழ்ந்தனர். தேன் உண்ண விரைந்து பாயும் கருவண்டின் கால்பட்டு, முகை விரித்து மலர்ந்த மலர் மாலையினையும் மணிகள் சூழ்ந்த கோட்டினையும் உடைய யாழின் சீவி முறுக்கேற்றிய நரம்பும், நம்பியின் அழகிய கழுத்திடைப் பிறந்த இன்குரலும் ஒன்று சேர்ந்து எழுப்பிய இன்னிசை கேட்டு, நீண்ட மாணிக்க மாலையணிந்த கின்னரர்கள் மெய்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மறந்தனர். வானவர்கள் வியப்படைய, வித்தியாதர வீரர்கள் மகிழ்ந்து பாராட்ட, மண்ணுலக மக்களின் மனமெல்லாம் களிக்க, வானுறையும் பறவையெல்லாம் வசமிழந்து சோர; சீவகன் இசையில் வல்ல காமனும் வெட்கப் பாடினான். வந்திருந்த அரசர்கள் எல்லாம் இவன் பாடல் கேட்டு உரு பண்ணுதற்கு எழுதி வைத்த ஓவியப் பாவைபோல் ஆயினர்.

## வேறு

**பருந்து நிழலும்போற் பாட்டு மெழாலும்**
**திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தனவென் றெண்ணி**
**விருந்தாக யாழ்பண்ணி வீணைதான் றோற்பான்**
**இருந்தா ளிளமயில்போ லேந்திலைவேற் கண்ணாள் 730**

[பருந்தும் அதனுடைய நிழலும்; பாட்டு-கண்டப் பாடல்; எழால்-வீணைப்பாடல்.]

**கோதை புறந்தாழக் குண்டலமும் பொற்றோடும்**
**காதி னொளிர்ந்திலங்கக் காமர் நுதல்வியர்ப்ப**
**மாத ரெருத்த மிடங்கோட்டி மாமதுர**
**கீதங் கிடையிலாள் பாடத் தொடங்கினாள் 731**

[கோதை-கூந்தல்; புறந்தாழ-முதுகினிடத்தே தங்க; காமர்-அழகிய; எருத்தம்-கழுத்தை; கோட்டி-வளைத்து; கிடை-ஒப்பு.]

பருந்தும் அதன் நிழலும்போல், பாட்டும் அதற்கேற்ப அமைந்த யாழ் வாசிப்பும், அழகிய மலர்மாலை அணிந்த சீவகனுக்கே சிறப்புற அமைந்துள்ளன. வீணையில் தான் அவனிடம் தோற்பதற்காகவே, என்றெண்ணி, இலை போலும் முகமுடைய வேலைப்போன்ற கண்ணுடையவளாகிய தத்தை, இளமயில் போலமர்ந்து இதுவரை பாடாத புதுமுறையில் இன்னிசை பாடத் தொடங்கினாள். கூந்தல் கலைந்து முதுகிலே தவழக் குழையும் காதிலே அணிந்த பொன்தோடும் ஒளிவீசித் திகழ, அழகிய



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations
நெற்றியில் அரும்பு வியர்வை துளிர்க்க, அழகிய கழுத்தை இடப்புறமாக வளைத்து, மிக்குயர்ந்து தித்திக்கும் தேனிசையை, ஒப்புயர்வற்ற அழகுடைய தத்தை பாடத் தொடங்கினாள்.

## வேறு

இலையா ரெரிமணிப்பூ ணேந்து முலையும்
சிலையார் திருநுதலுஞ் செம்பசலை மூழ்க
மலையா ரிலங்கருவி வாள்போல மின்னும்
கலையார்தீஞ் சொல்லினாய் காணார்கொல் கேள்வர் 732

[இலையார்பூண்-இலையின் வடிவம் பொருந்திய ஆபரணம்; எரிமணிப்பூண்-மாணிக்கமணிகளாற் செய்த ஆபரணம்; மலைஆர் - மலையிலே பொருந்திய.]

பிறையார் திருநுதலும் பேரமருண் கண்ணும்
பொறையார் வனமுலையும் பூம்பசலை மூழ்க
நிறைவா ளிலங்கருவி நீள்வரைமேன் மின்னும்
கறைவேலுண் கண்ணினாய் காணார்கொல் கேள்வர் 733

[பிறை ஆர்-பிறைச்சந்திரன் ஒத்த; பொறையார் முலை-சுமையாகப் பொருந்திய முலை; வாள் இலங்கு அருவி-வாள்போன்று விளங்கும் அருவி; கறை-விடம்.]

அரும்பேர் வனமுலையு மாடமைமென் றோளும்
திருந்தேர் பிறைநுதலுஞ் செம்பசலை மூழ்க
நெருங்கார் மணியருவி நீள்வரைமேன் மின்னும்
கரும்பார்தீஞ் சொல்லினாய் காணார்கொல் கேள்வர் 734

[ஆடமை மென்றோள்-அசைகின்ற மூங்கில் போலும் மெல்லிய தோள்; நெருங்கார்மணி அருவி-நெருக்கம் பொருந்திய முத்துவடம் போலும் அருவி; கேள்வர்-கணவர்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இலை வடிவமைந்த ஒளிவிளங்கும் மாணிக்க மணிப் பூண் அணிந்த மார்பும், வில்லைப்போல் வளைந்த அழகிய புருவமும் சிவந்த பசலைசூழ, மலைமேலிருந்து இழிகின்ற அருவி வாள்போல் மின்னி ஒளிவிடும்; இதனைக் காதலர் காணமாட்டாரோ? பிறைநிலவு போன்ற அழகிய நெற்றியும், பெரிய விருப்பூட்டும் கண்ணும், சுமையாக இருக்கின்ற அழகிய முலையும், அழகிய பசலையில் ஆழ, ஒளி வீசும் வாள்போன்று விளங்கும் நீர்அருவி பெரிய மலைமேல் மின்னுகின்றதே, இதையும் காதலர் அறிய மாட்டாரோ? தாமரை அரும்பனைய அழகிய முலையும் அசையும் மூங்கிலைப்போல் மெலிந்த தோளும், திருத்தமுற்ற அழகிய பிறைநிலவு போலும் அழகிய நெற்றியும் சிவந்த பசலையிலே மூழ்க, நெருங்கி நிறைந்த மணி போலும் நீரருவி நீண்ட மலைமேலிருந்து ஒளிவிடுமே கரும்பைப்போல் இனிக்கின்ற மொழிபேசும் தோழியே இதையும் என் காதலர் உணரமாட்டாரோ என்று தலைவி தனித்திரங்கினாள். (இளவேனிற் பருவம் கண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்கு உரைத்தமை போலக் கூறப் பெற்றது.)

## வேறு

**பண்ணொன்று பாட லதுவொன்று பல்வளைக்கை**
**மண்ணொன்று மெல்விரலும்.வாணரம்பின் மேனடவா**
**விண்ணின் றியங்கி மிடறு நடுநடுங்கி**
**எண்ணின்றி மாத ரிசைதோற் றிருந்தனளே** 735

*[ஒன்று-ஒருதிறமாயிருந்தன; மண் ஒன்று-யாழைப் பண்ணி வாசித்தலைப் பொருந்தும்; நரம்பின் மேல்-யாழ்நரம்புடன்.]*

**மையார் நெடுங்கண்ணாண் மாமணியாழ் தானுடைந்து**
**நையா நடுநடுங்கா நனிநாண மீதூரப்**
**பொய்யாதோர் குன்றெடுப்பாள் போன்மெலிந்து பொன்மாலை**
**பெய்பூங் கழலாற்குப் பெண்ணரசி யேந்தினளே** 736

*[உடைந்து-தோற்று; நையா - வருந்தி; பெய்த-அணிந்த.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**மெல்லென் சிலம்பரற்ற மேகலைகண் மின்னுமிழ**
**நல்ல பெடையென்ன நாண வடியொதுங்கி**
**ஒல்லென் னுயர்தவமே செய்ம்மி னுலகத்தீர்**
**எல்லீரு மென்பாள்போ லேந்தன்மேல் வீழ்த்தனளே 737**

[மெல்லென்-மெல்லென்ற; மின் உமிழ-ஒளிவீச; நாண-நாணும்படி; ஒதுங்கி-நடந்து சென்று; வீழ்த்தனள்-மாலையைப் போட்டனள்.]

முதலில் இசையும், இசைக்கேற்பப் பாடிய பாட்டும் ஒன்றாய் இருந்தன. பின்னர் பலவித வளையல்கள் அணிந்த கைகளுடைய தத்தையின் யாழ் மீட்டும் மெல்லிய விரலொன்று யாழ் மீட்டாது சோர்ந்தது. (அதாவது சீவகன் பாடும்போது தத்தை அவன் இசையோடு பொருந்த யாழ் மீட்டவில்லை.) உச்சத்தில் உலவி ஒலித்த அவள் குரலும் நடுங்கி ஒலிக்க, (சீவகன் யாழ் மீட்டும்போது அதற்கேற்ப இவள் பாடாததை இது குறித்தது) தத்தை நினைவிழந்து சீவகன் இசைமுன் தோற்று அமர்ந்தனள். மைஉண்ட நீண்ட கண்ணுடைய பெண்ணரசியாகிய தத்தை மாமணிகள் பதித்த யாழில் தோல்வியுற்று, வருந்தி நடுநடுங்கி, மிகவும் வெட்கமுற்று, உண்மையாகவே ஒரு குன்றினைப் பெயர்த்தெடுக்க முயன்று சோர்வுற்றவள்போல் மெலிந்து பொன்மாலையினைப் பூங்கழலணிந்த சீவகனுக்குச் சூட்ட ஏந்தி நின்றாள். பாதச் சிலம்புகள் மெல்லென்று ஒலிக்க, மேகலைகள் மின்னி ஒளிவீச, நல்ல பெண் அன்னப் பெடை வெட்கமுற, அடியொற்றி நடந்து சென்று, 'உலகத்தீர் நீவிர் எல்லோரும் 'ஒல்' எனும் ஆரவாரப் புகழுரையைப் பிறர் கூறும் வண்ணம் உயர் தவமே செய்யப்போங்கள்' (தான் ஒருவனுக்கு உரியவள் ஆயினள் எனவே) என்று கூறுபவள் போல் சீவகன் மேல் அம்மாலையை விழச் செய்தனள்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

நாகத்துப் படங்கொ ளல்கு னலங்கிளர் செம்பொன் மாலை
மேகத்துப் பிறந்தோர் மின்னு மணிவரை வீழ்ந்த தேபோல்
ஆகத்துப் பூட்டி மைந்த னடிதொழு திறைஞ்சி நின்றாள்
போகத்து நெறியைக் காட்டும் பூமகள் புணர்ந்த
தொப்பாள் 738

*[நாகத்துப் படங்கொள் - பாம்பின் படத்தைப் போன்ற; நலம்-அழகு; ஆகம்-மார்பு; போகம்-இன்பநெறி.]*

செம்மல ரடியு நோக்கித் திருமணி யல்கு னோக்கி
வெம்முலைத் தடமு நோக்கி விரிமதி முகமு நோக்கி
விம்மிதப் பட்டு மாதோ விழுங்குவான் போல வாகி
மைம்மலர்த் தடங்க ணங்கை மரைமலர்த் தேவி
யென்றான் 739

*[மணி-மேகலையிற் கட்டிய மணி; வெம்முலை-விரும்பத்தக்க முலை; வெம்மை-விருப்பம்; விழுங்குவான் போலவாகி—பருகுவான் போலப் பார்த்து; மைம்மலர்—நீலோற்பலமலர்.]*

கோதையுந் தோடு மின்னக் குண்டலந் திருவில் வீச
மாதரம் பாவை நாணி மழைமினி னொசிந்து நிற்பக்
காதலந் தோழி மார்கள் கருங்கயற் கண்ணி னாளை
ஏதமொன் றின்றிப் பூம்பட் டெழுதிர வெழினி வீழ்த்தார்

*[திருவில்வீச-இந்திர வில்லைப்போல் ஒளிவீச; ஒசிந்து-அசைந்து; ஏதம்-குற்றம்; பூம்பட்டெழினி-பூக்கள் எழுதிய பட்டாலாகிய திரை.]*

நாகப்பாம்பின் படம் போன்ற அல்குலுடைய தத்தை அழகு விளங்கும் செம்பொன்னால் செய்த மாலையினை, மேகத்திடைப் பிறந்த ஒரு மின்னல்கொடி மணிமலையில் வீழ்ந்ததுபோல் சிவகன் மார்பிலே விழச் சூட்டி அவன் அடிதொழுது வணங்கி நின்று; இன்ப நெறி காட்டும் திருமகள் வந்து சேர்ந்ததை ஒத்திருந்தாள். அப்படி அடி

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

தொழுது வணங்கிய அவளின் சிவந்த மலர் போன்ற அடிகளைப் பார்த்து, அல்குலின் மேலணிந்த அழகிய மேகலை மணியைப் பார்த்து, விருப்பூட்டும் மார்பையும் பார்த்து முழுமதி முகத்தைக் கண்டு, பெருவியப்புற்று அவளை அள்ளிப் பருகுபவன் போல் ஆசையுடன் பலமுறை நோக்கி நீலோற்பலம் போன்ற கண்ணுடைய மங்கையிவள் தாமரை மலரில் வாழும் திருமிகு தேவியோ என்று நினைக்க, மலர் மாலையும் காதுக் குழையும் ஒளிவிட, குண்டலங்கள் வானவில்போல் மின்னி மிளிர, காதல் களியூட்டும் அழகிய பொற்பாவை போன்ற தத்தை வெட்கமுற்று, மழை முகிலிடை நெளிகின்ற மின்னல்போல் ஒதுங்கி நிற்க, அன்புடைய அவள் தோழிகள், மையுண்ட நீலோற்பலம் போன்ற கண்களுடைய தத்தையை அவளுற்ற நாணினால் வரும் குற்றமின்றிக் காக்கப் பூம்பட்டாலான இயந்திரத்தால் இயங்கும் திரையை (அவளை மறைக்க) இறக்கி விட்டனர்.

**வெள்ளிலை வேற்க ணாளைச் சீவகன் வீணை வென்றான்**
**ஒள்ளிய னென்று மாந்த ருவாக்கடன் மெலிய வார்ப்பக்**
**கள்ளராற் புலியை வேறு காணிய காவன் மன்னன்**
**உள்ளகம் புழுங்கி மாதோ வுரைத்தனன் மன்னர்க்**
**கெல்லாம் 741**

[வெள்ளிலைவேல் - வெற்றிலைபோலும் கூரியவேல்; ஒள்ளியன் - நல்லன்; உவா - பௌர்ணிமை; காணிய - வேறுபடுதலைக் காணவேண்டி.]

**வடதிசைக் குன்ற மன்ன வான்குல மாசு செய்தீர்**
**விடுகதிர்ப் பருதி முன்னர் மின்மினி விளக்க மொத்தீர்**
**வடுவுரை யென்று மாயும் வாளம ரஞ்சி னீரேல்**
**முடிதுறந் தளியிர் போகி முனிவனம் புகுமி னென்றான்**

[வடதிசைக்குன்றம் - மேருமலை; மாசு - குற்றம்; விளக்கம் - ஒளி; வடுஉரை - பழிச்சொல்; வாளமர் - வாட்போரை; அளியிர் - இறங்கத் தக்கவர்.]

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**முல்லைப்பூம் பந்து தன்னை மும்மதக் களிற்று வேலிக்**
**கொல்லைப்பூங் குன்றஞ் செய்தீர் குங்குமக் குழங்கன் மாலை**
**மல்லுப்பூத் தகன்ற மார்பீர் புகழெனும் போர்வை போர்த்துச்**
**செல்வப்பூ மகளு நாளை யவனுழைச் செல்லு மென்றான்**

[கொல்லை-கொல்லையில்; குழங்கல்-மணம்; மல்-மற்போர்; அவனுழை-அவனிடம்.]

'வெற்றிலை போலும் வடிவமைந்த வேல்போன்ற கண்ணுடையவளாகிய காந்தருவதத்தையைச் சீவகன் வீணையிலே வென்று விட்டான் போற்றத் தகுந்தவனே அவன்' என்றுரைத்து மக்கள் எல்லாம், முழுநிலவு நாளில் முழங்கிப் பொங்கும் கடலும் தோல்வியுற ஆரவாரித்துப் பாராட்ட, கள்ளரைப் புலியோடு பொருதவிட்டுத் தான் தப்பி ஓட எண்ணும் தீய எண்ணமுடைய, புலியுடன் நேரே பொருத முடியாத கோழை மனமுடைய ஊர்காக்கும் மன்னனாகிய கட்டியங்காரன், பொறாமையால் மனம் புழுங்கி, வேந்தர்களை எல்லாம் பார்த்துச் சொல்லுவான். 'வடக்கில் உயர்ந்த இமய மலைபோல் சிறப்படைந்த மன்னர் மரபுக்குப் பழி தேடித் தந்தீர்; ஒளிவீசிச் சிரிக்கின்ற செஞ்ஞாயிற்றின் முன்னே சிறு மின்மினிப் பூச்சியைப் போலானீர்; இப்பழிச்சொல் என்று தீரும்? இப்பழியினைத் துடைக்க இப்போதே நீர் வாளெடுத்துப் போரிடக் கிளம்பப் பயப்படுவீர்களே ஆனால், இரங்கத்தக்க நீங்களெல்லாம், மணிமுடி துறந்து முனிவர்கள் தவம் புரியும் காட்டுக்குத் தவம் செய்யப் போவீர்' என்றான். மேலும், 'முல்லை மலர்ப்பந்தை (முகராமல்) மும்மத முடைய யானைகள் நிறைந்த காட்டிலே எறிந்து மலைக் குன்றாய் ஆக்கிவிட்டீர்களே; குங்குமக் குழம்பு தோய்ந்த வாசமலர் மாலையணிந்த, மற்போரிலே ஈடுபட்டு விரிந்தகன்ற மார்புடைய மன்னர்களே, புகழ் என்னும் போர்வையை அணிந்த செல்வத் திருமகளும் நாளை அவனுடன் (சீவகனுடன் சென்றுவிடப் போகிறாளே நீர்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

இனி என்ன செய்யப் போகின்றீர் என்னுங் கருத்துப்பட) செல்லப் போகிறாள்' என்றான்.

**திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி**
**இருநில மகட்குஞ் செம்பொ னேமிக்கு மிறைவ னாகும்**
**செருநிலத் திவனை வென்றீர் திருவினுக் குரியீ ரென்றான்**
**கருமன நச்சு வெஞ்சொற் கட்டியங் கார னன்றே 744**

*[திரை - கடல்; நிலமகட்கும் - பூமிதேவிக்கும்- நேமிக்கும்-சக்கரவாளகிரிக்கும்; இறைவனாகும்- அரசனாவான்; கருமனம்-கொடிய மனம்.]*

**அனிச்சப்பூங் கோதை சூட்டி அம்மனை யோவென் றஞ்சிப்**
**பனிக்குநுண் ணுசுப்பிற் பாவை யொருத்திநாம் பலரென் றெண்ணித்**
**துனித்துநீர் துளங்கல் வேண்டா தூமணிச் சிவிறி நீர்தூய்த்**
**தனிக்கயத் துழக்கி வென்றீர் தையலைச் சார்மி னென்றான் 745**

*[பனிக்கும்-நடுங்குகின்ற; நுசுப்பிற்பாவை-இடையை யுடைய காந்தருவதத்தை; துனித்து-வெறுத்து; துளங்கல்-வருந்துதல்; சிவிறி-நீர்வீசுந் துருத்தி; கயம்-குளம்; உழக்கி - பொருது; வென்றீர்- வென்றவர்கள்.]*

**வெந்திற லாளன் கூற வேகமோ டுரறி மன்னர்**
**பந்தணி விரலி னாள்தன் படாமுலைப் போகம் வேண்டிக்**
**கந்தெனத் திரண்ட திண்டோட் கந்துகன் சிறுவன் காயும்**
**ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்க லுற்றார் 746**

*[உரறி-முழங்கி; பந்தணிவிரலினாள்-பந்தை ஆடு தலைக்கொண்ட விரலையுடையவள்; படா- சாயாத; போகம்-இன்பம்; கந்து-தூண்.]*

திருமகள் போன்ற இவளை அடைந்தவன், தெளிந்த நீருடைய அலைகடலே ஆடையாகவும், வேலியாகவும் உடைய, இந்நில மகளுக்கும் செம்பொன் விளைகின்ற சக்கரவாளகிரிக்கும் தலைவன் ஆவான். எனவே

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போரிலே இவனை வென்றவர் திரண்ட செல்வத்துக்குரியவர் ஆவீர்' என்றான், நச்சு மனங்கொண்ட கொடுஞ் சொல் உடையோனாகிய கட்டியங்காரன். 'மெல்லிய அனிச்சப்பூ மாலையைச் சூட்டினும், பாரம் தாங்காது அம்மாவோ என்றஞ்சி நடுங்கும், மெல்லிய இடை உடைய பாவை அவளொருத்தியாக, நாம் பலபேராக இருக்கிறோமே அவளை எப்படி அடைவது என்று நினைத்து நீர் வெறுத்து மனங் கலங்க வேண்டாம். தூய மணித் துருத்தியினால் நீரைப்பெய்து குளத்திலே தனித்தனியாகப் போரிட்டு வென்றவர்கள் பின் தத்தையை அடைவீர்' என்றான். கொடுமை மிக்க கட்டியங்காரன் இவ்விதம் கூறவும், சினங்கொண்டு முழங்கி மன்னர்கள் எல்லாம், பந்தாடும் விரலுடையாள் தத்தையின் சாயாத முலை யின்பம் ஓயாது பெறவேண்டி, தூண்போல் திரண்ட வலிவான தோள்களுடைய கந்துகன் மகனாகிய சீவகனின், பொங்கியெழுந்து சீறும் சினமாகிய ஐந்து தலைப் பாம்பின் விஷமாகிய பெருநெருப்பில் மூழ்கி அழியலானார்.

**பண்ணியல் யானை மேலான் பதுமுகன் பரவைத் தானை**
**கண்ணிய துணர்ந்து கல்லாக் கட்டியங் கார னெஞ்சில்**
**எண்ணிய தெண்ணி மன்ன ரிகன்மலைந் தெழுந்த போழ்தில்**
**துண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்**

[பண்-இராகம்; தானை-அரசர்களுடைய சேனை; கண்ணியது-சீவகனோடு போர் செய்ய எண்ணியதை; கல்லா-கல்விபயிலாத; இகல் மலைந்து-போரிலே மாறுபட்டு; வெய்ய-விரும்பத்தக்க.]

**இசையினி லிவட்குத் தோற்றாம் யானையால் வேறு மென்னின்**
**இசைவதொன் றன்று கண்டீர் தனையா னிரந்து சொன்னேன்**
**வசையுடைத் தரசர்க் கெல்லாம் வழிமுறை வந்த வாறே**
**திசைமுகம் படர்க வல்லே தீத்தொட்டாற் சுடுவ தன்றே**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[இசையினில் - சங்கீதத்தால்; வேறும்-வெல்வோம்: என்னின்-என்றுநீர் கருதினால்; வசை-பழிமொழி; வந்தவாறே - வந்தவழியே; வல்லே படர்க-விரைவிற் போவீராக.]

**தோளினான் மிடைந்து புல்லுந் தொண்டைவா யமிர்தம் வேட்டோர்**
**வாளினான் மலைந்து கொள்ளின் வாழ்கநுங் கலையு மாதோ**
**கோளுலாஞ் சிங்க மன்னான் கொடியினை யெய்தப் பெற்றீர்**
**தாளினா னொய்யீ ராகித் தரணிதா விடுமி னென்றான்**

[மிடைந்து-நெருங்கி; தொண்டைவாய் அமிர்தம்-தொண்டைக் கனி போன்ற வாயிடத்துள்ள அமிர்தத்தை; வேட்டோர்-விரும்பியவர்; கோள்-கொலை; தாளினால்-ஆகாத முயற்சியால்; நொய்யீராகி-மெலிந்தவராகி.]

**நாறும் மதத்தி னாலே நாகத்தை யிரிக்கு நாகம்**
**ஆறிய சினத்த தன்றி யதிங்கத்தின் கவளங் கொண்டால்**
**வேறுநீர் நினைந்து காணீர் யாவர்க்கும் விடுக்க லாகா**
**தூறித்தே னொழுகுங் கோதை நம்பிக்கு மன்ன னென்றான்**

[நாகம்-யானை; அதிங்கம்-அதிமதுரம்; அதிமதுரத்தழை யானைக்கு விருப்பமுடையது. வேறு நினைந்து - தனித்து ஆராய்ந்து; இரிக்கும்-விரட்டும்.]

அழகுறப் பண்ணியமைத்த யானைமேல் ஏறி அமர்ந்த பதுமுகன், பரந்த அரசர்கள் படை சீவகனோடு போரிட எண்ணியதை அறிந்து, அறிவற்ற கட்டியங்காரன் உள்ளத்தின் எண்ணத்தையும் உணர்ந்தறிந்து, மன்னர்கள் போரிடப் புறப்பட்ட உடனேயே, குளிர்ந்த, நல்ல, விரும்பத்தக்க, சுடுகின்ற சொற்களைக் கூறியவன் மேலும் தொடர்ந்து, (சாம பேத தான தண்டம் என்றதற்கேற்ப முறையே இனிய, குளிர்ந்த, நல்ல, சுடு சொற்களைச்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சொன்னான் என்றார்) 'இசையினால் தத்தையிடம் தோற்றவர்கள், யானைப் படையால் (சீவகனை) வெல்வோம் என்று கருதிப் போரிடப் புறப்படுவது பொருத்தமுடையதன்று, என்பது உங்களுக்கே தெரியும்; என்றாலும் நானும் உங்கள் நலங்கருதி இதை விரும்பிச் சொல்லலானேன். அல்லாமலும் உங்களின் இச்செயல் மன்னர் மரபுக்கே பழி சேர்ப்பதுமாகும். தீ தொட்டால்தான் சுடும்; ஆனால் பிறன் மனைவியை விரும்பும் கெட்ட நினைவென்னும் தீயோ நினைத்தாலும் சுடும். எனவே நீவீர் எல்லாம் வந்த திசை வழியே திரும்பிச் செல்க. தோள்களால் நெருங்கி அணைத்து, தொண்டை வாய் முத்தித் துய்க்கின்ற இன்ப அமுதை, மன்னர்களே வாள் கொண்டு போரிட்டுப் பெற நீர் நினைப்பீரேயானால் பாவம் வாழட்டும் உங்கள் வாளும் போர்க் கலையும். கொலைவல்ல சிங்கம் போன்ற சீவகன் தத்தையை அடைய, நீர் உலகினைப் பெற்று இருக்கின்றீர். இதைவிட்டு முடியாத முயற்சியை மேற்கொண்டு மேலும் துன்பம் அடையாது செல்க. மணம் வீசும் தன் மும்மதத்தாலே மற்ற யானைகளை விரட்டும் ஒரு யானை, மிக்க சினத்தோடு, அதிமதுரத் தழையைக் கவளமாகக் கொண்டிருக்கையில்; தனியே நீவீர் எண்ணிப் பாரீர், அதை யாரும் கைக்கொள்ளமுடியாது. அதுபோலத்தான் தேன்மணம் கமழும் கூந்தலுடையவளாகிய தத்தையும் சீவகனுக்கு ஆவள்; எனவே நீர் அவளை அவனிடமிருந்து மீட்டுப் பெறமுடியாது போவீர்' என்றான்.

**இளவள நாகு புல்லி யினத்திடை யேறு நின்றால்**
**உளவளங் கருதி யூக்க லுழப்பெரு துடைய தாமே**
**தளவள முகைகொள் பல்லாட் சீவகன் றழுவி நின்றாற்**
**கொளவுளைந் தெழுவ தல்லாற் கூடுத னுங்கட் காமோ 751**

[வளம்-அழகு; நாகு-பசு; ஊக்கல்-முயற்சி செய்தல்: உழப்பு எருது-உழுதலைச் செய்யும் எருது.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


**எழுந்துவிண் படருஞ் சிங்கம் பெட்டைமே லிவர்ந்து நின்றால்**
**மழுங்கமேற் சென்று பாய்தன் மறப்புலி தனக்கு மாமோ**
**கொழுங்கயற் கண்ணி னாளைச் சீவக குமரன் சூழ்ந்தால்**
**அழுங்கச்சென் றணைதல் பேய்காள் அநங்கற்கு மாவ துண்டோ 752**

*[படரும்-தாவுகின்ற; பெட்டை-பெண் சிங்கம்; மழுங்க-கெடும்படி; மேற்சென்று-அச்சிங்கத்தின் மீது சென்று; மறப்புலி-வீரத்தையுடைய புலி; அழுங்க-சீவகன் கெடும்படி.]*

**மத்திரிப் புடைய நாகம் வாய்வழி கடாத்த தாகி**
**உத்தமப் பிடிக்க ணின்றா லுடற்றுதல் களபக் காமே**
**பத்தினிப் பாவை நம்பி சீவகன் பால ளானால்**
**அத்திறங் கருதி யூக்க லரசிர்கா ணுங்கட் காமோ 753**

*[மத்திரிப்பு-கோபம்; கடாம்-மதம்; பிடி-பெண் யானை; உடற்றுதல் - நாகத்திடனிமிருந்து பிடியைப் பிரித்தல்; களபக்கு-யானைக்கன்றிற்கு; களபம்-யானைக் கன்று; ஆமே-முடியுமோ; ஊக்கல்-முயலுதல்.]*

**தூமத்தாற் கெழீஇய கோதை தோட்டுணை பிரித்தல் விண்மேல்**
**தாமத்தாற் கெழீஇய மார்ப னிந்திரன் றனக்கு மாகா**
**தேமுற்றீ ரின்னுங் கேண்மின் இரதியைப் புணர்து மென்று**
**காமத்தாற் கெழுமி னார்க்குக் காமனிற் பிரிக்க லாமே 754**

*[தூமம்-அகிற்புகை; கெழீஇய-பொருந்திய; தாமம்-கற்பக மாலை; ஏமுற்றீர்-மயக்கங்கொண்டீர்; கெழுமுதல்-பொருந்துதல்.]*

*'அழகிய இளம் பசுவினைத் தழுவிக்காளை ஒன்று தன் கூட்டத்தோடு இருக்கும்போது, அப்பசுவின் அழகை நுகரக் கருதி, உழுது களைத்த எருது ஒன்று முயன்றால் முடியுமோ? முடியாதல்லவா அதுபோலத்தான்; அழகிய*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முல்லை மொக்கைப் போன்ற பல்லுடைய தத்தை சீவகனைச் சேர்ந்து நின்றால்; அவளை அடையமுடியாது. போனதை எண்ணி வருந்திப் போவதல்லால் உங்களால் அவளை அடையவும் முடியுமா? இன்னும் கேட்பீர்; எழுந்தால் வானுறப் பாய்கின்ற வலிவுடைய ஆண் சிங்கம் தன் பெட்டையோடு சேர்ந்திருக்கும்போது, அவை விலகுமாறு அவற்றின் மேல் பாய்ந்து கெடுக்க வீரமிக்க புலியால்தான் முடியுமா? முடியாதல்லவா! அதுபோலத்தான், அழகிய மீன் போலும் கண்ணுடைய தத்தையைச் சீவகன் தழுவி நிற்கையில், அவன் வருந்தச் சென்று அவளை அடைய நினைப்பது, பேய்களே உங்களால் முடியுமோ? அது காமனாலும் செய்ய முடியாத ஒரு காரியம் ஆயிற்றே! இன்னும் கடுஞ்சினம் உடைய யானை மிகவும் மதமுடையதாகி அழகிய துணையோடு பிணைந்து நின்றால் அதைக் கெடுக்கக் குட்டியானையால் முடியுமோ? அதுபோலக் கற்புநலம் சிறந்த பாவையாகிய தத்தை, சீவகனுக்குரியவள் ஆனாள் என்றால்; அரசர்களே அவளைப் பெறும் முயற்சியில் நீங்கள் இனி ஈடுபடுவது கைவரக்கூடிய காரியமா? அல்லாமலும், அகிற்புகை ஊட்டிய அழகு மலர்க் கூந்தலுள்ள தத்தையுடைய தோளின் துணையாகிய சீவகனைப் பிரித்தல்; வானுலகில் கற்பக மலர்மாலை சூடி வாழும் இந்திரனாலும் முடியாததாயிற்றே! தெளிவற்றவர்களே, இன்னும் கேட்பீர்! இரதியையே அடையவேண்டும் என்று கண்மூடிக் காமத்தால் திரிபவர்க்கு, காமனிடம் இருந்து அவளைப் பிரித்தல் இயலுமா? இயலாதல்லவா! எனவே தத்தையை அடையும் நினைவொழிந்து நீவிரும் செல்க' என்றான்.

**எம்மைநீர் வெல்லப் பெற்றீர் வென்றபி னிருந்த வேந்தன்**
**நும்மையும் வேறு செய்து நும்முளே பொருது வீந்தால்**
**வெம்மைசெய் துலக மெல்லா மாண்டிட விளைக்கு நீதி**
**அம்மமற் றதனை யோரீ ரவன்கருத் தன்னதென்றான் 755**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[வெல்லப் பெற்றீர்-வென்றுவிடுவதாக எண்ணினீரானாலும்; வீந்தால்-நீங்கள் இறந்தால்; வெம்மை-கொடுமை; ஓரீர்-உணர்ந்து பாருங்கள்.]

**சொற்றிற லன்றி மன்னீர் தொக்குநீர் காண்மி னெங்கள்**
**விற்றிற லென்று வில்வாய் வெங்கணை தொடுத்து வாங்கிக்**
**கற்றிரள் கழிந்து மண்ணுட் கரந்தது குளிப்ப வெய்திட்**
**டிற்றெமர் கல்வி யென்றா னிடியுரு மேற்றொ டொப்பான்**

[சொற்றிறல்-சொல் வன்மை; மன்னீர்-அரசர்களே; தொக்கு - ஒன்றுகூடி; கற்றிரள் - கல்லின் தொகுதியை; கழிந்து-துளைத்து: குளிப்ப-மூழ்கும்படி.]

**ஆழியங் கழனி தன்னு ளம்பொடு கணையம் வித்திச்**
**சூழ்குடர்ப் பிணங்கண் மல்க விளைத்தபின் றொழுதிப் பல்பேய்க்**
**கூழ்படு குருதி நெய்யி னிறைச்சிச்சோ றூட்டி வென்றி**
**வீழ்தர வேட்டு நின்றா ரெய்துப வெகுளல் வேண்டா 757**

[ஆழியம் கழனி-சக்கர வியூகமாகிய வயல்; கணையம்-தண்டாயுதம்; தொழுதி-கூட்டமான; ஊழ்படு-முதிர்ந்த.]

'அப்படி ஒருகால் நீவிர் எம்மோடு போரிட்டு வெல்வீராயினும், வென்றபின், இங்குள்ள கட்டியங்காரன், உங்களோடு மாறுபட்டுப் போரிட்டு உங்களையும் அழிப்பானாயின் பின் தான் ஒருவனாகவே இருந்து உலகம் எல்லாம் கொடுமை செய்து ஆண்டிட ஒருமுறையை உண்டாக்குவான் என்பதை நீர் அறியீர்! கட்டியங்காரன் எண்ணம் அதுதான், அறிக. மேலும், வாய்ச்சொல் வீரமே அன்றி மன்னவர்களே கூடியிருக்கும் நீங்கள் எல்லாம் எங்களுடைய வில்வலிவும் காண்க என்று, வில்லை வளைத்து வெங்கணை பூட்டி, ஒரு அம்பினை கற்களைப் பிளந்து மண்ணுக்குள் புதைந்து செல்ல எய்து காட்டி, எம்முடைய வில்வித்தையும், திறமையும் இத்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தகையது தெரிந்துகொள்க' என்றான், குமுறுகின்ற பேரிடி போன்ற பதுமுகன். 'சக்கர வியூகமாக வகுத்த படையாகிய விளைநிலத்தில் அம்பையும், தண்டாயுதத்தையும் விதைத்துக் குடல்சரியும் பிணங்களாகிய பயிரை நிறைய விளைவித்து, போரிலே பட்ட பகைவர்களின் குருதியாகிய நெய்சேர்ந்த ஊனுடலாகிய சோற்றைக் கூட்டமாக உள்ள பல பேய்களுக்கு ஊட்டி, வெற்றித் திருமகள் விரும்பக் களம்பல கண்டுநின்றார் இவளை அடைவர்; எனவே நீங்கள் வீணில் சினம் கொள்ளவேண்டாம்' (ஏன் எனில் நீங்கள் அத்தகைய வீரர்கள் அல்லர்.) என்று பதுமுகன் கூறினான்.

போர்ப்பறை முழங்கி யெங்கும் பொருவளி புடைக்கப் பட்ட
கார்க்கடல் போன்று சேனை கலக்கமோ டுரறி யார்ப்பத்
தார்ப்பொலி மார்ப னோர்த்துத் தன்கையில் வீணை நீக்கி
வார்ப்பொலி முலையி னாட்கு வாய்திறந் திதனைச்
சொன்னான் 758

[போர்ப்பறை-போர் முரசம்; வளி-காற்றினால்; கார்-கருமை; கலக்கம்-நிலைகுலைதல்; உரறி-முழங்கி; ஓர்த்து - அதனை அறிந்து.]

## வேறு

தேய்ந்து நுண்ணிடை நைந்துகச் செப்பினைக்
காய்ந்த வெம்முலை யாய்நின கண்கள்போல்
ஆய்ந்த வம்பினுக் காரிரை யாகிய
வேந்தர் வேண்டிநின் றார்விம்ம லீயென்றான் 759

[நைந்து-குறைந்து; உக-கெட; நின-நின்னுடைய; இரையாகிய - இரையாவதற்கு; விம்மல்-வருந்தாதே.]

அண்ணல் கூறலு மம்மனை யோவெனாத்
துண்ணெ னெஞ்சின ளாய்த்துடித் தாயிழை
கண்ணி னீர்முலை பாயக் கலங்கினாள்
வண்ண மாக்கவின் சொல்லொடு மாய்ந்ததே 760

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[துண்ணென் - துணுக்கென்னும்; வண்ணம் - நிறம்
கவின்-தத்தையின் அழகு.]

போர் முரசு எங்கும் ஒலிக்க, சீறுகின்ற காற்றினால் தாக்கப்பட்ட பெரிய கருங் கடலைப்போல், படைவீரர்கள் கலக்கத்துடன் முழங்கி ஆரவாரிக்க, மலர்மாலை பொலிகின்ற மார்புடையவனாகிய சீவகன் அதை உணர்ந்து, தன்கையில் இருந்த வீணையைக் கீழே வைத்து விட்டு வார்க்கச்சு விளங்கும் மார்புடைய தத்தையிடம் வாய்திறந்து சொல்லுவான்: 'மெல்லிடை வாடி வருந்தி அழகு கெட, செம்பொற் செப்பையும் வெட்கமுறச் செய்யும் அழகிய முலை சுமந்து நிற்கின்ற பெண்ணே, உன் கண்களைப் போன்று தப்பாது பாயத் தேர்ந் தெடுத்து வைத்திருக்கின்ற அம்புகளுக்கு நல்ல இரையா வதற்கு அரசர்கள் தாங்களாகவே விரும்பி வந்து நிற் கின்றனர்; எனவே நீ வருந்த வேண்டாம்', என்றுரைத் தான். சீவகன் இவ்விதம் கூறவும், தத்தை, அம்மாவோ என்றலறி, திடுக்குற்ற உள்ளத்தோடு துடித்து வருந்தி, கண்ணீர் பெருக்கெடுத்து முலைமேல் வழியக் கலங்கி நிற்க; அவள் பேரழகு அவன்வாய்ச் சொல்லுடன் அடியோடு அழிந்தது.

**மேவி நம்பிக்கு வெம்பகை யாக்கிய**
**பாவி யேனுயிர் பாழுடல் பற்றுவிட்**
**டாவி யோநட வாயென் றழுதுதன்**
**காவி வாட்கண் கலங்க வதுக்கினாள் 761**

[ஆக்கிய-உண்டாக்கிய; நடவாய் - போகவில்லை;
காவி - நீலோற்பலம்; அதுக்கினாள் - அடித்துக்
கொண்டாள்.]

**பாழி நம்படை மேலதிப் பாரெலாம்**
**நூழி லாட்டி நுடக்கிக் குடித்திடும்**
**வாழி நங்கைகண் டாயென்று வாட்கணீர்**
**தோழி தூத்துகில் தோகையி னீக்கினாள் 762**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[பாழி-வன்மை; நூழிலாட்டி - கொன்றுகுவித்து; நுடக்கி- ஒன்றாகக் கரைத்து; தோகை-முன்றானை; தூத்துகில்-தூய ஆடை.]

எங்கள் பெண்மையு மீர்மலர்த் தார்மன்னர்
தங்க ளாண்மையுஞ் சால்வது காண்டுமென்று
இங்கு வார்முர லுங்கலை யேந்தல்குல்
நங்கை வாட்படை நங்கையைச் சூழ்ந்ததே 763

[சால்வது-பொருந்துவதொன்றை; காண்டும்-காண்போம்; இங்குதல்-தங்குதல்; வார்-நீண்ட; கலை-மேகலை.]

'நம்பியாகிய சீவகனுக்கு உறவாக வாய்த்து, அதனால் அவனுக்குப் பெரும்பகை தேடித்தந்த பாவி என்னுடைய உயிர் இன்னுமிந்தப் பாழுடலை விட்டுப் போகவில்லையே! உயிரே என் உடல்விட்டு நீ ஒழிவாய்' என்றலறி அழுது, தன்னுடைய செங்காவி நிறத்துச் செம்மலர்க் கண்கள் வருந்த அடித்துக் கொள்ளும் அவளை, 'வலிவுமிக்க நம்முடைய படை மிக்க திறமை உடையது. இவர்களையன்றி மற்றிவ் வுலகையே கொன்று குவித்து ஒன்றாகக் கரைத்துக் குடித்துவிடும் ஆற்றலும் உடையது என்பதறிவாய்! எனவே பெண்ணே நீ வருத்தந் தீர்ந்து வாழ்க' என்றுரைத்து அவள் வாட்கண் வழியும் நீரையும் துடைத்துத் தோழி தேற்றவும், எங்கள் பெண்மையின் சிறப்பிலும், குளிர் மலர்மாலை அணிந்த மன்னர்கள்தம் ஆண்மையின் வலிவிலும் சிறப்புடையது எது என்று அறிவோம் என்று, அங்கு அழகிய ஒலியெழுப்பும் மேகலை அணிந்த அல்குலுடைய தத்தையின் வாளேந்திய பெண்கள் படை அங்கு அவளைச் சூழவந்து நின்றது.

## வேறு

கூன்களுங் குறளு மஞ்சிக் குடர்வெந்து கொழும்பொற் பேழை
தான்கொளப் பாய வோடிச் சாந்துக்கோய் புகிய செல்வ
தேன்கொள்பூ மாலை சூடித் தாமமாய்த் திரண்டு நிற்ப
வான்பளிங் குருவத் தூண மறைபவு மாய வன்றே 764



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[கூன்-வளைந்த வடிவமுடையது; குறள்-மிகக் குறுகிய வடிவமுடையது; இவ்விரண்டும் சேர்த்தே வழங்கப்படும். அஞ்சி-போரைக் கண்டு பயந்து; பேழை-பெட்டி; பாய-பாய்வதற்கும்; சாந்துக் கோய்-சாந்துவைத்த பரணி; புகிய - புகுவ தற்கும்.]

இங்கித நிலைமை நோக்கி முறுவலித் தெரிபொன் மார்பன்
நங்கையைக் காக்கும் வண்ண நகாநின்று மொழிந்து பேழ்வாய்ச்
சிங்கந்தான் கடிய தாங்கோர் செழுஞ்சிங்க முழக்கிற் சீறிப்
பொங்கிமேற் செல்வ தேபோற் பொலங்கழ னரலச் சென்றான் 765

[இங்கிதம்-குறிப்பு; முறுவலித்து-புன்னகை செய்து; எரிபொன் - ஒட்டற்ற பொன்னாலாகிய ஆபரணம்; பேழ்வாய்-பெரிய வாய்; பொலங் கழல் - பொன்னாலாகிய வீரக்கழல்; நரல- ஒலிக்க.]

புதுமுக குமரன் மற்றிப் பாவையைக் காவ லோம்பி
மதுமுக மாலை நெற்றி மதகளி றுந்தி நிற்ப
நுதிமுக வாளும் வில்லு நுண்ணிலை வேலு மேந்திச்
சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்க வென்றான் 766

[காவலோம்பி-காத்தலைச் செய்து; உந்தி-செலுத்தி; நுதி-கூர்மை; சதுமுகமாக-நான்கு வகையாக; நமர்-நம்மவர்.]

கூனும் குறளும் நடுங்கிக் குடல்கருகி வளமிக்க பொற் பேழைகள் கொள்ளுமாறு உட்புகுந்து ஓடினவும், சாந்து வைத்த பரணிகளிலே புகுந்து செல்வனவும், தேன் உள்ள மலர்மாலைகளைச் சூடி மாலை வடிவாகத் திரண்டு நிற்பனவும், சிறந்த பளிங்கினாலாகிய அழகிய தூணிலே மறைவனவும் ஆக நிறைந்தன. இவ்விதமாகப் படை யெழவும், கூனும் குறளும் அஞ்சி நடுங்கியதும் ஆகியநிலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யைக் கண்டு சிரித்த ஒளிவிளங்கும் பொன்மாலை அணிந்த மார்புடையவனாகிய சீவகன், தத்தையைக் காக்கும் இயல்பை இன்முகத்துடன் அவனுக்குக் கூறி, கொடிய பெரிய வாயுடைய சிங்கம் ஒன்று, அங்குள்ள ஒரு சிங்கத்தின் முழக்கத்தைக் கேட்டுத் தானும் முழங்கிச் சீறிப் பொங்கி எழுந்து அதன் மேல் போவதே போல் பொற்கழல் ஒலிக்கப் போனான். இவையல்லாமல் பதுமுக குமரன் வேறு இருந்து தத்தையைக் காக்க எண்ணி, தேன் வழியும் மலர்மாலை அணிந்த நெற்றியுடைய மதயானையை அவளிருக்கும் மண்டபத்தின் வாயிலிலே நிறுத்தி, நம்முடைய படைவீரர்கள் கூரிய வாளையும், வில்லையும், இலைபோலும் வடிவுடைய வேலையும் ஏந்திப் படைகளை நான்கு வகையாக வகுத்து நிறுத்திக் காவலுறுக என்றான்.

**வட்டுடை மருங்குல் சேர்த்தி வாளிரு புடையும் வீக்கித்**
**தட்டுடைப் பொலிந்த திண்டேர் தனஞ்சயன் போல வேறிக்**
**கட்டளைப் புரவி சூழ்ந்து கால்புடை காப்ப வேவி**
**அட்டுயிர் பருகுங் கூற்றங் கோளெழுந் தனைய தொத்தான்**

*[வட்டுடை-முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடை; புடை-பக்கம்; வீக்கி-கட்டி; தட்டு-தேரின் தட்டு; தனஞ்சயன்-அருச்சுனன்; கால்-தேரின் ஆரக் காலை; அட்டு-கொன்று.]*

**புள்ளிரைப் பன்ன பொற்றார்ப் புரவித்தே ரிரவி போலா**
**உள்ளுருத் தெழுந்து பொங்கி யுடல்சினங் கடவ நோக்கி**
**முள்ளெயி றிலங்க நக்கு முடிக்குழா மன்னர் கேட்பக்**
**கள்ளவி ழலங்கன் மார்பன் கார்மழை முழக்கிற்**
**சொன்னான் 768**

[இரைப்பு - ஒலி; பொற்றார்ப்புரவி - பொன்னாற் செய்த கிண்கிணி மாலையையுடைய குதிரைகள்: உருத்து - தோன்றி; எழுந்து - மிக்கு; கடவ - செலுத்த; இலங்க-விளங்கும்படி.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[கூன்-வளைந்த வடிவமுடையது; குறள்-மிகக் குறுகிய வடிவமுடையது; இவ்விரண்டும் சேர்த்தே வழங்கப்படும். அஞ்சி-போரைக் கண்டு பயந்து; பேழை-பெட்டி; பாய-பாய்வதற்கும்; சாந்துக் கோய்-சாந்துவைத்த பரணி; புகிய - புகுவதற்கும்.]

**இங்கித நிலைமை நோக்கி முறுவலித் தெரிபொன் மார்பன்**
**நங்கையைக் காக்கும் வண்ண நகாநின்று மொழிந்து பேழ்வாய்ச்**
**சிங்கந்தான் கடிய தாங்கோர் செழுஞ்சிங்க முழக்கிற் சீறிப்**
**பொங்கிமேற் செல்வ தேபோற் பொலங்கழ னரலச் சென்றான் 765**

[இங்கிதம்-குறிப்பு; முறுவலித்து-புன்னகை செய்து; எரிபொன் - ஓட்டற்ற பொன்னாலாகிய ஆபரணம்; பேழ்வாய்-பெரிய வாய்; பொலங் கழல் - பொன்னாலாகிய வீரக்கழல்: நரல-ஒலிக்க.]

**புதுமுக குமரன் மற்றிப் பாவையைக் காவ லோம்பி**
**மதுமுக மாலை நெற்றி மதகளி றுந்தி நிற்ப**
**நுதிமுக வாளும் வில்லு நுண்ணிலை வேலு மேந்திச்**
**சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்க வென்றான் 766**

[காவலோம்பி-காத்தலைச் செய்து; உந்தி-செலுத்தி; நுதி-கூர்மை; சதுமுகமாக-நான்கு வகையாக; நமர்-நம்மவர்.]

கூனும் குறளும் நடுங்கிக் குடல்கருகி வளமிக்க பொற் பேழைகள் கொள்ளுமாறு உட்புகுந்து ஓடினவும், சாந்து வைத்த பரணிகளிலே புகுந்து செல்வனவும், தேன் உள்ள மலர்மாலைகளைச் சூடி மாலை வடிவாகத் திரண்டு நிற்பனவும், சிறந்த பளிங்கினாலாகிய அழகிய தூணிலே மறைவனவும் ஆக நிறைந்தன. இவ்விதமாகப் படையெழவும், கூனும் குறளும் அஞ்சி நடுங்கியதும் ஆகியநிலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

யைக் கண்டு சிரித்த ஒளிவிளங்கும் பொன்மாலை அணிந்த மார்புடையவனாகிய சீவகன், தத்தையைக் காக்கும் இயல்பை இன்முகத்துடன் அவனுக்குக் கூறி, கொடிய பெரிய வாயுடைய சிங்கம் ஒன்று, அங்குள்ள ஒரு சிங்கத்தின் முழக்கத்தைக் கேட்டுத் தானும் முழங்கிச் சீறிப் பொங்கி எழுந்து அதன் மேல் போவதே போல் பொற்கழல் ஒலிக்கப் போனான். இவையல்லாமல் பதுமுக குமரன் வேறு இருந்து தத்தையைக் காக்க எண்ணி, தேன் வழியும் மலர்மாலை அணிந்த நெற்றியுடைய மதயானையை அவளிருக்கும் மண்டபத்தின் வாயிலிலே நிறுத்தி, நம்முடைய படைவீரர்கள் கூரிய வாளையும், வில்லையும், இலைபோலும் வடிவுடைய வேலையும் ஏந்திப் படைகளை நான்கு வகையாக வகுத்து நிறுத்திக் காவலுறுக என்றான்.

**வட்டுடை மருங்குல் சேர்த்தி வாளிரு புடையும் வீக்கித்**
**தட்டுடைப் பொலிந்த திண்டேர் தனஞ்சயன் போல வேறிக்**
**கட்டளைப் புரவி சூழ்ந்து கால்புடை காப்ப வேவி**
**அட்டுயிர் பருகுங் கூற்றங் கோளெழுந் தனைய தொத்தான்**

*[வட்டுடை-முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடை; புடை-பக்கம்; வீக்கி-கட்டி; தட்டு-தேரின் தட்டு; தனஞ்சயன்-அருச்சுனன்; கால்-தேரின் ஆரக் காலை; அட்டு-கொன்று.]*

**புள்ளிரைப் பன்ன பொற்றார்ப் புரவித்தே ரிரவி போலா**
**உள்ளுருத் தெழுந்து பொங்கி யுடல்சினங் கடவ நோக்கி**
**முள்ளெயி றிலங்க நக்கு முடிக்குழா மன்னர் கேட்பக்**
**கள்ளவி ழலங்கன் மார்பன் கார்மழை முழக்கிற்**
**சொன்னான் 768**

*[இரைப்பு - ஒலி; பொற்றார்ப்புரவி - பொன்னாற் செய்த கிண்கிணி மாலையையுடைய குதிரைகள்; உருத்து - தோன்றி; எழுந்து - மிக்கு; கடவ - செலுத்த; இலங்க-விளங்கும்படி.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


முருகுலா முல்லை மாலை மூப்பிலா முலையி னார்நும்
அருகுலாம் புலவி நோக்கத் தமிர்தமின் றுகுப்ப கொல்லோ
கருதலாம் படிய தன்றிக் கலதியம் பிவையுங் காய்ந்த
பொருதுலாம் புகழை வேட்டிவ் வெஃகமும் புகைந்த
வென்றான் 769

[முருகு-வாசனை; மூப்பு-தளர்வு; கலதி-தீது; எஃகம்-வேல்.]

போர்வீரர்க்குரிய வட்டுடையை இடையில் அணிந்து உடைவாளினை இருபுறம் சேரக்கட்டி, அகன்ற தட்டினை உடைய அழகிய திண்தேரில் வலிமை மிக்க அருச்சுனன் போல ஏறி அமர்ந்து, இடும் கட்டளைக்கேற்பப் பாயும் குதிரைகள் சூழ, தேர்ச் சக்கரத்தை வீரர்கள் காத்து வர ஏவிய சீவகன், உயிரைக் கொன்று தின்னும் எமன் கொல்லவே கருதி எழுந்ததைப் போலெழுந்தான். பறவைகள் ஒலிப்பது போல் ஓசை எழுப்பும் கிண்கிணி அணிந்த குதிரைகள் பூட்டிய தேரில் இளஞாயிறு போல் அமர்ந்து, சினம் உள்ளத்திலே பொங்கியெழச் செலுத்தப் பார்த்து, கூரிய பற்கள் தெரியச் சிரித்து, மணிமுடி அணிந்த வேந்தர்கள் கேட்கும்படி, கருமுகில் முழங்குவது போல் தேன்விரியும் மலர்மாலை அணிந்த சீவகன் சொல்லுவான்; 'மணங்கமழும் முல்லைமலர் மாலை அணிந்த, அழிவற்ற அழகிய முலையினை உடைய நும் மனைவியர், யாழ் வாசித்துத் தத்தையை அடைய வந்த புலவி நோக்கத்தால், அவர்கள் தாம்பெறும் கூடல் இன்பம் ஆகிய அமுதத்தை வீணே இழப்பார் போலும்! எனவேதான் நினைக்க முடியாதபடி, தீமைதரும் அம்புகளாகிய இவையும் கெட்டன; போரால் வரும் புகழை எண்ணி வேல்களும் புகைந்தன போலும்' என்றான்.

வாணிக மொன்றுந் தேற்றாய் முதலொடுங் கேடு வந்தால்
ஊணிகந் தீட்டப் பட்ட வூதிய வொழுக்கி னெஞ்சத்
தேணிகந் திலேசு நோக்கி யிருமுதல் கெடாமை கொள்வார்
சேணிகந் துய்யப் போகின் செறிதொடி யொழிய வென்றார்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[தேற்றாய்-அறியாய்; ஊண்-உணவை; இகந்து - கைவிட்டு; ஊதியம்-இலாபம்; ஒழுக்கின்-ஒழுக்கத்தையுடைய; நெஞ்சத்து ஏண் - மனத்திண்மை; இலேசு-சிறிய இலாபம்.]

தம்முடைப் பண்டந் தன்னைக் கொடுத்தவ ருடைமை கோடல்
எம்முடை யவர்கள் வாழ்க்கை யெமக்குமஃ தொக்கு மன்றே
அம்முடி யரசிர்க் கெல்லா மென்கையி லம்பு தந்து
நும்முடைத் திருவுந் தேசு நோக்குமின் கொள்வ லென்றான்

[உடைமை - உடைமைப் பொருளை; கோடல் - கொள்ளுதல்; ஒக்கும்-பொருந்தும்; திரு-வீரமகள்; தேசு-புகழ்.]

மட்டுலாந் தாரி னாய்நின் வனப்பினோ டிளமை கல்வி
கெட்டுலாய்ச் சிலம்பு செம்பொற் கிண்கிணி மகளிர் கோங்க
மொட்டுலா முலைகள் பாய்ந்த வகலத்துச் சரங்கண் மூழ்கப்
பட்டுலாய்க் கிடக்க லுற்றா யென்சொலாய் பாவி யென்றார் 772

[மட்டு-வாசனை; கோங்கமொட்டு உலாம்-கோங்கு அரும்பு தோற்றுப்போகும்; உலாய் மூழ்க-உலாவி மூழ்க; பட்டு-அழிந்து.]

எரிசுடர்ப் பருதி முன்ன ரிருளென வுடைந்து நீங்கப்
பொருபடை மன்னர் நுங்கள் புறக்கொடை கண்டு மற்றிம்
முருகுடைக் கழலி னாடன் முகிழ்முலை கலப்ப லன்றேல்
இருசுடர் வழங்கும் வையத் தென்பெயர் கெடுக வென்றான் 773

[சுடர்-கிரணம்; உடைந்து-தோற்று; புறக்கொடை-புறம் கொடுத்து ஓடுதலை; கலப்பல்-கலப்பேன்; இரு சுடர்-சூரியனும் சந்திரனும்.]

சீவகன் இன்னணம் கூறவும், அதுகேட்ட அரசர்கள் சீவகனை நோக்கி, 'வாணிபம் செய்யும் முறைகூட

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations
அறியாதவனாய் நீ இருக்கின்றாய். ஊண் உறக்கமின்றித் தேடிய கைமுதலுக்கு ஆபத்து வந்தால், அம்முதலால் வருகின்ற லாபத்தின் மேல் வைத்த ஆசையை விட்டு விட்டு, முதலா லாபமா எது பயனுடையது, என்று எண்ணிப் பார்த்து கைமுதல் போகாமல் பார்த்துக் கொள்வர் வணிகர்கள். அதுதான் வாணிக முறையும் ஆகும். ஆனால் நீயோ அதை அறிந்தவனாக இல்லை! எனவே நீ உனக்குக் கிடைத்த லாபமாகிய தத்தையை இங்கே விட்டு விட்டு, உன் உடம்பாகிய முதலைக் கொண்டு பிழைக்கப்போ' என்றனர். (சீவகன் வணிகன் வளர்த்த மகனாதலின் வியாபார முறையிலேயே அவனுக்கு அறிவுரை கூற அமைத்த பாடல் இது.) சீவகனும் அதற்கு மறுமொழி கூறத் தொடங்கிச் சொல்லு வான்: 'தம்மிடம் உள்ள பொருள்களைத் தேவைப் படுகின்ற பிறர்க்குக் கொடுத்து, அதற்கு மாறாக அவர்கள் தரும் செல்வத்தைப் பெறுவதுதான் எம்குல வழக்கம். எனக்கும் அதுவே பொருத்தமுடையது; உண்மைதான்! எனவே வாருங்கள், அழகிய மணிமுடி அணிந்த அரசர் களாகிய உங்களுக்கெல்லாம் என் கைப்பொருளான அம்பைக் கொடுத்து (அம்பால் கொன்று) அதற்கு மாறாக உங்களுடைய திருவையும் புகழையும் பெற்றுக் கொள் கிறேன்; முடிந்தால் அவற்றில் இருந்து தப்ப வழி பார்த்துக் கொள்ளுங்கள்' என்றான். மன்னர்கள் அது கேட்டு, 'தேன் நிறைந்த மலர்மாலை அணிந்த சீவகனே, நின் அழகும் இளமையும், கல்வியும் அழிந்து, பாதச் சிலம்பும் பசும்பொற் கிண்கிணியும் அணிந்த இளமங்கையரின் கோங்கரும்பொத்த முலைகள் அழுந்திய மார்பிலே, அம்புகள் பாய்ந்து புகுந்து அழிய, வந்து நிற்கின்ற பாவியே, நீ என்ன தான் சொல்லமாட்டாய்' என்றனர். அதுகேட்ட சீவகன், 'ஒளிவிளங்க எழுகின்ற செஞ் ஞாயிற்றின் முன்னே, இருள் அழிந்து செல்வதைப் போல், படைக்கலம் ஏந்திய மன்னர்கள் நீங்கள் எல்லாம், என்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

முன் புறமுதுகிட்டு ஓடக்கண்ட பின்னரே, வாசமலர்க் கூந்தலுடைய தத்தையின் வனப்புமிக்க முலைமார்பைத் தழுவுவேன். இல்லையென்றால் ஞாயிறும் திங்களும் உலவும் இந்த நல்ல உலகத்திலே என்பெயர் நில்லாது அழியட்டும்' என்று வஞ்சினம் கூறிப் புறப்பட்டான்.

## வேறு

ஆண்மர வாணிலத் தப்பு வேல்செய்முள்
காண்வரு காட்டினக் களிற்று நீள்வரை
நீணில வேந்தெனும் வேழப் பேரினம்
பூண்முலைப் பிடிக்கவாய்ப் போர்செய் குற்றவே 774

*[ஆள்-வீரர்; அப்பு-அம்பு; காட்டு-காட்டில்; காண்வரு-எல்லாரும் காணுதலை உடைய; அவாய்-விரும்பி.]*

தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் தாள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா அழன்று சீவக
ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே 775

*[தாழிருந்தடக்கை - தாழ்ந்த பெரிய வளைந்த துதிக்கை; தாள்களா-நான்கு கால்களாகவும்; மும்மதம்-கன்னமதம், கபோலமதம், கோசமதம் என்பவை. கடற்சுற்றமா-தேர், குதிரை, காலால் என்பவைகளாகவும்; போதகம்-யானை.]*

குடையுடை வேந்தெனுங் குழாங்கொள் நாகமும்
கொடியெனும் பிடியுடைக் குமர வேழமும்
வெடிபடு போர்த்தொழில் காண விஞ்சையர்
இடியுடை யினமழை நெற்றி யேறினார் 776

*[குழாம்-கூட்டம்; கொடியெனும்பிடி-பூங்கொடி போன்ற காந்தருவதத்தையாகிய பெண் யானை; மழைநெற்றி-மேகத்தின் மேல்.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கரைபொரு கடலொடு கார்க ணுற்றென**
**முரைசொடு வரிவளை முழங்கிய யார்த்தன**
**அரைசரு மமர்மலைந் தரணம் வீசினார்**
**குரைகடற் றானைபோர்க் கோலஞ் செய்தவே 777**

[கடலொடு-கடலொலியுடன்; கார்கண் உற்றென-மேகமுழக்கமும் சேர்ந்தாற்போல; வளை-சங்கு; அரைசர்; அரசர்; அமர்-போர்; அரணம் வீசினார்-கவசத்தையணிந்தார்.]

ஆட்களாகிய மரங்களை உடைய வாளாகிய நிலத்திலே, அம்பு, வேல்கள் ஆகிய முட்களிட்ட எல்லாரும் பார்க்க இருக்கின்ற காட்டில், யானைக் கூட்டம் போன்ற மலையின்மேல், பெருநில மன்னர்களாகிய யானைகள், பூண்சுமந்த முலை உடைய தத்தையெனும் பிடிக்கு ஆசைப் பட்டுப் போரிடலாயின. நீண்ட பெரிய துதிக்கையும், கூரிய பெரிய தந்தக் கொம்புகளும் முறையே தம்பி நந்தட்டனாகவும், நபுல விபுலராகவும், தோழர்கள் கால்களாகவும், கடல் போன்ற குதிரைப் படையும், தேர்ப்படையும், காலாட்படையும், ஆகியவை மும்மதமாகவும் கொண்டு, ஏழிசையும் வல்ல உயர்ந்த சீவகனாகிய சிறந்த ஆண் யானை தன் கூட்டமாகிய மன்னர்களுடன் போரிடத் தொடங்கியது. குடைகளுடைய வேந்தர்கள் என்னும் கூட்டமாகிய யானைகளும், தத்தை எனும் இணைப்பிடி உடைய சீவகனாகிய இளங்களிறும், தம்முள் பகை கொண்டு பொருதுகின்ற போரினைக் காண்பதற்கு வித்தியாதரர்கள் இடி மின்னும் முகில் மேல் ஏறி நின்றனர். கரைமோதும் கடல் அலை ஒலியோடு கார்முகில் முழக்கமும் சேர்ந்தது போல், போர் முரசும் வரிசங்கும் முழங்கி ஒலித்திட அரசரும் போரில் இறங்கிப் போர்க் கவசங்களை அணிந்தனர். ஒலி கடல் போலும் முழங்கும் அவர் படைகளும் போர்க்கோலம் பூண்டெழுந்தன.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

தெய்வதம் வணங்குபு செம்பொன் வாயுளிட்
டெய்கணைப் படுமழை சிதறி யெங்கணும்
மொய்யமர் மலைந்தனர் முருகு விம்முதார்ச்
செய்கழற் சீவகன் வாழ்க வென்னவே 778

[வணங்குபு-வணங்கி; பொன்-பொற்றகடு, பொன் தகட்டை வாயுள் இட்டுப் போர் செய்தல்; செய்கழல்-தொழிலழகு பெற்ற வீரக்கழல்.]

கலந்தது பெரும்படை கணைபெய்ம் மாரிதூய்
இலங்கின வாட்குழா மிவுளி யேற்றன
விலங்கின தேர்த்தொகை வேழங் காய்ந்தன
சிலம்பின இயமரந் தெழித்த சங்கமே 779

[தூய்-தூவி; ஏற்றன-பொருதன; தொகை-கூட்டம்; விலங்கின - தடுத்தன; இயமரம் - ஒருவகை வாத்தியம்; ஊதுகொம்பு என்றும் கூறுவர். தெளித்த-ஒலித்த.]

சுற்றணி கொடுஞ்சிலை மேகந் தூவிய
முற்றணி பிறையெயிற் றம்பு மூழ்கலின்
அற்றுவீழ் குழைமுக மலர்ந்த தாமரை
மற்றவை சொரிவதோர் மாரி யொத்தவே 780

[சுற்றணி-சுற்றிலும் அணியப்பட்ட; குழைமுகம்-குண்டலத்தோடு கூடிய முகம்; முகம் அவை-முகமாகிய அவை.]

மறப்படை பசித்தன வயிறின் றார்கெனக்
குறைத்தனர் குஞ்சரங் கூந்தல் மாத்துணித்
திறக்கின ரோடுதேர் மைந்த ரின்னுயிர்
துறக்கம்போய்ப் புகுகெனத் துணிய நூறினார் 781

[வயிறு-படையின் வயிறு; ஆர்க-நிறைக; குஞ்சரம் குறைத்தனர்-யானையை வெட்டினர்; கூந்தல் மா-பிடரி மயிர் உடைய குதிரை; துறக்கம்-வீர சுவர்க்கம்; நூறினார்-கொன்றார்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சீவகன் படையினரும், தெய்வத்தை வணங்கி, செம் பொன் வாயுள் இட்டு, பெய்கின்ற மழை போல் எங்கும் அம்பினை நிறையவீசி, நெருங்கிப் போரினை மேற்கொண் டனர், மணம் நிறைந்து பெருகும் மாலையும் வீரக் கழலும் அணிந்த சீவகன் வாழ்க என்றபடி. அரசர் பெரும் படையும் மழைபோல் அம்புகளைப் பெய்து சீவகன் படையுடன் கலந்து, வாள் கொண்டு இருபடையும் போரிட்டன. குதிரைகள் ஒன்றோடொன்று பொருதின. தேர்ப்படையும் ஒன்றையொன்று தடுத்துப் போரிட்டன. யானைகளும் அவ்வாறே தம்முள் மலைந்தன. அப்படி இருபடைகளும் கலந்து போரிட ஊதுகொம்புகள் ஒலித்தன; சங்குகள் முழங்கின. சுற்றியெங்கும் சிதறிய அம்பாகிய மேகம் பொழிந்த மழையில் பிறைபோலும் முனை உடைய அம்புகள் மூழ்கியதால், அறுந்து விழுகின்ற குழையுடைய முகமாகிய அவை தாரைப் பூவைச் சொரி கின்ற பூமழையை ஒத்தன. மறவர்களின் தோள்தினவு தீர, படைக்கலங்களின் பசி தீர்ந்து வயிறு நிறைக என்று கூறி யானைகளைக் கொன்று குவித்தனர். பிடரி மயிர் உடைய குதிரைகளின் கழுத்தை வெட்டி ஒடுந்தேரை வீழ்த்தினர்; வீரர்களின் நல்லுயிர் சொர்க்கத்தைச் சென்றடைய அவர்களையும் வெட்டி வீழ்த்தினர்.

## வேறு

**ஆற்றுவீர் வம்மி னெம்மோடு ஆண்மைமேம் படீஇய**
**வென்பார்**
**எற்றவர் மார்பத் தல்லா லிரும்புமேல் விடாது நிற்பார்**
**கூற்றம்போற் கொடிய யானைக் கோடுமு தகன்ற மார்பம்**
**கீற்றுப்பட் டழகி தாகக் கிடக்கெனக் கொடுத்து நிற்பார்**

[ஆற்றுவீர்-செய்வீர்; வம்மின்-வாருங்கள்; ஆண்மை மேம்படீஇய-நுமது ஆண்மையை மேம்படுத்தும் பொருட்டு; இரும்பு-இரும்பாலாகிய வேலை.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கழித்துவா ளமலை யாடிக் காட்டுவார் கண்கள் செந்தீ
விழித்துமேற் சென்ற வேழம் வேலினால் விலக்கி நிற்பார்
தெழித்துத்தேர்க் கயிறு வாளால் அரிந்திட்டுப் புரவி
போக்கிப்
பழிப்பில கொணர்ந்து பூட்டு பாகநீ யென்று நிற்பார் 783

[கழித்து - உறையினின்றும் எடுத்து; வாளமலை- போர்க்களத்தில் வீரர், வாளை அசைத்து ஆடுங் கூத்து. விலக்கி-தடுத்து; தெழித்து-கோபித்து.]

ஐங்கதிக் கலினப் பாய்மாச் சிறிதுபோர் களையீ தென்பார்
வெங்கதிர் வேலிற் சுட்டி வேந்தெதிர் கொண்டு நிற்பார்
நங்கைகல் யாண நன்றே நமக்கென நக்கு நிற்பார்
சிங்கமும் புலியும் போன்றார் சீவகன் றோழன் மாரே 784

[கலினம்-கடிவாளம்; ஈது களை இதை விட்டு நீக்கு; நக்கு-இகழ்ந்து.]

ஒருங்கவன் பிறந்த ஞான்றே பிறந்தவ ருதயத் துச்சி
இரும்பினாற் பின்னி யன்ன வெறுழ்வலி முழவுத் தோளார்
விரும்புவார் வேழ வேற்போர் நூற்றுவர் நூறு கோடிக்
கிருந்தனம் வருக வென்பார் இன்னண மாயி னாரே 785

[ஒருங்கு-ஒன்றாக; உதயத்து உச்சி-உதயகிரியின் சிகரத்தை; எறுழ்வலி-மிக்கவலி.]

உம் வீரம் மேலானது என்று காட்டும் திறமுடைய வர்கள் எம்முடன் போரிட வருக என்பவரும், அப்படி எதிர்த்து வருகிறவர்கள் மார்பின்மேலல்லாது மற்றவர் மேல் படையெறியாது நிற்பவரும், கொல்லுகின்ற எமனைப்போலும் கொடிய யானைத் தந்தம் பிளக்க, அப்படிப் பிளந்த பரந்த மார்பை அழகாகக் கிடக்கட்டும் என்று யானையிடமே கொடுத்து நிற்பவரும், உறையி னின்றும் உருவி எடுத்த உடைவாளைச் சுழற்றிக் கூத்தாடிக் காட்டுவாரும், நெருப்புமிழ எதிர்த்து வந்த யானையை வேலால் தாக்கி நிற்பவரும், கோபமுற்றுத் தேர்க்கயிற்றை வாளால் அறுத்தெறிந்து குதிரைகளை விரட்டிவிட்டு,

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இப்படியில்லாமல் குற்றமற்ற குதிரைகளைக் கொண்டு வந்து பூட்டுக பாகனே, என்று சொல்லி நிற்பவரும்; விக்கிதம், வற்கிதம், வெல்லும் உபகண்டம், மத்திமம், சாரியை ஆகிய ஐந்து கதிகளையும் கடிவாளத்தையும் உடைய குதிரைப்போர் இதனைச் சிறிது நிறுத்துவோம் என்பாரும், சிவந்த ஞாயிறு போன்று ஒளிஉமிழும் வேலினால் வேந்தன் ஒருவனைச் சுட்டிக் காட்டி இவன் என் எதிரி என்று கூறி அவ்வேந்தனை எதிர்த்து நிற்பாரும், தத்தையின் திருமணம் வாழ்க அது நமது தோள் தினவுக்கு நல்ல தீனியை, போரைத் தந்தது என்று மகிழ்ந்திருப்பாரும் ஆயினர், சிங்கமும் புலியும் போன்ற வலிமைமிக்க சீவகனுடைய தோழர்கள். சீவகன் பிறந்த அன்றே அவன்கூடப் பிறந்த அவர்கள், உதய மலையின் உச்சியை இரும்பால் கட்டினது போன்ற ஆற்றல்மிக்க, முழவினைப் போன்ற திண்தோளுடையவர்கள்; வேலெறிந்து விளையாடும் யானைப்போரை விரும்புபவர்கள்; நூற்று நூறுகோடி பேர்கள் நாங்கள் போரிட இருக்கிறோம், எதிர்ப்போர் வருக என்று, பகைவரைப் போருக்கழைக்கும் திறமுடையவர்கள்; இவர்கள் எல்லாம் இவ்விதமாகப் போரிலே ஈடுபட்டனர்.

**கூட்டுற முறுக்கி விட்ட குயமகன் திகிரி போல**
**வாட்டிறல் தேவ தத்தன் கலினமா மாலை வெள்வேல்**
**ஈட்டம்போழ்ந் தியானை நெற்றி யிருங்குளம் பழுத்தி மன்னர்**
**சூட்டொடு கண்ணி சூளா மணிசிந்தித் திரியு மன்றே 786**

[முறுக்கிவிட்ட - சுற்றிவிட்ட; குயமகன் - குயவன். திகிரி-சக்கரம்; தேவதத்தன்-சீவகன் தோழர் நால்வருள் ஒருவன். போழ்ந்து-பிளந்து; கண்ணி-முடியிலணியும் பூமாலை.]

**பாய்ந்தது கலின மாவோ பறவையோ வென்ன வுட்கி**
**வேந்தர்தம் வயிறு வேவ நபுலமா விபுல ரென்பார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

காய்ந்துதம் புரவிக் காமர் குளம்பினாற் களிற்றி னோடை
தேய்ந்துகச் சேர்த்தி மாலைத் திருமுடித் திலகங்
கொண்டார் 787

[உட்கி-பயந்து; வேவ-வெந்துபோம்படி; காய்ந்து-கோபித்து; காமர்-அழகிய; ஓடை-நெற்றிப் பட்டம்; உக-கெடும்படி.]

காயத்தின் குழம்பு தீற்றிக் காரிரும் பெறிய மேகம்
தோயுமுள் ளிலவின் கூன்காய் சினைதொறு முதிர்வ
வேபோல்
மாயங்கொல் மறவர் மாலைப் பைந்தலை யுதிர்ந்த செங்கட்
சேயனான் றிருவின் பேரான் செழுஞ்சிலைப் பகழி யாலே

[காயம்-பெருங்காயம்; தீற்றி-பூசி; இரும்பு-இரும்பாலாகிய வாள்; மாயம்கொல்-இது மாயமோ; சினை-கிளை; கூன்-வளைந்த.]

நீனிறப் பௌவ மேய்ந்து சூன்முற்றி நீல மேகம்
வானிற விசும்பி னின்ற மாரியின் மறைவ லாளன்
போனிறப் புத்தி சேனன் பொன்னணி பகழி சிந்தி
வேனிற மன்னர் சேனை கூற்றிற்கு விருந்து செய்தான் 789

[நீனிறப்பௌவம்-நீலநிறமுடைய கடலை; சூல் முற்றி-கருப்பம்-முற்றுதலாலே; பகழி-அம்பு.]

வளைந்த மண்ணுருண்டையை வைத்துச் சுற்றிவிட்ட குயவனுடைய சக்கரம் போன்ற, வாள் வலிமிக்க தேவதத்தனுடைய கடிவாளம் பூட்டிய குதிரை, மாலையணிந்த வெள்ளிய வேற்படை வீரர்களின் கூட்டத்தைப் பிளந்து, யானைகளின் நெற்றியிலே கால் குளம்புகளை அழுத்தி, மன்னர்கள் சூடிய, முடிக்கண்ணியும் சூளாமணியும் சிதறத்திரிந்தது. பாய்ந்தது ஒரு பறவையோ அல்லது குதிரைதானோ என்று பயந்து, மன்னர்கள் வயிறு எரிய, நபுலவிபுலர்கள் சினந்து போரிட்டு, தாங்கள் ஏறிச் சென்ற குதிரைகளின் அழகிய குளம்பைக் கொண்டு யானைகளின் முகபடாம் அறுந்து விழ அவற்றைச் செலுத்தி, மாலை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பணிந்த மன்னர்கள் தலைமுடியிலிருந்த சூளாமணியைக் கைப்பற்றினர். பெருங்காயத்தின் குழம்பைப் பூசிய கரிய வாளால் வெட்டப்பட்ட, வானுயர வளர்ந்த முள் இலவ மரத்தின் வளைந்த கிளைகளிலிருந்து உதிர்கின்ற காய்கள் போல், மாலையணிந்த போர் மறவர்களின் பசுந்தலைகள், அருள்சுரக்கும் கண்களுடைய முருகனைப்போன்ற, புகழ்ச் செல்வம் மிக்குடைய சீதத்தனின் வலிமைமிக்க வில்லில் இருந்து விடுபட்ட கணைகளால் அறுந்து விழுந்தது ஓர் மாயம் போன்றிருந்தது. நீலக்கடலலைகள் மேல் படிந்து நீரை உண்டு, முகந்து சென்று, சூல்முதிர்ந்து கார்மேக மாகிக் கனன்று தூய வெண்ணிற விண்ணிலே நிறையப் பெய்கின்ற கோடை மழைபோல, மறைநூல் கற்றுணர்ந்த பொன் வண்ண நிறமுடைய புத்திசேனன், பொன்னா லான அம்புகளைப் பொழிந்து, வேலேந்தி விளங்கும் மன்னர் படையினை எமனுக்கு விருந்தாக்கினான்.

## வேறு

**வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால்**
**சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவார்**
**ஒருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய**
**ஆரமே யமைந்ததேர்க் குழிசி யாயினார் 790**

[புலால்-மாமிசத்தையுடையதாய்; சோரும் குருதி-ஒழுகுகின்ற இரத்தம்; சூட்டு-ஆரக்காலைச் சூழ்ந் திருக்கும் வட்டை; வைக்கிய-வைத்தற்கு; ஆரம்-ஆரக்கால்; குழிசி-வண்டியுருளையின் குடம்.]

**பொன்னனாள் புணர்முலைப் போகம் வேண்டிய**
**மன்னரோ டிளையவர் மறலி வாளமர்**
**இன்னண மித்தலை மயங்க வத்தலைக்**
**கொன்னவில் வேலினா னிலைமை கூறுவாம் 791**

[மறலி-மாறுபடுதலாலே; அத்தலை-அவ்விடத்தே; கொல்நவில் வேலினான்-கொலைத் தொழிலிற் பழகிய வேலையுடைய சீவகன்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**தம்பியைச் சீவக னோக்கிச் சாமரை**
**வெம்பரி மான்செவி வீர மந்திரம்**
**இம்பர்நம் மிடர்கெட விரண்டும் வல்லையாய்**
**நம்பிநீ மொழிகென நயந்து கூறினான் 792**

[தம்பி-நந்தட்டன்; வெம்பரி-கொடிய செலவினை யுடைய; மான்-குதிரை; இம்பர்-இவ்விடத்தில்; வல்லையாய்-நீ கற்றறிந்தாயாகி; நயந்து-விரும்பி.]

பகைவர் எறிந்த வீரமிகு வேல்கள் உடம்பெல்லாம் சூழ்ந்திருக்க, கொடிய இரத்தம் ஒழுகுகின்ற மாமிசத் திடைக் காணப்படுகின்ற வீரர்கள், ஆரக்காலைச் சூழ்ந் திடும் வட்டை வைப்பதற்குரிய ஆரக்கால் அமைந்த தேர்க் குறடு ஆயினர். (உடலைச் சுற்றி வேல் தைக்க நிற்கின்ற மறவர்கள், ஆரக்கால்கள் சுற்றிலும் தொங்க நிற்கின்ற தேர்க்குடம்போல் தோன்றினர் என்பது கருத்து.) பொன் போலும் புகழுடைய தத்தையின் முலைதோய்ந்து நல்லின்பம் பெறவிரும்பிய மன்னர்களுடன், சீவகனின் தோழர்களாகிய இளையவர்கள் போரிடும் வாட்போர் இங்கே இவ்விதம் நடந்திருக்க, வேறிடத்தில் கொன்று குவிக்கும் வலிவுடைய வேலேந்திய சீவகன் நிலையை விளக்குவோம். அங்கே சீவகன் தன் தம்பியாகிய நந்தட்ட னைப் பார்த்து, பிடரி மயிரினையும், விரைந்து செல்லும் ஆற்றலினையும் உடைய குதிரையின் காதுகளில், நினைத் தால் பறப்பிப்பதும், வேண்டினால் நிறுத்துவிப்பதும் ஆன வீரமந்திரங்கள் இரண்டையும் இங்கே நம் துன்பந் தொலைய, அவ்விரண்டு மந்திரங்களும் கற்றுத் தேர்ந்த வனே, மொழிக என்று விரும்பிக் கேட்டுக் கொண்டான்.

## வேறு

**மந்திரங் கேட்டு நான்கும் வானெட்டிப் புகுவ வேபோல்**
**அந்தரத் திவர்ந்த ஆழிக் கால்நிலம் விட்ட மாலைச்**
**சுந்தரச் சுண்ண மேனி மகளிர்தங் கண்ணு ளிட்ட**
**மைந்தரு மிரும்பு மொவ்வா வான்புலங் காவல்கொண்டார்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[நான்கும்-தேரிற் பூட்டிய நான்கு குதிரையும்; வான்-ஆகாயத்தை; இவர்ந்த-பறந்தன; ஆழிக்கால்-தேரின் ஆரக்கால்.]

**வடிகயி றாய்ந்து முட்கோல் வலக்கையாற் றாங்கி வென்றி**
**முடிகெனப் புரவி முள்ளா லுறுத்தினான் மொழிதல் தேற்றேன்**
**கடுகிய வண்ண மாவின் தாரொலி காமர் பொற்றேர்**
**படையது செவியுங் கண்ணும் பற்றிநின் றிட்ட வன்றே**

[வடிகயிறு-குதிரையின் வாய்க்கயிறு; முட்கோல்-தாற்றுக்கோல்; முடிகென-உண்டாவதாக என்று; உறுத்தினான் - அழுத்தினான்; தேற்றேன்-அறியேன்; மா-குதிரை; தார்-கிண்கிணிமாலை.]

**அண்ணல்தேர் பறவை யென்பார் அருவமே யுருவ மென்பார்**
**மண்ணதே வான தென்பார் மனத்ததே முகத்த தென்பார்**
**கண்ணதே செவிய தென்பார் கலங்கநூல் கழிய நோக்கிப்**
**பண்ணிய வீதி பற்றி மண்டலம் பயிற்றி னானே 795**

[மண்ணதே-பூமியிடத்தே; கழிய-முடிய.]

நந்தட்டன் கூறிய அம்மந்திர மொழிகேட்ட, தேரில் பூட்டிய குதிரைகள் நான்கும், வானிலே தாவிச் செல்வன போல் அந்தரத்தில் பாய்ந்தன; வட்டமான தேர் உருளை நிலத்தை விட்டது. மாலையணிந்த, அழகிய வாசனைப் பொடி பூசிய மேனிஉடைய மகளிர் தம் கண்ணுள் கரந்திருக்கும், சீவகனும் நந்தட்டனும் உண்மை அறிவை இரும்பினும் மேலான கவசமாகக் கொண்டு, குதிரையை வழிப் படுத்திச் செல்லும் கடிவாளக் கயிற்றைச் சரிபார்த்து, தாற்றுக் கோலை வலக்கையிலே எடுத்து, வெற்றி நம்மை வந்து அடைக எனக் குதிரையைத் தாற்றுக் கோலால் செலுத்திட அக்குதிரைகள் பாய்ந்து சென்ற வேகத்தை உரைக்க வார்த்தைகள் அறியேன்! குதிரைகளின் கிண்கிணி மாலை ஒலி படையின் காதுகளினும், அழகிய பொற்றேர் அவர் கண்களிலும் விடாது நின்றிட, விரைந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

சென்ற சீவகனது தேரைப் பறவை என்பவரும், உருவம் என்பாரும், இல்லை உருவமற்ற அருவம் என்பாரும், மண்ணிலே உள்ளது என்பாரும், இல்லை விண்ணிலே உள்ளது என்பாரும், மனத்திலே உள்ளது என்பாரும், இல்லை முகத்திலே உள்ளது என்பாரும், கண்ணிலே உள்ளதென்பாரும், அன்றிச் செவியிலே உள்ளதென்பாரும், ஆகக் கண்டவர்கள் பலரும் பலவிதமாகக் கூறிக் கதிகலங்க, புரவி நூல் முற்றும் உணர்ந்த சீவகன் அதிற் பண்ணிய வீதி என்னும் கதியைத் தொடங்கி மண்டலம் என்னும் கதியைப் பயிற்றினான்.

**அகில்கொண்ட கொள்ளி வட்ட மாருயிர் மேயு நேமி**
**முகில்கொண்ட மின்னுத் தோற்ப முறுகிய விசையிற் றாகி**
**மிகில்கொண்ட விகலைத் தானே விழுங்கிய சிறகர்த் தோற்றிப்**
**பகல்கொண்டு பறக்குந் தேராற் காளைதன் பைம்பொற் றேரே** **796**

[நேமி-காலசக்கரம்; முறுகிய-விரைந்த; மிகல்-மாறுபாடு; இகல்-போர்; விழுங்கிய-விழுங்குதற்கு; சிறகர்-சிறகு.]

**காலற்ற வயிர மாலை வெண்குடை கவிழ்ந்த பிச்சம்**
**மேலற்ற கவசம் வீழ்ந்த சாமரை யற்ற வில்ஞாண்**
**மாலுற்ற மன்னர் தங்கண் மனங்கையற் றொழிந்த வள்ளல்**
**கோலொற்றக் குனிந்த வாறே சிலைகுனிந் தொழிந்த தன்றே** **797**

[கால்-காம்பு; பிச்சம் கவிழ்ந்த, கவசம் மேலற்ற என மாறுக. மாலுற்ற மன்னர்-காந்தருவதத்தையிடம் மயக்கம் கொண்ட அரசர்; கையற்று ஒழிந்த-செயலற்றுக் குறைந்தன; கோலொற்ற-அம்பு தொடுத்தற்கு.]

**நுங்களை வீணை வென்ற நூபுர வடியி னாடன்**
**வெங்களித் தடங்கண் கண்டீர் விருந்தெதிர் கொண்மி னென்னா**



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**அங்களி யரசர்க் கெல்லா மோரொன்று மிரண்டு மாகச்**
**செங்களிப் பகழி யொப்பித் துள்ளவா றூட்டி னானே 798**

[நூபுரம் - சிலம்பு; களி - களிப்பு; ஒரொன்று-ஒவ்வொன்று; ஒப்பித்து-விழுக்காடிட்டு; ஊட்டினான்-உண்பித்தான்.]

அகில் தன்னிடம் கொண்ட கொள்ளி வட்டமும் உயிர்களை நிறையக் கொல்லும் காலச் சக்கரமும், மேகத்திடை மின்னுகின்ற மின்னலும் தோற்கும்படி, மிக்க வேகத்தோடு, வந்து மூண்டிருக்கிற போரைத் தானே விழுங்குதற்குச் சிறகைக் கொண்டு பகல் கொள்ளப் பறந்தது சீவகனுடைய புதிய பொற்றேர். வயிர மணி மாலைகள் உடைய வெண்கொற்றக் குடைகள் கால் அறுந்துவிழ, பீலிக் குஞ்சங்கள் கழன்றுவிழ, மேலணிந்த கவசங்கள் கழல, வெண்சாமரைகள் வீழ, வில்லில் பூட்டிய நாண் அறுந்துபட, மனம் மயங்கிய மன்னர்கள், செயலற்றுக் குன்ற, சீவகன் வளைந்து தன் வில்லையும் வளைத்து அம்பினைத் தொடுத்தான். தொடுத்து, வேந்தர்களை நோக்கி, 'நீங்கள் எல்லாம் வீணையில் உங்களை வென்ற பாதச் சிலம்பொலிக்கும் சிற்றடித் தத்தையினுடைய களிப்பூட்டும் கண்களைக் கண்டீர்கள்; இப்போது இதோ விழிபோலும் கூருடைய என் அம்புகளை விருந்தாகத் தருகிறேன் ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று கூறிச் செருக்குற்று நின்ற மன்னர்களுக்கெல்லாம், ஒன்றும், இரண்டுமாக, கொடிய தன் அம்பினை அவரவர் தகுதிக்கேற்பத் தந்தான்.

**நன்மன வேந்தர் தங்கள் நகைமணி மார்ப நக்கிப்**
**புன்மன வேந்தர் தங்கள் பொன்னணி கவசங் கீறி**
**இன்னுயிர் கவர்ந்து தீமை யினிக்கொள்ளு முடம்பி னாலும்**
**துன்னன்மி னென்ப வேபோற் சுடுசரம் பரந்த வன்றே 799**

[நக்கி-தீண்டி; தீமை-பிறர்மனையை விரும்புதலை; துன்னன்மின்-பொருந்தாதீர்; சுடுசரம்-கொதிக்கின்ற அம்பு; கீறி-பிளந்து.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மீனெறி தூண்டில் போன்ற வெஞ்சிலை நாண்க ளற்ற
தேனெறி குன்ற மொத்த திண்கச்சை துணிந்த வேழம்
மானெறி காட்டுந் திண்டேர் கயிறற்று மறிய வேந்தர்
ஊனெறி யாழி யேந்தி ஒய்யென வுலம்பி யார்த்தார் 800

*[கச்சை-யானையின் கீழ்வயிற்றிற் கட்டப்படும் கயிறு; நெறி-வழி; மறிய-சாய; ஊன்-பகைவருடம்பு ஒய்யென: ஒலிக்குறிப்பு; உலம்பி-முழங்கி.]*

ஆர்ப்பெதிர் மாரி பெய்யு மணிநெடுங் குன்றம் போலப்
போர்க்கெதிர்ந் தவரு மார்த்தா ரார்த்தலும் பூண்ட வல்விற்
கார்க்கெதிர் மேகம் போலக் கணைமழை கான்ற திப்பால்
ஈர்த்தது குருதி வெள்ள மிறைச்சிக்குன் றாக்கி னானே 801

*[பூண்ட-கொலைத்தொழிலை மேற்கொண்ட; வல் வில்-சீவகனுடைய வில்; ஈர்த்தது-இழுத்தது.]*

நல்ல மனமுள்ள வேந்தர்களுடைய, அணிமணி புனைந்த மார்பில் பட்டும், தீய மனமுடைய மன்னர்களின் பொற்கவசத்தைப் பிளந்தும், இனிய பல உயிர்களைக் கைக்கொண்டும், இனி அடுத்து எடுக்கும் மற்றப் பிறவிகளிலும், பிறன் மனைவியை விரும்பும் தீமையைச் செய்யாதீர் என்று சொல்வனபோல், சீவகன் வில்லில் இருந்து விடுபட்ட வெங்கணைகள் பரவிப் பாய்ந்திட, மீன் பிடிக்கும் தூண்டிலைப் போல் அரசர்களின் வில்நாண் அறுந்தது. அவர்கள் ஏறிவந்த யானைகள், வலிய கச்சை அறுபட வண்டு மொய்க்கும் கருங் குன்றுகள் போலாயின. தேரிற் பூட்டிய குதிரைகளை வழிப்படுத்தும் கடிவாளக் கயிறும் அறுந்துபடச் சினமுற்ற மன்னர்கள் உடலைப் பிளந்தெறியும் சக்கரத்தை எடுத்துப் பேரொலி எழுப்பி ஆரவாரித்தனர். எதிரொலி எழுப்பும், மழை பொழியும் நெடுமலைக்குன்றைப் போல, அரசர்கள் முழங்கி ஒலித்த ஆரவார ஓசையைப் போலவே சீவகன் வீரரும் ஆரவார ஒலியெழுப்பினர். இரு படையினரும் இப்படி ஆரவாரிக்க, சீவகனுடைய கொல்லுகின்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

வல்வில், கார்கால மழை மேகம் போலப் பெருகிக் கணை மழை பொழிய, பெருக்கெடுத்த இரத்த ஆறு தலையற்று விழுந்த உடல்களை இழுத்துச் செல்ல, அங்கே ஒரு பிணமலையையே அவன் உண்டாக்கினான்.

**மன்னர்கள் வெகுண்டு விட்ட மறப்படை யழுவ மாரி**
**கொன்னுனை யெஃகி னீக்கிக் குனிந்துவிற் பகழி கான்ற**
**மின்னவி ரிலங்கு மொள்வாள் விழித்துயிர் விழுங்க வின்ன**
**தன்மையால் தானை நீந்தித் தான்விளை யாடு கின்றான்**

*[அழுவமாரி-பெருமழையை; விழித்து - இமையாது பார்த்து; கொல் நுனை எஃகின்-கொல்லுகின்ற கூரிய முனையையுடைய அம்பினால்.]*

**வேழவெண் கோட்டு மெல்கோல் தின்றுகூன் குருதி வாளால்**
**ஆழநா வழித்து நெய்த்தோர் கொப்புளித் தழிந்த மாவின்**
**சூழ்குடர்க் கண்ணி சூடி நிணத்துகி லுடுத்து வெள்வென்பு**
**ஊழ்பெற வணிந்து சூற்பே யாடக்கண் டுவந்து நக்கான்**

*[கோட்டு மெல்கோல் - தந்தமாகிய மெல்கின்ற கோலாலே; தின்று-பல்தேய்த்து; கூன்-வளைந்த; வாளால்-வாளாகிய நாவழியால்; ஆழ-ஆழமாக.]*

**வெளிற்றுடற் குருதி வெள்ள நிலையிது வென்ப வேபோற்**
**களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சிக் கூப்பி**
**அளித்தவை பாடி யாடக் குறுநரி நக்கு வேழம்**
**விளித்தன கழுகும் பாறும் விலாவிற்றுக் கிடந்த வன்றே** 804

*[வெளிற்றுடல்-இரத்தம் நீங்கின பிணம்; களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் - யானையின் நகங்கள் போன்ற, வரிசை தவறிய பற்களையுடைய பேய்கள்; பாறு-பருந்து.]*

பகை மன்னர்கள் கோபமுற்றுப் பெருமழைபோல் பொழிந்த போர்ப்படைகளைக் கொல்லும் கூர்முனை

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

உடைய தன் வேலால் நீக்கியும், வில்லில் இருந்து விடுபட்ட அம்புகளும், மின்னைப்போல் ஒளிசிந்தும் சிறந்த வாட்களும், வேந்தரை நோக்கி வந்து உயிரைக் கொண்டு செல்ல, இன்னும் இதுபோன்ற வீரத்தோடு சீவகன் போர் புரியும் படைக் கடலில் புகுந்து விளையாடினான். இப்படி விளையாடுகின்ற சீவகன், யானைகளின் வெண் தந்தக் கொம்புகளால் பல் தேய்த்து, வளைந்த இரத்தம் படிந்தவாளால் நாவினை நன்றாக வழித்து, இரத்தமாகிய நீரால் வாய் கொப்பளித்து, இறந்துபட்ட குதிரைகளின் குடல்களாகிய முடிக்கண்ணியைச் சூடி, நிணங்களாகிய ஆடைகளை அணிந்து, வெள்ளெலும்புகளை முறையாக மாலைபோல் அணிந்து, சூல்கொண்ட பேய் ஆடுவதைப் பார்த்துச் சிரித்து மகிழ்ந்தான். இரத்தம் நீங்கிய பிணத்தை உடைய குருதி வெள்ளத்தின் அளவு இது என்று காட்டுவது போல், யானைகளின் நகங்களைப் போல் வரிசையற்றுக் குலைந்த பற்களையுடைய பேய்கள் தலை உச்சியிலே கைகூப்பி, சீவகன் அளித்த விருந்தை எண்ணி ஆடிப் பாட, யானைகளின் அருகே இருந்த குள்ளநரிகள் அப்பேயாடலைக் கண்டு சிரிப்பது போலக் கூவி ஊளையிட்டன. செத்து விழுந்த யானையைத் தின்ற கழுகும் பருந்தும் பேயாடலைக் கண்டு விலாவெடிக்கச் சிரித்து நின்றன.

**கடல்விளை யமுதங் கண்ட பொழுதினெய் கனிந்த தீஞ்சோற்**
**றடிசிலஞ் சுவைமிக் காங்கு மண்ணலங் குமர னொன்னார்**
**உடலின்மேற் றியுரிந் திண்டேர் காண்டலு மைந்தர் நெஞ்சத்**
**திடல்பிளந் திட்ட வெஃகஞ் சுமந்தமர்த் திறத்தின் மிக்கார்**

*[கடல்விளை அமுதம் - உப்பு; அடிசில் - உணவு; ஒன்னார்-பகைவர்; நெஞ்சத்திடல்-பகைவரது மார்பாகிய திடரை.]*

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**கடாந்திறந் திட்டு வானிற் களகள முழங்கும் வேழம்**
**படாந்திறந் தூழித் தீயிற் பதுமுகன் காட்டி யிட்டான்**
**தடாம்பிறை மருப்புத் திண்கை அபரகாத் திரங்கள் தம்மால்**
**கொடாம்பிற குமரிப் போருட் பிறர்க்கெனக் கொன்ற**
**தன்றே 806**

[தடாம்பிறை மருப்பு-வளைந்த பிறைச்சந்திரன் போன்ற தந்தம்; அபரகாத்திரம்-கால்; முன்கால் களைப் பரகாத்திரமென்றும், பின்கால்களை அபரகாத்திரமென்றும் கூறுவதுமுண்டு; காத்திரம் என்பது கால் என்ற பொருளிலும் வந்துள்ளது. கொடாம்-கொடுக்கமாட்டோம்.]

**மருப்பினால் வேழம் வீழா மன்னரை வாலிற் சீறா**
**முருக்கித்தேர் தடக்கை தன்னான் முழங்கிப்பாய் மாக்கள்**
**காலின்**
**நெரித்திடாக் கண்ணுட் டீயாற் சுட்டுநீ றாக்கி**
**நெய்த்தோர்**
**ஒருக்கிப்பேய் பாடி யாட வுறுசிலை யுடன்று**
**கொண்டான் 807**

[சீறா-கோபித்து; முருக்கி-அழித்து; பாய்மா-குதிரை; ஒருக்கி-ஒரு சேர ஆக்கி; உடன்று-கோபித்து.]

கடலில் பிறந்த உப்பினை இட்டவுடன், நெய்சேர்த்து ஆக்கிய நல்லுணவில் சுவைமிகுதல் போல, புகழ்மிக்க சீவகனுடைய, பகைவர் உடல்மேல் படிந்து செல்கின்ற அழகிய தேரைக் கண்டவுடன், அவனுடைய தோழர்கள், பகைவர்களின் மார்புக் கூட்டைப் பிளந்திட்ட வேலை யேந்தி இன்னும் திறத்தோடு போர் புரிவாராயினர். மழை முகில்போல் மதத்தைப் பெருக்கவிட்டுக் கள கள என்று ஒலியெழுப்புகின்ற யானையை, அதன் முக படாத்தை நீக்கி ஊழித் தீ போலக் கொண்டு வந்து, பதுமுகன் அதற்குப் போர்க்களத்தைக் காட்ட, வளைந்த பிறை போலும் தந்தக் கொம்பும், திண்ணிய துதிக்கையும்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கால்களும் கொண்ட அந்த யானை தத்தையின் காரணமாகப் பிறந்த போரில் கொலைத் தொழிலைப் பிறர்க்குக் கொடுக்கமாட்டோம் (தாமே அனைவரையும் கொல்லுவோம் என்னும் கருத்தில்) என்று பலரைக் கொன்று குவித்தது. இப்படி, பதுமுகன் கொண்டு வந்து நிறுத்திய யானை தன் கொம்பினால் பலரைக் கொன்று, தன் வாலினால் மன்னர்களைத் தாக்கி, நீண்ட துதிக்கையினால் தேரை முறித்து, பிளிறிச் சென்று தன் கால்களால் குதிரைகளைக் கொன்று, தீயெழ விழித்து நோக்கி, குருதிநீர் பெருக்கெடுத்தோடக் கொல்ல, பதுமுகனும், பேயும் பயந்து நடுங்கும்படி சினந்து போர் வில்லேந்திப் புறப்பட்டான்.

## வேறு

**கொண்டான் பகழி தொடுத்தான்சிலை கால்கு னிந்த**
**தொண்டேர் மிசையு முருவக்களிற் றுச்சி மேலும்**
**வண்டார்ப் புரவி நிறத்தும்மற மன்னர் மேலும்**
**கண்டான் சொரிந்தான் கணைமாரி கலந்த தன்றே 808**

[குனிந்தது-வளைந்து நின்றது; நிறம்-உயிர்நிலை.]

**பைம்பொற் புளகப் பருமக்களி யானை யீட்டம்**
**செம்பொன் னெடுந்தேர்த் தொகைமாக்கடல் சேனை வெள்ளம்**
**நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லால்**
**அம்பொன் மணிப்பூ ணரசும்மிலை யென்று நக்கான் 809**

[வெள்ளம்-பெருக்கு; மா-குதிரை; மிச்சில்-எச்சில்; புளகம் - யானையின் பருமத்தில் தைத்த கண்ணாடி.]

## வேறு

**ஒருவனே சிலையு மொன்றே யுடையதோர் களிற்றின் மேலான்**
**அருவரை மார்பிற் சென்ற தறிந்தில னெஃக மின்னும்**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**பொருவரோ மன்ன ரென்றான் பொருசிலை மடக்கி யிட்டார்**
**வருகளி யானை மீட்டார் வாட்படை வாங்கிக் கொண்டார்**

[பொருவரோ - போர்செய்வரோ; களி - மதம்; மீட்டார்-திருப்பிக் கொண்டார்.]

இவ்விதம் சினந்து போர்வில் லேந்திய பதுமுகன் வில்லின் கால் வளைத்து, நாணேற்றி அம்பு மழையை ஒள்ளிய தேரின்மேலும், யானையின் நெற்றியிலும், வளமிகு மாலை அணிந்த குதிரைகளின் மார்பிலும், வீரமிக்க வேந்தர்கள் மேலும் சொரிய, சீவகன் வேறுபுறம் இருந்து விடுத்த கணைகளுடன் பதுமுகன் சொரிந்த அம்புகளும் கலந்து பெய்தன. பசும்பொன்னால் செய்த கண்ணாடி பதித்த கழுத்தை உடைய மதயானைக் கூட்டத்திலும், செம்பொன்னால் செய்த பெரிய தேர்க் கூட்டத்திலும், குதிரைக் கடலிலும், படை வீரர்கள் இடையிலேயும், அழகிய செம்பொன் மணிப்பூண் அணிந்த மன்னர்கள் கூட்டத்திலும், சீவகன் வில்லில் இருந்து விடுபட்ட அம்புகள் தோய்ந்த எச்சில் அல்லாமல் வேறில்லை என்றறிந்த பதுமுகன் இனி யார்மேல் அம்பினைப் பொழிவது என்று வியந்து சிரித்தான். வேறு துணையின்றிப் பதுமுகன் தான் ஒருவனே ஆகி, ஏந்திய ஒரே வில்லுடனும், ஊர்ந்து வந்த ஒரே யானையுடனும் சென்று, வேலொன்று தன் அரிய மலைபோன்ற மார்பிலே தைத்திருப்பதையும் உணராது, மேலும் போரிட மன்னர்கள் உள்ளனரோ என்று கேட்டான். இவ்வுரை கேட்ட பகையரசர்கள், போரிட வளைத்த வில்லை மடக்கிக் கொண்டனர்; போர் யானைகளைப் போர்முகம் நோக்கிச் செலுத்தாது திருப்பிக் கொண்டனர்; போரிட உருவிய வாளை உறையில் இட்டனர்.

**செங்கண்மா றெழிக்கப் பட்ட வலம்புரித் துருவங் கொண்ட**
**சங்குவாய் வைத்து நம்பன் றெழித்தலுந் தறுக ணாளி**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பொங்கிய முழக்கின் வேழப் பேரினம் புலம்பி னாற்போல்
தங்குதார் மன்ன ரெல்லாந் தளர்ந்துகண் சாம்பி னாரே

[தெழிக்கப்பட்ட-முழக்கிய; துருவம்-ஒப்பு; தறுகண்-கடுகக் கொல்லுதலையுடைய; ஆளி-சிங்கம்; பொங்கிய-மிகுந்த.]

அருவரை நாகஞ் சுற்றி யாழியான் கடைய வன்று
கருவரை குடையப்பட்ட கடலெனக் கலங்கி வேந்தர்
திருவரை மார்பன் திண்டேர் மஞ்ஞையே முருகன் தானென்று
ஒருவரோ டொருவர் கூடா வண்ணமே யுடைய லுற்றார்

[ஆழியான்-திருமால்; குடையப்பட்ட-கலக்கப்பட்ட; கலங்கி-மனம் கலங்கி; கூடாவண்ணம்-சேராத தன்மையாலே; உடையலுற்றார்-தோற்று ஓட லுற்றார்; மஞ்ஞை-மயில்.]

முளிமரக் காடு மேய்ந்த முழங்கழல் போன்று மைந்தன்
தெளிநலக் குமரர் கூற்றிற் றெழித்தனர் பகழி சிந்தி
ஒளிநல வுப்புக் குன்ற மூர்புனற் குடைந்த தேபோற்
களிநல மன்னர் தங்கள் கடற்படை யுடைந்த தன்றே 813

[முளிதல்-உலர்தல்; மேய்ந்த-உண்ட; மைந்தன்-சீவகன்; குமரர்-தோழர்; கூற்றின் தெழித்தனர்-யமனைப்போல முழங்கினர்; ஊர்புனல்-ஓடும்நீர்.]

செங்கண்ணுடைய திருமாலினால் பாரதப்போரில் முழங்கப்பட்ட வலம்புரிக்கு ஒப்பான சங்கை வாயில் வைத்துச் சீவகன் முழங்கவும், ஆண்மை மிக்க ஆளியின் முழக்கினால் யானைக்கூட்டம் புலம்பியதைப் போல, மாலையணிந்த மன்னர்கள் எல்லாம் தளர்ந்து மெய் சோர்ந்து மயங்கினர். மந்திர மலையை மத்தாக வைத்து வாசுகி என்னும் பாம்பைச் சுற்றிப் பாற்கடலை அன்று கடைந்தபோது, அம் மந்திரகிரி என்னும் மலையால் கலக்குண்டு சிதறிய கடலைப்போல, மன்னர்கள்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

மனம் கலங்கி, அழகிய மாலையணிந்த மார்புடைய சீவகனின் அழகிய தேரை மயிலென்றும், அவனை அதில் அமர்ந்த முருகன் என்றும் எண்ணி ஒருவரோடு ஒருவர் சேராதபடி புறமுதுகிட்டு ஓடலாயினர். காய்ந்த மரங்களுடைய காட்டினைப் பற்றிப் பரவிய காட்டுத் தீபோல, சீவகனும் அழகு நலமுடைய அவன் தோழரும் தம்பியரும் கூற்றுவனைப் போல முழங்கிக் கூடிப் போரிட, நிறமும் அழகும் உடைய உப்புமலை, ஊற்றெடுத்துப் பெருகிவரும் வெள்ளத்தில் கரைந்தழிவது போல் அழகும் மகிழ்வும் நிரம்பிய அரசர்களது கடல்போன்ற படை சீவகனின் படைக்காற்றாது கையில் உள்ள அம்புகளை எறிந்துவிட்டு ஓடியது.

**உறுபடை மன்னர் தம்மை யுடற்றியொன் றானுமின்றிச்**
**சிறுபடை யவர்கள் வென்று செகுப்பவோ வென்ன வேண்டா**
**செறியெயிற் றாளிவேழப் பேரினஞ் செகுத்த தன்றே**
**உறுபுலி யொன்று தானே கலையின முடற்றிற் றன்றே**

[உறுபடை மன்னர் - பெரும்படையையுடைய பகையரசர்; உடற்றி-வருத்தி; ஒன்றானும்-ஒருகுற்றமேனும்; செகுப்பவோ-அழிப்பார்களோ; செறி எயிறு-நெருங்கிய பற்கள்.]

**நல்லவை புரியு மாந்தர் நாந்தகம் பிழைத்து வீழா**
**அல்லவை புரியு மாந்தர்க் கத்திற மொன்றும் வாயா**
**வெல்வதோ குணத்தின் மிக்கார் வெற்றிலை விடினும் வேலாம்**
**இல்லையே வென்றி தீமை யிடங்கொண்ட மனத்தி னார்க்கே**

[நாந்தகம்-வாள்; பிழைத்து-தப்பி; அல்லவை-தீமை; வாயா-பயன்கொடா.]

**குழையுடை முகத்தி னாள்கண் கோணைப்போர் செய்த மன்னர்**
**மழையிடை மின்னி னொய்தா மறைந்தனர் விஞ்சை வேந்தர்**
**முழையிடைச் சிங்க மன்னான் மொய்யம ரேத்தி யார்த்தார்**
**விழவுடை வீதி மூதூர் விருப்பொடு மலிந்த தன்றே** 816

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[குழை-குண்டலம்; கோணைப்போர்-மாறுபாட்டை யுடைய போர்; மழை-மேகம்; நொய்தா-விரைய; முழை-குகை.]

**பார்மிசை யுலக மேத்தும் படுகளங் கண்டு பற்றார்**
**போர்முகக் களிற்றுவெண்கோ டுழுதசெஞ் சால்கொண் மார்பிற்**
**சீர்முகத் தோழர் சூழச் சீவகன் றிருவின் சாயல்**
**வார்முக முலையி னாளை மனைவயிற் கொண்டு புக்கான்**

[களம்-போர்க்களம்; பற்றார்-பகைவர், கோடு-தந்தம்.]

பெரும்படை உடைய வேந்தர்களை வருத்தித் தமக்கோர் துன்பமும் இல்லாமல், சிறுபடையினர் வென்று அழித்துவிட முடியுமோ என்று எண்ண வேண்டாம். நெருங்கிய பற்களை உடைய ஆளி ஒன்றே யானைப் பெருங்கூட்டத்தை அழித்துவிடும் அன்றோ! வலிமை மிக்க புலி ஒன்று மான் கூட்டத்தையே கொன்று விடவும் கூடும் அல்லவா? அதுபோலத் தான் என்றறிக பெரும் படையுடன் மோதிய சிறுபடைகளும் என்பது பெறப்படும் கருத்து. நல்லவை செய்யும் மனமுடையவர் களுக்கு வாட்கள் தவறிக் கெடமாட்டா! திக்குணம் மிக்க இயல்புடையோர்க்கோ இத்திறம் வாய்க்கமாட்டாது. எனவே அடையும் வெற்றியைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் பண்பிற் சிறந்த நல்ல குணம் உடையோர் வெற்றிலையை எதிரிகள் மேல் எறிந்தாலும் அது வேல் போல் சென்று தாக்கிப் பயன்தரும். ஆனால் தீமை நிறைந்த மனமுடையோர்க்கோ, வெற்றி என்பது எப்போதும் கிட்டாது. மகரக் குழையணிந்த தத்தையின் காரணமாகப் பகைத்துப் போரிட்ட மன்னர்கள் முகிலிடைத் தோன்றி மறையும் மின்னல்போல் இருந்த இடம் தெரியாமல் மறைந்தனர். வித்தியாதர வேந்தர்கள் குகைக்குள்ளிருக்கும் சிங்கம் போன்ற சீவகனின் வீரப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

போரைப் புகழ்ந்து போற்றினர். விழா நடைபெறும் தெருக்கள் நிறைந்த அப் பழம்பதியும் மகிழ்ச்சியில் திளைத்தது. உலகில் வீரத்தால் உயர்ந்தோர் புகழும் போர்க்களத்தைக் கண்டு, பகைவருடைய போர் யானைகளின் வெண்தந்தக் கோடு கீறிச் சிவந்த, சால்கொண்ட மார்பினரான சிறந்த தன் தோழர்கள் சூழ்ந்து உடன்வர, சீவகன் திருமகளை ஒத்த அழகிய கச்சணிந்த முலை உடைய தத்தையைத் தன்னுடைய மாளிகைக்கு அழைத்துச்சென்றான். (யானைத் தந்தம் கீறிய விழுப்புண் உழுது கீறியதுபோல் இருந்ததனைச் சால்கொண்ட மார்பு என்னுஞ் சொல்லால் குறித்தார்.)

**நெய்க்கிழி வைக்கப் பட்டார் நெய்ப்பத்தற் கிடத்தப் பட்டார்**
**புக்குழி யெஃக நாடி யிரும்பினாற் போழப் பட்டார்**
**மைக்கிழிந் தொழுகுங் கண்ணீர் மாநிலத் துகுக்கப் பட்டார்**
**கைக்கிழி கொடுக்கப் பட்டார் கலம்பல நல்கப் பட்டார் 818**

[நெய்க்கிழி-நெய்யில் தோய்த்த துணி; நெய்ப்பத்தல்-நெய்யைக் கொண்ட சாலில்; போரினாலுண்டாய புண் ஆறுவதற்கு நெய்க்கிழியில் வைக்கப்படுதலும், நெய்ப்பத்தலிற் கிடத்தப்படுதலும் இயல்பு. புக்குழி புகுந்த இடத்தை; இரும்பு-வாள்; போழ்தல்-அறுத்தல்; மைக்கு-மையுடன்; கைக்கிழி-கையோலை; மானியம்.]

**முதுமரப் பொந்து போல முழுமெயும் புண்க ளுற்றார்க்**
**கிதுமருந் தென்ன நல்லா ரிழுதுசேர் கவளம் வைத்துப்**
**பதுமுகன் பரவை மார்பி னெய்க்கிழி பயிலச் சேர்த்தி**
**நுதிமயிர்த் துகிற்குப் பாயம் புகுகென நூக்கி னானே**

[நல்லார்-மருத்துவர்; இழுது-நெய்; வைத்து-வைப்ப; பரவை-பரத்தல்; பயில-மிக; சேர்த்தி-வைத்து; நுதிமயிர்த்துகிற்குப்பாயம்-எலியினது கூர்மையையுடைய மயிராற் செய்த ஆடையால் ஆகிய சட்டை; நூக்கினான்-காத்தான்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**பார்கெழு பைம்பொன் தன்னால் பண்ணவ னுருவ மாக்கி
ஊர்கெழு விழவு செய்தாங் குறுபொரு ளுவப்ப நல்கித்
தார்கெழு மின்னு வீசித் தனிவடந் திளைக்கு மார்பன்
போர்கெழு களத்துப் பாவம் புலம்பொடு போக்கி னானே**

*[பார்கெழு-பாறையிற் பொருந்திய; பண்ணவன்-அருகதேவன்; உருவமாக்கி-வடிவம் செய்து; விழவு-உற்சவம்; உறுபொருள்-மிக்க பொருளை; களத்துப் பாவம்-போர்க்களத்துப் பிறரைக் கொன்றதனால் உண்டான பாவம்; புலம்பு-வெறுப்பு.]*

**செய்தவப் பாவ மெல்லாந் தீர்த்திடுந் தீர்த்தன் பாதம்
எய்திய சேடங் கூவித் திறைஞ்சுபு தொழுது வாழ்த்தி
மையறு மணியிற் செய்த வலம்புரி யதனீர் கொண்டான்
வையக மளிக்க நீண்ட வலம்புரித் தடக்கை யானே**

*[தீர்த்தன் - அருகதேவன்; இறைஞ்சுபு - வணங்கி; மையறு-குற்றமற்ற.]*

வேல் அம்பு வாள் பாய்ந்து உண்டான புண்ணிலே நெய் தோய்ந்த துணியை வைத்தார்; நெய் நிறைந்த சாலிலே கிடத்தினர்; அம்பு பாய்ந்து அழுந்திய இடத்தை அறிந்து வாளால் பிளந்து அதை எடுத்தனர். அணிமணிகள், பலர் கொள்ளக் கொடுத்தனர். மைதோய்ந்த கண்களில் இருந்து கண்ணீர் வடியச் சுற்றத்தார் அழப் போரில் இறந்தவர்கள் பேரால் கையோலையும் (மானியமும்) கொடுத்தனர். விழுப்புண் பட்டோர் கலன் பல பெற்றனர். முதிர்ந்த மரங்களிடை உள்ள பொந்துகள் போல, உடலெல்லாம் விழுப்புண் ஏற்றவர்களுக்கெல்லாம் நல்ல மருந்து என்று மருத்துவ மகளிர் நெய்கலந்த கவளத்தை வைத்தனர். பதுமுகனுடைய அகன்ற மார்பிலே நெய்த்துணியை நிறைய அடைத்து, அதை எலிமயிராற் செய்த, உள்ளே துணி பொருத்திய சட்டையிலே புகச் செய்து சீவகன் காத்தான். பாறையில் பொருந்திய பசும்பொன்னைக் கொண்டு அருகன் திரு உருவம் சமைத்து நகர் எல்லாம் மகிழத் திருவிழா நடத்தி, அங்குப்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

பெரும் பொருள் பிறர்க்கு ஈந்து, மலர் மாலைகளும் முத்துச் சரங்களும் மின்னும் மார்புடையவனாகிய சீவகன், போரால் விளைந்த பாவத்தையும் துயரத்தையும் போக்கினான். முன்னைப் பழம் பிறப்புகள் பலவற்றிலும் செய்த பாவம் யாவற்றையும் நீக்கும் அருகப் பெருமானின் திருவடி தோய்ந்த புனித மலர்களைக் கை குவித்து, வணங்கித் தொழுது போற்றி, மாசற்ற மணிகள் பதித் தமைத்த வலம்புரிச்சங்கு வடிவமாக உள்ள பூசைப் பாத்திரத்தில் உள்ள தீர்த்தத்தையும் உலகம் உய்யக் கொண்ட வலம்புரி ரேகை உள்ள கையினை உடைய சீவகன் ஏற்றுக்கொண்டான்.

## வேறு

**கருமணி யழுத்திய காமர் செங்கதிர்த்**
**திருமணிச் செப்பெனச் செறிந்த வெம்முலை**
**அருமணி யலம்வரு மம்பொற் கொம்பனாள்**
**பெருமணக் கிழமையாம் பேசு கின்றதே 822**

[கருமணி-நீலமணி; காமர்-அழகிய; செங்கதிர்த் திருமணி-சிவந்த கிரணங்களை வீசுகின்ற மாணிக்கம்; அலம்வரும்-அசைகின்ற.]

**நான்குநூ றாயிரங் குடத்து நல்லன**
**ஆன்றயிர் பானெயோ டழகி தாநிறைத்து**
**ஊன்றிகழ் வேலினான் வேள்விக் கூர்மருள்**
**கோன்றொறுக் காவலன் கொண்டு முன்னினான் 823**

[குடத்து-குடத்தில்; நல்லனவாகிய தயிரும், பாலும் நெய்யொடு நிறைத்து. ஊன்-மாமிசம்; வேள்வி-மணம்; ஊர் மருள்-ஊரார் வியக்கத்தக்க; கோன்-இடையன்; தொறுக்காவலன்-பசுக்கூட்டத்தைக் காவல் செய்பவன்.]

**வளைநிற வார்செநெ லரிசிப் பண்டியோடு**
**அளவறு சருக்கரைப் பண்டி யார்ந்தன**
**பிளவியல் பயறுபெய் பண்டி யுப்புநீர்**
**விளைவமை பண்டியின் வெறுத்த தாங்கொர்பால் 824**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[வளை-சங்கு; பண்டி-வண்டி; ஆர்ந்தன-நிறைந்தன; பிளவியல் பயறு-பிளத்தல் இயன்ற பயறு; நீர்-கடல்; பண்டியின்-வண்டியோடு; வெறுத்தது-செறிந்தது.]

கருமணி அழுத்திப் பதித்த அழகிய சிவந்த பொன் மணிச் செப்பென்று சொல்லத்தக்க, விம்மிப் பருத்த விருப்பூட்டும் முலைகளிலே, அழகிய மணிமாலைகள் அசையும், பொற்கொடி போன்ற தத்தையின் சிறப்பு மிக்க திருமணப் பெருமைகளை இனிச் சொல்லுவோம். நான்கு நூறாயிரம் குடங்களிலே நல்ல பசும் பாலையும், தயிரையும் நெய்யையும் சிறப்புற நிறைத்து, ஊன் பொருந்திய போர்வேலேந்திய சீவகனின் திருமண வேள்விக்கு, ஊரார் வியக்க அரசனுடைய ஆநிரைக் காவலனாகிய நந்தகோன் எடுத்துக் கொண்டு முதலிலே வர, வெண் சங்கு நிறமுடைய உயர்ந்த செந்நெல் அரிசி ஏற்றிய வண்டிகளும், அளவற்ற சருக்கரையினைச் சுமந்த வண்டிகளும், உடைக்கப்பட்ட பயறுகள் நிறைந்த வண்டிகளும், நீரில் விளைந்த உப்பினை ஏற்றிய வண்டிகளும், உடன் வந்து வீட்டின் ஒரு பக்கத்தில் நிறைந்தன.

**சினைத்துணர் முழவன பலவின் தீங்கனி**
**கனைத்துவண் டுழல்வன வாழை மாங்கனி**
**எனைத்துள கிழங்குகாய் குருகொ டேந்திய**
**சனத்தினாற் றகைத்திடம் பெறாது தானொர்பால் 825**

[துணர்-கொத்து; கனைத்து-செறிந்து; குருகு-குருத்து; சனம்-நகரமாந்தர்; தகைத்து-நெருங்கி.]

**மரகத மணிப்பசுங் காய்கொள் வான்குலை**
**கவர்பழுக் காய்க்குலை கனியக் காவுறீஇ**
**இவர்தரு மெல்லிலைக் காவு மேந்திய**
**உவரியாய்ச் சொரிந்திடம் பெறாது தானொர்பால் 826**

[மரகதமணி-பச்சை இரத்தினம்; கவர்-விரும்பத்தக்க; கனிய-முற்ற; காவுறீஇ-காவடியிற் சுமந்து வந்து

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இவர் தரும்-பரத்தலைத் தருகின்ற; மெல்லிலைக்கா-வெற்றிலையை வைத்த காவடி; உவரியாய்-வெள்ளமாய்; பழுக்காய்-பாக்கு.]

**சண்பகந் தமநகந் தமால மல்லிகை**
**தண்கழு நீரொடு குவளை தாமரை**
**வண்டின மிசைகொள வாசப் பூச்சுமை**
**கொண்டவர் குழாம்பொலி வுற்ற தாங்கோர்பால் 827**

[தமநகம்-மரு; தமாலம்-பச்சிலை; மிசைகொள-மேலே மொய்க்கும்படி.]

பலா மரக்கிளைகளில் கொத்தாகத் தொங்குகின்ற முழவு போன்ற நறும்பலவின் கனியும், வண்டுகள் ஒலித்து மொய்க்கின்ற வாழை, மாங்கனிகளும், இன்னும் உள்ள காய், கிழங்கு, ஓலைக் குருத்து வகைகள் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் சுமந்து வந்த மக்கள் நிறைந்து நெருங்க ஒரு பக்கம் இடம் இல்லாது போனது. இன்னும் மரகதமணி போன்ற பசுங்காய்களைக் கொண்ட தென்னங் குலையும், மனங்கவரும் கமுகின் குலையும், முற்றிலும் காவடியிலே சுமந்து வந்து பரப்பி வைத்த வெற்றிலைப் பெட்டியும் வந்து வெள்ளமாய் நிறைய ஒரு பக்கம் இடம் இல்லாது போயிற்று. சண்பகமும், மருக்கொழுந்தும், மருவும், மல்லிகையும், குளிர்ந்த செழுங்கழுநீரும், குவளையும் தாமரையும், ஆகிய வாச மலர்களை வண்டுகள் மொய்க்கக் கொண்டு வந்து நிறைத்தவர்கள் கூட்டம் அங்கோர் பக்கத்திலே அழகுற நிறைந்தது.

**ஆர்கெழு குறடுசூட் டாழி போன்றவன்**
**சீர்கெழு வளமனை திளைத்து மாசனம்**
**கார்கெழு கடலெனக் கலந்த வல்லதூஉம்**
**பார்கெழு பழுமரப் பறவை யொத்தவே 828**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[ஆழி-சக்கரம்; திளைத்து-இடைவிடாமல் நெருங்கி; கடலெனக் கலந்த-ஒலித்தலாற் கடல் என்று கூறும்படி கலந்தன; அல்லதூஉம்-அதுவல்லாமலும்; பழுமரப்பறவை-பழுத்த மரத்தின்கட் செல்லும் பறவை.]

**கையுறை யெழுதினர் கைந்நொந் தேடறுத்**
**தையென விருப்பமற் றன்ன தாதலான்**
**வையக மருங்கினின் வாழ்நர் மற்றிவன்**
**செய்தவ நமக்கிசை கென்னச் சென்றதே 829**

[கையுறை யெழுதினர்-கலியாணத்திற்கு வந்த வரிசைகளின் கணக்கெழுதியவர்; ஏடறுத்து-ஓலையைக் கிழித்து; ஐயென-வியவா நின்று; இருப்ப-இளைப்பாறியிருப்பார்கள்.]

**வாலரி கழுவிய வண்ணச் செம்புனல்**
**காலிய லிவுளியுங் களிறு மாழ்ந்தவட்**
**கோலநீர்க் குவளையு மரையும் பூத்துவண்டு**
**ஆலிவண் குருகுபாய் தடங்க ளானவே 830**

[வாலரி-வெள்ளிய அரிசி; புனல்-கழுநீர்; காலியலிவுளி - காற்றைப்போல் இயலுதலையுடைய குதிரை; கோலம்-அழகு; மரை-தாமரை; வண்டு ஆலி-வண்டு ஒலிக்கப்பட்டு; குருகு-நாரை.]

அழகு பொருந்திய வாயில் முற்றத்துச் சுவரும், வெளி மதிற் சுவரும் உடைய கடல் போன்ற சிறப்புடைய கந்துகனுடைய வளமனையில், மக்கள் கூட்டம் பெருகிக்கடல் ஒலிபோல் நிறைந்தது; அல்லாமலும் அம்மக்கள் கூட்டம் பயன் பெறவேண்டிப் பழுத்த மரத்தை வந்தடையும் பறவைக் கூட்டத்தையும் ஒத்தது. வரிசையாக வந்த பரிசுப் பொருள்களின் கணக்கை எழுதிக் கையலுத்தவர்கள், பட்டோலைகளை அப்புறம் எடுத்து வைத்து இளைப்பாறினர். வரிசைகள் மிகுந்து வர, அவற்றைக் கண்ட உலகில் வாழ்கின்ற மக்கள் இவன் செய்த



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

இத்தவம் நம்மையும் வந்தடைக என்று நினைக்கும்படிச் சிறந்திருந்தன. வெள்ளிய அரிசியைக் கழுவிக் களைந்த நல்ல சிவந்த கழுநீர், காற்றெனப் பாயும் குதிரையும் யானையும் அமிழ, அதிலே அழகிய குவளை மலர்களும் தாமரைப் பூக்களும் பூத்து வண்டுகள் மொய்க்க, நாரைகள் நிறைந்து வாழும் நீர்நிலை ஆனது.

**உடுப்பன துகில்களு முரைக்கு நானமும்**
**தொடுத்தன மாலையுங் குழையுஞ் சாந்தமும்**
**கொடுப்பவர் கொள்பவர் வீழ்த்த பல்கலம்**
**அடுத்துவிண் பூத்ததோ ரழகின் மிக்கதே** **831**

[உரைக்கும் நானம்-தேய்த்துப் பூசிக்கொள்கின்ற புழுகுநெய்; குழை - மங்கலவணி; சாந்தம்-சந்தனம்; அடுத்து-நெருங்கி.]

**கலங்கழு மரவமுங் கருனை யாக்குவார்**
**சிலம்பொலி யரவமு மிச்சில் சீப்பவர்**
**இலங்குபொற் கிண்கிணி யிரங்கு மோசையும்**
**உலம்புமா லுவாக்கட லொலியின் மிக்கவே** **832**

[கலம் கழும் அரவமும்-தாலம் முதலிய பாத்திரங் களைக் கழுவுகின்ற ஒலியும்; கருனை-பொரிக்கறி; மிச்சில்சீப்பவர் - எச்சிலைத் துடைப்பவர்; இரங்கும்-ஒலிக்கின்ற; உலம்பும் - முழங்குகின்ற; மால்-பெரிய.]

உடுக்கின்ற ஆடைகளும், பூசிக்கொள்கின்ற புனுகும், தொடுக்கப்பட்ட மாலைகளும், அரைத்து மணமுறக் குழைத்த சந்தனமும் பலர் எடுத்துக் கொடுக்கவும், வாங்கிக் கொள்ளவும், சிந்திச் சிதறிய அணிகள், விண்ணிலே பூத்த நட்சத்திரங்களிலும் மிக்க அழகுடைய வாயிருந்தன. உண்கலம் கழுவும் ஓசையும், பொரிக் கறிகள் சமைப்பார் பூட்டிய பாதச் சிலம்பொலி ஓசையும், உண்டு களித்த எச்சிலைத் துடைப்பவர்கள் அணிந்த

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கிண்கிணிகளின் ஓசையும் ஒன்று சேர்ந்து, அலை முழங்கும் கடலோசையினும் அதிக ஓசை உடையதாயிருந்தது.

## வேறு

**மூழிவாய் முல்லை மாலை முருகுலாங் குழலி னாளும்**
**ஊழிவாய்த் தீயொ டொக்கு மொளிறுவாட் டடக்கை யானும்**
**ஆழிவாய் விரலிற் காம னம்பொடு சிலைகை யேந்தத்**
**தாழிவாய்க் குவளை வாட்கண் தையலார் பரவச் சார்ந்தார்**

*[முருகு-வாசனை; பரவ-புகழ; ஆழி-மோதிரம்.]*

**இன்னிய முழங்கி யார்ப்ப வீண்டெரி திகழ வேதம்**
**துன்னினர் பலாசிற் செய்த துடுப்பினெய் சொரிந்து வேட்ப**
**மின்னியல் கலச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்**
**முன்னுபு விளங்கு வெள்ளி முளைத்தெழ முருக னன்னான்**

*[இன்னியம்-இனிய வாத்தியங்கள்; திகழ-வளரும்படி; வேதம் - வேத மந்திரங்களால்; துன்னினர்-அந்தணர்; பலாசின்-புரசமரத்தால்; துடுப்பு-சட்டுவம்.]*

**இட்டவுத் தரிய மின்னு மெரிமணிப் பருமுத் தாரம்**
**மட்டவிழ் கோதை வெய்ய வருமுலை தாங்க லாற்றா**
**நெட்டிருங் கூந்த லாட னேர்வளை முன்கை பற்றிக்**
**கட்டழல் வலங்கொண் டாய்பொற் கட்டிறா னேறி னானே**

*[இட்ட-போர்த்துக்கொண்ட; தாங்கலாற்றா-சுமக்க முடியாத; நெட்டிருங் கூந்தலாள்-நீண்ட கரிய கூந்தலையுடைய காந்தருவதத்தை; நேர்வளை-அளவொத்த வளையையணிந்த; கட்டழல்-மிக்க நெருப்பை.]*

பூக்குடலையிலே இருந்த மணங் கமழும் முல்லை மலர் மாலை அணிந்த கூந்தலுடைய தத்தையும், போரிலே ஊழித் தீபோலச் சீறுகின்ற ஒளிமிக்க வாளேந்திய அகன்ற கையுடைய சீவகனும், காமனுடையதைப் போன்ற

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations


அம்பையும் வில்லையும் மோதிரம் அணிந்த விரலுடைய கையில் ஏந்தி, தாழியில் மலர்ந்த குவளை மலர்போலும் நிறமும் வாள்போன்ற கூர்மையும் கொண்ட கண்களை உடைய மங்கையர்கள் சூழ்ந்திருக்க ஓர் இருக்கையில் சென்றமர்ந்தனர். இவ்விதம் இருவரும் மணத்தவிசில் சென்றமர்ந்தவுடன், இன்னிசைக்கருவிகள் முழங்கி ஆர்த்தன. தீ மிகுந்து எரிய, மறையுணர்ந்த அந்தணர் புரச மரத்தால் செய்த சட்டுவத்தால் நெய்யினை நிறையப் பெய்து வேள்வித்தீ வளர்த்தனர். ஒளி பொருந்திய பொற்கலசத்தில் இருந்த புனித நீரை சீதத்தன் வார்க்கவும், விடிவெள்ளி முளைத்தெழும் வைகறை நேரத்திலே, அழகு மிக்குடைய சீவகனும் அதை விரும்பி ஏற்றுக்கொண்டான். அணிந்திருக்கும் மேலாடையும், ஒளிவிட்டு மின்னும் மணிச்சரமும், முத்து மாலையும், இதழ் விரித்த மலர்மாலையும், விருப்பூட்டும் முலைகளும் ஆகிய சுமையோடு; தாங்க முடியாத நீண்ட கருங்கூந்தலும் உடைய தத்தையின்; அழகிய வளையணிந்த முன் கையைப் பற்றி வேள்வித் தீயை வலமாகச் சுற்றி வந்து, அழகுறச் செய்தமைத்த பொற்கட்டிலில் சீவகன் ஏறி அமர்ந்தான்.

**மந்திரத் தரசன் காதன் மாதரம் பாவை தன்னைக்**
**கந்துகன் சிறுவன் வேட்ட கடிவினை நொடியின் மற்றோர்**
**அந்தர விசும்பிற் றேவர்க் கதிபதி யாய கோமான்**
**இந்திரன் றனக்கு மாகா தென்பது நடந்த தன்றே** **836**

*[மந்திரத்தரசன்-வித்தியாதர உலகத்து அரசன்; கடிவினை-மணச் சடங்கை; நொடியின்-கூறினால்.]*

**அடிமனை பவள மாக வரும்பொனா லலகு சேர்த்தி**
**முடிமணி யழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்கக்**
**கடிமலர் மாலை நாற்றிக் கம்பல விதானங் கோலி**
**இடுபுகை மஞ்சிற் சூழ மணவறை யியற்றி னாரே** **837**

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[அடிமனை-சுற்றுச்சுவர்; அலகு-கையலகு; மூரிக்காழ்-வன்மையுள்ள தூணை; நெற்றி-தூணின் உச்சி; மூழ்க-மறையும்படி; கடி-வாசனை; கோலி-கட்டி; கம்பலம்-துணி.]

**ஐந்துமுன் றெடுத்த செல்வத் தமளிமூன் றியற்றிப் பூம்பட்டு**
**எந்திர வெழினி வாங்கி யின்முக வாசச் செப்பும்**
**சந்தனச் சாந்தச் செப்புந் தண்மலர் மாலை பெய்த**
**இந்திர நீலச் செப்பு மிளையவ ரேந்தி னாரே 838**

[இந்திர நீலச்செப்பு-இந்திர நீலமணியாற் செய்த செப்பு; எழினி-திரை.]

வித்தியாதரர் வேந்தனாகிய கலுழவேகனின் அன்புக்குரிய அழகிய பொற்பாவை போன்றவளாகிய தத்தையைக் கந்துக்கடன் மகனாகிய சீவகன் மணந்த திருமணச் சிறப்பைக் கூறுவதென்பது, வேறோர் உலகமாகிய வானுலகின்கண் வாழும் தேவர்களுக்குத் தலையாய அரசனாகிய தேவேந்திரனுக்கும் முடியாததாகும். சுற்றுச் சுவர்களைப் பவளப் பலகையால் அமைத்து, அழகிய பொன்னால் கைமரங்கள் சேர்த்து, உச்சியிலே அழகிய மணிகள் பதித்து நிறுத்திய பெரிய தூண்களின் மேல்புறம் மறையப் பட்டுத்துகிலை மேல்விரிப்பாகப் பரப்பி மணமிகு மலர்மாலைகளைத் தொங்கவிட்டு; வாசம் வர இடுகின்ற அகிற்புகை நிறைந்து மேகம்போலச் சூழப் பள்ளியறையை அழகுபடுத்தி அதில்; சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், உறுதூவி ஆகிய ஐந்தும் கொண்டு செய்த சிறந்த அழகிய மூன்று அடுக்குகளைக் கொண்ட படுக்கைகள் மூன்றமைத்து; (இருவரும் தனித்தனியே துயில இரண்டும், கூடி இன்பம் நுகர ஒன்றும் ஆக மூன்று) அழகிய பட்டினால் செய்த விசைப்பொறி பொருந்திய திரையைத் தொங்கவிட்டு இனிய வாசனைப் பொருள்கள் நிறைந்த செப்பினையும், சந்தன மரத்தால் செய்த சாந்து நிறைந்த செப்பினையும், குளிர்ந்த மலர்மாலைகள் வைத்த இந்திர நீலச்செப் பினையும் பணிமகளிர் ஏந்தி நின்றனர்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

கடைந்துபெய் மணிக்கைச் செம்பொற் காசறு தட்டிற் சூழ்ந்து
மிடைந்துபெய் மணிக்கட் பீலி மின்னுசாந் தாற்றி பொன்னார்
அடைந்துவீ சால வட்ட மரிவைய ரேந்தி யாற்றத்
தடங்கண்கள் குவளை பூப்பத் தையலோ டாடு மன்றே 839

[மணிக்கை-மணியாற் செய்யப்பட்ட பிடி; காசு-குற்றம்; மிடைந்து-நெருங்கி; மணிக்கட்பீலி-நீலமணி போன்ற கண்ணையுடைய மயிலிறகு; குவளைபூப்ப-செங்குவளை போலச் சிவப்ப.]

பஞ்சுசூழ் பரவை யல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்கச்
செந்தளிர்க் கோதை சோரக் கிண்கிணி சிலம்பொ டேங்க
மைந்தருட் காம னன்னான் மகளிருட் டிருவ னாளை
அந்தரத் தமரர் பெற்ற வமிர்தெனப் பருகி னானே 840

[பஞ்சு-துகில்; கலாபம்-மேகலை வகையுள் ஒன்று; செந்தளிர்க் கோதை-சிவந்த தளிரைச் சேர்த்துத் தொடுத்த மாலை.]

இளமுலை மணிக்கண் சேப்ப வெழுதுவிற் புருவ மேறக்
கிளைநரம் பனைய தீஞ்சொற் பவளவாய் திகழத் தேன்சோர்
வளமலர்க் கோதை தன்னை வாய்விடான் குழையப் புல்லி
அளமர லிலாத வின்பக் கடலகத் தழுந்தி னானே 841

[மணிக்கண்-நீலமணியைப் போன்ற கண்; சேப்ப-சிவப்ப; ஏற-மேற்செல்ல; கிளைநரம்பு-கிளை என்னும் நரம்பின் இசை.]

இன்னண மொழுகு நாளுள் இளமரக் காவு காண்பான்
பொன்னணி மார்பன் சென்று புகுதலு மொருவன் றோன்றித்
துன்னியோ ரோலை நீட்டித் தொழுதனன் பெயர்ந்து நிற்ப
மன்னிய குருசில் கொண்டு மரபினா னோக்கு கின்றான்

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

[இன்னணம்-இன்ன வண்ணம்; துன்னி-சீவகனை நெருங்கி; பெயர்ந்து நிற்ப-நீங்கி நிற்ப; காவு-சோலை.]

மணியைக் கடைந்து செய்தமைத்த கைப்பிடியையும், செம்பொன்னாலான குற்றமற்ற தட்டினையும், தன்னைச் சூழ்ந்து நெருங்கப் பெய்த நீலநிறக் கண்களை உடைய, பீலியையும் உடைய ஒளிவீசும் சிற்றால வட்டத்தையும்; ஏந்தி விசிறும் பொன்னால வட்டத்தையும் மகளிர் எடுத்து வந்து விசிறிக் களைப்பை நீக்க, பெரிய கண்கள் குவளை மலர் போலச் சிவக்கச் சீவகன் தத்தையோடு இன்பம் நுகர்வானாயினன். பஞ்சில் நெய்த ஆடையணிந்த பரந்த அல்குலில் சூடிய பொன்னொளி வீசும் மேகலை இறுக, சிவந்த தளிர் கலந்த மலர்மாலை அவிழ்ந்து சிதறக் கிண்கிணியும் பாதச்சிலம்பும் ஒலிக்க; ஆண்களில் காமனைப் போன்ற அழகுடையவனாகிய சீவகன், பெண்களில் திருமகள் போன்ற தத்தையை, விண்ணுலகத் தேவர்கள் அரிதின் முயன்று பெற்ற அமுதம் போல் சுவைத்து மகிழ்வானாயினன். அழகிய இளம் முலைகளின் கரிய மணிகள் போன்ற காம்புகள் சிவக்கவும், எழுதி வைத்த வில்போன்ற புருவங்கள் ஏறி நெற்றி சுருங்கவும், கிளை நரம்பின் இன்னிசை போலும் இனிய மொழி பேசும் பவளவாய் அமுதினை உண்டும், தேன் சொரியும் வளமிகு மலர்மாலை போன்ற தத்தையை இடைவிடாமல் இறுகத் தழுவித் துன்பமில்லா இன்பக்கடலில் தோய்ந்தான். இவ்விதமாக இருவருமாக இன்பந் துய்த்திருக்கும் நாளில், இளமரச் சோலை காண்பதற்குப் பொன்னணிகள் புனைந்த மார்புடைய சீவகன் சென்று நுழையவும், ஒருவன் அருகிலே நெருங்கி வந்து ஓலை ஒன்றினைக் கொடுத்து வணங்கித் தொழுது பின் அடிபெயர்ந்து நிற்க, சிறப்பு மிக்க சீவகன் அதை வாங்கி முறையோடு வாசிக்கலுற்றான்.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

## வேறு

உருமுக்கதிர் வேற்கலுழ னோலையுல கென்னும்
பருமைக்குருப் பளிங்கிற்புகழ்ப் பஞ்சிமுழு தடுத்த
திருமிக்குடைச் செல்வன்றிறற் சாமிநனி காண்க
அருமையற னின்பம்பொரு ளாகெனவி டுத்தேன் 843

[உருமுக்கதிர்வேல்-பகைவர்க்கு இடிபோன்ற கிரணங்களையுடைய வேல்; பருமை குரு பளிங்கில்-பருமையையும் நிறத்தையுமுடைய பளிங்கிலே; அடுத்த-சேர்த்த.]

தத்தையொடு வீணைமனர் தாம்பொருது தோற்ப
மொய்த்தகலை நம்பிமுகிழ் முலையையிசை வெல்ல
வைத்தகதிர் வேலின்வலி யார்க்குரிய ளென்னச்
சித்தங்கரிந் தாங்குக்கொடி யான்செரு விளைத்தான் 844

[மனர்-மன்னர்; முகிழ்-அரும்பு; வைத்த-கூர்மை பொருந்திய; சித்தம் கரிந்து-மனம் கருகி.]

தேன்முழங்கு தார்க்குருசில் செம்பொனெடுங் தேர்மேல்
வான்முழங்கு வெஞ்சிலையின் வாளிமழை தூவி
ஊன்முழங்கு வெங்குருதி வேழமுடன் மூழ்க
வேன்முழங்கு தானைவிளை யாடியதுங் கேட்டேன் 845

[தேன்-வண்டு; வான் முழங்கு-மேகத்தைப்போல முழங்கும்; சிலையின்-வில்லாகிய மேகத்தால்; தூவி-தூவுதலால்.]

வந்துதரன் கூறியவிவ் வாய்மொழியு மன்றி
முந்துவரன் மொழிந்தபொருண் முற்றும்வகை நாடிப்
பந்துபுடை பாணியெனப் பாயுங்கலி மான்றேர்
எந்தைதிற முன்னமுணர்ந் தின்னணம் விடுத்தேன் 846

[வாய்மொழி-தப்பாதமொழி; முந்து-முன்பு; வரன்-அச்சணந்தி முனிவர்; பொருள்-காரியம்; முற்றும் வகை-முடியும் கூறுபாடு; பாணி-தாளம்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

'இடிபோன்று பாய்ந்து அழிக்கும் ஒளி வேலேந்திய கலுழவேகன் விடுத்தது இவ்வோலை. உலகமென்னும் பெரிய நிறமுடைய பளிங்கில் புகழாகிய பஞ்சு நிறைந்து சேர்ந்த திருவின்மிக்க திரண்ட செல்வமுடைய சீவகசாமி அறிக. உனக்கு மேலும் அறமும் சிறந்த பொருளும் இன்பமும் சேர்க என வாழ்த்தி வரைந்த சேதியாவது: தத்தையுடன் மன்னர்கள் வீணைப் போரில் ஈடுபட்டுத் தோற்க, நிறைந்த கலைவல்ல சீவகன் நீ, குவிமுலைக் கோதை தத்தையை இசையாலே வெல்ல, அது கண்டு, கூரிய ஒளிமிக்க வேலேந்திய தோள்வலி உடையவர்க்கே தத்தை உரியவளாவாள் என்று கூறி, கொடிய உள்ள முடைய கட்டியங்காரன் மனம் வெதும்பிப் போரை உண் டாக்கினான். வண்டுகள் மொய்க்கும் மலர்மாலை அணிந்த சீவகன் நீ நெடிய செம்பொன் தேர்மேல் அமர்ந்து, வான் அதிரும் இடிபோல முழங்கும் கொடிய வில் வளைத்து அம்பு மழை பொழிய, அவ்வம்புகள் உடம்பில் தைத்து உண் டாக்கிய செங்குருதியிலே, யானைகள் முழுகி அழுந்துமாறு வேலேந்திப் போரிட்ட படைகளுடன், நீ வீரம் விளைத்து விளையாடியதும் கேட்டேன். பந்தடிக்கும் ஒலியும், தாள இசையும் போலக் குளம்பொலி எழப் பாய்ந்தோடும் குதிரைகள் பூட்டிய தேரை உடைய எம்தலைவன் சீவகன் திறம் உணர்ந்து தத்தையுடன் அவனைச் சேரவிட்டு வந்தேன் என்று, தரன் வந்து வாய்மொழியாகக் கூறிய தல்லாமல், அச்சணந்தி அடிகள் முன்பு மொழிந்த காரியம் முடியும் காலமும் வந்ததை நான் ஆராய்ந்து அறிந்து கொண்டேன்.

**எள்ளுநர்கள் சாயவென தோளிரண்டு நோக்கி**
**வெள்ளிமலை முழுதுங்கொடி யெடுத்ததிக லேத்திக்**
**கள்செய்மலர் மார்பனுறு காப்பிகழ்த லின்றி**
**உள்ளுபொரு ளெம்முணர்த்தி யன்றியுள வேண்டா** 847

[எள்ளுநகர்கள்-இகழ்ந்திருக்கும் பகைவர்கள்; சாய-தோற்றுக் கெடும்படி; உறுகாப்பு-மிக்க காவல்.]

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

**ஆம்பொருள்க ளாகுமது யார்க்குமழிக் கொண்ணாப்**
**போம்பொருள்கள் போகுமவை பொறியின்வகை வண்ணம்**
**தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதர லின்றே**
**வீங்குபுனல் யாறுமழை வேண்டியறி யாதே 848**

[பொறியின் வகை வண்ணம்-நல்வினை தீவினை என்ற இருவினையின் கூறாகிய இயல்பு; ஒண்ணா-முடியாது.]

**மன்பெரிய மாமனடி மகிழ்ந்துதிசை வணங்கி**
**அன்பினக லாதவனை விடுத்தலர்ந்த கோதைக்கு**
**இன்பநிலத் தியன்றபொரு ளிவையிவைநுங் கோமான்**
**தந்தவெனச் சொல்லிநனி சாமிகொடுத் தானே 849**

[மன் பெரிய-மிகப்பெரிய; மாமன் அடி-கலுழவேக னுடைய பாதங்களை; திசைவணங்கி-திசையை நோக்கித்தொழுது.]

**குங்குமமுஞ் சந்தனமுங் கூட்டியிடு கொடியா**
**வெங்கணிள முலையின்மிசை யெழுதிவிளை யாடிக்**
**கொங்குண்மலர்க் கோதையொடு குருசில்செலும் வழிநாள்**
**அங்கணகர்ப் பட்டபொரு ளாகியது மொழிவாம் 850**

[கூட்டி-கலந்து; இடுகொடியா-எழுதுகின்ற தொய்யிற் கொடியாக; கொங்கு-வாசனை; வழிநாள்-பின்னாட்களில்.]

'என்னுடைய தோளிணைகள் இரண்டையும் பார்த்து இகழ்ந்து பேசிய பகைவர்கள் செத்து மடியப் போரினைச் செய்து, வெள்ளி மலைமுழுதும் வெற்றிக்கொடி பறக்கச் செய்த தேன் வழியும் மலர் மார்புடையவன் நீ மிகுந்த கவலை வெறுத் தொதுக்காமல், நினைத் திருக்கும் பொருள் எமக்கு அறிவிப்பதல்லாமல், மேற் கொண்டு எதையும் எண்ண வேண்டாம். மேலும் ஆகிவர வேண்டிய நன்மைகள் ஆகிவந்து அடைந்தே தீரும்; அதை யாரும் அழிக்க முடியாது! மேலும் கைவிட்டுப் போக வேண்டியவை போயே தீரும். இதையும் யாரும் தடுக்க

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations
முடியாது. ஏன் எனில் இவை ஊழ்வினைப் பயனால் அமைபவை யாகும். மேலும் சுவை நீரை உப்புக்கடல் உலகிற்குச் சென்று தருவது ஒரு காலத்தும் நடை பெறப் போவது இல்லை. ஆனால் மேகமோ ஆற்றுக்கு அதன் விருப்பம் அறியாது இயல்பாகவே நல்ல நீரைக் கொண்டு போய்க் கொடுக்கிறது. எனவே அவை அவை வினைப்படி நடக்கும் என்று அறிக' என்பதாகும்.(அதாவது இன்பமும் துன்பமும், வருவதும் போவதும், அவரவர் வினைப்படி இயல்பாக நடைபெறும். எப்படியெனில் கடலில் இருந்த உப்பு நீரை மேகம் முகந்து சென்றாலும் அது ஆற்றுக்கு மழையாக நல்ல நீரையே பொழிகிறது. ஆனால் அப்படிப்பட்ட ஆற்று நீர் வந்து சேர்ந்த கடலோ நல்ல தண்ணீரை உலகுக்கு வழங்கமுடிவதில்லை யல்லவா அதுபோல) பெருமைமிக்க பெரிய மாமன் கலுழவேகன் அடியைத் திசை நோக்கித் தொழுது, அன்பில் பிரியாத தரனைப் போகவிட்டு, தத்தைக்கு, 'இன்ப உலகுக்கு ஏற்றதாக நின் தந்தை தந்த பொருள்கள் இவை' என்று சொல்லிக் கொடுத்தான். குங்குமத்தையும், சந்தனத்தை யும் கலந்து, தொய்யில் கொடியாக விருப்பூட்டும் அழகிய இளமுலைகள் மேல் பூசி, இன்ப விளையாட்டில் ஈடுபட்டு, தேன் வழியும் மலர்க்கூந்தலுடைய தத்தையுடன் சீவகன் இவ்வாறாக, இன்பந் துய்த்து வாழ்ந்து வரும் நாளில், அந்நகரில் நடந்த நிகழ்ச்சிகளையும் சீவகன் அடைந்ததை யும் கூறுவோம்.

காந்தருவதத்தையார் இலம்பகம் முடிந்தது.

CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations

# செய்யுள் முதற்குறிப்பகராதி

(எண் — செய்யுளெண்)





CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations




CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

Vinay Avasthi Sahib Bhuvan Vani Trust Donations



CC-O. Nanaji Deshmukh Library, BJP, Jammu. An eGangotri Initiative

